# ரவீந்திரர் நாடகத் திரட்டு

## முதல் தொகுதி

# ரவீந்திரர் நாடகத் திரட்டு

## முதல் தொகுதி

(ஜீவபலி, சித்திராங்கதை, பிரம்மசாரிகள் சங்கம்)



தமிழாக்கம்:

*டி. எஸ். பார்த்தசாரதி*



**சாகித்திய அக்காதெமி**

*புது தில்லி*

**Ravindirar Nataka Tirattu** (Plays of Rabindranath Tagore) Vol I, *Bisarjan*, *Chitrangada* and *Chirakumar Sabha*. Translated from Bengali into Tamil by T. S. Parthasarathy. Sahitya Akademi, New Delhi, 1961. Price Rs. 6



*முதல் பதிப்பு: 1961*

விற்பனை உரிமை:

**கலைமகள் காரியாலயம்**

**சென்னை-4**

Also available at
Sahitya Akademi, New Delhi-1

அச்சிட்டோர் :

எம். எல். ஜே. பிரெஸ் (பி.) லிட். சென்னை-4

விலை ரூ. 6

# ரவீந்திர நாடகப் பிரவாகம்

கவி ரவீந்திரநாதரால் இயற்றப் பெற்ற நாடகங்கள் தொகையிலோ வகையிலோ குறைந்தவையல்ல. தொகை, வகை ஆகிய இரு அளவுகோல்களால் நாம் அவருடைய நூல்களை மதிப்பிட்டால், அவருடைய கவிதைகளுக்கு அடுத்த இடம் நாடகங்களுக்கே கிடைக்கும். அவர் இடைவிடாது நாடகங்கள் எழுதிவந்த வரலாற்றை நாம் ஆராய்ந்து பார்த்தால், அவருடைய இளமை முதல் வாழ்க்கையின் இறுதி நாட்கள் வரை நாடகங்களை எழுதுவதிலும் அவற்றை நடித்துக் காட்டுவதிலும் அவருக்கிருந்த உற்சாகம் சற்றும் குறையவில்லை என்பது தெளிவாகும். நாடகங்களை இயற்றுவதற்கு முன்னமேயே நடிப்புக் கலையில் அவர் சிறப்புற்றிருந்தார். ரவீந்திரநாதர் நாடகங்களை இயற்ற ஆரம்பித்ததற்கு முன்பே அவருடைய மூத்த சகோதரருள் ஒருவரான ஜ்யோதிரிந்திரநாத டாகுர் நாடகங்களை எழுதத் தொடங்கிவிட்டார். டாகுர் குடும்பத்தினரின் பரம்பரை இல்லத்தில் இந்நாடகங்கள் அவ்வப்பொழுது நடிக்கப் பெற்று வந்தன. பொது நாடக மேடைகளிலும், நடிப்பையே தொழிலாகக் கொண்ட பல குழுவினர்களால் அவை நடிக்கப் பெற்று ஆசிரியரான ஜ்யோதிரிந்திரநாதருக்குப் பெரும்புகழைத் தேடித் கொடுத்தன. அதற்கும் முன்பு ரவீந்திரநாதருடைய சிறிய தந்தையாரின் குமாரர்களான கணேந்திரநாதர், குணேந்திரநாதர் முதலியோர் நாடகாசிரியரான ராமநாராயணரைக் கொண்டு நாடகங்களை இயற்றுவித்து வெகு நேர்த்தியான ஏற்பாடுகளுடன் வீட்டிலேயே நாடக மேடை அமைத்து நடித்துக் காண்பித்து வந்தனர். ஆகவே வீட்டிற்குள்ளேயே நாடகங்கள் இயற்றப் பெற்றும் நடிக்கப் பெற்றும் வந்த ஒரு சூழ்நிலையில் இளைஞராகிய ரவீந்திரநாதர் வளர்ந்து வந்தார் என்று நாம் அறிகிறோம். இலக்கியச் சுவையை முன்னமேயே பெற்றிருந்த ஓர் இளைஞர் நாடகங்கள் பால் இழுக்கப்பட்டு, முதலில் அவற்றைக் கண்டு மகிழ்பவராகவும், பிறகு அவற்றில் நடிப்பவராகவும், கடைசியில் அவற்றை இயற்றுபவராகவும் வளர்ச்சியுறுவது இயற்கையே. ரவீந்திரநாதரின் விஷயத்திலும் இது உண்மையாயிற்று. வீட்

டில் நடிக்கப்பெற்ற பல நாடகங்களைப் பார்த்த பிறகு அவர் ஜ்யோதிரிந்திர நாதரின் நாடகங்களுக்கு ஓரிரண்டு பாட்டுக்களை யும் வசனங்களையும் தாமே எழுதிச் சேர்க்க ஆரம்பித்தார். பின்னர், தாமும் அந்நாடகங்களில் வேடங்கள் தாங்கி நடித் துச் சபையோரின் முன்னே தோன்ற ஆரம்பித்தார். அவர் இயற்றியுள்ள 'ஜீவன ஸ்மிருதி' என்ற நூலில் மேற்கூறிய விஷயங்கள் குறிப்பாகக் காட்டப் பெற்றுள்ளன. ஆயினும், இத்தகைய சூழ்நிலையில் வளர்ந்துவந்த அவர் எப்பொழுது தாமாகவே நாடகங்களை இயற்றத் தொடங்கினார் என்பதை அறிய நமக்கு அவா உண்டாவது இயற்கை. பாலகவியாகிய ரவீந்திரநாதர் முதன் முதலாக சாந்தி நிகேதனத்தில் இளம் வெயில் வீசும் ஒரு புல்வெளியில் அமர்ந்து, 'பிருத்வி ராஜ னின் தோல்வி' என்ற வீர ரசம் நிறைந்த நாடகம் ஒன்றை இயற்றினர் என்று 'ஜீவன ஸ்மிருதி'யிலிருந்து நாம் அறிகி றோம். இந்நாடகம் பிற்காலத்தில் கிடைக்காமற் போய்விட்டது. ஆயினும் அவர் பின்னர் எழுதிய 'ருத்ரசண்டன்' என்ற நாட கம் 'பிருத்வி ராஜனின் தோல்வி'யை அடிப்படையாகக் கொண்டதே தவிர வேறில்லை என்று ரவீந்திரநாதரின் சரித் திரத்தை எழுதியுள்ள பிரபாத் குமார் முக்யோபாத்தியாயர் அபிப்பிராயப்படுகிறார். தற்பொழுது கிடைக்காத இவ்வொரு நூலை விலக்கிவிட்டால் 'வால்மீகி பிரதிபா' என்ற இசை நாடகமே அவருடைய மேதா விலாசம் முழுதும் விளங்கும் முதல் நாடகம் என்று கூறுவது தகும். மேலே நான் குறிப் பிட்ட அவருடைய வீட்டின் இலக்கியச் சூழ்நிலைக்கும், 'வால்மீகி பிரதிபா,என்ற நாடகத்தின் பிறப்பிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஜோராசங்கோவில் இருக்கும் டாகுர் குடும்பத்தின ரின் பரம்பரை வீட்டில் அடிக்கடி 'கவி அரங்கு' எனப்படும் புலவர் சபைகள் நடப்பது வழக்கம். அச்சமயங்களில் விநோத மாகப் பொழுது போக்குவதற்காக எழுதப்பெற்றவை இவ் விசை நாடகங்கள். இவற்றிற்கு முக்கிய பொறுப்பாளி ரவீந்திர நாதரே எனினும் நாடகங்களை இயற்றும் பணி பிஹாரிலால், ஜ்யோதிரிந்திரநாதர், அக்ஷய சௌதுரி ஆகியவர்களிடமும் ஒப்படைக்கப்பட்டது. அக்காலத்தில் அநேக பிரசித்தி பெற்ற நாடகாசிரியர்களால் இயற்றப்பெற்ற நாடகங்களுள் பெரும் பான்மையானவை காலப் போக்கில் சுவையற்றவையாகி மறைந்து போய்விட்டன: எனினும் இருபது வயது நிரம்பாத இளைஞராகிய ரவீந்திரநாதர் எழுதிய நாடகங்கள் மாத்திரம் இன்றும் சுவைகுன்றாமல் அமரத்துவம்பெற்று விளங்குகின்றன. இவை எச்சமயத்தில் எங்கு நடிக்கப் பெற்றாலும் சபையோருக் குப் பஞ்சம் ஏற்படுவதில்லை.

மைக்கேல் மதுசூதன தத்தர் முதன் முதலாக வங்காளியில் காவியம் இயற்றிய பிறகு ''புலி ஒரு முறை இரத்தத்தை ருசி கண்டுவிட்டால் பிறகு விடாது'' என்று ஒரு நண்பருக்கு எழுதினர். தம்முடைய முதல் நாடகத்தை எழுதிய பிறகு ரவீந்திரநாதருக்கும் இதே உணர்ச்சி ஏற்பட்டது. குறுகிய ஒரு வருட காலத்திற்குள் அவர் 'ருத்ர சண்டன்', 'கால ம்ருகயா' (விதியின் வேட்டை), 'ப்ரக்ருதிர் ப்ரதிசோத்' (இயற்கையின் வஞ்சம்), 'நளிநீ', 'மாயார்கேலா' (மாயையின் விளையாட்டு) ஆகிய நாடகங்களை எழுதிக்குவித்துவிட்டார். 'ருத்ர சண்டன்' நாடகத்தின் கதாநாயகனுகிய ருத்ரசண்டன் ஒரு திருடன். அவனுக்குப் பட்டணங்களின் நாகரிகத்தின் மீதும் அரசபதவியின் மீதும் கடுமையான விரோதம். நாடகத்தில் தோன்றும் இதர பாத்திரங்களுள் முக்கியமான இருவர் ருத்ர சண்டனின் மகளான அமியாவும் சாந்த் கவியுமே ஆவர். நாடகத்தின் கதையை நாம் மறந்துவிடினும் நஷ்டம் ஒன்றுமில்லை. அச் சிறுமியையும் அக்கவியையும் மாத்திரம் நாம் ஒருபொழுதும் மறக்க முடியாது. இவ்விரு பாத்திரங்களும் உருமாறி மாறி வெவ்வேறு பெயர்களுடன் அவருடைய பிற்கால நாடகங்கள் அனைத்திலும் தோன்றுகின்றனர். 'கால ம்ருகயா' நாடகம் பிற்காலத்தில் 'வால்மீகி பிரதிபா' நாடகத்துடன் இணைக்கப் பட்டுவிட்டது.

'மாயார் கேலா' (மாயையின் விளையாட்டு) இசையமைப் புடன் கூடிய ஒரு நாட்டிய நாடகம் ஆயினும், வால்மீகி பிரதிபாவிற்கும் அதற்கும் ஒரு முக்கிய வித்தியாசம் உண்டு. வால்மீகி பிரதிபாவில் அடுத்தடுத்து விரைவில் நிகழும் நிகழ்ச்சிகளுக்கும் நாடகப் பாத்திரங்களின் சிருஷ்டிக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. மாயார் கேலாவில் இவற்றிற்கு இடமேயில்லை. இன்னிசை என்ற நூலில் இதய உணர்ச்சிகளை மாலை போல் தொடுத்து வழங்குவதே இதன் நோக்கம்.

இலக்கியக் கோணத்திலிருந்து பார்த்தால் 'ப்ரக்ருதிர் ப்ரதிசோத்' (இயற்கையின் வஞ்சம்) சில குறைபாடுகளை உடையது எனினும் இந்நாடகத்தில் தான் ரவீந்திரநாதர் தம்முடைய வாழ்க்கையின் தத்துவத்தை வெளிப்படையாக எடுத்துரைக்க முயற்சி செய்திருக்கிறுர், 'ருத்ர சண்டன்' நாடகத்தில் தோன்றும் அமியா என்ற சிறுமியின் பாத்திரத்தை வேறு பெயருடன் ஆசிரியர் இந்நாடகத்திலும் புகுத்தியிருக்கிறுர்.

'ப்ரக்ருதிர் ப்ரதிசோத்' நாடகத்தை எழுதி முடித்ததும் ரவீந்திரநாதரிடமிருந்த அநுபவக் குறைவு என்ற குறை அகன்றது. சிறந்த நாடக அமைப்பு, நிகழ்ச்சிகளின் அடைவு, பாத்திரங்களைத் திறம்படச் சிருஷ்டி செய்தல், உணர்ச்சிப்

பெருக்கைப் பன்மடங்காக விளக்கிக் காட்டும் இசை அமைப்பு வனதேவதைகள் மாயவனிதைகள் இவர்களின் நர்த்தனங்கள் ஆகிய அம்சங்கள் அனைத்தும் அவரது நாடகங்களில் இடம் பெற்றன. ரவீந்திரநாதர் பிற்காலத்தில் இயற்றிய நாடகங்களில் தான் இவ்வம்சங்கள் பரிபூர்ண வளர்ச்சியை அடைந்தன என்ற காரணத்தினாலேயே அவரிடம், இந்நாடகத்தை இயற்றும் வரை, சிறிது அநுபவக் குறைவு காணப்பட்டது என்று நான் கூறினேன்.

'மாயார் கேலா'விற்கு அடுத்தாற் போல் சிறிது காலத்திற்குள்ளேயே இயற்றப் பெற்ற 'ராஜா-ராணி,' 'விஸர்ஜன்' (ஜீவபலி), 'சித்ராங்கதை' ஆகிய நாடகங்களின் நடை திடீரென்று பூர்ண யௌவனத்தின் வலிமையை அடைந்தது. சித்திராங்கதை நாடகத்தைப்பற்றிப் பிறகு விளக்கப்போகிறேனாதலால் மற்ற இரு நாடகங்களைப் பற்றி மாத்திரமே இங்கு குறிப்பிடுகிறேன். ராஜா ராணி, விஸர்ஜன் (ஜீவபலி) ஆகிய இரு நாடகங்களும் ஆங்கிலமகாகவியாகிய ஷேக்ஸ்பியரின் வழியைப் பின்பற்றி இயற்றப் பெற்ற ஐந்து அங்கங்களையுடைய சோகரச நாடகங்கள் (Tragedies). 'விஸர்ஜன்' ரவீந்திரநாதர் முன்னமேயே எழுதியிருந்த 'ராஜர்ஷி' என்ற நாவலின் சில அம்சங்களை அடிப்படையாகக் கொண்டது. அவருடைய சோக நாடகங்களுள் விஸர்ஜன் தான் தலைசிறந்தது என்பது பலருடைய அபிப்பிராயம். ஆனால் இவ்விஷயத்தில் என் அபிப்பிராயம் வேறு. சிற்சில ரசனைக் குறைபாடுகளை விலக்கிவிட்டால், இலக்கிய மதிப்பிலும், மனித இயல்பை விளக்கிக் காட்டுவதிலும் 'ராஜா ராணி' நாடகமே சாலச் சிறந்தது என்பதே எனது துணிபு. பிற்காலத்தில் ரவீந்திரநாதர் இத்தகைய ரசனைக் குறைபாடுகளைப் போக்கிக் கொள்வதற்காகவே 'தபதீ' என்ற நாடகத்தை இயற்றினர். அது இலக்கிய உலகிற்கு ஒரு புதிய பரிசே எனினும் 'ராஜாராணி' நாடகத்திற்கு இணையான சுவையுடையதா என்பது சந்தேகம்.

இச்சமயத்தில் ரவீந்திரநாதர் மூன்று நகைச்சுவை நாடகங்களையும் இயற்றினார். அவற்றுள் 'ப்ரஜாபதிர் நிர்ப்பந்த' (பிரமனின் பிடிவாதம்) என்ற அவரது நாவலைத் தழுவி எழுதப்பட்ட 'சிரகுமார் ஸபா' (பிரம்மசாரிகள் சங்கம்) என்ற நாடகம் பொது ஜனங்களால் மிகவும் ரசிக்கப்பட்டது. பொதுவாக, இதுவே அவருடைய தலைசிறந்த நகைச்சுவை நாடகம்

என்பது இலக்கிய விமர்சகர்களின் அபிப்பிராயம். ஆனால் 'வைகுண்டேர் காதா' (வைகுண்டனின் சுவடி) என்ற நகைச் சுவை நாடகம் தான் மிகச் சிறந்தது என்பது என்னுடைய தனிப்பட்ட அபிப்பிராயம். இந்நாடகத்தின் இலக்கியச் சுவைகள் குறுகிய அளவு கொண்டவையாயினும் ஆழமானவை; இதில் தோன்றும் பாத்திரங்களின் தொகை குறைவே எனினும் அவர்கள் தெளிவும் ஜீவனும் உள்ளவர்கள். இதிலுள்ள நகைச் சுவை நமக்கு ஒரு புறம் கண்ணீரைப் பெருகச் செய்து கொண்டே சென்று, இறுதிக்காட்சியில் ஆசிரியர் அமைத்துள்ள ஒப்பற்ற ஹாஸ்ய நிகழ்ச்சியில் கண்ணீர்ப் பெருக்குடன் ஒன்றாகக் கலந்து விடுகின்றது. இதன் சிறப்பைப் பலர் அறியவில்லை எனினும் இந்நாடகம் ரவீந்திரநாதரின் பரிபூர்ண இலக்கிய சிருஷ்டிகளுள் ஒன்றென்பதற்கு ஐயமில்லை.

இதே சமயத்தில் ரவீந்திரநாதர் 'காவிய நாடகம்' என்று கூறத்தக்க சில நூல்களை இயற்றினார்; இவற்றில் கவிதையின் நடையும் நாடகங்களின் நடையும் ஒருங்கே கலந்து மிளிர்கின்றன. ஆயினும் நாடக ரசனையைக் காட்டிலும் கவிதையே முக்கியத்துவம் பெற்று விளங்குகிறது. இக் காரணம் பற்றியே பல விமர்சகர்கள் இவற்றை 'நாடகக் காவியங்கள்' என்று குறிப்பிடுகின்றனர். ஆனால் இவற்றில் காவியச் சுவை நிறைந்து இருப்பினும், அமைப்பு நாடக அமைப்பே என்பதையும் நாடக இலக்கணம் ஒழுங்காக அமைந்துள்ள தென்பதையும் குறிப்பிடவேண்டும். 'காந்தாரியின் விண்ணப்பம்', 'கர்ண குந்தி சம்வாதம்', 'நரகவாஸம்' 'இறுதிச் சாபம்' முதலிய ஓரங்க நாடகங்களை நாம் சுவைக்க வேண்டுமாயின், அவை ஐந்தங்க நாடகங்களின் கடைசி அங்கங்கள் என்றும், அவற்றிற்கு முன்னால் (ஆசிரியர் எழுதாத) நான்கு அங்கங்கள் இருப்பது போலவும் மனத்தில் நாம் கற்பனை செய்துகொள்ள வேண்டும்.

'ஸதி', 'மாலிநி' ஆகிய நூல்கள் நாடக உருவத்தில் பிரசுரிக்கப்பட்டிருப்பினும் அவற்றின் உண்மையான ரசம் காவிய ரசமே.

'லக்ஷ்மியின் பரிட்சை' பயனளித்த ஓர் இலக்கிய சோதனை. சிறு கவிதைகளில் மக்கள் சாதாரணமாகப் பேசும் மொழியைப் பெரும்பான்மையாக உபயோகிக்க நினைத்த கவியரசர் தம்முடைய முயற்சியில் பூர்ணமாக வெற்றி பெற்றுள்ளார்.

இச்சமயத்தில் ரவீந்திரநாதருடைய ஆத்மீக வாழ்வில் ஒரு பெரிய மாறுதல் தோன்ற ஆரம்பித்தது. இதனுடைய அறி குறிகள் அவர் இக்காலத்தில் இயற்றிய நூல்கள் அனைத்திலும் புகுந்தது இயற்கையே. அவருடைய நாடகங்களிலும் அவை இடம் பெற்றன. மனிதனுடைய வாழ்க்கையில் சகடக்கால் போல மாறி மாறி வரும் ருதுக்களின் விளைவாக ஏற்படும் உள்ளக்கிளர்ச்சிகளை அவர் விவரிக்கத் தொடங்கினர். 'சாரதோத்ஸவம்,' 'ராஜா,' 'அசலாயதன்' (அசையாத ஸ்தாபனம்), 'பால்குநீ' முதலிய நாடகங்கள் இவற்றுள் முக்கியமானவை. வீட்டில் நடந்த இலக்கிய விழாக்களுக்காக நாடகங்களை எழுத ஆரம்பித்த ரவீந்திரநாதர் பிற்காலத்தில் சாந்திநிகேதனத்தில் நடந்த விழாக்களுக்காக அவற்றை இயற்றத் தொடங்கினர். ஆகவே அவர் இச்சமயத்தில் இயற்றிய 'சாரதோத்ஸவம்', 'அசலாதயன்', 'பால்குநீ' முதலிய நாடகங்களில் பெண் பாத்திரங்கள் தோன்றுமல் இருப்பதைக் காண்கிறோம். அக்காலத்தில் சாந்திநிகேதனத்தில் மாணவிகளைச் சேர்த்துக்கொள்வதில்லை. மேலும் ஆண்களும் பெண்களும் சேர்ந்து நடிப்பதற்குத் தகுந்த சூழ்நிலையும் நாட்டில் அப்பொழுது இல்லை. மேற்குறித்த நாடகங்களைத் தவிர ரவீந்திரநாதர் இக்காலத்தில் பிராயச்சித்தம், தபால் ஆபீஸ் ஆகிய நாடகங்களையும் இயற்றினர்.

ஆசிரியர் முன்னமேயே இயற்றியிருந்த 'பௌடாகூராணீர் ஹாட்' (உயர்குல மருமகளின் சுற்றம்) என்ற நாவலைத் தழுவி நாடக உருவத்தில் அமைக்கப் பெற்றதே 'பிராயச்சித்தம்' என்ற நூல். இதில் தோன்றும் தனஞ்ஜய பைராகி ஒரு மறக்க முடியாத பாத்திரம். சத்தியாக்கிரகக் கொள்கையின் முதல் பிரதிநிதியாக அவர் இந் நாடகத்தில் தோன்றுகிறர். காந்திஜி சத்தியாக்கிரகியாகத் தோன்றுவதற்கு முன்னரே தனஞ்ஜய பைராகி அருணோதயமாவதற்கு முன் அதிகாலைப் பறவைகள் தோன்றுவது போல் தோன்றினர்.

'தபால் ஆபீஸ்' ரவீந்திரநாதருடைய உரைநடை நாடகங்களுள் தலைசிறந்தது. அநேகக் கற்பனைக் கதைகளின் அச்சில் வார்த்து எடுக்கப்பட்டது இந் நாடகம்.

'ராஜா' என்ற நாடகம் 'அடையாள நாடகம்' (Symbolic Play) என்று கருதப்படுகிறது. 'ராஜா', 'அசலாயதன்' ஆகிய இரு நாடகங்களும் பாரத தேசத்தின் சாதனையின் இரு முக்கிய பிரிவுகளை விளக்குவதற்காக எழுதப்பட்டன. கடவுளுக்கு அடிமை செய்தல், அவரைத் தோழமை கொள்ளல், காதலித்தல் ஆகிய மூன்றுவகை பக்தி மார்க்கங்களுள் மூன்று

வது மிகக் கடினமானது. இதை 'ராஜா' நாடகத்தில் நாம் ஸுரங்கமா, டாகூர்தா, ஸுதர்சநா ஆகிய பாத்திரங்களிடம், முக்கியமாக ஸுதர்சநாவின் இருவிதப்பட்ட மனோபாவத்தில், காண்கிறோம். அசலாயதன் நாடகத்தில் ஞானமார்க்கம், கர்ம மார்க்கம், பக்திமார்க்கம் இம்மூன்றும் விளக்கப்படுகின்றன. இம்மூன்றின் சேர்க்கையின் மூலமே உண்மையான சித்தி ஏற்படும் என்பது காட்டப்படுகிறது. 'பால்குநீ' நாடகத்தில் கவியரசர் 'அண்டசராசரங்களில் நடக்கும் பரம்பொருளின் விளையாட்டே வேறு உருவத்துடன் மனித இயற்கையிலும் நடக்கிறது' என்பதைக் காட்டியிருக்கிறார். வசந்த காலமும் இளமையுமே சாசுவதமானவை; குளிர்காலமும் மூப்பும் மாயத் தோற்றங்கள். 'இயற்கை எல்லையற்ற அழகையும் அமுதத்தையும் பொழிந்து மனிதனைத் தன்னிடம் கடன்பட்டவனாகச் செய்து விடுகிறது. இக்கடனை அவன் தன்னுடைய துயரத்தினால் தான் அடைக்கமுடியும். துக்கத்தின்மூலம் அழகின் கடனைத் தீர்த்தால்தான் இன்பம்பெற முடியும்' என்பது 'சாரதோத்ஸவ' நாடகத்தில் கவி புகட்டும் நீதி.

மேற்கூறிய நாடகங்களுக்கு அடுத்தாற்போல் குறிப்பிட வேண்டியவை 'முக்த தாரா' (மடை திறந்த நீர்வீழ்ச்சி), 'ரக்த கரபி' (செவ்வலரி) ஆகிய இரு நாடகங்கள் ஆகும். 'சாரதோத்ஸவம்' முதல் 'பால்குநீ' ஈறாக உள்ள நாடகங்களில் மனிதனுக்கும் பரம் பொருளுக்கும் உள்ள உறவும் இயற்கைக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பும் விவரிக்கப் படுகின்றன. முக்த தாரா, ரக்த கரபி ஆகிய நாடகங்களில் தோன்றும் பாத்திரங்கள் சாதாரண சமூகத்தைச் சேர்ந்த மக்கள். இந் நாடகங்களில் தனிப்பட்ட மனிதர்களுக்கும் சமூகத்திற்கும் ஏற்படும் போராட்டம் விவரிக்கப்படுகிறது. வேர் ஊன்றிய குருட்டு நம்பிக்கைகளுடனும் யந்திர அரக்கனுடனும் போராடும் மக்களின் பிரதிநிதிகளாக அபிஜித்தும் ரஞ்சனும் இந் நாடகங்களில் சித்தரிக்கப்பட்டிருக்கிறார்கள். ஒரு யந்திரத்தைக் கொண்டு மற்றொரு யந்திரத்தை வெல்ல முயன்றால் கடைசியில் வெற்றி பெறுவது ஒரு யந்திரமே என்பது கவியின் துணிபு. ஒரு யந்திரத்தை வெல்லவேண்டுமாயின் உயிரைக் கொடுத்து அதனுடன் போரிடவேண்டும். அதை வீழ்த்தும் முயற்சியில் உயிரை இழக்க நேரிடினும் இறுதி வரையில் யந்திரத்தின் வலிமையையும் தலையெடுக்கவிடாமல் செய்து விடலாம். முக்த தாரா நாடகத்தில் அபிஜித் உயிரை இழக்கிறான். ஆனால் நீர்வீழ்ச்சியின் அணையும் ஒழிகிறது. ரஞ்சன் மாள்கிறான். ஆனால் யந்திரக் கோட்டையின் அஸ்திவாரமே தகர்க்கப்படுகிறது. இவ்விரு நாடகங்களிலும் கவியரசர்

மிகவும் சிக்கலான ஒரு தற்காலத்துப் பிரச்னையை விவாதிக்கிறார்.

'நடீர் பூஜா' (நடியின் பூஜை) என்ற நாடகம் 1926-ல் பிரசுரிக்கப்பட்டது. கதை புத்தர்களின் மத நூலாகிய ஜாதகக் கதைகளுள் ஒன்றைத் தழுவி அமைக்கப் பெற்றது. இந் நாடகத்தின் கலை மதிப்பு மிக உயர்ந்தது. இதற்கு ஒரு தனிச் சிறப்பும் உண்டு. கவியரசர் பிற்காலத்தில் எழுதிய நிருத்திய-நாடகங்களுக்கு இதுவே விதை என்பது என் அபிப்பிராயம். ரவீந்திரநாதர் ஜாவாத் தீவில் சுற்றுப் பிரயாணம் செய்த பொழுது அவர் கண்டானந்தித்த நிருத்தியக்கலையே இந் நாடகங்களுக்கு அடிப்படை என்று நாம் கொள்ளவேண்டும். நிருத்திய நாடகங்களை இயற்றவேண்டும் என்ற அவா அவருக்கு வெகு நாட்களாக இருந்தது. ஆனால் அவற்றிற்குச் சிறந்த, ஜீவனுள்ள உதாரணங்கள் இந்நாட்டில் எங்கும் அவருக்குக் கிடைக்கவில்லை. ஜாவாத் தீவில் இவை எதிர்பாராத விதத்தில் அவருக்குக் கிடைத்தன. ரவீந்திரநாதரின் பிற்காலத்து வாழ்க்கையில் அவர் இயற்றிய சிறந்த நாடகங்களின் தோரணை அவர் ஜாவாவில் பார்த்த நிருத்திய நாடகங்களைப் பின்பற்றியதேயாகும். இத்தகைய நாடகங்களுள், 'சித்திராங்கதை', 'சண்டாலிகா', 'சியாமா', 'தாஷேர் தேஷ்' (சீட்டுகளின் நாடு) ஆகியவை அவரது இறுதி நாட்களின் ஒப்பற்ற சிருஷ்டிகளாகும். இவற்றின் ஆசிரியரை நாம் 'நாடக மேதை' என்று மாத்திரம் குறிப்பிட்டால் அதில் அவரது பெருமை முழுவதும் அடங்கி விடாது. ஏனெனில் இவற்றில் கவிதை, இசை, நாடகம், நிருத்தியம் ஆகிய நான்கும் ஊற்றெடுத்து பிரவாகமாகப் பெருகி வந்து கலக்கின்றன. ரவீந்திரநாதரின் கலைப் பண்பும் அவரது பலவகைப்பட்ட மேதாவிலாசமும் இந்த நிருத்திய நாடகங்களில்தான் பரிபூர்ணமாகப் பிரகாசிக்கின்றன என்று கூறுவது மிகையாகாது.

இக் கட்டுரையின் குறுகிய அளவிற்குள் ரவீந்திரநாதருடைய நாடகப் பிரவாகத்தின் சுருக்கமான விளக்கம் தரப்பட்டது. அவர் தம்முடைய நூல்களின் மூலம் இலக்கிய உல

கிற்குப் புரிந்துள்ள மகத்தான சேவையை இனி ஆராய்வோம்.

ரவீந்திரநாதருடைய நாடகங்களில் சில நடிப்புக் கலையையே தொழிலாகக் கொண்ட நடிகர் குழுவினர்களால் பன்முறை நடிக்கப்பெற்றன. அவற்றுள் 'சிரகுமார் ஸபா' (பிரம்மசாரிகள் சங்கம்), 'சேஷ ரக்ஷா' (இனிய முடிவு) முதலியவை ஒவ்வொரு காலத்தில் பொது மக்களால் மி[illegible] ரசிக்கப்பட்டன. ஆயினும் நாடகக் கம்பெனிகளுடைய போ[illegible]கிற்கும் ரவீந்திரநாதரின் நாடகங்களுக்கும் பொருத்தம் அதிகம் இல்லை என்றே கூறவேண்டும். ஏன்? உயர்தர நாடகங்களைப் பார்த்து ரசிக்கத்தக்க சபையோர் இல்லாதது ஒரு காரணமாயிருக்கலாம். நாடகக் கம்பெனிகளால் வெற்றியுடன் நடிக்கப்பெறும் நாடகங்கள் அனைத்தும் நாடகம் பார்ப்பவர்களின் விருப்பங்களை அநுசரித்து நடிகர்களும் நாடகாசிரியர்களும் அமைத்த நாடகங்களேயாகும். ரவீந்திரநாதரின் நாடகங்களோவெனில் அவர் தம்முடைய மேதா விலாசத்தைக் கொண்டு தனிமையில் சிருஷ்டி செய்தவை. சில நாடகங்கள் அவரது குடும்பத்தின் சூழ்நிலையில் எழுதப் பெற்றவை. ஆகவே அவை அவருடைய தனி முயற்சியின் படைப்புகளே. அதுவே அவற்றிற்குச் சிறப்பையும் தனி மதிப்பையும் அளிக்கிறது.

நாடகங்களில் இலக்கியச் சிறப்பிற்கு முக்கியத்துவம் இல்லை என்று அநேக இலக்கிய விமரிசகர்கள் கூறுகின்றனர். சபையோர்களை மகிழ்விப்பதே நாடகங்களை நடிப்பதன் முக்கிய நோக்கம் என்பது இவர்களுடைய கருத்து. இது ஒப்புக் கொள்ளக் கூடியதல்ல. நாடகம் என்பது இலக்கியத்தின் ஒரு பகுதி என்ற கோணத்திலிருந்து அதை நாம் ஆராய்வது பொருந்தும்.

இக்கோணத்திலிருந்து ஆராய்ந்தால் ரவீந்திரநாதருடைய நாடகங்களின் இலக்கியச் சிறப்பு எல்லையற்றது என்பது விளங்கும். அவருடைய காலத்திற்கு முன்பும் இசை நாடகங்கள் இயற்றப் பெற்றிருந்தன. அவற்றுடன் அவர் முதன் முதலாக இயற்றிய 'வால்மீகி பிரதிபா' (வால்மீகியின் மேதை), 'மாயார் கேலா' (மாயையின் விளையாட்டு) ஆகிய இரண்டையும் ஒப்பிட்டால் இவ்விரு நாடகங்களின் சுவையோ மக்களுக்கு மகிழ்ச்சியூட்டும் குணமோ இன்றுவரை குன்றவில்லை என்பது புலனாகும்.

'ராஜா ராணி', 'விஸர்ஜன்' (ஜீவபலி) ஆகிய இரண்டும் வங்க இலக்கியத்தின் தலைசிறந்த சோகரச நாடகங்களாகும்.

வங்க மொழியில் நகைச்சுவை நாடகங்களுக்குக் குறைவில்லை. ஆயினும் 'சிரகுமார் ஸபா'வைப் போல் மெருகிடப்

பெற்றதும், உயர்தர நகைச்சுவையைக் கொண்டதும் பலதரப் பட்ட மக்களை மகிழ்விப்பதுமான மற்றொரு நாடகம் இதுவரை யிலும் தோன்றவில்லை. இந் நாடகத்தில் கவியரசர் அமைத் துள்ள நகைச்சுவை மிக இயற்கையானது.

ரவீந்திரநாதர் இயற்றிய காவிய நாடகங்களுள் 'சித்தி ராங்கதை', 'காந்தாரியின் விண்ணப்பம்', 'கர்ண-குந்தீ சம் வாதம்', 'நரகவாசம்' முதலியவை அவர் நமக்களித்துச் சென்ற இலக்கியப் பொக்கிஷங்களாகும். இத்துறையில் அவ ருக்கு இணை அவரே,

'சாரதோத்ஸவம்', 'பால்குநீ' ஆகிய இரு நாடகங்கள், 'தபால் ஆபீஸ்', 'ராஜா', 'ரக்த கரபி' முதலிய அடையாள நாடகங்கள் ஆகியவற்றின் ரசனையில் அவர் ஒரு புது இலக்கிய முறையையே சிருஷ்டித்துள்ளார். இது வங்காளி இலக்கியத்தில் மாத்திரமே யன்றி அகில இந்திய இலக்கியத்திலேயே புதிய படைப்பு என்று சொல்லவேண்டும்.

அவருடைய இறுதி நாட்களில் அவர் இயற்றிய நிருத்திய நாடகங்கள் மிகச் சிறந்த இலக்கிய சிருஷ்டிகள். இத்துறை யிலும் அவர் ஒரு புதிய இலக்கிய முறைக்கு வழிகாட்டியாக விளங்கினர்.

ரவீந்திரநாதருடைய மேதா விலாசம் அவருடைய காவி யங்களுக்கும் சிறுகதைகளுக்கும் அடுத்தாற்போல் அவருடைய நாடகங்களிலேயே விளங்குகிறது. இவற்றின் வகைகளிலும் புது இலக்கிய முறைகளின் சிருஷ்டியிலுமே நாம் அவருடைய இலக்கிய மேதையின் பல கோணங்களைக் காணமுடிகிறது.

—ஸ்ரீ பிரமதநாத பிஷி.

# ரவீந்திரர் நாடகத் திரட்டு

## விஸர்ஜன் (ஜீவபலி), 1890

ரவீந்திரநாதர் 1887இல் எழுதிய 'ராஜர்ஷி' என்ற நாவலின் முதற் பகுதியைத் தழுவி இயற்றப்பட்டது 'விஸர்ஜன்' என்ற நாடகம். கவி கண்ட ஒரு கனவே 'ராஜர்ஷி' நாவலின் தோற்றத்திற்குக் காரணம். அவர் ஒருமுறை புகை வண்டியில் பிரயாணம் செய்தபொழுது ஒரு சிறுமி இரத்தப் பெருக்கைக் கண்டு, ''ஏன் இந்த இரத்த வெள்ளம்? ஏன் இந்த இரத்த வெள்ளம்?'' என்று கூவியதாகக் கனவு கண்டார். இக்கேள்வியும் திரிபுர அரச வம்சத்துக் கதையும் ஒன்று சேர்ந்து ராஜர்ஷி என்ற நாவலாக உருப்பெற்றன. பின்னர் கவியரசர் தம் குடும்பத்தைச் சேர்ந்த இளைஞர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி நாவலின் ஒரு பகுதியைத் தழுவி விஸர்ஜன் நாடகத்தை இயற்றினார். நாடக மேடையின் மீது நடிப்பதற்கு அநுகூலமாகப் பின்னர் சில சிறிய மாறுதல்கள் செய்யப்பட்டது உண்மையே எனினும் கவியின் மற்ற நாடகங்களைப்போல் நாடகத்தின் முழு அமைப்பும் அடியோடு மாற்றப்படவில்லை. சரியாக இதற்கு ஓராண்டிற்குமுன் எழுதப்பட்டது 'ராஜா ராணி' நாடகம். இந்த ஓராண்டிற்குள் ரவீந்திரநாதருடைய நாடகங்களின் அமைப்பிலும் நிர்வாகத்திலும் பல அபிவிருத்திகள் ஏற்பட்டன. ஆகவே 'ராஜா ராணி' நாடகத்தில் நாம் காணும் சில குறைபாடுகளும், இசைக் கவிதையின் (lyric poetry) மிகையும் 'விஸர்ஜன்' நாடகத்தில் குறைந்த அளவிலேயே காணப்படுகின்றன. மேலும் நாடகத்தின் பிரதான ஆண், பெண் பாத்திரங்களின் சிருஷ்டி தெளிவாகவும் ஓர் எல்லைக்குள் அடங்கியதாகவும் இருப்பதைக் காண்கிறோம். நிகழ்ச்சிகள் தடங்கலின்றி விரைவுடன் நாடகத்தின் ஒழுங்கை அநுசரித்து இறுதிவரை நிகழ்கின்றன. வங்காளியிலுள்ள சோகரச நாடகங்களுள் இது ஒன்றுதான் எவ்வகையிலும் சிறந்தது என்று பல விமர்சகர்கள் அபிப்பிராயப்படுவது முற்றிலும் ஒப்புக்கொள்ளக் கூடியதே.

இதன் இரகசியத்தை ஆராய்ந்த ரவீந்திரநாதரே, ''இந்

நாடகத்தின் மூலக்கருத்து அன்பிற்கும் பிரதாபத்திற்கும் இடையே காணக் கிடக்கிறது'' என்று கூறியிருக்கிறார். தேவியின் ஆலயத்தில் பலியிடப்பெற்ற ஓர் ஆட்டின் இரத்த வெள்ளத்தைக் கண்ட சிறுமி, ''ஏன் இந்த இரத்த வெள்ளம்?'' என்று கேட்கிறாள். இக் கேள்வி அந்நாட்டின் அரசனாகிய கோவிந்த மாணிக்கியனுடைய கண்களை மறைத்திருந்த திரையை அகற்றுகிறது. வெகு காலமாக உயிர்ப் பலியை ஒரு சாமானிய நிகழ்ச்சியாகக் கருதி வந்த அரசனின் இதயத்தில் அக்கேள்வி ஜீவகாருண்யம் கொழுந்து விட்டெரியச் செய்கிறது. அரசனின் உத்தரவுப்படி கோயிலில் உயிர்ப்பலி நிறுத்தப் படுகிறது. இச்சம்பவத்தை அடிப்படையாகக் கொண்டு நாடகத்தின் சோகரசம் திரண்டு எழுகிறது. கோயில் புரோகிதர் ரகுபதி எவருடைய அதிகாரத்தையும் மதிக்காதவர். தெய்வத்தின் சக்தியைத் தம்முடைய சக்தியாகவே கருதி அவர் அரசனை எதிர்க்கிறார். ராணி, மந்திரிகள், இளவரசர், நாட்டுமக்கள் முதலியோர் புரோகிதரை ஆதரிக்கின்றனர். அவர்களுடைய இதயங்களில் இரக்கம் சற்றும் உண்டாகவில்லை.

அன்பு ஒருபுறமும் அதிகாரம் ஒருபுறமும் இதயத்தைப் பிளக்க அரசன் கோவிந்த மாணிக்கியன் சித்தம் கலங்கியவனாக நெடுமூச்செறிந்து அன்னையைக் கேட்கிறான். ''வினயம் என்ற குணம் இவ்வுலகில் இருந்தே அகன்றுபோய் விட்டதோ? மகாதேவி! உன் திருவடிகளைச் சுற்றிவந்து தினம் வணங்கிக் கொண்டிருப்பவர்களுக்குத் தம்முடைய சிறுமை தெரிவதில்லையே! இத்தகைய மாந்தர் உன் மகிமையைக் குறைப்பதுடன் தாமும் இறுமாப்பிலேயே மிதந்து செல்கின்றனர்.''

இறுதியில் புரோகிதர் ரகுபதியின் இறுமாப்புக் குலைகிறது. அவருடைய இதயத்தில் அன்பு தோன்றுகிறது. ஆயினும் இதற்காகக் கோயில் ஊழியனும் ரகுபதியின் வளர்ப்புப் பிள்ளையுமான ஜயசிங்கன் தன் உயிரைத் தியாகம் செய்ய நேரிடுகிறது. இத்தியாகத்தின்மூலம் அனைவரது உள்ளத்திலும் வீசிய புயல் ஓய்ந்து அரசனுக்கும் அரசிக்கும் மீண்டும் ஒற்றுமை உண்டாகிறது. அவ்விதமே ரகுபதியும் பிச்சைக்கார சிறுமி அபர்ணாவும் ஒன்றுசேர்கின்றனர். அபர்ணாவை ஜயசிங்கன் காதலித்துவந்தான். மானிட ரத்தத்தைக் குடித்து வந்த கற்சிலையை ரகுபதி தம்முடைய கையினாலேயே பெயர்த்து எறிந்துவிட்டு அதனுடைய இடத்தில் அன்பைப் பிரதிஷ்டை செய்தார். ''ஏன் இந்த இரத்த வெள்ளம்?'' என்ற கேள்விக்கு நாடகத்தின் முக்கிய பாத்திரங்களான ராணி குணவதி, புரோகிதர் ரகுபதி ஆகியவர்களின் உள்ளங்களில் துயரம் கலந்த விடைகள் கிடைக்கின்றன.

## சித்திராங்கதை, 1892

மகாபாரதத்தில் அருச்சுனன் மணிபுரத்தின் அரசகுமாரியாகிய சித்திராங்கதையை மணந்துகொண்ட வரலாறு மிகவும் சுருக்கமானது. நூலின் எங்கோ ஒரு மூலையில் இக்கதை காணப்படுகிறது. உலர்ந்த எலும்புக்கூட்டைப் போன்ற மூலக் கதை ரவீந்திரநாதருடைய எழுதுகோலின் மாய மந்திரத்தால் உயிர்பெற்றெழுந்து அழகையும் அமரத்துவத்தையும் பெறுகிறது. மூலத்தையும் ரவீந்திரநாதரின் நாடகத்தையும் ஒப்பிட்டுப் படிப்பவர்களுக்குக் கவியரசரின் கற்பனைசக்தி பேராச்சரியத்தை விளைவிக்கும்.

''சித்திராங்கதை'' நாடக உருவத்தில் இயற்றப்பட்ட போதிலும் அது உண்மையில் ஒரு காவியமே; நாடகத்திற்கு வேண்டிய வன்மையும் நேர்மையும் பொருந்திய நடை, ஓர் இலட்சியத்தை நோக்கி விரைந்து நிகழும் சம்பவங்கள் ஆகியவை அதில் இல்லை என்பது வெளிப்படை. நாடக இலக்கணத்தை ஒருபுறம் ஒதுக்கிவிட்டு அது ஒரு காவியம் என்ற நோக்குடன் நாம் அதைப் படித்தால் அதனுடைய தனிப் பெருமை ஒரு கணத்தில் விளங்கிவிடும்; இளங்கவியின் மேதா விலாசத்தினால் உருவாக்கப்பட்டு, ஐம்புலன்களையும் வசீகரிக்கும் கற்பனை உலகத்தின் வருணனையைப் படிக்கும் வாசகர்கள் கதையில்வரும் 'நீலவண்ணப் பொய்கையில்' விழுந்து விடாமலும் அருச்சுனனும் சித்திராங்கதையும் புரியும் இன்ப விளையாட்டுக்களின்மீது பார்வையைச் செலுத்தாமலும் அதி ஜாக்கிரதையாகச் செல்லவேண்டும். புலனின்பம் நிறைந்த உலகத்தின் இத்தகைய அழகிய வருணனையை காளிதாசனுடைய கவிதைகளைத் தவிர வேறு எந்த இந்தியக் கவியின் நூல்களிலும் நாம் காண்பது அரிது என்பது திண்ணம்.

ஆயினும் இந்நாடகத்தின் சிறந்த அம்சம், சித்திராங்கதையின் குணாதிசயத்தில் ஏற்படும் புரட்சியையும் மாறுதலையும் கவியரசர் வருணித்திருக்கும் விதமே. இறுதிக் காட்சியில் அவள் தன்னை அருச்சுனனுக்கு அறிமுகப்படுத்திக் கொள்ளும் சமயத்தில் பின்வருமாறு கூறுகிறாள்:

''நான் சித்திராங்கதை. தேவி அல்லள். ஆயினும் சாமானிய ஸ்திரீயும் அல்லள். சிரமீது வைத்துப் போற்றத் தகுந்தவள் அல்லள். ஆயினும் அலட்சியம் செய்து புறத்தே ஒதுக்கத் தகுந்தவளும் அல்லள். உனக்கு இன்னல் நேரிடும் பொழுது நீ என்னை உன் பக்கல் வைத்துக் கொண்டு உன் ஆழ்ந்த சிந்தனையில் ஒரு பகுதியை எனக்களித்து, நீ மேற்கொள்ளும் கடுமையான விரதங்களில் உதவி புரிய எனக்கு அநுமதியளித்து, இன்

பத்திலும் துன்பத்திலும் என்னை உன் துணைவியாக்கிக் கொள்வாய் ஆகில் என் உண்மை இயல்பை அறிவாய்.''

இவ்வாறு மொழிபவள் புராணங்களில் தோன்றும் பழங் காலத்துப் பெண்மணி யல்லள். இவள் தற்காலத்து மடந்தை. ரவீந்திரநாதர் பிற்காலத்தில் இயற்றிய நூல்களில் புதுமைப் பெண்ணின் பேச்சும் புகழும் நிரம்பியுள்ளன. சித்திராங் கதையே அப்புதுமைப் பெண்ணின் முதல் உருவம். இக்கார ணத்தினுல் காவிய எல்லைக்கு வெளியில் சமூகத்தின் சரித்திரத் துறையில் இந்நாடகத்திற்கு ஒரு ஸ்தானம் உண்டு. இது காரணம் பற்றியேதான், 'சித்ரா' என்ற பெயருடன் ஆங்கி லத்தில் மொழிபெயர்க்கப்பட்ட இந்நூல் பொது மக்களால் மிகவும் ரசிக்கப்பட்டது. பாரதநாட்டின் இதர கவிகளின் நூல்களில் தோன்றும் பழங்காலத்துப் பெண்களின் வருணனை யைப் படித்துப் பழகிப்போன அயல்நாட்டு இலக்கியப் பிரியர் கள் ரவீந்திரநாதர் சிருஷ்டித்த புதுயுகத்துப் பெண்ணின் வருணனையைக்கண்டு பெருவியப்பு எய்தினர்.

## சிரகுமார் ஸபா (பிரம்மசாரிகள் சங்கம்), 1900-1901

இந்நூல் ஆதியில் இருந்தே 'சிரகுமார் ஸபா' (பிரம்ம சாரிகள் சங்கம்), 'ப்ரஜாபதிர் நிர்ப்பந்த' (பிரமனின் பிடிவாதம்) ஆகிய இரு பெயர்களுடன் வழங்கி வருகிறது. ருசிகரமான சம்பாஷணைகள் நிறைந்த ஒரு நகைச்சுவை நாவ லின் உருவத்தில் இது முதலில் எழுதப்பட்டது. பின்னர் 1925ம் ஆண்டில் சில நாடகக் கம்பெனிகளின் வேண்டு கோளுக்கு இணங்கி ரவீந்திரநாதர் இதை ஒரு சம்பூர்ண நாடக உருவில் அமைத்தார். நடிப்புக் கலையைத் தொழிலாகக் கொண்ட கம்பெனிகளால் நடிக்கப்பெற்றபொழுது இதைப் பொதுமக்கள் மிகவும் ரசித்துப் பாராட்டினர். கவியரசர் இயற்றிய நாடகங்களுள் நாடக மேடைமீது வெற்றியுடன் நடிக்கப்பெற்ற முதல் நாடகம் இதுவே என்று கூறவேண்டும். ஆதியில் இந்நாடகம் நெடுங்காலம் தொடர்ந்து நடிக்கப்பட்டு வந்தது. பிறகும், இது எங்கு நடைபெற்றுலும் கூட்டத்திற்குக் குறைவு இருப்பதில்லை. அமெச்சூர் நாடக சபையினர் எப் பொழுது வாய்ப்புக் கிடைத்தாலும் இந்த நாடகத்தை நடிக்கத் தவறுவதில்லை.

இந்நாடகத்தைப் பொதுமக்கள் இவ்வாறு ரசிப்பதன் காரணம் என்ன? நாடகத்தின் கதை இயற்கையாக நிகழக் கூடியதும் அனைவராலும் விரும்பக் கூடியதுமாக

முதற்காரணம். உலக அநுபவம் இல்லாதவர்களும் இலட்சிய வாதிகளுமான ஒரு சில இளைஞர்கள் தேசத்தையும் மக்களையும் முன்னேறச்செய்யும் நோக்கத்துடன் ஆயுள் முழுவதும் பிரம்மசாரிகளாக இருக்கவேண்டும் என்கிற விரதத்தை மேற்கொள்ளுகிறார்கள். பிரம்மசாரிகள் சங்கத்திலிருந்து விலகி மணம் செய்துகொண்டு கிருகஸ்தரான ஒரு மாஜி அங்கத்தினர் தம்முடைய இரு மைத்துனிகளுக்குத் தகுந்த வரன்களைத் தேடி விவாகம் செய்துவைக்கும் நோக்கத்துடன் மேற்கூறிய இளைஞர்களின் மன உறுதியைக் குலைக்க இரகசிய மாகச் சூழ்ச்சி செய்கிறார். இத்தகைய கதைப்போக்கு பொது மக்கள் மிகவும் ரசிக்கக் கூடியது. பிரம்மசாரிகள் சங்கத்தின் திறமை வாய்ந்த தலைவராகிய சந்திர மாதவபாபு, சங்கத்தின் மாஜித்தலைவராகிய அக்ஷயர், அவருடைய மாமனின் தூரபந்து வாகிய சிற்றப்பா ரசிகர் ஆகிய ஜீவன் நிறைந்த பாத்திரங்கள் நாடகத்தில் தோன்றுவது ஜனங்கள் அதை ரசிப்பதன் இரண் டாவது காரணம். ருசியும் நகைச்சுவையும் நிறைந்த சம்பா ஷணைகள் அமைந்திருப்பது மூன்றாவது காரணம். மத்தாப்பு உதிர்வதுபோல் ஆங்காங்கு மிளிரும் விகடப் பேச்சுக்களும் சிலேடைகளும் நான்காவது காரணம். நாடகத்தினூடே கவி யரசர் அமைத்திருக்கும் பாட்டுக்களும் மக்களை மயக்குறச் செய்யும் அவற்றின் இனிய மெட்டுக்களும் ஐந்தாவது காரணம்.

வங்க இலக்கியத்தில் நகைச்சுவை நாடகங்களுக்குக் குறை வில்லை. ஆயினும் அம்சங்கள் அனைத்தையும் சீர்தூக்கிப் பார்த் தால், பிரம்மசாரிகள் சங்கத்திற்கே முதல் இடம் அளிக்க வேண்டும். மட்டரகமான நகைச்சுவை, ரசக்குறைவான நிகழ்ச்சிகள், நாகரிகமற்ற சம்பாஷணைகள் போன்றவை சாதா ரணமாக ஹாஸ்ய நாடகங்களில் காணப்படும் சில குறை களாகும். இவை பிரம்மசாரிகள் சங்கத்தில் அறவே இல்லை. மேலும் அதில் அடங்கியுள்ள சிறந்த அம்சங்கள் பல வங்க இலக்கியத்தின் வேறு எந்த நகைச்சுவை நாடகத்திலும் இல்லை என்று திண்ணமாகக் கூறலாம். சாமானியமானவையாகத் தோன்றும் இந்நாடகத்தின் நிகழ்ச்சிகளிடையே ரவீந்திர நாதரின் வாழ்க்கைத் தத்துவம் காணப்படுகிறது. மானிட ஜாதிக்கு நாம் புரிய வேண்டிய கடமையைச் செய்யாமல் ஓர் இலட்சியத்தை மாத்திரம் முன்னிட்டுக் கொண்டு முன்னேற முயன்றால், தேவேந்திரன் ஊர்வசி முதலிய அப்சர ஸ்திரீகளை பூவுலகத்திற்கு அனுப்பியது போல், இயற்கை நம் மன உறுதி யைக் குலைக்கப் பலவித இடையூறுகளைப் பிறப்பிக்கும்.

‘ப்ரக்ருதிர் ப்ரதிசோத்’ (இயற்கையின் வஞ்சம்) நாடகத்

தில் மிகவும் ஆழ்ந்த முறையில் வற்புறுத்தப்பெறும் இர்தத் தத்துவம் இங்கு சுலபமான முறையில் விளக்கப்படுகிறது. ஆயினும் இரு நாடகங்களிலும் விளக்கப்படும் தத்துவம் ஒன்றே.

—ஸ்ரீ பிரமதநாத பிஷி.

# முதல் அங்கம்

## ்முதற் காட்சி

ன் ஆலயம்

ுணவதி: அன்னையினிடம் நான் என்ன அபசாரம் புரிந்து விட்டேன்? பெற்ற பிள்ளையை விலை பேசி விற்று வயிறு வளர்க்கும் பிச்சைக்காரிக்குப் புத்திரபாக்கியம் அளிக்கிறாய். மானத்தைக் காப்பாற்றிக்கொள்ளத் தன் வயிற்றில் பிறந்த சிசுவைக் கொல்லத் துணியும் விலைமாதிற்குக்கூடப் பிள்ளைவரம் அருள்கிறாய். இந்த ராஜ்யத்தின் மகாராணியாகிய நான், நூற்றுக்கணக்கான ஊழியர்கள் கைகட்டிச் சேவகம் செய்யக் காத்திருக்க, பொன்னிழைத்த மஞ்சத்தின்மீது அமர்ந்து, கேவலம் ஒரு குழந்தையின் அணைப்புக்கு ஏங்கி - என் உயிருக்குள் மற்றொரு மதிப்பிலா ஜீவனை வைத்து வளர்க்கும் அநுபவத்திற்கு ஏக்கமுற்று - என் மார்பகம், கைகள், உதரம், கண்கள் முதலியவற்றால் ஒரு நெருங்கிய வலையமைத்து அச்சிறு உயிரைப் பிடித்து வைக்க வாடுகிறேன். என் வயிற்றில் பிறக்கும் ஒரு செல்வம் முதன் முதலாகத் தன் கண்களை மலர விழித்து என்னைப் பார்ப்பதும் என் மடியில் அமர்ந்து சொல் அறியாத செங்கனி வாயினால் இயற்கை மகிழ்ச்சியின் மூலம் உண்டாகும் மலர்ச் சிரிப்பைச் சிரிப்பதும் என் வாழ்வில் நடைபெறப்போகும் சம்பவங்கள்தானா? குமாரர்களைப் பெற்றெடுத்த அன்னையே! ஒரு குழந்தைக்குத் தாயாகும் சுவர்க்க பதவியை இழக்க நான் எத்தகைய கொடிய பாவங்களைச் செய்திருக்க வேண்டும்?

[ராஜ புரோகிதர் ரகுபதி பிரவேசம்]

சுவாமி! வெகு நாட்களாக நான் அன்னையைப் பூசித்து வருகிறேன். என் உளமறிய ஒருவித அபசாரமும் செய்ததில்லை. களங்கமற்ற மனத்தையுடைய என் கணவர் சாட்சாத் சிவபெருமானை ஒத்தவர்; இவ்வளவும்

இருந்தும் எந்தக் குறையைக் கருதி மகாமாயையாகிய தாய் என்னை மலட்டுத்தனம் என்கிற சுடலையில் திரியும்படி விட்டுவிட்டாள்?

ரகுபதி: அன்னையின் திருவிளையாடலை நாம் எப்படி அறிந்து கொள்ள முடியும்? மலைமகளாகிய அவளுடைய இதயமும் கல்லே. நமது சுகமும் துக்கமும் அவளுடைய விருப்பப் படியே உண்டாகும். தைரியமாகவிரு. இன்று உன் பெயரால் அன்னைக்கு விசேஷ பூஜை நடைபெறும். தேவி மனமகிழ்ந்து கேட்ட வரத்தையளிப்பாள்.

குணவதி: இவ்வருடம் திருவிழாவின்பொழுது பலியிடவேண் டிய ஆட்டை நான் என் கைகளாலேயே அளிக்கிறேன். மேலும், ஒரு பிரார்த்தனை செலுத்த வேண்டிக்கொள் கிறேன். அன்னை காளி எனக்கு புத்திர பாக்கியம் அளித்தாளாகில் வருடந்தோறும் அவளுக்கு நூறு எருமைகளையும் முந்நூறு ஆடுகளையும் பலியிடு வேன்.

ரகுபதி: அப்படியே செய், மகாராணி. பூஜைக்கு நேரமாகி

[இருவரும் போகிறார்கள்.]

[கோவிந்த மாணிக்கியனும், அபர்ணவும் ஜயசிங்கனும் பிரவேசிக்கின்றனர்.]

ஜயசிங்கன்: மகாராஜா! என்ன உத்தரவு?

கோவிந்த: இந்தப் பிச்சைக்காரச் சிறுமி அன்புடன் வளர்த்து வந்த ஓர் ஆட்டுக்குட்டியைப் பலவந்தமாகப் பிடித்து வந்து தேவிக்கு பலி கொடுத்தீர்களாமே? அதை அன்னை மனமார ஏற்றுக்கொண்டாளா?

ஜயசிங்கன்: வேலைக்காரர்கள் தேவி பூஜைக்கு வேண்டிய ஆடுகளை எங்கிருந்து பிடித்து வருகிறார்கள் என்பதை நாங்கள் எப்படி அறிவோம், மகாராஜா?

ஏ பெண்ணே! நீ ஏன் அழுகிறாய்? அனைத் துலகிற்கும் அன்னையாகிய தேவி தானாகவே எடுத்துக் கொண்ட ஒரு வஸ்துவிற்காகக் கண்ணீர் வடிப்பது தகுதியல்ல.

அபர்ண: யார் உன்னுடைய 'அனைத்துலகிற்கும் அன்னை?' என் குழந்தை அவளை அறியாது. நான்தான் அதனுடைய அன்னை. நான் நேரங்கழித்து வந்தால் அது வாயி லிருக்கும் புல்லையும் விழுங்காமல் நான் வரும் வழியையே பார்த்துக்கொண்டு கதறும். நான் வந்தவுடன் அதை வாரியெடுத்து மார்பிலணைத்துக்கொண்டு நான் பிச்சை யெடுத்துக்கொண்டு வந்திருக்கும் உணவை அதனுடன்

பகிர்ந்து உண்பேன். வேறு எந்த அன்னையையும் அது, பாவம், அறிந்ததில்லை.

ஜயசிங்கன்: *மகாராஜா! என் உயிரின் ஒரு பாகத்தை அளித்து பலியிடப்பெற்ற ஆட்டுக்குட்டியைத் திரும்பவும் பிழைக்கவைக்கக் கூடுமாயின் நான் உயிர் விடச் சித்த மாக விருக்கிறேன். ஆனால் அன்னை தானுகவே ஏற்றுக் கொண்ட ஒரு பொருளை நான் எப்படி மறுபடியும் வர வழைக்க முடியும்?*

அபர்ணு: *அன்னை தானுகவே ஏற்றுக் கொண்டாளாம்! எல் லாம் முழுப்பொய். யாரோ ஓர் அரக்கி என் ஆட்டுக் குட்டியை விழுங்கிவிட்டாள்.*

ஜயசிங்கன்: *சீச்சீ! தேவியைப்பற்றி இப்படிப்பட்ட வார்த் தைகள் உன் வாயிலிருந்து வரக்கூடாது.*

அபர்ணு: *ஏ அனைத்துலகிற்கும் அன்னையே! ஏழைகளின் பொருள்களை பலவந்தமாகக் கவர்ந்து கொள்வது தான் உன்னுடைய வழக்கமோ? அரசன் பொருள்களைக் கவர்ந் தால் அண்டத்திற்கெல்லாம் அதிபனுகிய கடவுள் தண்டிப் பார். நீயே களவு செய்ய முற்பட்டால் உன்னை யார் விசாரணைக்குள்ளாக்க முடியும்? அரசே! நீயே சொல்....*

கோவிந்த: *குழந்தாய்! எனக்குப் பேச நா எழவில்லை. இவ் வுலகில் ஏனிந்த ரத்த வெள்ளம்? ஏனிந்த துயரக்குரல்? இதை யார் விளக்க வல்லார்?*

அபர்ணு: *அதோ படிகளில் பெருகி வழிகிறதே அது என் செல்வத்தின் ரத்தமா? ஐயோ என் கண்ணே! உன்னை அவர்கள் வதைத்த பொழுது நீ எவ்வாறு அலறி அழு தாயோ? துயரம் நிறைந்த உன் கண்களால் நான்கு புற மும் நோக்கி எப்படி விழித்தனையோ! உன் மெல்லிய உடல் எப்படி நடுங்கிற்றே! உன் உதவிக்குப் பறந்தோடி வர முடியாமல் என் உடல் அப்பொழுது எங்கிருந்ததோ! அந்தோ! கொடுமை! கொடுமை!*

ஜயசிங்கன்: *(தேவியின் சிலையை நோக்கி) நான் பிறந்தது முதல் உன்னைத் தொழுது வருகிறேன். உன் மாயையை இன்னும் என்னுல் அறிய முடியவில்லை. மனிதர்களுக்குக் கூட கருணை பிறக்கிறது. அண்டங்களைப் பிறப்பித்த உனக்கு தயையென்பதே கிடையாதா?*

அபர்ணு: *(ஜயசிங்கனைப் பார்த்து) நீ கொடியவனைப் போல் காணப்படவில்லையே! என் துயரத்தைக் கண்டு கண்ணீர் வடிக்கிருய். நீ என்னுடன் வா. இக் கோயிலைத் துறந்து வந்துவிடு. நான் உன்மீது வீணுகப் பழிபோட இருந்தேன்.*

ஜயசிங்கன்: (தேவியின் சிலையை நோக்கி) மலையவன் மகளே! இன்று உனது ஆலயத்தில் ஒரு புதிய கீதத்தின் இன்னிசை, கருணை கலந்த குரலில் ஒலிப்பதேன்? உன் பக்தர்களின் மனத்தில் என்றுமில்லாத வேதனையுணர்ச்சி ஏன் எழுகிறது? உன் சந்நிதியை விட்டு நான் எங்கே செல்வேன்? எனக்கு வேறு புகல் ஏது?

கோவிந்த: எங்கு காதல் உண்டோ அங்குதான் புகல்

[அனைவரும் போகின்றனர்.]

ஜயசிங்கன்: எங்கு காதல் உண்டோ அங்கு தான் புகல்! பெண்ணே, வா. என் குடிசைக்குச் செல்வோம். இன்று என் அதிதியாகிய உன்னை அன்னையின் ஸ்தானத்தில் வைத்து உபசரிக்கிறேன்.

[ஜயசிங்கனும் அபர்ணாவும் போகிறார்கள்.]

## இரண்டாம் காட்சி

ராஜசபை

[அரசன் கோவிந்த மாணிக்கியனும் நக்ஷத்திரராயும், புரோகிதர் ரகுபதியும் பிரவேசிக்கின்றனர்.]

சபையோர்: (எழுந்து) மன்னனுக்கு வெற்றி உண்டாகுக!

ரகுபதி: பலிக்கான மிருகங்களைச் சேகரிக்க அரசனின் சமுகத்திற்கு வந்திருக்கிறேன்.

கோவிந்த: இவ்வருடம் முதல் நமது ஆலயத்தில் ஜீவபலி கொடுப்பது தடை செய்யப்பட்டிருக்கிறது.

நயனராய்: என்ன! பலிக்குத் தடையா?

மந்திரி: ஹா! பலிக்குத் தடையா?

நக்ஷத்திரராய்: என்ன அக்கிரமம் இது! பலிக்குத் தடையா?

ரகுபதி: நாம் என்ன கனவு காண்கிறோமா?

கோவிந்த: கனவல்ல, குருவே! இத்தனை நாட்களாகக் கனவு கண்டு கொண்டிருந்தோம். இன்றுதான் நமக்கு விழிப்பு உண்டாயிற்று. ஒரு பிச்சைக்காரச் சிறுமியின் வடிவத்தில் தேவி என்முன் தோன்றி 'நான் இனி பிராணிகளின் ரத்தபலியைச் சகிக்கமாட்டேன்' என்று கூறிச் சென்றாள்.

ரகுபதி: ஓகோ! இத்தனை வருடங்களாக ஏன் சகித்து வந்தாளாம்? ஆயிரம் ஆண்டுகளாக ரத்தத்தைப் பருகி வந்தவளுக்கு இன்று மாத்திரம் அதனிடம் என்ன வெறுப்போ!

கோவிந்த: தேவி ஒரு பொழுதும் ரத்த பானம் செய்ததில்லை; நீர் மிருகங்களை பலிகொடுத்த பொழுதெல்லாம் அவள் தன் முகத்தை அருவருப்புடன் அப்புறம் திருப்பிக் கொண்டாள்.

ரகுபதி: மன்னனே! நீ என்ன செய்யத் துணிந்தாய் என்பதை நன்கு ஆலோசித்துப்பார். சாத்திரவிதிகள் உன்னுடைய கட்டுப்பாட்டிற்கு அடங்கியவை அல்லவே!

கோவிந்த: எல்லாச் சாத்திரங்களுக்கும் மேலானது அன்னையின் ஆக்ஞை.

ரகுபதி: மடமை ஒருபுறம்; மமதை ஒருபுறம். பேதை மனிதனே! அன்னையின் ஆக்ஞையை நீ மாத்திரம் தான் கேட்டாய் போலும்! என் காதில் அது விழாதோ?

நக்ஷத்திர ராய்: நீயே சொல் மந்திரி! இது பெரிய ஆச்சரியம் அல்லவா? அர்ச்சகரே அறியாத அன்னையின் அதிசய ஆக்ஞை!

கோவிந்த: தேவியின் ஆக்ஞை உலகில் எப்பொழுதும் ஒலித்துக் கொண்டேயிருக்கிறது. வேண்டுமென்றே செவிடாக இருப்பவர்கள் அதைக் கேட்டும் கேளாதவர் போல் இருப்பர்.

ரகுபதி: நம்பிக்கையற்றவன்! நாஸ்திகன்!

கோவிந்த: குருவே! நேரமாகிறது. ஆலயத்திற்குச் செல்லுங்கள். செல்லும் பொழுது வழியில் அனைவருக்கும் 'நமது திரிபுர ராஜ்யத்தில் சகல உயிர்களுக்கும் தாயாகிய அன்னையின் பூசையின் பொழுது உயிர்க் கொலை புரிபவர்கள் நாடு கடத்தப்படுபவர்' என்று அறிவித்துக் கொண்டே செல்லுங்கள்.

ரகுபதி: இது நிச்சயமான வார்த்தை தானே!

கோவிந்த: அதற்குச் சந்தேகமே இல்லை.

ரகுபதி: (எழுந்து) அப்படியானால் நீ அழிந்து போவாய்.

சந்திரபாலன்: (எழுந்தோடி வந்து) குருவே! பொறுங்கள்! பொறுங்கள்!

கோவிந்த: நீ உட்கார், சந்திரபாலா!. குருவே! நீர் கூற விரும்புவதைக் கூறிவிடும். அவ்விதமாவது உமது உள்ளக் கொதிப்பு அடங்கட்டும்.

ரகுபதி: திரிபுரத்தின் அதிதேவதையாகிய பராசக்தி திரிபுரத்தின் பிரஜைகளுள் ஒருத்தி என்று நீ முடிவு கட்டிவிட்டாய் போலும்! உன்னுடைய அதிகாரத்தைக் கொண்டு அவளையும் கட்டுப் படுத்தலாமென்று, கனவு காண்கிறாயோ? அவளுக்குரித்தான பலியை நீ தடுப்பதா? அவளுடைய அடிமையாகிய நான் இருக்கும் வரை அது ஒருகாலும் நடைபெறாது.

[விரைந்து போகிறார்]

நயன ராய்: நான் பாராட்டும் உரிமைக்காக என்னை மன்னிப்பீர் அரசே! எந்த அதிகாரத்தின் பேரில் நீங்கள் தேவியின் பலியை....

சந்திரபாலன்: அமைதியாக இரு, சேனாபதி!

மந்திரி: மகாராஜா! தாங்கள் செய்திருக்கும் முடிவு கடைசி முடிவுதானா? உங்கள் தீர்மானத்தை மாற்றவே முடியாதா?

கோவிந்த: இனி முடியாது, மந்திரி! பாவத்தை ஒழிக்கும் முயற்சியில் காலதாமதம் செய்வது உசிதமல்ல.

மந்திரி: பாவத்திற்கு இவ்வளவு நீண்ட ஆயுள் எப்படி இருந்திருக்கக் கூடும்? பல நூற்றாண்டுகளாக தேவியின் திருவடிகளைத் தொழுது மூப்பை அடைந்திருக்கும் இவ்வழக்கத்தைப் பாவம் என்று நாம் கருதுவது தகுமா?

[அரசன் பதிலளிக்காமல் யோசனையில் ஆழ்கிறான்]

நக்ஷத்திர ராய்: ஆகையால், மந்திரி, இது எப்படி பாவச் செயலாகக்கூடும்?

மந்திரி: நமது முன்னோர்கள் பக்தியுடன் அனுஷ்டித்து வந்த பழமையான வழக்கம் இது. இதை அவமதித்தால் நமது முன்னோர்களை அவமதித்தது போலாகும்.

[அரசன் மறுபடியும் யோசனையில் ஆழ்கிறான்]

நயன ராய்: நன்கு யோசிக்க வேண்டும், மகாராஜா! தொன்று தொட்டு, யுகங்கள் தோறும், ஆயிரக்கணக்கான பக்தர்களின் சம்மதத்தைப் பெற்று வந்திருக்கும் வழக்கத்தை ஒழிக்க உமக்கு ஏது அதிகாரம்?

கோவிந்த: (பெருமூச்சுடன்) தர்க்கத்தை நிறுத்துங்கள். மந்திரி! நீ சென்று என் கட்டளையைப் பிரசாரம் செய். இன்று முதல் நமது நாட்டில் ஜீவபலி ஒழியவேண்டும்.

[செல்கிறான்]

மந்திரி: இதென்ன விபரீதம்!

நக்ஷத்திர ராய்: விபரீதம் ஒன்றுமில்லை, மந்திரி! புத்தர்களின் ஆலயங்களில் பலி கிடையாதல்லவா? இப்பொழுது புத்தர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் வித்தியாசமில்லாமற் போய்விட்டது, அவ்வளவுதான். நீயே சொல், சந்திர பாலா! நீ ஏன் மௌன விரதம் அனுஷ்டிக்கிறாய்?

சந்திரபாலன்: நான் ஒரு பயந்த, சாதுவான பிராணி. புத்தி மிகக் குறைவு. அரசனின் கட்டளை எனக்கு விளங்காமற் போனாலும் நான் அதை நிறைவேற்றத்தான் போகிறேன்.

*மூன்றும் காட்சி*

ஆலயம்

*அன்னையே! இப்பொழுது இங்கே நீயும் நானுந் தான். இக்கோயிலில் நாள் முழுவதும் வேறு யாரும் இல்லை. தாயே! எவ்வளவு நீண்ட பகல்! நடுவில் யாரோ என்னை அழைப்பதுபோன்ற உணர்ச்சி! உன் அருகில் நான் இருந்தும் தனிமையாக இருப்பதுபோல் ஒரு தோற்றம்.*

*[திரைக்குப் பின்புறம் கானம்]*

இனி எனது தனிவழியே ஏகி நடந்திடுவேன்
ஏற்ற துணை இலை எனினும் ஏதும் இனி அஞ்சேன்

ஜயசிங்கன்: *தாயே! இதென்ன மாயை? தெய்வம் மனிதர் களுக்கு உயிர் கொடுப்பதுதான் இயற்கை. இதுவரையில் பேசாத கற்சிலையாகவிருந்த நீயே உயிர் பெற்றெழுந்து மனிதரின் குரலை மேற்கொண்டு பேசுவது என்ன விந்தை!*

*[பாடிக்கொண்டே அபர்ணு பிரவேசம்]*

இனி எனது தனிவழியே ஏகி நடந்திடுவேன்
ஏற்ற துணை இலை எனினும் ஏதும் இனி அஞ்சேன்
இனிய மனம் என் தஞ்சம் இன்ப நறுஞ்சோலை
எழில் மலரே கருவண்டின் ஏற்ற புகல் அன்றோ!

ஜயசிங்கன்: *தனி வழி நடக்கிருயா? தென்றல் நின்றுபோய், மலர்களின் வாசனையும் வராமல், பத்துத் திசைகளிலும் பத்துவகைச் சந்தேகங்கள் எழுந்து மறைந்தால் வண்டு எவ்வழி செல்லும்? இவ்வுலகில் அகதிகள் யார் தெரியுமா?*

அபர்ணு: *தெரியும். நான் என் நிறைந்த உள்ளத்தை அளிக்கக் காத்திருந்து அதனை யாரும் அங்கீகரிக்க வரவில்லை யானல் நான் இவ்வுலகில் அகதியாவேன்.*

ஜயசிங்கன்: *இவ்வுலகத்தை சிருஷ்டிக்குமுன் தெய்வம் தனியாக இருந்ததுபோல்! அல்லவா! இவ்வுலகம் எவ்வளவு பெரியதோ அவ்வளவு சூன்யமானது. பயனற்றது.*

அபர்ணு: *ஜயசிங்கா! நீ அகதி என்று நினைத்துக்கொண்டிருக்கிருயா? இல்லை. நீ ஏழைகளின் தோழன். உன்னிடம் இருப்பதையெல்லாம் அபகரிக்க முயலுபவர்களைக் கூட நீயாகவே தேடிச் செல்லுகிருய். எளியவர்களையும் துன்பமடைந்தவர்களையும் நாடிச் செல்கிருய். நான் இவ்வளவு காலமாகப் பிச்சையெடுத்துக் கொண்டு*

திரிகிறேனல்லவா? எத்தனையோ பேர்களைப் பார்த்திருக்கிறேன். எனக்கு வேண்டியது வெறும் பிச்சைதான் என்று எல்லோரும் நினைத்துவிடுகிறார்கள். தூரத்திலிருந்தே ஒரு பிடி அரிசியை வீசிப் போடுகிறார்கள். நீ தயவு காட்டியதைப்போல் வேறு ஒருவரும் என்னிடம் காட்டியதில்லை. நான் ஓர் ஏழையென்ற எண்ணமே என் மனதில் ஏற்படாமற் செய்துவிட்டாயே!

ஜயசிங்கன்: உண்மையாகவே கொடையாளியாக இருப்பவன் கொடையின் உருவத்தில் தானாகவே ஏழைகளிடம் இறங்கி வருவான்—பாலைவனத்தின்மீது மேகம் ஆகாயத்திலிருந்து மழையுருவத்தில் இறங்கி வருவதுபோல். தேவி மானிட உருவம் எடுத்துக்கொண்டு நான் யாரைக் காதலிக்கிறேனோ அவளுடைய வடிவத்தில் தோன்றுவாள். அப்பொழுது ஏழை, கொடையாளி, தேவதை, மனிதன் எல்லோரும் சமமாகி விடுவர்.

அதோ வருகிறார் என் குருநாதர்!

அபர்ணா: அப்படியானால் நான் கண்காணாத இடத்திற்கு மறைந்துவிட வேண்டும். எனக்கு பிராம்மணர்களைக் கண்டாலே பயம். எவ்வளவு கொடிய, கூரிய பார்வை! அவருடைய நெற்றி கல்லாலான இக்கோயிலின் படிகளைப் போல் கடினமாகக் காணப்படுகிறது.

[செல்கிறாள்.]

ஜயசிங்கன்: ஆம். விதியைப்போல் கடினமானதுதான். ஆனால் அதுதான் இவ்வுலகிற்கு நிலையான புகலிடம்.

[ரகுபதி பிரவேசிக்கிறார். அவருடைய பாதங்களைக் கழுவ நீர்க் குடத்துடன் ஜயசிங்கன் வருகிறான்.]

ஜயசிங்கன்: குருவே!

ரகுபதி: போடா! போ!

ஜயசிங்கன்: ஜலம் கொண்டுவந்திருக்கிறேன்.

ரகுபதி: அங்கேயே நில்! ஜலமும் வேண்டாம். ஒன்றும் வேண்டாம்.

ஜயசிங்கன்: மடி வஸ்திரங்கள்?

ரகுபதி: யாருக்கு வேண்டும் வஸ்திரங்கள்?

ஜயசிங்கன்: நான் என்ன அபசாரம் புரிந்துவிட்டேன் தெரியவில்லையே?

ரகுபதி: நீ தவறு செய்ததாக யார் சொன்னார்கள்? கோரமான கலியின் பார்வை கனத்து நெருங்குகிறது. ராகுக்கிரகம் சந்திரமண்டலத்தை விழுங்குவதுபோல் க்ஷத்திரிய பலம் பிரம்ம தேஜஸை கபளீகரம் செய்ய முயற்சிக்கிறது.

தேவியின் யாக குண்டத்திற்கு மேலே அரசனின் சிங்காதனம் தலைதூக்கி ஆடுகிறது. ஹா! கலி தேவதையே! நீயும் அரசனின் சபையோரைப் போல் அவனுடைய கட்டளையைத் தலைவணங்கி ஏற்றுக்கொண்டனையோ? நான்கு புயக் கடவுளே! நீ நான்கு கரங்களையும் குவித்து அவனைக் கும்பிடுகிறாயோ? வைகுண்ட வாயிலை பலவந்தமாக அரக்கர் கூட்டம் வசப்படுத்திக் கொண்டதோ? அங்கிருந்த தெய்வம் பாதாளம் சென்றுவிட்டதோ? நல்லது. அரக்கர்களும் மனிதர்களும் ஒன்றுகூடி, இவ்வுலகில் மதம்பிடித்த ஆட்சி நடத்துகிறார்கள். தெய்வம் இல்லையென்றாலும் பிராம்மணன் உளன். பிராம்மண கோபம் என்கிற வேள்வித்தீயில் மன்னனின் சிங்காதனம் விறகுச் சுள்ளிகளைப்போல் பஸ்மமாகிவிடும்.

[ஜயசிங்கனின் அருகிற் சென்று கனிவுடன்]

குழந்தாய்! நான் இன்று உன்மீது சீறி விழுந்துவிட்டேன். என் மனம் குழம்பியிருக்கிறது.

ஜயசிங்கன்: என்ன நடந்தது சுவாமி?

ரகுபதி: என்ன நடந்ததா? அவமதிக்கப்பட்ட இந்த துர்க்கா தேவியையே கேள். என் வாயினால் எப்படிக் கூறுவேன்?

ஜயசிங்கன்: யார் அவமதித்தனர்?

ரகுபதி: அரசன் கோவிந்த மாணிக்கியன்.

ஜயசிங்கன்: கோவிந்த மாணிக்கியனா? யாரை அவமதித்தான்?

ரகுபதி: யாரை அவமதித்தானா? உன்னை, என்னை, சகல சாஸ்திரங்களை, சர்வ தேசங்களை, சர்வ காலங்களை, சர்வ தேச காலங்களுக்கும் அதிதேவதையான மகா காளியை எல்லோரையுமே, தன்னுடைய துச்சமான சிங்காதனத்தின் மீது உட்கார்ந்தபடியே அவமதித்துவிட்டான். ஒரு நொடியில் அன்னைக்குகப்பான பலியை நிறுத்திவிட்டான்.

ஜயசிங்கன்: கோவிந்த மாணிக்கியனா? நிஜமாகவா?

ரகுபதி: ஆமாமடா, ஆமாம். உன் அருமை அரசன் கோவிந்த மாணிக்கியன்தான். உன்னால் மிகவும் போற்றப்படும் மன்னன்! உன் வாழ்விற்கு அதிபதி. நன்றி கெட்டவனே! உன்னைக் குழந்தைப் பருவம் முதல் பெற்ற தாயைவிட மேலான அன்புடன் வளர்த்தேன். இன்று உனக்கு என்னைவிட கோவிந்த மாணிக்கியன் நெருங்கிய உறவினனாகி விட்டான்.

குருவே! தந்தையின் மடியில் உட்கார்ந்து குழந்தை பூர்ணசந்திரனை நோக்கிக் கைகளை வானில் உயரத் தூக்குகிறது. சுவாமி! நீங்கள்தான் என் தந்தை; மன்னன் கோவிந்த மாணிக்கியன் சந்திரன்.

ஆயினும் நான் கேட்பது உண்மைதானா? அரசன் தேவி பூஜையின் பொழுது கொடுக்கப்படும் ஜீவபலியைத் தடுத்துவிட்டது நிஜமா? நிஜமாயின் அக்கட்டளையை யார் ஒப்புக்கொள்வார்கள்?

ரகுபதி: அரசனின் கட்டளையை மீறுபவர்கள் நாடு கடத்தப் படுவர்.

ஜயசிங்கன்: அன்னைக்கு பலியில்லாத ஒரு ராஜ்யத்திலிருந்து அகற்றப்படுவது தண்டனை அல்ல. என் உடலில் உயிர் உள்ள வரையில் தேவியின் பலிக்கு ஹானி ஏற்படாமல் நான் பார்த்துக்கொள்கிறேன்.

## நான்காம் காட்சி

அரண்மனையின் அந்தப்புரம்

[ராணி குணவதியும் தாதியும்]

குணவதி: என்ன சொன்னாய்? நான் தேவி பூஜைக்காக அனுப்பிய பலி கோயில் வாயிலிலிருந்து திருப்பியனுப்பப் பட்டதா? அப்படிச் செய்தவனுக்குக் கழுத்தின்மீது எத்தனை தலைகள் உள்ளனவோ? அந்த அபாக்கியசாலி யார்?

தாதி: சொல்ல பயமாக இருக்கிறது அம்மா.

குணவதி: சொல்ல அச்சமாக இருக்கிறதா? இந்த வார்த்தையை எந்த தைரியத்துடன் என்னிடம் கூறத் துணிந்தாய்? என்னைக்காட்டிலும் வேறு யாரிடத்தில் உனக்கு பயமோ?

தாதி: என்னை மன்னிக்கவேண்டும் அம்மணி.

குணவதி: நேற்று மாலைவரை நான் இங்கு ராணியாக இருந்தேன். அரண்மனை இசைவாணர்கள் வந்து எனக்கு வாழ்த்துப் பாடிவிட்டுச் சென்றனர். வேதியர்கள் வந்து ஆசீர்வதித்துச் சென்றனர். ஊழியர்கள் கைகட்டிக் கும்பிட்டு என்னுடைய கட்டளைகளை உடனுக்குடன் நிறைவேற்றினர். இன்று எல்லாம் தலைகீழாக மாறி விட்டதோ! தேவிக்குரிய பூஜை நிறுத்தப் பட்டுள்ளது. ராணியின் அதிகாரம் தேய்வடைந்து வருகிறது. திரிபுரம் ஒரு கனவுலகமாக வல்லவா மாறிவிட்டது! அடி! உடனே சென்று ராஜபுரோகிதர் ரகுபதியை அழைத்து வா.

[அரசன் கோவிந்த மாணிக்கியன் வருகிறார்.]

குணவதி: மகாராஜா! கேட்டீர்களா செய்தியை? நான் தேவியின் பூஜைக்காக அனுப்பிய பலி ஆலய வாயிலிலிருந்து திருப்பியனுப்பப்பட்டு விட்டதாம்.

கோவிந்த: அது எனக்குத் தெரியும்.

குணவதி: உங்களுக்குத் தெரியுமா? அப்படியானால் அதை நீங்கள் ஏன் தடுக்கவில்லை? தெரிந்தும் உங்கள் ராணிக்கு அவமானம் உண்டாவதை அனுமதித்தீர்களா?

கோவிந்த: இதற்காக என்னை மன்னிப்பாய், குணவதி.

குணவதி: உங்கள் உள்ளம் தயை நிரம்பியது என்பதை நான் அறிவேன். ஆனால், அரசே, இது கருணையல்ல; பேடித்தனம். இரக்கத்தினால் நீங்கள் தண்டனை அளிக்க விரும்பவில்லையானால் நான் சிட்சை விதிக்கிறேன். குற்றவாளி யார் என்பதை மாத்திரம் கூறிவிடுங்கள்.

கோவிந்த: அன்பே! குற்றவாளி நான்தான். உனக்கு மன வருத்தம் உண்டாக்கியதைத் தவிர வேறு ஒரு குற்றத்தையும் நான் புரியவில்லை.

குணவதி: என்ன சொல்லுகிறீர்கள் அரசே?

கோவிந்த: இன்று முதல் நம்முடைய திரிபுர ராஜ்யத்தில் தெய்வத்தின் பெயரால் பிராணிகளின் ரத்தத்தைச் சிந்தவிடுவது தடுக்கப்பட்டிருக்கிறது.

குணவதி: என்ன! யாரால் தடுக்கப்பட்டிருக்கிறது?

கோவிந்த: அன்னை பராசக்தியாலேயே தடுக்கப்பட்டுள்ளது.

குணவதி: அன்னையின் கட்டளையைக் கேட்டவர் யார்?

கோவிந்த: நான் தான்.

குணவதி: நீங்களா? மகாராஜா! உங்கள் பேச்சைக் கேட்டு எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. சகலபுவன நாயகியாகிய பராசக்தி தன்னுடைய தாழ்ந்த விண்ணப்பத்துடன் உங்கள் அரண்மனை வாயிலில் வந்து காத்திருந்தாள் போலும்!

கோவிந்த: பரிகாசம் செய்யாதே, குணவதி. அன்னையே என் முன் தோன்றி தன்னுடைய மக்களாகிய வாயில்லாப் பிராணிகளின் துயரத்தை என்னிடம் தெரிவித்தாள். விண்ணப்பம் செய்யவரவில்லை.

குணவதி: பேச்சை நிறுத்தும் அரசே! கோயிலுக்கு வெளியில் உள்ளதே உமது ராஜ்யம். எங்கு உங்கள் அதிகாரம் செல்லாதோ அங்கு நீங்கள் கட்டளையிடுவது முறையல்ல.

கோவிந்த: கட்டளை என்னுடையதல்ல, தேவியினுடையது.

குணவதி: அதை நீங்கள் எப்படித் தெரிந்துகொண்டீர்கள்?

கோவிந்த: மங்கிய ஒரு விளக்கின் ஒளியினால் கூட வீட்டிலுள்ள இருள் அகன்றுவிடும். ஆனால் தன்னுடைய நிழலை

அவ்விளக்கினுல் அகற்றிக் கொள்ளமுடியாது. மனிதனின் புத்தி விளக்கிற்குச் சமானமானது. அதை எவ்வளவு பிரகாசமாக எரிய விட்டாலும் சந்தேகம் என்கிற நிழல் மாத்திரம் எஞ்சியிருக்கும். வானுலகிலிருந்து எப்பொழுது விவேகம் இறங்கி வருகிறதோ அப்பொழுது சந்தேகம் ஒரு கணத்தில் பறந்தோடிவிடும். என் மனத்தில் இவ்விஷயத்தைப் பற்றி எள்ளளவும் சந்தேகமில்லை.

குணவதி: அவரவர் செய்யும் பாப புண்ணியங்களுக்கு அவரவரே பொறுப்பாளி என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். சந்தேகமற்ற உமது மனவுறுதி உம்மிடத்திலேயே இருக்கட்டும். என்னுடைய வாயிலை விட்டு அகன்று விடுங்கள். என் பூஜைக்கான பலியை எடுத்துக்கொண்டு நான் அன்னையிடம் செல்கிறேன்,

கோவிந்த: குணவதி! அன்னையின் ஆணையை நான் மீற முடியாது,

குணவதி: என்னுலும் மீற முடியாது. தேவிக்குப் பிரார்த்தனை செலுத்துவதாக நான் வேண்டிக் கொண்டிருக்கிறேன். அதற்கிணங்க சாத்திர விதிப்படி நான் காளி பூஜை செய்யப் போகிறேன். நீர் போகலாம்,

[போகிருர்.]

[ரகுபதி பிரவேசம்]

குணவதி: குருவே! தேவியின் ஆலய வாயிலிலிருந்து என்னுடைய பலி திருப்பியனுப்பப்பட்டதாமே!

ரகுபதி: மகாராணி! திருப்பியனுப்பப்பட்ட பலி உன்னுடையதல்ல; தேவியினுடையது. பரம தரித்திரனுன பிச்சைக்காரனுல் அன்னைக்கு அனுப்பப்படும் பலிகூட உன் பலிக்குச் சற்றும் குறைந்ததல்ல. ஆனுல் நம்மெல்லோருக்கும் அழிவை விளைவிக்கும் செயல் ஒன்று நடந்திருக்கிறது. அதென்னவெனில்—தேவிக்குச் சேரவேண்டிய பலி திருப்பியனுப்பப்பட்டு விட்டது. இதுவே அனைத்திற்கும் முடிவு. அரசனுடைய அதிகாரம் கொஞ்சங் கொஞ்சமாக வலுத்து அனைத்துலகை ஆளும் அன்னையின் ஆட்சியையும் மீறிவிட்டது. பராசக்தியின் ஆலயவாயிலில் அவ்வதிகாரம் மதம் பிடித்ததனுல் சிவந்த இரு கண்களை விழித்த வண்ணம் உட்கார்ந்திருக்கிறது.

குணவதி: இதற்கெல்லாம் முடிவு என்னவாகும் சுவாமி?

ரகுபதி: அது மகாமாயையாகிய அவளுக்குத்தான் தெரியும். ஆனுல் எனக்கு ஒன்று மாத்திரம் தெளிவாகத் தெரிகிறது. சிங்காதனத்தின் நிழல் எப்பொழுது ஆலய வாயிலின் மீது விழ ஆரம்பிக்கிறதோ அப்பொழுது

அன்னையின் சீற்றம் அதை நீர்க்குமிழிபோல் வெடிக்கச் செய்துவிடும்; ஆயிரமாயிரம் வருடங்களாக இவ்வரச னின் முன்னோர்களால் வானில் மேகங்களுக்கு மேல் உன்னத நிலைக்கு உயர்த்தப்பட்ட ராஜமகிமை சிறிது நேரத்தில் மண்ணோடு மண்ணாகி, இடியால் தகர்க்கப் பட்டுப் பொசுக்கப் பட்டதாய், புயற்காற்றினால் அடித் துக் கொண்டு போகப்பட்ட தூசிக்கு சமானமாக ஆகிவிடும்,

குணவதி: காப்பாற்றுங்கள், சுவாமி, காப்பாற்றுங்கள்.

ரகுபதி: ஆகா! நான் எப்படி உன்னைக் காப்பாற்றுவது? இவ் வுலகத்திலன்றி மேலுலகத்திலும் ஆட்சி புரிவதாகப் பெருமையடித்துக் கொள்ளும் புகழ் பெற்ற அரசன் கோவிந்தமாணிக்கியனின் பட்டமகிஷி நீ! தேவர்களையும், பிராம்மணர்களையும்—சீச்சீ! வெட்கம்! பிராம்மண சாபம் எங்கே போயிற்று! கலியின் மகிமையினால் பிராம்மண ணின் சாபம் தேள் தன்னையே கொட்டிக் கொள்வது போல் அவன் மீதிலேயே திரும்புவதாயிருந்தால்— பிராம்மணனின் குலப்பெருமையெல்லாம் வெறும்பொய்.

[பூணூலை அறுத்தெறிய முயற்சிக்கிறார்.]

குணவதி: என்ன செய்கிறீர்கள்? என்ன செய்யத் துணிந் தீர்கள், குருவே! பொறும், பொறும், குற்றமற்ற என் மீது தயைபுரியும்.

ரகுபதி: அப்படியாகில் பிராம்மணனின் அதிகாரத்தை அவ னுக்குத் திரும்பவும் நீ அளிப்பாயா?

குணவதி: அளிக்கிறேன் சுவாமி. கோயிலுக்குச் சென்று பூஜை யைத் தொடங்குங்கள். உங்களுக்கு ஒருவிதமான இடை யூறும் உண்டாகாது.

ரகுபதி: மகாராணி! உன்னுடைய இக்கட்டளையால் தேவர்கள் உகப்படைந்தனர். உன் பெயரை வாழ்த்திக் கொண்டு பிராம்மணன் தன்னுடைய உரிமையைத் திரும்பப் பெற்றான். கலியுகம் முடிவடைந்து கல்கியவதாரம் தோன்றும் வரை உன் புகழ் நிலைத்து நிற்கும்.

[போகிறார்]

[கோவிந்த மாணிக்கியன் மீண்டும் வருகிறார்]

கோவிந்த: புன்னகையற்ற உன் வதனம் உலகிலுள்ள சகல ஒளியையும் இன்பத்தையும் மறைத்து விடுகிறது. கவலை யும் ஆவலும் நிறைந்த மனத்துடன் திரும்பவும் உன்னி டம் வந்திருக்கிறேன்,

குணவதி: செல்லும், செல்லும். இவ்வீட்டின் மீது தெய்வ சாபத்தைக் கொண்டு வந்து சேர்க்காதீர்.

கோவிந்த: தேவி! அன்பு இருந்தால் எத்தகைய சாபமும் அகன்றுவிடும். தயையுண்டாகில் எவ்விதத் தீங்கும் விலகிப் போகும். மனைவியின் உள்ளத்திலிருந்து அன்பு அகன்று விட்டால் அதுவே கணவன் வீட்டின் மீது ஏற்படும் கொடிய சாபமாகும். நான் செல்கிறேன்.

குணவதி: தாராளமாகச் செல்லும். உம்முடைய முகத்தில் நான் திரும்பவும் விழிக்க விரும்பவில்லை.

கோவிந்த: சரி. என் நினைவு மறுபடியும் உனக்கு உண்டாகும் பொழுது திரும்பி வருகிறேன்.

[போக யத்தனிக்கிறார்]

குணவதி: (அவருடைய பாதங்களைப் பற்றிக்கொண்டு) மன்னிக்கவேண்டும், நாதா, மன்னிக்கவேண்டும். ஒரு பெண்ணின் பெருமையைப் புறக்கணித்து உதறித் தள்ளி விட்டுப் போகுமாறு இவ்வளவு கொடியவராகி விட்டீரே! அரசே! அலட்சியம் செய்யப்பட்ட பெண்ணின் காதல் சீற்றமாக மாறிவிடும் என்பதைத் தாங்கள் அறிவீர்களல்லவா? நல்லது.' என் பெருமையை நானே குறைத்துக் கொள்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள்.

கோவிந்த: தேவி! உன் மீது எனக்கு நம்பிக்கையற்றுப் போனால் அத்துடன் என் வாழ்வு முடிந்துவிடும். நிர்மலமான ஆகாயத்தில் மேகங்கள் தோன்றுவது சிற்சில சமயங்களில் தான். நிரந்தரமாக உள்ளது ஒளிதரும் சூரியனே என்பதை நான் அறிவேன்.

குணவதி: ஆம். மேகங்கள் தாற்காலிகமானவையே. அவை மறைந்துவிடும். நம் தலைமீது விழவிருக்கும் விதிக்கடவுளின் இடி திரும்பிச் சென்றுவிடும்! நிரந்தரமான கதிரவன் திரும்பவும் தோன்றுவான். சம்பிரதாயமான வழக்கங்கள் மறுபடியும் இத்தேசத்தில் நிலை நாட்டப் பெறும். உலகத்தின் அச்சம் அகன்று போகும். கொடுங்கோல் ஆட்சியின் கொடிய கனவுகள் மறக்கப்படும். நான் சொல்லுவதைப் போல் உத்தரவிடுங்கள், 'பிராம்மணர்கள் தங்களுடைய உரிமையைத் திரும்பப் பெறவேண்டும். அன்னை தன்னுடைய பலியை மறுபடியும் அடையவேண்டும்.' அரசனுடைய அதிகாரம் யதேச்சாதிகாரமாக மாறாமல் இவ்வுலகின் நியாயமான எல்லைகளுக்குக் கட்டுப்பட்டதாக இருக்கவேண்டும்.

கோவிந்த: தருமத்திற்குத் தீங்கு விளைவிக்க பிராம்மணர்களுக்கு அதிகாரம் கிடையாது; தம்மைக் காப்பாற்றிக் கொள்ள முடியாத வாயில்லாப் பிராணிகளின் ரத்தம் தேவிக்கு உகந்த காணிக்கை அல்ல; தெய்வத்தின்

ஆணையை நிறைவேற்றுவதற்கு அரசன், அந்தணன் அனைவருக்கும் அதிகாரம் உண்டு.

குணவதி: மன்னனே! இரந்து கேட்டுக்கொள்கிறேன். மிகவும் தாழ்மையுடன் உமது சரணங்களில் வீழ்ந்து வணங்குகிறேன். தொன்றுதொட்டு வரும் ஒரு வழக்கம் உலகம் தோன்றியது முதல் தன்னிச்சைப்படி வீசும் காற்றைப் போன்றது. அது அரசனின் சொத்தல்ல. ஆகையால் உம்முடைய பிரஜைகள் எல்லோருடைய சார்பில் உம் பட்டமகிஷியாகிய நான் கைகுவித்துப் பிச்சை கேட்கிறேன். காதலின் கட்டளையை மீறவேண்டாம், நாதா! அன்பினால் பிணைக்கப்பட்ட ஒருவன் கடமையை மீறினால் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமன்கூட அவனை மன்னித்து விடுவான்.

கோவிந்த: இது தகுமா, குணவதி? இழிவு நிறைந்த தன்னலம், கொடிய வலிமையின் இறுமாப்பு, குருட்டுத்தனமான அறிவீனம், நெடுங்காலம் ரத்தபானம் செய்ததனால் கொழுத்துக் கொடுமை நிறைந்த வழக்கம்—முதலிய ஆயிரம் சத்துருக்களுடன் நான் ஒருவனாகப் போர் புரிகிறேன். உடல் சோர்ந்து, இல்லத்தின் மனையாளின் உள்ளமாகிற அமுதத்தைப் பருக வந்தடைந்தேன்; இங்கும் தயையாகிற அவ்வமுதம் பெருகவில்லையே! நான் என்ன செய்வேன்? இல்லத்தில் பெருகும் தூய காதலாகிய அருவியுடன் ரத்தப்பெருக்குக் கலந்து விட்டிருக்கிறதே! இந்த ரத்த வெள்ளத்தை எந்த அரக்கன் மடை திறந்து விட்டானோ? பக்தியுடனும் அன்புடனும் ரத்தம் இரண்டறக் கலந்து, கொடிய ஹிம்சையானது தயை நிரம்பிய உள்ளத்தையுடைய ஒரு பெண்மணியின் ஆத்மாவின்மீது ரத்தமுத்திரையை இட்டுவிட்டதே! ஓ ரத்தமே! இப்பொழுதாவது உன் பெருக்கத்தைத் தடுக்காமலிருப்பேனோ?

குணவதி: (முகத்தைத் திருப்பிக்கொண்டு) செல்லுங்கள்; என்னை விட்டு அகன்று விடுங்கள்.

கோவிந்த: ஆம், மகாராணி. கடமை கசந்துவிட்டது. உன் முகமும் திரும்பிவிட்டது.

[போகிறார்]

குணவதி: (அழுதுகொண்டே எழுந்திருந்து) அபாக்கியவதியே! இத்தனை நாட்களாக மதிமயக்கம் கொண்டிருந்தாயல்லவா? ஐயோ! எவ்வளவு தாழ்ந்து கொடுப்பது? எவ்வளவு தான் சமாதானப் படுத்துவது? எவ்வளவுதான் அன்பு காட்டுவது? சீச்சீ! மக்கட்பேறில்லாத மனைவியே! கணவ

னின் அன்பை இப்பொழுது அறிந்தாயல்லவா? உன் காதல் பாழாயிற்று: உன் அதிருஷ்டமும் மனைவி என்னும் கவுரவமும் சாம்பராயின. இனி காதல் விளையாட்டுகளும் விளையாட்டுச் சண்டைகளும் ஒழிந்தன. என்னுடைய உண்மையான ஸ்திதியை நான் அறிந்துகொண்டேன். புழுதியில் தலை குனிந்து விழுந்து விட்டேன். படமெடுத்த பாம்பென்று நான் என்னைக் கருதியதெல்லாம் வெறும் பொய். அந்தோ! என் கதி!

## ஐந்தாம் காட்சி

### கோயில்

*[சில ஊர் ஜனங்கள் பிரவேசிக்கின்றனர்]*

நேபால்: எங்கேயடா நீ சொன்ன முந்நூறு ஆடுகளும் நூற்றொன்று எருமைகளும்? ஒரு பல்லியின் அறுந்த வாலைக் கூட இங்கே காணோமே! இங்கு வாசிக்கப்பட வேண்டிய வாத்தியங்களெல்லாம் எங்கே போயின? கைச் செலவு செய்துகொண்டு திருவிழா பார்ப்பதற்கு வந்த எனக்கு நல்ல தண்டனை கிடைத்தது.

கணேசன்: இதோ பாரடா. கோயிலுக்கு வெளியில் நின்றுகொண்டு சும்மா பேசிக்கொண்டிருப்பதில் பயனில்லை. மாகாளி அம்மன் பலிக்கு இவ்வருடம் ஆடுகள் வரவில்லை. காளியம்மா விழித்துக்கொண்டு உங்களை ஒவ்வொருவராகப் பிடித்து வாயில் போட்டுக்கொள்ளப் போகிறாள்.

ஹாரு: எதற்காக? போன வருடம் நீங்களெல்லாரும் எங்கேயடா போயிருந்தீர்கள்? அப்பொழுது மகாராணி விரதத்தை முடித்துப் பூசை போட்டபொழுது உன் காலில் முள் குத்தியிருந்ததோ! அதை வந்து ஒரு முறை பார்க்க முடியாமற் போய்விட்டதோ உனக்கு? ரத்தத்தினால் நமது கோமதியாறு செக்கச்செவேலென்று சிவந்து போயிருந்தது. அதிருஷ்டசாலி, நீ காலடியெடுத்து வைத்த வருடம் அம்மனுக்கு வெறும் நைவேத்தியம்கூட இல்லாமல் போய்விட்டது. உங்களெல்லோரையும் ஒவ்வொருவனைப் பிடித்து அம்மனுக்குப் பலியிட்டுவிட்டால் தான் என் ஆத்திரம் தீரும்.

காறு: ஏன் அண்ணே இந்த விளையாட்டுக் கோபம் எல்லாம்?

பேசுவதற்கு நமக்கு இனி வாயில்லை. ஆகையால் நாம் இங்கு நின்றுகொண்டு இவனுடைய பிதற்றலைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது.

ஹாரு: அப்படிச் சொல்லு தம்பி. சிறிய விஷயத்தில் எனக்குக் கோபம் வருவதென்னவோ வாஸ்தவம். அன்றைய தினம் அவன் என்னைக் கண்டபடி பேசிவிட்டான். இன்னும் ஒரு வார்த்தை பேசியிருந்தானானால் - அல்லது என் மேல் கை வைத்திருந்தானானால் - நான் அவனை என்ன....

நேபால்: என்ன செய்திருப்பாய்? இப்பொழுது வா. ஒரு கை பார்த்துவிடலாம்.

ஹாரு: அப்படியா! வா, பார்க்கலாம். இவ்வூர்த் தலையாரி என் மாமனின் பிள்ளையாக்கும்!

நேபால்: பலே! அப்படியானால் உன் மாமனையும் சேர்த்து அழைத்து வா. இரண்டு பேரையும் சேர்த்துத் தீர்த்துக் கட்டிவிடுகிறோம்.

ஹாரு: நீங்களெல்லாரும் இதைக் கேட்டீர்களாடா?

கணேசனும் கானுவும்: விலகுங்களடா. நீங்கள் வீட்டுக்குப் போங்கள். இன்று ஒன்றுமே சுகமில்லை. உங்கள் தமாஷை யெல்லாம் மூட்டை கட்டி வையுங்கள்.

ஹாரு: நீயே சொல் அண்ணே. இது வேடிக்கையா? என் மாமாவைப் பற்றிப் பரிகாசம் செய்யலாமா? நம் தலையாரியின் சொந்தத் தகப்பனைப் பற்றிக் கேலி செய்யலாமா?

கணேசனும் கானுவும்: போதுமடா. நீயும் உன் மாமனும் சேர்ந்து ஒழிந்து போங்கள்.

[எல்லோரும் போகின்றனர்]

[ரகுபதி, நயனராய், ஜயசிங்கன் பிரவேசம்]

ரகுபதி: அன்னை பராசக்தியினிடத்தில் உனக்கு பக்தி சற்றும் இல்லையா?

நயனராய்: இப்படி ஏன் பேசுகிறீர்கள்? பரம்பரையாகவே பராசக்திதான் எங்கள் குல தெய்வம்.

ரகுபதி: நல்லது. அப்படியானால் நீயும் எங்களைப்போல் தேவியின் அடிமைதானே?

நயனராய்: சுவாமி! அன்னையின் அடியார்கள் அனைவருக்குமே நான் அடிமை.

ரகுபதி: மிகவும் நன்று. உன் தெய்வ பக்தி என்றும் குறையாமல் வளரட்டும். அது உனது புயங்களுக்குப் பிறர் வெல்ல முடியாத சக்தியை அருளட்டும். உன்னுடைய வாளை அது கூர்மையுடையதாக்கி, இடிக்கு நிகரான

வலிமையை அதற்கு அளிக்கட்டும். பக்தி உனது இதயத்தில் அனைத்திற்கும் உயர்ந்த ஸ்தானத்தில் அமரட்டும்.

நயனராய்: அந்தணராகிய உம்முடைய ஆசீர்வாதம் வீண் போகாது சுவாமி.

ரகுபதி: அப்படியானால் கேள், சேனைத் தலைவனே! உன்னுடைய சேனை பலம் அனைத்தையும் பராசக்தியின் பக்கல் திரட்டு. அவளுக்குத் துரோகம் செய்யும் அனைவரையும் நாசம் செய்.

நயனராய்: இதென்ன கட்டளை சுவாமி? தேவிக்கு எதிரிகள் ஏது?

ரகுபதி: அன்னையின் சத்துரு கோவிந்த மாணிக்கியன்தான்.

நயனராய்: நமது மகாராஜாவா!

ரகுபதி: ஆம். உன்னுடைய படைபலத்தைத் திரட்டி அவனைத் தாக்கு.

நயனராய்: இதென்ன துராலோசனை? சுவாமி! என்னைப் பரீட்சை செய்கிறீர்களா?

ரகுபதி: பரீட்சைதான். நீ யாருடைய அடிமை என்பது இச் சமயம் பரீட்சிக்கப்படும். கவலையை விடு. மனக் கலக்கத்தை ஒழி. இனிக் காலதாமதம் கூடாது. ஊழிக் காலத்தின் சிகரம்போல் திரிபுர ராஜ்யத்தின் அதிதேவதையாகிய அன்னையின் ஆணை ஒலிக்கிறது. நமது கட்டுக்களனைத்தும் இன்று தகர்க்கப்பட்டுள்ளன.

நயனராய்: எனக்கு ஒரு கவலையுமில்லை. குழப்பமுமில்லை. பராசக்தி என்னை எவ்விடத்தில் நிறுத்திவைக்கிறாளோ நான் அங்கு அசையாமல் நிற்பேன்.

ரகுபதி: மிகவும் நல்லது.

நயனராய்: ஆயினும் இத்தகைய கட்டளை என்மீது விழும்படி நான் அன்னையின் அடியார்களுள் அவ்வளவு கேவலமானவனா? நான்தானா நம்பிக்கைத் துரோகம் செய்ய வேண்டும்? சகல உலகிற்கும் தாயாகிய அன்னையே மானிட இதயங்களின் நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு நிற்கிறாள். நம்பிக்கையே அவளது அசையாத உறைவிடம். அதைத் தகர்த்தெறியுமாறு அவள் நாவினாலேயே சொல்லுவாளா? அப்படியாகில் அரசன் ஒழிவான் இன்று. அன்னை மறைந்து போவாள் நாளை. அஸ்திவாரம் இற்றுப்போன மாளிகையைப்போல் எல்லாம் சரிந்து விடும்.

ஜயசிங்கன்: நன்றாகச் சொன்னாய், சேனாதிபதி!

ரகுபதி: நீதான் அவனை மெச்சிக்கொள்ள வேண்டும். ஆனால், நயனராய், உனக்கேனிந்த பிரமை? அன்னைக்கு நம்பிக்

கைத் துரோகம் செய்த அரசனை 'நம்பிக்கை' என்ற வார்த்தையுடன் ஏன் பிணைக்கிறாய்?

நயனராய்: வீண் வாக்குவாதங்களால் என்ன பயன்? புத்திப் பிசகில் விழ நான் விரும்பவில்லை. எனக்கு ஒரு வழிதான் தெரியும். அதுதான் நம்பிக்கை காட்டும் நல்வழி. அந்த நற்பாதையை விட்டு அன்னையின் அடிமை—அறிவிலியாகிய இந்த நயனராய்—ஒரு பொழுதும் விலகமாட்டான்.

[போகிறான்.]

ஜயசிங்கன்: குருநாதா! என்ன யோசிக்கிறீர்கள்? இவனுக்கிருக்கும் உறுதியான நம்பிக்கையுடன் நாமும் நடக்க முற்படுவோம். யாருக்கு நாம் அஞ்ச வேண்டும்? படைபலம் எதற்கு? ஆயுதங்கள் எதற்கு? யார்மீது கடமையின் பாரம் விழுகிறதோ அதை நிறைவேற்றச் சக்தி அவனிடமே பிறக்கும். நாம் அன்னையின் உண்மையான தொண்டர்களானால் அவளுடைய பூசையைத் தொடங்குவோம், புறப்படும் சுவாமி.

ஆலயத்தின் முரசைக் கொட்டுங்கள்! ஊர் ஜனங்களை அழைத்து வாருங்கள்! கோயிற் கதவை அகலத் திறவுங்கள்! அதோ, உங்களைத்தான்! வாருங்கள், வாருங்கள்! நெஞ்சிலிருந்து அச்சத்தை யகற்றும் அன்னைக்குப் பூசை நடக்கப் போகிறது. நிர்ப்பயமாக வாருங்கள். அன்னையின் மக்களே! நகரமாந்தரே! வாருங்கள்.

[ஜயசிங்கனும் ரகுபதியும் செல்கிறார்கள்.]

[நகரமாந்தர் பிரவேசம்]

அக்ரூரன்: வாருங்களடா, வாருங்கள்.

எல்லோரும்: பராசக்தி வாழ்க! அன்னையைப் போற்றுவோம்.

ஹாரு: வாருங்கள். அம்மனுக்கெதிரில் கைகோத்துக்கொண்டு நிருத்தியம் செய்வோம்.

[பாடுகிறார்கள்]

அன்னையின் ஊழித்தாண்டவமே -
அகிலப் பாழ்வெளி மண்டலமே
இன்னே அனைவரும் நாடிடுவோம் -
இருகை கோத்தே ஆடிடுவோம்
திக்குகள் எட்டும் இருளாகத் -
திகம்பரி எண்டிசை உடையாக
நக்கி நிமிர்ந்திடும் நாவழலின் -
நடுவே பாயும் புள் கருக
கருங்குழற்கற்றை வானுடக் -
கதிரும் மதியும் கண்டோடப்

பெருகும் உதிரப் பேரொளியில் -
பேய்க்கருமேனி சிவந்தாட
இமைகள் பொடிப்ப மூவுலகும் -
இணைந்தே அதிர்ந்து துடித்தாட
. உமையவள் ஆடுங்கூத்தென்னும் -
உவகையில் நாமும் ஆடுவமே.

எல்லோரும்: அன்னையே போற்றி! பராசக்தியே போற்றி!

கணேசன்: இனிப் பயமில்லை.

கானு: ஏய், தக்ஷிண தேசத்திலிருந்து சில மனிதர்கள் வந்திருந்தார்களே, அவர்களை இப்பொழுது எங்கே காணோம்?

கணேசன்: அம்மனின் ஐசுவரியத்தைப் பார்த்து அவர்களுக்குப் பொறுக்கவில்லை. எங்கேயோ ஓடிப்போய்விட்டார்கள்.

ஹாரு: அது மாத்திரமல்ல. நான் அவர்களைப் பயமுறுத்தினேன். அவர்கள் இந்தப் பக்கம் திரும்பமாட்டார்கள். புரிந்ததா அக்ரூரன் அண்ணே! என்னுடைய மாமாவின் பிள்ளை தலையாரியின் பேரைச் சொன்னவுடனேயே அவர்கள் முகம் வெளுத்துவிட்டது.

அக்ரூரன்: நம்முடைய நிதாய் அன்று அவர்களைக் கடுமையாகப் பேசிவிட்டான். அப்பொழுது அவர்களுள் பெருச்சாளியைப்போல் மூஞ்சியையுடைய ஒருவன் பதில் சொல்ல வந்தான். நிதாய் சொன்னான்: ‘ஏய், நீங்கள் தக்ஷிணதேசத்திலிருந்து வந்திருக்கிறீர்கள். உங்களுக்கு உத்தர திசையைப் பற்றி என்ன தெரியும்? இதற்கு உத்தரம் கொடுக்கவாவது உங்களுக்குத் தெரியுமா?’ இதைக் கேட்டு நாங்களெல்லாரும் சிரித்து ஒருவர் மேலொருவர் விழுந்தோம்.

கணேசன்: அடே! நிதாயைப் பார்த்தால் பரம சாதுவைப் போல் இருக்கிறான். அவனோடு யாராலும் பேசி ஜயிக்க முடியாது.

ஹாரு: ஏய்! அவன் என் அத்தையின் புருஷனுக்கும்.

கானு: இதைக் கேளுங்களடா? நிதாய் எப்படியடா உன் அத்தையின் புருஷனாகமுடியும்?

ஹாரு: நான் சொல்லுவதையெல்லாம் அப்படியே வேதவாக்கு என்று எடுத்துக் கொள்ளக்கூடாது. அவன் என் அத்தையின் புருஷன் இல்லையென்றால் அப்படியே வைத்துக் கொள்ளுங்கள். அதனால் உனக்கு என்ன லாபம்? அவன் உன் அத்தையின் புருஷனாகிவிடப் போகிறானா?

[ரகுபதியும் ஜயசிங்கனும் பிரவேசிக்கின்றனர்]

ரகுபதி: ராணுவம் கோயிலை நோக்கி வருகிறதென்று கேள்விப்

படுகிறேன். ஜயசிங்கா! வாளை எடுத்துக் கொண்டு நீ இங்கு நில். அவர்கள் வந்தால் இங்கேயே தடுத்து நிறுத்திவிடு. ஆலயத்தின் வாயிலே இன்று காவல் புரிய வேண்டும். நான் போய் இன்னும் ஆயுதங்கள் கொண்டு வருகிறேன்.

கணேசன்: ஆயுதம் எதற்கு, குருக்கள் ஐயா?

ரகுபதி: அன்னைக்கு இன்று கொடுக்கப்போகும் பலியை நிறுத்துவதற்காக அரசனின் ராணுவம் வந்து கொண்டிருக்கிறதாம்.

ஹாரு: ராணுவம் வருகிறதா? ஐயா! அப்படியானால் நாங்கள் வருகிறோம். வணக்கம்.

கானு: நாங்கள் எம்மாத்திரம், ஐயா? சைனியம் வந்தால் நாங்கள் என்ன செய்ய முடியும்?

ஹாரு: சண்டை போடுவதென்றால் போடலாம். ஆனால், அண்ணே, சேனை வந்தால் இங்கு நிற்கவே இடமிருக்காதே! சண்டைபோடுவது அப்புறமாகட்டும். இங்கே அத்தனை பேரும் நிற்பதெப்படி?

அக்ரூரன்: சீ, உளராதே. நமது குருக்கள் கோபத்தால் பதறிக் கொண்டிருக்கிறார், நீ பிதற்றுகிறாய்.

குருக்கள் ஐயா! நீங்கள் உத்தரவு கொடுத்தால் எங்களுடைய ஆள் படையெல்லோரையும் திரட்டி அழைத்துக் கொண்டு வருகிறேன்.

ஹாரு: அது நல்ல யோசனை. நான் என் சிற்றப்பனை மாத்திரம் அழைத்துவந்தால் போதும். சரி. இனி ஒரு கணமும் இங்கே நிற்கக்கூடாது.

[எல்லோரும் புறப்பட முயற்சிக்கின்றனர்]

ரகுபதி: (கோபத்துடன்) நீங்களெல்லோரும் நில்லுங்கள்!

ஜயசிங்கன்: (கைகுவித்து) இவர்கள் போகட்டும், சுவாமி. பாவம்! பாமர ஜனங்கள். உயிருக்குப் பயந்தவர்கள். அனுவசியமாகக் கொல்லப்படுவர். நான் இருக்கிறேன் அன்னையின் அடிமை. சமயம் வந்தால் ஓர் உடம்பில் ஆயிரம் வீரர்களின் பலம் உண்டாகும். ஆயுதங்கூடத் தேவையில்லை. இப்பயங்காளிகளைச் செல்ல விடுங்கள்.

ரகுபதி: (தனக்குள்) அந்தக்காலம் போய்விட்டது. இப்பொழுது ஆயுதம் அவசியம் வேண்டும். வெறும் பக்தி போதாது.

(உரத்த குரலில்) ஜயசிங்கா, அப்படியானால் பலியைக் கொண்டுவா. பூஜையை ஆரம்பிக்கிறேன்.

[வெளியே பறையோசை]

ஜயசிங்கன்: வருவது சேனையல்ல, குருவே, மகாராணியின் பூஜைக்குரிய பலி.

[ராணியின் வேலைக்காரர்களும் நகர ஜனங்களும் பிரவேசிக்கின்றனர்.]

எல்லோரும்: ஏய், பயமில்லை. படையுமில்லை ஒன்றுமில்லை. வருவது அம்மனுக்கு பலி.

ஹாரு: நாங்கள் இருக்கிறோம் காவல். ராணுவம் இந்தப் பக்கம் இப்பொழுது வராதென்று செய்தி கிடைத்துள்ளது.

கானு: குருக்களய்யா! மகாராணி பலி அனுப்பியிருக்கிறார்கள்.

ரகுபதி: ஜயசிங்கா! விரைவில் பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சித்தம் செய்.

[ஜயசிங்கன் போகிறான்]

[நகர ஜனங்கள் பாடிக்கொண்டே ஆடுகின்றனர் அரசன் கோவிந்த மாணிக்கியன் பிரவேசிக்கிறான்.]

கோவிந்த: எல்லோரும் இங்கிருந்து வெளியேறுங்கள்! ஆடுகளைத் திரும்ப ஓட்டிச் செல்லுங்கள்.

ரகுபதி! என்னுடைய கட்டளையை நீ கேட்கவில்லை போலும்!

ரகுபதி: கேட்கவில்லை.

கோவிந்த: அப்படியானால் நீ இனி என்னுடைய ராஜ்யத்தைச் சேர்ந்தவன் அல்ல.

ரகுபதி: உண்மை. முற்றிலும் உண்மை. அரசனின் கைகளிலிருந்து ராஜ அதிகாரம் அகன்றுபோய் அவனுடைய மணிமுடி புழுதியில் விழுந்து புரளும் நாட்டுக்குரியவன் நான். யாரங்கே! அன்னையின் பலியைக் கொண்டு வாருங்கள்.

[பறையோசை]

கோவிந்த: வாயை மூடு.

(வேலைக்காரர்களைப் பார்த்து) சேனைத்தலைவரை அழைத்துவாருங்கள். ஏ ரகுபதி! கடைசியில் தருமத்தை சைனியத்தினால் சூழ்ந்து காப்பாற்றவேண்டிய நிலைமையை ஏற்படுத்திவிட்டாய். இதற்காக ராணுவத்தை அழைக்க எனக்கு வெட்கமாக இருக்கிறது. ஏனெனில் ஒரு காரியத்திற்காக பலத்தை உபயோகிப்பது நம்முடைய பலவீனத்தையே காட்டுகிறது.

[ரகுப]தி: நம்பிக்கையற்ற நாஸ்திகனே! இக்கலியுகத்தில் பிரம்மதேஜஸ் நசித்துவிட்டது என்பதுதான் உன்

திடமான நம்பிக்கை போலும்! அதனால்தான் இந்த குருட்டு தைரியமோ? பிராம்மணனின் வீரியம் இன்னும் குன்றவில்லை. உள்ளே சுடர் விட்டெரியும் அக்னிஜ்வாலை உன் சிங்காதனத்தை நிச்சயம் தகித்துவிடும். இல்லையெனில் இவ்வுள்ளக்கனலில் என் சாத்திரங்களையும் பிராம்மணகர்வத்தையும் முப்பத்து முக்கோடிப் பொய்களையும் எரித்துச் சாம்பராக்கி விடுகிறேன். இன்றில்லாவிடினும், மன்னாதி மன்னனே! என்றோ ஒருநாள் முடிவு என்பதை மறக்காதே.

*[நயனராயும் சந்திரபாலனும் பிரவேசிக்கின்றனர்]*

கோவிந்த: (நயனராயைப் பார்த்து) உன் சிப்பாய்களை இங்கு நிறுத்தி ஜீவபலி நடக்காமல் தடுத்துவிடு.

நயனராய்: உங்களுடைய அடிமையாகிய என்னை மன்னிக்க வேண்டும். அரசனின் சேவகனாகிய நான் தேவியின் ஆலயத்தில் ஒன்றும் செய்ய அதிகாரமற்றவன். மற்ற விடங்களில் மன்னனின் புகழ் எவ்வளவு தூரம் சென்றாலும் எங்களுடைய நிழலும் கூடவே செல்லும்.

சந்திரபாலன்: நிறுத்தும் சேனைத் தலைவரே! கொளுத்தப்பட்ட விளக்கு ஓரிடத்திலிருந்தாலும் அதன் ஒளி வெகுதூரம் பரவும். அரசனுடைய விருப்பம் எங்கெங்குச் செல்லுகிறதோ அங்கெல்லாம் நாமும் செல்ல வேண்டும்.

கோவிந்த: சேனாதிபதி! என்னுடைய உத்தரவைக் குறித்துக் கேள்வி கேட்க உனக்கு அதிகாரம் கிடையாது. அதனுடைய நியாயம், அநீதி, லாபம், நஷ்டம் முதலியவை என்னைச் சேர்ந்தவை. கட்டளையை நிறைவேற்றுவது மாத்திரமே உன் கடமை.

நயனராய்: இக்கட்டளையை நிறைவேற்ற என்னால் முடியாது அரசே! நான் சேவகன் என்பது உண்மையே ஆயினும் நான் ஒரு மனிதன்; எனக்குப் புத்தி உண்டு. ஆனால் தருமமும் உண்டு. அரசன் உண்டு. ஆனால் தெய்வமும் உண்டு.

கோவிந்த: அப்படியானால் வாளைக் கீழே வை. சந்திரபாலா, இக்கணம் முதல் நீதான் சேனாபதி. இருபதவிகளையும் நீயே வகிக்க வேண்டும். அதி ஜாக்கிரதையாகப் படையைத் திரட்டி ஆலயத்தைக் காவல்புரி.

சந்திரபாலன்: உத்தரவுப்படியே, மகாராஜா.

கோவிந்த: நயனராய், உன் ஆயுதங்களை சந்திரபாலனிடம் கொடுத்துவிடு.

நயனராய்: சந்திரபாலனிடம் ஏன் கொடுக்கவேண்டும் அரசே? இவ்வாள் உங்கள் மூதாதையர்களால் என் முன்னோர்

ஜயசிங்கன்: வருவது சேனையல்ல, குருவே, மகாராணியின் பூஜைக்குரிய பலி.

[ராணியின் வேலைக்காரர்களும் நகர ஜனங்களும் பிரவேசிக்கின்றனர்.]

எல்லோரும்: ஏய், பயமில்லை. படையுமில்லை ஒன்றுமில்லை. வருவது அம்மனுக்கு பலி.

ஹாரு: நாங்கள் இருக்கிறோம் காவல். ராணுவம் இந்தப் பக்கம் இப்பொழுது வராதென்று செய்தி கிடைத்துள்ளது.

கானு: குருக்களய்யா! மகாராணி பலி அனுப்பியிருக்கிறார்கள்.

ரகுபதி: ஜயசிங்கா! விரைவில் பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சித்தம் செய்.

[ஜயசிங்கன் போகிறான்]

[நகர ஜனங்கள் பாடிக்கொண்டே ஆடுகின்றனர் அரசன் கோவிந்த மாணிக்கியன் பிரவேசிக்கிறான்.]

கோவிந்த: எல்லோரும் இங்கிருந்து வெளியேறுங்கள்! ஆடுகளைத் திரும்ப ஓட்டிச் செல்லுங்கள்.

ரகுபதி! என்னுடைய கட்டளையை நீ கேட்கவில்லை போலும்!

ரகுபதி: கேட்கவில்லை.

கோவிந்த: அப்படியானால் நீ இனி என்னுடைய ராஜ்யத்தைச் சேர்ந்தவன் அல்ல.

ரகுபதி: உண்மை. முற்றிலும் உண்மை. அரசனின் கைகளிலிருந்து ராஜ அதிகாரம் அகன்றுபோய் அவனுடைய மணிமுடி புழுதியில் விழுந்து புரளும் நாட்டுக்குரியவன் நான். யாரங்கே! அன்னையின் பலியைக் கொண்டு வாருங்கள்.

[பறையோசை]

கோவிந்த: வாயை மூடு.

(வேலைக்காரர்களைப் பார்த்து) சேனைத்தலைவரை அழைத்துவாருங்கள். ஏ ரகுபதி! கடைசியில் தருமத்தை சைனியத்தினால் சூழ்ந்து காப்பாற்றவேண்டிய நிலைமையை ஏற்படுத்திவிட்டாய். இதற்காக ராணுவத்தை அழைக்க எனக்கு வெட்கமாக இருக்கிறது. ஏனெனில் ஒரு காரியத்திற்காக பலத்தை உபயோகிப்பது நம்முடைய பலவீனத்தையே காட்டுகிறது.

ரகுபதி: நம்பிக்கையற்ற நாஸ்திகனே! இக்கலியுகத்தில் பிரம்மதேஜஸ் நசித்துவிட்டது என்பதுதான் உன்

திடமான நம்பிக்கை போலும்! அதனுல்தான் இந்த குருட்டு தைரியமோ? பிராம்மணனின் வீரியம் இன்னும் குன்றவில்லை. உள்ளே சுடர் விட்டெரியும் அக்னிஜ்வாலை உன் சிங்காதனத்தை நிச்சயம் தகித்துவிடும். இல்லையெனில் இவ்வுள்ளக்கனலில் என் சாத்திரங்களையும் பிராம்மணகர்வத்தையும் முப்பத்து முக்கோடிப் பொய்களையும் எரித்துச் சாம்பராக்கி விடுகிறேன். இன்றில்லாவிடினும், மன்னுதி மன்னனே! என்ருே ஒருநாள் முடிவு என்பதை மறக்காதே.

[நயனராயும் சந்திரபாலனும் பிரவேசிக்

கோவிந்த: (நயனராயைப் பார்த்து) உன் சிப்பாய்களை இங்கு நிறுத்தி ஜீவபலி நடக்காமல் தடுத்துவிடு.

நயனராய்: உங்களுடைய அடிமையாகிய என்னை மன்னிக்க வேண்டும். அரசனின் சேவகனுகிய நான் தேவியின் ஆலயத்தில் ஒன்றும் செய்ய அதிகாரமற்றவன். மற்ற விடங்களில் மன்னனின் புகழ் எவ்வளவு தூரம் சென்ருலும் எங்களுடைய நிழலும் கூடவே செல்லும்.

சந்திரபாலன்: நிறுத்தும் சேனைத் தலைவரே! கொளுத்தப்பட்ட விளக்கு ஓரிடத்திலிருந்தாலும் அதன் ஒளி வெகுதூரம் பரவும். அரசனுடைய விருப்பம் எங்கெங்குச் செல்லுகிறதோ அங்கெல்லாம் நாமும் செல்ல வேண்டும்.

கோவிந்த: சேனுதிபதி! என்னுடைய உத்தரவைக் குறித்துக் கேள்வி கேட்க உனக்கு அதிகாரம் கிடையாது. அதனுடைய நியாயம், அநீதி, லாபம், நஷ்டம் முதலியவை என்னைச் சேர்ந்தவை. கட்டளையை நிறைவேற்றுவது மாத்திரமே உன் கடமை.

நயனராய்: இக்கட்டளையை நிறைவேற்ற என்னுல் முடியாது அரசே! நான் சேவகன் என்பது உண்மையே ஆயினும் நான் ஒரு மனிதன்: எனக்குப் புத்தி உண்டு. ஆனுல் தருமமும் உண்டு. அரசன் உண்டு. ஆனுல் தெய்வமும் உண்டு.

கோவிந்த: அப்படியானுல் வாளைக் கீழே வை. சந்திரபாலா, இக்கணம் முதல் நீதான் சேனுபதி. இருபதவிகளையும் நீயே வகிக்க வேண்டும். அதி ஜாக்கிரதையாகப் படையைத் திரட்டி ஆலயத்தைக் காவல்புரி.

சந்திரபாலன்: உத்தரவுப்படியே, மகாராஜா.

கோவிந்த: நயனராய், உன் ஆயுதங்களை சந்திரபாலனிடம் கொடுத்துவிடு.

நயனராய்: சந்திரபாலனிடம் ஏன் கொடுக்கவேண்டும் அரசே? இவ்வாள் உங்கள் மூதாதையர்களால் என் முன்னோர்

களுக்குக் கொடுக்கப்பட்டது. இதைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுமாயின் நீங்களே எடுத்துக் கொள்ளுங்கள். வீரசுவர்க்கத்தில் வசிக்கும் என் முன்னோர்களே! நீங்களே இதற்கு சாக்ஷி. பரம்பரையாக வளர்த்து வந்த நமது ராஜ விசுவாசத்தை அந்தணர் புனிதமான வேள்வித்தீயைப் பாதுகாப்பதுபோல் இன்று வரை எத்தனையோ கஷ்டங்களுக்கிடையே காப்பாற்றி வந்து என்மீது எவ்விதமான களங்கமுமின்றி அரசனிடமே அவருடைய பொருளைத் திரும்பவும் ஒப்படைத்துவிட்டேன்.

சந்திரபாலன்: பலே! பிரசங்கம் பிரமாதமாகத்தான் இருக்கிறது!

நயனராய்: சீ! வாயை மூடு. மன்னனே, நான் விடை பெற்றுக் கொள்கிறேன்.

*[வணங்கிவிட்டுச் செல்கிறான்.]*

கோவிந்த: அரசனுடைய ஆணைக்குச் சற்றும் மதிப்பில்லை. தெய்வகாரியத்தின் பொறுப்பு இவன் மீதுதான் விழுந்திருக்கிறதாம்! என்ன கஷ்டம்!

ரகுபதி: பிராம்மணசாபத்தின் முதல் விளைவு இது. நாளா வட்டத்தில் அரசன் மீதுள்ள எஞ்சிய விசுவாசமும் அகன்றுவிடும். அவன் நிற்கும் இடமே தகர்க்கப்பட்டு விடும்.

*[ஜயசிங்கன் வருகிறான்]*

ஜயசிங்கன்: பூஜைக்கு எல்லாம் சித்தமாகவிருக்கின்றன. பலியும் தயாராக இருக்கிறது.

கோவிந்த: பலியா? யாருக்கு பலி?

ஜயசிங்கன்: மகாராஜா! நீங்களா இங்கு வந்திருக்கிறீர்கள்? அப்படியானால் என் விண்ணப்பத்தைச் சற்றுக்கேளுங்கள். உங்கள் பாதங்களில் மிகவும் வணக்கத்துடன் பணிந்து வேண்டிக் கொள்கிறேன். இருமாப்பினால் நீங்களிட்ட கட்டளையை ரத்து செய்யுங்கள். மனிதனாகிய நீங்கள் தெய்வமாகிய பராசக்தியை மறைத்துக்கொண்டு நிற்கலாகாது.

ரகுபதி: வெட்கம், ஜயசிங்கா. எழுந்திரு. யாருக்காக இவன் காலில் விழுகிறாய்? உன் குருவாகிய என்னையே நீ அடிபணிய வேண்டும். மூடனே! திரும்பிப்பார். என் பாதங்களைப்பற்றி மன்னிப்பு வேண்டிக்கொள். தேவி பூஜை செய்வதற்கு அரசனின் உத்தரவு வேண்டுமாம்! ஏ காளிகா தேவியே! உனக்கு ஏனிந்த வீழ்ச்சி! பூஜையை நிறுத்துங்கள். பலியை நிறுத்துங்கள். அரசனின் கர்வம்

இன்னும் எத்தனை காலம் நீடிக்கிறதென்று பார்த்துவிடு

[ரகுபதியும் ஜயசிங்கனும் போகிறார்கள்.]

கோவிந்த: வினயம் என்கிற குணம் இவ்வுலகத்திலிருந்தே அகன்று போய்விட்டதோ! மகாதேவி! உன் திருவடிகளைச் சுற்றிவந்து தினம் வணங்கிக்கொண்டிருப்பவர்களுக்கே தம்முடைய சிறுமை தெரிவதில்லையே! இத்தகைய மனிதர் உன்னுடைய மகிமையைக் குறைப்பதுடன் தாமும் இறுமாப்பிலேயே மிதந்து செல்கின்றனர்.

[போகிறான்]

# இரண்டாம் அங்கம்

## முதற் காட்சி

### கோயில்

[ரகுபதியும், ஜயசிங்கனும் நக்ஷத்திர ராயும் பிரவேசிக்கின்றனர்.]

நக்ஷத்திரராய்: என்னை எதற்காக அழைப்பித்தீர்கள், குரு தேவரே?

ரகுபதி: நேற்றிரவு கனவில் தேவி என்முன் தோன்றி நீ அரசனுகப் போவதாகக் கூறி மறைந்தாள்.

நக்ஷத்திரராய்: நான் அரசனுகப் போகிறேனு? ஹா, ஹா! என்ன சொன்னீர்கள் குருவே! நான் ராஜாவாகப் போகிறேனு? புதிய கதையாகவல்லவா இருக்கிறது இது!

ரகுபதி: நீ நிச்சயமாக அரசனுகப் போகிருய்.

நக்ஷத்திரராய்: எனக்குச் சற்றும் நம்பிக்கையில்லை.

ரகுபதி: அன்னையின் வாக்குத் தவருமல் பலிக்கும். உன் நெற்றியில் ராஜதிலகம் இடப்படும். இதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

நக்ஷத்திரராய்: சந்தேகமேயில்லையா? ஆனுல் - அரசபதவி கிடைக்காவிடில்?

ரகுபதி: என் பேச்சில் உனக்கு நம்பிக்கையில்லையா?

நக்ஷத்திரராய்: சந்தேகம் சிறிதும் இல்லை. ஆயினும்-ஒருவேளை ஆகாவிட்டால்?

ரகுபதி: தேவியின் வார்த்தைக்கு மாருக ஒரு பொழுதும் நடக்காது.

நக்ஷத்திரராய்: மாருக நடக்காதா? இதோ பாரும், குருவே! உமது ஜோஸ்யம் பலித்துவிட்டால் நான் ராஜாவாக ஆனவுடனே இப்பொழுதுள்ள மந்திரியை ஒழித்துவிடுவேன். அவனது சந்தேகப்பார்வை எப்பொழுது பார்த்தாலும் என்மேலேயே விழுகிறது. அவன் என் அப்பனுக்குப் பாட்டன் போலும்! அவனைப் பார்த்தாலே எனக்கு ஒரே பயம். தெரிந்ததா, குருவே! உம்மை என் மந்திரியாக நியமித்துவிடுகிறேன்.

ரகுபதி: மந்திரிபதவி வந்தால் அதைக் காலால் உதைத்துத் தள்ளுவேன்.

நக்ஷத்திரராய்: ரொம்ப சரி. அப்படியானால் ஜயசிங்கன் மந்திரியாகட்டும். ஆனால், குருவே, உமக்குத்தான் எல்லாம் தெரிகிறதே. நான் எப்பொழுது அரசனுவேன் சொல்லும்?

ரகுபதி: தேவி ராஜரத்தத்தை விரும்புகிறாள்.

நக்ஷத்திரராய்: ஆ! ராஜரத்தம் கேட்கிறாளா?

ரகுபதி: ஆம். ராஜரத்தத்தை முதலில் கொண்டுவா. பிறகு ராஜாவாக ஆகலாம்.

நக்ஷத்திரராய்: அது எங்கே கிடைக்கும்?

ரகுபதி: அரண்மனையில் கோவிந்த மாணிக்கியன் இருக்கிறான். அவனது ரத்தம் வேண்டும்.

நக்ஷத்திரராய்: ஹா! மகாராஜாவின் ரத்தம் வேண்டுமா?

ரகுபதி: (ஜயசிங்கன் பதறுவதைப் பார்த்து) சும்மாவிரு, ஜயசிங்கா, பதறாதே. புரிந்ததா நக்ஷத்திரா? அப்படியாகில் கேள். இரகசியமாக அவனைக் கொன்று அவனுடைய பச்சை ரத்தத்தை அன்னையின் அடியருகே கொண்டுவா. (ஜயசிங்கன் மறுபடியும் பதறுகிறான்).

ஜயசிங்கா! அமைதியாக இருக்க முடியாதென்றால் வேறிடம் சென்றுவிடு. புரிந்ததா நக்ஷத்திரராய்? சிராவண மாதத்தின் கடைசியிரவன்று தனக்கு ராஜ ரத்தம் வேண்டும் என்பது தேவியின் உத்தரவு. நீயும் உன் அண்ணன் கோவிந்த மாணிக்கியனுமே ராஜ சகோதரர்கள். உன் தமையன் பிழைத்திருக்க வேண்டுமாயின் உன் ரத்தம் இருக்கவே இருக்கிறது. எப்படியாவது மகாகாளி திருப்தியடைந்து நமது கவலைகள் ஒழிந்தால் போதும்.

நக்ஷத்திரராய்: ஐயோ நான் ஒழிந்தேன். குருவே! ராஜபதவி வேண்டாம். அரசனின் ரத்தம் அரசனுடைய உடம்பிலேயே இருக்கட்டும். எனக்கு இருக்கும் பதவியே போதும்.

ரகுபதி: அதுமுடியாது. இதிலிருந்து யாரும் தப்பமுடியாது. ராஜரத்தத்தைக் கொண்டு வந்தே தீரவேண்டும்.

நக்ஷத்திரராய்: ஐயோ என்ன செய்வேன்? குருவே! என்ன செய்ய வேண்டுமென்பதைச் சொல்லிவிடுங்களேன்.

ரகுபதி: சாந்தமாக இரு. நான் சொல்லுவதைக் காலதாமதம் செய்யாமல் முடித்துவிடு. காரியசித்தி ஆகாதவரையில் வாயைத் திறக்காதே. இப்பொழுது நீ போகலாம்.

நக்ஷத்திரராய்: ஓ காத்தியாயனி மகாமாயே! இதென்ன சோதனை!

[போகிருன்]

ஜயசிங்கன்: இதென்ன நான் கேட்டது? கருணையே உருவான தாயே! இதென்ன அக்கிரமம்? தம்பியின் கையினுலேயே அண்ணன் மடிவதா! அனைத்துலகின் அன்னையே!—குருதேவரே! இத்தகைய கொடிய ஆக்ஞையை அன்னையின் ஆணையென்று ஏன் பிரசாரம் செய்கிறீர்கள்?

ரகுபதி: வேறு என்னதான் உபாயம்? நீயே சொல்.

ஜயசிங்கன்: உபாயமா? உபாயம் எதற்கு குருவே? ஐயோ பராசக்தி! உன் கையில் வாள் இல்லையா? சண்டிகையே! உன் கோபக்கனல் எங்கு போயிற்று? உன்னுடைய இச்சையினுல் இந்த உபாயம் தோன்றியதென்ருல் அது திருடன் சுரங்கத்திற்குள் மறைவதைப்போல் ரகசியமாக ஒடி ஒளிவதேன்? இது யார் செய்த பாவம்?

ரகுபதி: பாப புண்ணியங்களைப்பற்றி உனக்கென்னடா தெரியும்?

ஜயசிங்கன்: உம்மிடம் கற்றறிந்த பாடம்தான் சுவாமி.

ரகுபதி: அப்படியாஞல் வா, குழந்தாய்! உனக்கு மற்றெருவிதமான பாடம் கற்றுக்கொடுக்கிறேன். பாவம், புண்ணியம் என்று ஒன்றும் கிடையாது. அண்ணன் யார்? தம்பி யார்? நான் யார்? பிறர் யார்? கொலை செய்வது பாவம் என்று யார் சொன்ஞர்கள்? இவ்வுலகமே ஒரு பெரிய கொலைக்களம். கண்ணிமைக்கும் நேரத்தில் லக்ஷக்கணக்கான உயிர்கள் மடிந்துவிடுகின்றன. இது யாருடைய திருவிளையாடல்? இவ்வுலகின் மண்ணுடன் கொலை இணைபிரியாத வண்ணம் கலந்திருக்கிறது. நாம் எடுத்து வைக்கும் ஒவ்வோரடியின் கீழும் நசுங்கிமடியும் நூற்றுக் கணக்கான புழு பூச்சிகளுக்கு உயிர் இல்லையா? காலம் என்கிற முதியவன் உலகமாகிற ஓலையில் கணந்தோறும் தோன்றி மறையும் இவ்வுலகின் சரித்திரத்தை ஓய்வின்றி ரத்த எழுத்துக்களாலேயே எழுதிக்கொண் டிருக்கிருன். காட்டிலும் கொலை. வீட்டிலும் கொலை. பறவைக்கூட்டிலும் கொலை; புழுக்களின் பொந்துகளிலும் கொலை. ஆழமறியாக் கடல் நீரிலும், நிர்மலமான ஆகாயத்திலும் கொலை. உயிர் வாழ்வதற்கும் கொலை. விளையாட்டிற்கும் கொலை. அகாரணமாகவும் உத்தேசமின்றியும் கொலை. சகல அண்டங்களும் கொலை என்கிற அஸ்திவாரத்தின் மீதிலேயே சலித்துக்கொண் டிருக்கின்றன; புலிக்குப் பயந்து பெருமூச்சுடன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓடும் மானைப்போல் ஒரு கணமும் நிற்கச்சாத்தியமில்லா

மல் அண்டங்கள் சுழன்று கொண்டிருக்கின்றன. கால ரூபிணியாகிய மாகாளி இரத்த தாகத்தினுல் வறண்ட தனது சிவந்த நாக்கை வெளியே தொங்கவிட்டுக் கொண்டு நிற்கிருள். அவள் கையில் ஏந்தியிருக்கும் மண்டையோட்டில் உலகின் நான்கு திசைகளிலிருந்தும் வற்ருத ரத்த அருவி - பிழியப்படும் திராக்ஷைக் குலைகளி லிருந்து ரசம் பெருகுவதுபோல்—பாய்கிறது.

ஜயசிங்கன்: நிறுத்தும், நிறுத்தும், நிறுத்தும். மாயாவினி யாகிய அன்னையே! பிசாசினியே! தாயில்லாத இவ்வுலகத் திற்கு அன்னை யென்கிற மாயாவேஷத்துடன் உன் ரத்த தாகத்தைத் தணித்துக் கொள்ளவா அவதாரம் செய் திருக்கிருய்? பசியால் வாடும் பறவைக்குஞ்சு தனித்த கூட்டில் தாய்ப்பறவையின் வரவை எதிர்நோக்கிக் காத்திருக்கையில்—அண்டையிலுள்ள கொடிய காக்கை யைத் தாயென்று நினைத்து மயங்கி தீனக்குரலில் அழைக்க, காக்கை அதன் மீது பாய்ந்து தன் கூர்மை யான அலகினுல் மென்மையான அச்சிறு உயிரை வதைத் தால்—அதுதான் உன் தாய்மைக்கு அழகோ? அன்பு பொய். இரக்கம் பொய். கருணை பொய். எல்லாம் பொய். ஆதியந்தமில்லாத கொடிய ஹிம்சைதான் நிஜம். அப்படி யாகில் காய்ந்து வறண்ட நிலத்தின்மீது மேகம் ஆசிகளைச் சொரிவதுபோல் ஏன் குளிர்ந்த மழையைப் பொழிகிறது? கருணை மடைதிறந்து பாய்வதுபோல் ஆற்றுவெள்ளம் பாறைகள் நிறைந்த மலையுச்சியிலிருந்து பாலைவனப் பிரதேசத்திற்கு ஏன் பாய்கிறது? முட்கள் செறிந்துள்ள செடியின் உச்சியில் பூக்கள் எப்படி மலர்கின்றன? என்னை ஏமாற்றுகிறீர்களா குருவே? அன்னையிடம் எனக்குள்ள பக்தி என் மார்பைப் பிளந்து கொண்டு ரத்தத்தைப் போல் பாய்வதைக் காண்பீர்கள். வேண்டுமானுல் என் என் இதயத்தையே அன்னையின் திருவடிகளில் பலியிட்டு விடுகிறேன். அதோ பாருங்கள்! அன்னை நம்மீதுள்ள விளை யாட்டு அன்பினுல் புன்னகை புரிகிருள்! தாயே! உண்மை! நீ ஓர் அரக்கி. கல் மனம் படைத்தவள். உனக்கு என் ரத்தத்தைப் பருக தாகம் ஏற்பட்டிருப்பதும் உண்மை தானே? அப்படியானுல் என் ரத்தத்தையே அளிக்கிறேன். இப்பிறவி நீத்த பிறகு உன் மகனுகிய எனக்கு மறுபிறவி யில்லாமற் செய்வாயா? உடைவாளை என் மார்பில் செருகிவிடட்டுமா? என் ரத்தக்குழாய்களில் ஓடுகிற ரத்தத்தை நீ மிகவும் விரும்பிப் பருகுவாய் போலும்! அன்னையே! நீ உண்மையில் கல் மனம்கொண்ட அரக்கி.

குருவே! என்னைக் கூப்பிட்டீர்களா? உம்முடைய மோச வார்த்தை இப்பொழுது புரிகிறது. பக்தனின் மார்பைப் பிளந்து பெருகும் ரத்தமே உமக்கு வேண்டுவது! உம்முடைய வார்த்தையால் மிகவும் வேதனையை அடைந்த என் மனத்திற்கு அன்னை சாந்தி அளிக்கப் போகிருள்.

இதனுல் துக்கத்தைவிட நூறுபங்கு சுகமே உண்டாகும். ஆனுல் அன்னை ராஜரத்தத்தை விரும்புவதேன்? சீச்சீ! பக்தியைப் பருகவிரும்பும் அன்னையை ரத்ததாகம் கொண்டவளாக நீர் கூறுகிறீரே!

ரகுபதி: அப்படியானுல் இவ்வாலயத்தில் ஜீவபலி நின்று போகட்டும்.

ஜயசிங்கன்: நின்றே போகட்டும். இல்லையில்லை. குருதேவரே! உமக்கு நல்லதும் கெட்டதும் தெரியும். இதயபூர்வமான பக்தி சாஸ்திர விதியைப் பின்பற்ருது. கண்கள் தம்முடைய ஒளியினுல் பிறபொருள்களைப் பார்க்கமுடியாது. ஒளி வானவெளியிலிருந்து வரவேண்டும், சுவாமி! மன்னிக்கவேண்டும். இவ்வடிமையை மன்னித்துவிடுங்கள். மிகுந்த மனோவேதனையின் காரணமாக நான் பித்தனைப் போலப் பிதற்றியதையெல்லாம் பொருட்படுத்த வேண்டாம். அன்னை பராசக்தி உண்மையாகவே ராஜரத்தத்தை விரும்புகிருளா என்பதைக் கூறிவிடுங்கள்.

ரகுபதி: ஐயோ, குழந்தாய்! கடைசியில் என்னிடமே உனக்கு அவநம்பிக்கையா?

ஜயசிங்கன்: உங்களிடம் அவநம்பிக்கையா? ஒரு பொழுதும் இல்லை. உங்களை விட்டால் என் நம்பிக்கைக்கு வேறு புகலிடம் ஏது? வாசுகியின் தலையிலிருந்து நழுவிய பூமியைப் போல் அது சூன்யமாகி அழிந்துவிடும். அன்னைக்கு ராஜரத்தம் வேண்டுமாயின் அந்த ரத்தத்தையே கொண்டு வந்து அளிக்கிறேன், ஆனுல் சகோதரக் கொலை நடப்பதை மாத்திரம் பொறுக்கமாட்டேன்.

ரகுபதி: தெய்வத்தின் ஆணையை நிறைவேற்றுவது பாவமல்லவே!

ஜயசிங்கன்: இல்லை. அது புண்ணியமே. அதை நானே சம்பாதித்துக் கொள்கிறேன்.

ரகுபதி: சத்தியமாகச் சொல்லுகிறேன், மைந்தா! உன்னை நான் என் உயிரைவிட அதிகமாக நேசிக்கிறேன். உன் குழந்தைப் பருவம் முதல் உன்னை நான் தாயின் அன்பைவிட மேலான சிநேகத்துடன் வளர்த்து வருகிறேன். உன்னை இழக்க என்னுல் முடியாது.

ஜயசிங்கன்: இப்புனிதமான அன்பிற்கு எவ்விதக் களங்கமும் ஏற்படாமல் பார்த்துக்கொள்வேன்.

ரகுபதி: நல்லது. இதைப்பற்றிப் பிறகு யோசிக்கலாம். எல்லாம் நாளைய தினம் தீர்மானமாகும்.

[இருவரும் போகின்றனர்]

## இரண்டாம் காட்சி

கோயில்

அபர்ணா: (பாடுகிருள்)

ஊர் நிறைந்த மாந்தரே ஊண் உறக்கம் ஒய்ந்து நான்
நேரில் இங்கு நிற்கிறேன் நிமலே கோயில் வாயிலில்

ஜயசிங்கா! எங்கே ஜயசிங்கன்? இக் கோயிலில் ஒருவரும் இல்லையா? அசைவின்றி நின்றுகொண்டிருக்கும் ஏ கற்சிலையே! நீ யார்? ஒரு மொழிகூடப் பேசாமல் உலகத்தின் எல்லாச் செல்வங்களையும் கவர்ந்துகொள்கிருய். நாங்கள் எதன் பொருட்டுத் துயருற்று அலைந்து திரிகிருேமோ அது தானுகவே வந்து உன் காலடியில் சரண் புகுகிறது. அதனல் உனக்கு என்ன பிரயோஜனம்? அதை ஏன் நீ உலோபியின் செல்வத்தைப்போல் கோயிலின் தளத்தின்கீழ்ப் புதைத்து வைக்கிருய்? வறுமை நிறைந்த இவ்வுலகத்தின் குறைகளனைத்தையும் மறைத்து வைப்பதுபோல் இருக்கிறது உன் காரியம்.

ஜயசிங்கா! இக்கற்சிலை உனக்கு என்ன சுகத்தைக் கொடுக்கப்போகிறது? உன்னிடம் என்ன பேசப் போகிறது? உன்னைப்பற்றி என்ன சிந்திக்கப் போகிறது? இதயமாகிற மறைந்த பாத்திரத்தில் சாந்தியை அளிக்கும் அமுதத்தை இரவு முழுதும் நிரப்பி வைத்து அளிக்கப் போகிறதா? அன்பிற்கு ஏங்கிக்கிடப்பவனே! அடைபட்ட இவ்வாயிலில் ஏன் வீணுக உட்கார்ந்திருக்கிருய்?

[பாடுகிருள்]

ஊர் நிறைந்த மாந்தரே ஊண் உறக்கம் ஒய்ந்து நான்
நேரில் இங்கு நிற்கிறேன் நிமலே கோயில் வாயிலில்
கண்ணிலே திருக்காட்சிகள் களி நிறைந்தயர் வீடுகள்
பண்ணின் வேய்ங்குழல் காலமும் பாய்ந்திடச் செவி மாந்துவேன்

[ரகுபதி பிரவேசிக்கிருர்]

ரகுபதி: நீ யாரடி இக் கோயிலுக்குள் நுழைந்தவள்?

அபர்ணு: நான் ஒரு பிச்சைக்காரி. ஜயசிங்கன் எங்கே?

ரகுபதி: இங்கிருந்து வெளியே போ! மாயக்கள்ளி! ஜயசிங்கனை தேவியினது சந்நிதானத்திலிருந்து அபகரித்துக் கொள்ள முயற்சிக்கும் பேயே!

அபர்ணு: என்னிடம் தேவிக்கு என்ன பயம்? எனக்குத்தான் அவளிடம் நிரம்பப் பயம். என்னிடமுள்ள அனைத்தையும் ஒரு நொடியில் விழுங்கிவிடுவாள்.

[பாடிக்கொண்டே வெளியேறுகிருள்]

நின்ற செல்வமும் பிரிதிலை நிற்க நேரமும் இனியிலை
அன்றிருந்து நான் வந்ததோர் ஆதியூர் செல்ல வேண்டுமே!
குறைவிலா மகிழ் கூடுவீர் கொள்ளைநல் விழாக் கொள்ளுவீர்.
நிறைக நன்மனை இன்புகள் நித்தமும் வளர்ந்தோங்கவே!

## மூன்றும் காட்சி

### கோயிலின் எதிரில் வீதி

ஜயசிங்கன்: இந்த மனக்கவலை ஒழிய வேண்டும். அடியோடு ஒழிய வேண்டும். கவலையென்கிற நகரத்தைவிடக் காரியமே சிறந்தது. அது எவ்வளவு கொடியதாகவோ பயங்கரமானதாகவோ இருந்தாலும் சரி, தொழில் புரிவதற்கு ஒரு முடிவுண்டு. கவலைக்கு எல்லையே கிடையாது. கண்ணீரைப்போல் கண் இமைக்கும் பொழுதெல்லாம் ஆயிரம் மடங்கு பெருகும் அது. நான்கு திசைகளிலும் அது எவ்வளவுதான் வழிதேடியலைந்து களைத்தாலும் அவ்வளவும் மறைந்துவிடும். பல வழிகளைத் தேடித் திரிவதைவிட ஒன்றைப் பின்பற்றுவது மேல். நீங்கள் சத்தியமே உருவானவர். குருநாதரே! உங்கள் கட்டளையும் சத்தியமே. நீங்கள் நாவினுல் உரைப்பதெல்லாம் உண்மையே. உயிர்க்கொலை பாவமல்ல. சகோதரக் கொலை பாவமல்ல. பாவமுமில்லை. புண்ணியமுமில்லை, அதுவே நிஜம். கவலையைவிடுங்கள். உடலைத் தகிக்கும் விசாரங்களையும் விவேகத்தையும் ஒழியுங்கள்.

அண்ணன்மார்களே! நீங்களனைவரும் எங்குப் போகிறீர்கள்? நிசிபுரத்தில் திருவிழா நடப்பதாகக் கேள்விப்பட்டேன். கிராமப் பெண்களின் நாட்டியம் நடக்குமல்லவா? நானும் வருகிறேன். ஆஹா! இவ்வாழ்க்கையில் தான் என்ன சுகம் இருக்கிறது? பெண்கள் கவலையற்று

மகிழ்ச்சி பொங்க நர்த்தனம் செய்வார்கள். ஆனந்தக் கூத்திடும் அவர்களது அழகிய அவயவங்கள் கரைமீது அலை மோதிக்கொண்டு ஓடும் நதியின் நீரைப்போல் நான்கு திக்கிலும் வளைந்து வளைந்து எழுந்தாடும். நாடோடிப் பாடல்களும் நகைச்சுவை செறிந்த பரிகாசப் பேச்சுகளும் கிளம்பும். பூமியின் சோபை மிகுந்த பிரகாசத்துடன் விளங்கும். நானும் அங்கே வருகிறேன்.

[பாடுகிறுன்]

என்னை யார் அழைத்திடுவர் அண்ணன்மாரே - உடன்
யானும் வரவேண்டுகிறேன் அண்ணன்மாரே
கடமைகள் மறந்து நின்றேன் அண்ணன்மாரே - ஏழைக்
கல்மனம் உருகிவிட்டேன் அண்ணன்மாரே
கூடுமிடம் கூறிடுவீர் அண்ணன்மாரே - நானும்
கூடவரக் கூடுவதோ அண்ணன்மாரே
பின்னிழுக்கும் என்சுமைக்கும் அண்ணனமாரே - உங்கள்
புன்னகைக்கும் என்னசெய்வேன் அண்ணன்மாரே
கட்டவிழ வெட்டிவிட்டால் அண்ணன்மாரே - என்னைக்
காதலுடன் தொட்டழைத்தால் அண்ணன்மாரே.
பின்னடைந்து நின்றிடுமே அண்ணன்மாரே - இந்தப்
பேதை மனப்பாரமெல்லாம் அண்ணன்மாரே
பொங்கு வெள்ளம் போய்வடிய அண்ணன்மாரே - உடன்
போய்விடும் பொருள்களைப்போல் அண்ணன்மாரே
வந்துசெல்லும் கோடியரில் அண்ணன்மாரே - ஒரு
வாசகம் உரைப்பவர் யார் அண்ணன்மாரே.
என்பெயர் தெரிந்தொருவன் அண்ணன்மாரே - கணம்
ஏழைமுகம் பார்த்து நின்ருல் அண்ணன்மாரே.
புண்ணியனைக் கண்டுகொள்வேன் அண்ணன்மாரே - அந்தப்
புன்னகையின் பின்தொடர்வேன் அண்ணன்மாரே.

[தூரத்தில் அபர்ணு வருகிருள்]

யாரங்கே? அபர்ணுவா? தொலைவில் ஏன் நின்றுகொண் டிருக்கிருய்? ஒன்றும் பேசாமல் நின்றுகொண்டு ஜயசிங் கனின் கானத்தைக் கேட்டுக்கொண் டிருந்தாயோ? எல்லாம் பொய். இவ்வுலகம் ஒரு வஞ்சனை. இதை நினைத்துத்தான் சிரித்துக்கொண் டிருந்தேன். அதைப் பற்றியேதான் பாடிக்கொண் டிருந்தேன். அதோ பார்! அந்தச் சாலையில் எத்தனை ஜனங்கள் துளிக்கூடக் கவலை யின்றிச் சென்றுகொண் டிருக்கிருர்கள்! ஒரு சிறு காரி யத்திற்காக எவ்வளவு விளையாட்டும், சிரிப்பும், குதூகல மும்! எவ்வளவு அக்கறையுடன் அலங்கரித்துக்கொண் டிருக்கிருள் அந்த யுவதி! நிஜமாகவிருந்தால் இது

இவ்வாறு இருக்குமா? இயற்கையாக ஆனந்தம் இவ்வாறு பெருகுமா? துன்பம் என்பதே விலகிப்போய் உலகம் நிறைந்த துயரக்குரல் அடங்கி நெடுங்காலம் மவுனத்தை அடைந்துவிடுமே! புல்லாங்குழல் உண்மையில் வேதனையுடன் கலந்த நாதத்தை எழுப்பினுல் அது உடைந்து போய் அதன் இசை நாதமற்றதாக ஆகிவிடுமே! எல்லாம் பொய்யென்று சொல்லியா இவ்வளவு சிரிப்பும் ஆனந்தமும்! சுடலையின் நடுவில் அமர்ந்து விளையாட்டு, துயரத்தின் அருகில் சயனித்து கானம். ஹிம்சை என்கிற பெண் புலியின் கூரிய நகங்களுக்கிடையே நடக்கிறது தினசரிப் பணிகளும் காரியங்களும். எல்லாம் உண்மையானுல் இவ்வாறெல்லாம் நடக்குமா? ஹா! அபர்ணு! நீ, நான் எல்லோரும் பொய். அதையறிந்து நலம்பெறு. துயரமும் வியப்பும் கலந்த உன் விந்தைக் கண்களிலிருந்து ஏன் நீர்த்துளிகளை உகுக்கிருய்? பெண்ணே, வா. நாமிருவரும் ஒன்றுசேர்ந்து இந்த சம்சாரத்தை உதறித் தள்ளிவிட்டு சூனியமான வானவெளியில் இரு மேகத் திரள்களைப் போல் சென்றுவிடுவோம்.

[ரகுபதி பிரவேசிக்கிருர்]

ரகுபதி: ...சிங்கா!

ஜயசிங்க... உன்னை நான் அறியேன். நான் என்னுடைய விதி காட்டிய வழியில், எனக்கு இஷ்டமான பாதையில் செல்கிறேன். ஆயிரக்கணக்கான ஜனங்கள் செல்லும் மார்க்கத்தில் நடக்கிறேன். என்னை 'நில்' என்று கூறுவதற்கு நீ யார்? நீ போய்விடு. நானும் என் வழி செல்கிறேன்.

ரகுபதி: ஐயோ! ஜயசிங்கா! உனக்கு என்ன நேர்ந்துவிட்டது?

ஜயசிங்கன்: என் எதிரிலேயே சுலபமான வழி தென்படுகிறது. கையில் பிச்சையெடுக்கும் பாத்திரத்தை ஏந்திக் கொண்டு, இதோ என் தோழியாகிய பிச்சைக்காரச் சிறுமியைக் கூட அழைத்துக்கொண்டு சென்றுவிடுகிறேன். இவ்வுலகில் ராஜபாட்டை கடினமானதென்றும் செல்வதற்கரியதென்றும் யார் சொன்னுர்கள்? எப்படியாகிலும் அதைக் கடந்து கதிரவன் மறையும் தருணம் வாழ்வின் இறுதி நிலையை எய்திவிடுவேன். அங்கு ஒழுக்கம், கவலை, தர்க்கம், குதர்க்கம் முதலியவை ஒன்றும் அணுக முடியாது. களைத்த, ஈனமான இம் மானிட ஜன்மத்தை பூமிதேவியின் மடியில் அர்ப்பணம் செய்து விடுகிறேன். கணப்பொழுதில் மறையும் நமது மனக்கோட்டைகள், மனமயக்கம், பயம், சுகம், துக்கம்,

நசிக்கும் இதயத்தின் ஆசாபாசங்கள், பலவீனத்தின் காரணமாக உடைந்துபோன இவ்வாழ்க்கை இவற்றை உதறித் தள்ளிவிட்டு எல்லையற்ற காலத்தின் மடியில் ஆழ்ந்த உறக்கத்தை மேற்கொள்வேன். இதுதானே சம்சாரம்? இதற்கு சாத்திர விதிகள் எதற்கு? குருவினால் என்ன பயன்?

(திடீரென்று) சுவாமி! தந்தையே! குருநாதரே! நான் என்னென்னவோ உளறிவிட்டேன். இதுவரை கனவில் ஆழ்ந்திருந்தேனு! இதுதான் அந்தக் கோயில்! இதோ அந்த ஆலமரம்! அசையாத, கொடிய, சாசுவத மான சத்தியத்தைப்போல் அது நின்றுகொண்டிருக்கிறது. உங்கள் கட்டளையென்ன குருவே! ஆம். நான் என்ன செய்யவேண்டு மென்பதை மறக்கவில்லை. இதோ பாருங்கள்! (கத்தியைக் காண்பித்து) உங்கள் ஆக்ஞை உள்ளும் புறமும் வியாபித்து நிற்கிறது. வேறு ஏதாவது கட்டளை உண்டா, பிரபோ!

ரகுபதி: உண்டு. முதலில் இச்சிறுமியைக் கோயிலினின்றும் தொலைவாக உள்ள இடத்திற்கு அனுப்பிவிடு. ஏ மாயக் கள்ளி! உன் மாய மந்திரத்தை நான் அறிவேன். ஜய சிங்கா! இவளை உடனே அப்புறப் படுத்து.

ஜயசிங்கன்: இவளை அப்புறப் படுத்துவதா? ஏழைச் சிறுமி. என்னைப்போலவே இவ்வாலயத்தில் அடைக்கலம் புகுந் தவள். என்னைப்போலவே திக்கற்றவள். முட்களற்ற மலரைப்போல் குற்றமற்றவள். பாவமென்பதையே அறியாதவள். வனப்பும், எழிலும், எளிமையும் நிறைந் தவள். தற்பொழுது கவலையுற்றிருப்பவள். இவளை ஏன் தொலைவில் விரட்டவேண்டும்?

உம். அப்படியே செய்கிறேன், குருதேவரே! அபர்ணு! நீ சென்றுவிடு. தயை, சினேகம், அன்பு எல்லாம் பொய். நீ ஒழிந்தே போய்விடு, அபர்ணு! இவ்வாழ்விற்கு வெளியில் வேறு ஒன்றும் இல்லை என்றாலும் தயை நிரம்பிய மரணம் இருக்கிறது. போய் விடு அபர்ணு!

அபர்ணு: நீ என்னுடன் வந்துவிடு, ஜயசிங்கா. இக்கோயிலைத் துறந்து நாமிருவரும் எங்காகிலும் சென்று விடுவோம்.

ஜயசிங்கன்: இருவராகச் செல்வோமா? இது கனவல்ல அபர்ணு! முன்னொரு முறை கனவு கண்டுகொண்டிருந் தேன், இவ்வுலகமே கனவென்று. அவ்வின்பத்தினுல் நகைத்தேன், ஆடினேன், பாடினேன். ஆனுல் நனவு. இன்பப் பேச்சை எடுக்காதே.

இன்பத்தைக் கண்ணெதிரே காட்டி என்னை மயக்காதே. சத்தியம் என்கிற சிறையில் அடைபட்ட கைதி நான்.

ரகுபதி: சல்லாபத்திற்கு இது தருணமல்ல. இவளை வெளியேற்றிவிடு.

ஜயசிங்கன்: போய்விடு, அபர்ணா.

அபர்ணா: நான் ஏன் போகவேண்டும்?

ஜயசிங்கன்: இதுதான் உன் அன்பிற்கு அடையாளமோ?

அபர்ணா: அன்பு ஒன்றுமில்லை, ஜயசிங்கா! உன் துயரமும் என் துன்பமும் எல்லாம் என் கர்வத்திற்குட்பட்டவை. எனக்கு யாரிடமும் அன்பே கிடையாது.

ஜயசிங்கன்: அப்படியாகில் நானே சென்று விடுகிறேன். நீ இங்கிருக்கும் வரையில் உன் முகத்தில் விழிப்பதில்லை. நீ செல்.

அபர்ணா: (ரகுபதியை நோக்கி) கொடுமை நிறைந்த பிராம்மணனே! உன் பிராம்மணத்துவம் ஒழிக! ஏழைச் சிறுமியாகிய நான் உனக்குச் சாபமிடுகிறேன். ஜயசிங்கனை நீ இனிமேல் இவ்வடிமைத் தனத்தில் ஒரு கணமும் வைத்திருக்க முடியாமல் போய்விடும்.

[போகிறாள்]

ரகுபதி: (சோர்ந்து உட்கார்ந்திருக்கும் ஜயசிங்கனைப் பார்த்து) குழந்தாய்! கண்ணெடுத்துப்பார்! ஒரு வார்த்தை பேசு! என் உயிரினுமினிய மகன் நீ! என் இதயத்தில் அகாதமான கடலைப்போல் அன்பு இல்லையென்று நினைக்கிறாயா? நான் உனக்குப் பிறவி முதல் பந்து. இந்த மாயப்பாசம் ஒரு நொடியில் விலகிப் போகுமாறு செய்தால் அதற்கு இவ்வளவு வருத்தமா உனக்கு?

ஜயசிங்கன்: போதும் சுவாமி. அன்பின் பேச்சை இனி எடுக்க வேண்டாம். இப்பொழுது என் மனத்தில் கடமை ஒன்றே எஞ்சி நிற்கிறது, சினேகம், அன்பு இவை செடி, கொடி, இலை மலர்களைப்போல் பூமியின் மீது தோன்றி உடனேயே உலர்ந்து மறைந்துவிடும். புதுப்புதுக் கனவுகளைப் போலே. அடியிலிருப்பது காய்ந்த பாறையாலான கல்தூண். அது இரவு பகலாக முடிவற்ற இதயச் சுமையைப் போல் நின்றுகொண்டிருக்கிறது.

[போகிறான்]

ரகுபதி: ஜயசிங்கா! நான் எவ்வளவு முயன்றும் உன் உள்ளத்தைப் பெறமுடியாமற் போனேனே!

## *நான்காம் காட்சி*

### கோயிலின் பிரகாரம்

*[ஜனத்திரள்]*

கணேசன்: இவ்வருசம் திருவிழாவுக்குக் கூட்டமேயில்லை,

அக்ரூரன்: கூட்டம் எதற்காக வரும்? இங்குதான் இந்துக்களுடைய ராஜ்யமே இல்லாமற் போய்விட்டதே! நவாபினுடைய அரசாங்கம் போல் ஆகிவிட்டது. அம்மனுக்கு பலியே நின்றுபோய்விட்டதென்றால் ஜனங்கள் ஏன் வருவார்கள்?

கானு: அண்ணே! நம்முடைய ராசாவுக்கு ஆதியில் இந்த புத்தி கிடையாது. அவருடைய மனசை யாரோ கலைத்து விட்டார்கள்,

அக்ரூரன்: அப்படியானல் அவரைத் துலுக்கப் பிசாசுதான் ஏதோ பிடித்திருக்கவேண்டும். இல்லாவிடில் அம்மனின் பலியை நிறுத்துவானேன்?

கணேசன்: எது வேண்டுமானாலும் சொல்லு. நமது ராஜ்யத்திற்கு நன்மை ஒருகாலும் உண்டாகப் போவதில்லை.

கானு: குருக்கள் ஐயாதான் சொல்லிவிட்டாரே! மூன்றுமாத காலத்திற்குள் தேசத்தில் கொள்ளை நோய் ஏற்பட்டு நாடே அழிந்துவிடும் என்று!

ஹாரு: மூன்று மாதங்கள் எதற்கடா? இப்பொழுது நடப்பதைப் பார்த்தால் மூன்று நாட்கள் கூடத் தாங்காது போலிருக்கிறதே! இதோ பார்! நம்முடைய மாதவன் இரண்டரை வருசங்களாக நோய்வாய்ப் பட்டு எப்படியோ பிழைத்து வந்தானல்லவா? பலி நின்று போனவுடன் திடீரென்று இறந்துவிட்டான்!

அக்ரூரன்: அதெப்படியடா? அவன் காலமாகி இப்பொழுது மூன்று மாதங்களாகின்றனவே!

ஹாரு: மூன்று மாதங்கள் என்றே வைத்துக்கொள்ளேன். ஆனல் அவன் இறந்தது இவ்வருடம் தானே?

க்ஷாந்தமணி: அது கிடக்கட்டும். என் மருமகன் இருந்தானல்லவா? அவன் சாவானென்று யார் எதிர்பார்த்தார்கள்? மூன்றே நாள் சுரமடித்தது. வைத்தியர் கொடுத்த மாத்திரையை வாயில் போட்டவுடனேயே கண் மேலே செருகிக்கொண்டு போய்விட்டது.

கணேசன்: அன்று மதுரஹாட்டி கடைத் தெருவில் தீப்பற்றிக் கொண்டதல்லவா? ஒரு கூரை பாக்கியில்லாமல் எல்லாம் எரிந்துபோய் விட்டது.

சிந்தாமணி: ஏனடா வெறும் வீண்பேச்சு? இவ்வருஷம் நெல் விலை இறங்கியதைப்போல் ஒரு வருஷமும் இறங்கவில்லை. குடியானவன் தலையில் என்ன எழுதியிருக்கிறதோ தெரியவில்லை.

ஹாரு: அடே! மகாராஜா வருகிறார். காலையிலேயே இந்த ராஜாவின் முகத்தில் விழித்தேன். இன்று என்ன ஆகுமோ தெரியாது! உம் புறப்படு, இங்கிருந்து மெல்ல நழுவுவோம்.

[எல்லோரும் போகிறார்கள்]

[சந்திரபாலனும் அரசன் கோவிந்த மாணிக்கியனும் பிரவேசிக்கிறார்கள்.]

சந்திரபாலன்: மகாராஜா! அதிஜாக்கிரதையாக இருங்கள். நான்கு புறங்களிலும் கண்களையும் செவிகளையும் செலுத்திய வண்ணமே இருக்கிறேன். உமது விருப்பத்திற்கு மாறாக ஒன்றும் நடக்கவிடமாட்டேன். ஆனால், மகாராஜா, உங்களைக் கொலை செய்ய ரகசியமாகச் சதி நடப்பதாக என் செவிகளாலேயே கேள்விப் பட்டேன்.

கோவிந்த: கொலையா! யார் புரியப் போகிறார்கள்?

சந்திரபாலன்: சொல்வதற்கு மனம் வரவில்லை. கொடிய இச் செய்தி மகாராஜாவின் உள்ளத்தில் கூரிய உடைவாளைப் விட்டுப் புண் படுத்துமாறு பாய்ந்துவிடுமே என்று அச்சமாகவிருக்கிறது.

கோவிந்த: சங்கோசமின்றிப் பேசு, சந்திரபாலா! ஒரு மன்னனின் மனம் எப்பொழுதும் புண்பட்ட வண்ணமே இருக்கும். யார் நீ சொன்ன முடிவுக்கு வந்துள்ளார்கள்?

சந்திரபாலன்: உங்கள் தம்பி யுவராஜா நக்ஷத்திரராய்.

கோவிந்த: நக்ஷத்திரனா?

சந்திரபாலன்: ஆம். என் செவிகளாலேயே கேள்விப்பட்டேன். புரோகிதர் ரகுபதி நக்ஷத்திரராயை ரகசியமாகக் கோயிலில் சந்தித்துச் சதிக்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்திருக்கிறார்.

கோவிந்த: ஹா! என் பிறவித்துயரை நீக்க இரண்டு நாழிகையில் தீர்மானமாகிவிட்டதாக்கும்! என்னே என் விதி!

சந்திரபாலன்: அன்னைக்கு உங்களுடைய ரத்தத்தை நிவேதனம் செய்ய வேண்டுமாம்.

கோவிந்த: ஓகோ! அன்னைக்கு பலியா? அப்படியானால் நக்ஷத்திரராயின் மீது குற்றம் ஒன்றுமில்லை. புரிந்து கொண்டேன். தெய்வத்தின் பெயரால் மனிதன் தன்னுடைய மனிதத்தன்மையை இழந்துவிட்டிருக்கிறான்.

பயமொன்றும் இல்லை. நீ உன் வேலையைக் கவனி. நான் ஜாக்கிரதையாகவே இருக்கிறேன்.

[சந்திரபாலன் போகிறான்]

(தேவியின் விக்ரஹத்தை நோக்கி) ரத்தத்திற்கு பதிலாக மலர்கள் கொண்டு வந்திருக்கிறேன், மகாதேவி! வெறும் பக்தியுடன். ஹிம்சையுடனோ பெரும் பயத்துடனோ அல்ல. இவ்வுலகில் பலவீனர்களாயிருப்ப வர்கள் துணையற்றவர்களாகவும் வலிமையுள்ளவர்கள் கொடியவர்களாகவும் இருக்கிறார்கள். அன்னையே! சுயநலம் இரக்கமற்றது. பேராசை கொடியது. அஞ்ஞானம் கண்ணற்றது, கருவம் தன் காலின்கீழ் எளிய வர்களை நசுக்கிக் கொண்ட செல்கிறது. இவ்வுலகில் சினேகம், அன்பு முதலியவை நுண்ணிய ஒரு கிளையில் முளைக்கின்றன. சுயநலம் தீண்டியவுடன் அவை பொல பொலவென்று ஒரு கணத்தில் உதிர்ந்து விடுகின்றன. தாயே! ஏற்கெனவேயே கொடுமை நிறைந்த இவ்வுலகில் நீயும் கரத்தில் வாளேந்தி நாவை நீட்டினாயாகில் எல்லாம் இருள் மயமாகிவிடும். அப்புறம் தம்பி சகோதரனை மாட்டான். மனையாள் கணவனுக்கு எதிரியாவாள். உறவினர் சத்துருக்களாக மாறுவர், மனிதர்களின் இல்லங்களில் ரத்தவெள்ளம் பெருகும். ஜீவஹிம்சையே நல்லறமாகிவிடும். தயை நாடு கடத்தப்படும். இனி வேண்டாம்! இனி வேண்டாம்! இந்த மாயவேஷத்தை விட்டுவிடு; இன்னும் உனக்குச் சமயம் வரவில்லையா? உன் ஊழிக்காலத்து உருவம் இன்னும் நீடிக்கவேண்டுமா? என் தலையைக் கொய்வதற்கு நான்கு புறங்களிலிருந்தும் எழும் வாட்கள் உனது நான்கு கரங்களிலிருந்துதான் எழுகின்றனவோ! அவ்விதமாயின் உன் விருப்பம் நிறைவேறட்டும். என் ரத்தம் பாய்வதன் மூலமாகவாவது ஹிம்சையாகிய கொடிய தீ அணையட்டும். இவ்வுலகம் இத்தகைய ஜீவஹிம்சையை இனிப் பொறுக்காது: அரசனைக் கொல்வதாம்! தம்பி கையினால் அண்ணன் மடிவதாம்! எல்லா மக்களின் உள்ளங்களிலும் துயரம் நிரம்பட்டும். சகோதரர்களின் அழுகைக் குரல் வானை நோக்கி எழுக! என் ரத்தப் பெருக்கால் உன் தாய்க்கோலம் மறைந்து அரக்கியுருவம் வெளிப்படட்டும், இதுதான் உன் கருணையின் தர்மமாயின் அப்படியே நடக்கட்டும்.

[ஜயசிங்கன் வருகிறான்]

ஜயசிங்கன்: (விக்ரஹத்தை நோக்கி) சண்டி! உண்மையாகச் சொல். உனக்கு ராஜரத்தம் வேண்டுமா? இப்பொழுதே

சொல். உன் வாயினலேயே சொல். மனிதர் போல் பேசும் மொழியில் பேசு. சீக்கிரம் சொல். சத்தியமாக உனக்கு ராஜரத்தம் வேண்டுமா?

உள்ளிருந்துகுரல்: வேண்டும். வேண்டும்.

ஜயசிங்கன்: அப்படியானல், மகாராஜா, உங்களுடைய தெய்வத்தை நினைத்துக்கொள்ளுங்கள். காலன் உம தருகில் வந்து கொண்டிருக்கிறன்.

கோவிந்த: என்ன நடந்தது ஜயசிங்கா?

ஜயசிங்கன்: உங்களுடைய செவிகளாலேயே இப்பொழுது கேட்கவில்லையா? தேவி உண்மையாகவே ராஜரத்தம் வேண்டுமென்று கேட்கிறள். அவள் நாவினலேயே வேண்டும் என்று கூறினளே!

கோவிந்த: அது தேவியல்ல, ஜயசிங்கா! ஆலயத்தினுள்ளிருந்து பேசியது ரகுபதி. அவருடைய குரலை நான் நன்கு அறிவேன்.

ஜயசிங்கன்: பேசியது ரகுபதியா? உள்ளிருந்தா? இல்லை இல்லை. ஒரு பொழுதும் இல்லை. நான் இனி ஒரு சந்தேகத்திலிருந்து மற்றென்றிற்குத் தாண்டப்போவதில்லை. நான் சந்தேகம் என்ற கடலை நீக்கிக் கரையை அடையும் தருணம் என்னை மறுபடியும் அந்த ஆழமறியாத மடுவில் யாரும் தள்ளிவிடமுடியாது. அவநம்பிக்கையென்னும் அ[illegible]ளை! இனி முடியாது. குருவின் குரலோ, அன்னையின் குரலோ, எல்லாம் எனக்கு ஒன்றுதான்!

[கத்தியை உருவுகிறன். பிறகு அதைத் தரையில் எறிந்துவிடுகிறன்]

(விக்ரஹத்தை நோக்கி) அன்னையே! மலர்களை ஏற்றுக்கொள். தாயே! புஷ்பங்களை மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொள். இனி மலர்களினலேயே உன் பூஜை நடைபெறட்டும். இனி ரத்தம் வேண்டாம். தாயே, ரத்தம் வேண்டாம். இதோ ரத்தத்தைப் போலவே சிவந்த செவ்வலரி மலர்கள்! தன்னுடைய மக்களின் ரத்தம் சிந்துவதைப் பார்த்துத் துயருற்ற பூமிதேவியின் மணி வயிறு வெடித்துக் கிளம்பியதைப் போல் பூத்த மலர்கள். இவற்றை நீ ஏற்றுக்கொண்டே தீரவேண்டும். உன் கோபத்திற்கு நான் அஞ்சப்போவதில்லை. ரத்தம் அளிக்கமாட்டேன். சீற்றத்தினல் உன் கண்கள் சிவக்கட்டும். உன் வாளை உயர்த்து! உன் சுடலை வாழ்ப் பூத கணங்களைக் கூப்பிடு! நான் அஞ்சப் போவதில்லை.

[கோவிந்த மாணிக்கியர் போகிறர்]

ஐயோ! என்ன காரியம் செய்துவிட்டேன்! ஒரு நொடியில் குரு, தெய்வம் இருவரையும இழந்து

விட்டேனே! எனக்கு இவ்வுலகில் இனி ஒன்றுமே யில்லை.

[ரகுபதி வருகிருர்]

ரகுபதி: எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தேன். எல்லாம் பாழாகிவிட்டது. நன்றி கெட்டவனே! நீ கடைசியில் என்ன செய்து விட்டாய்?

ஜயசிங்கன்: எனக்குத் தகுந்த தண்டனை விதியுங்கள், சுவாமி!

ரகுபதி: அனைத்தையும் தகர்த்தெறிந்து விட்டாய். பிராம்மண சாபத்தை நடுவழியில் தடுத்து நிறுத்திவிட்டாய். குருவின் ஆணையை மீறிஞய். எல்லாவற்றையும்விட உன் புத்தியையே மேலாக எண்ணிஞய். பிறவிமுதல் நீ என்பால் செலுத்தவேண்டிய அன்புக் கடனை இவ்விதம்தான் செலுத்துவதா?

ஜயசிங்கன்: தந்தையே! தண்டனை விதியுங்கள்.

ரகுபதி: நன்றிகெட்ட உனக்கு என்ன தண்டனையை விதிப்பது?

ஜயசிங்கன்: மரண தண்டனை.

ரகுபதி: இல்லை. அதைவிடப் பெரிய தண்டனை விதிக்கப் போகிறேன். அன்னையின் திருவடிகளைத் தொடு.

ஜயசிங்கன்: தொட்டேன் சுவாமி.

ரகுபதி: தொட்டுக்கொண்டே ஆணையிடு. 'சிராவண மாதத்தின் கடைசியிரவில் ராஜரத்தத்தைக் கொணர்ந்து தேவியின் பாதங்களில் அர்ப்பணம் செய்வேன்' என்று.

ஜயசிங்கன்: சிராவண மாதத்தின் கடைசியிரவு ராஜரத்தத்தைக் கொண்டுவந்து அன்னையின் அடிகளில் அர்ப்பணம் செய்வேன்.

ரகுபதி: சரி, நீ போகலாம்.

# மூன்றும் அங்கம்

## முதற் காட்சி

### கோயில்

*[நகர மாந்தர், ரகுபதி, ஜயசிங்கன்]*

ரகுபதி: நீங்களெல்லோரும் இங்கு ஏன் வந்தீர்கள்?

எல்லோரும்: எங்கள் அம்மனைத் தரிசிக்க வந்திருக்கிறோம்.

ரகுபதி: பலே! தரிசனம் செய்ய வந்தீர்களா? உங்களுக்கெல்லாம் கண்கள் இன்னும் குருடாகாமல் இருப்பது உங்கள் தகப்பன்மார்கள் செய்த புண்ணியம். அம்மன் எங்கேயப்பா இருக்கிறாள்? அவள் இந்த நாட்டை விட்டுக் கிளம்பி அன்றே போய்விட்டாளே! அம்மனை உங்களால் இங்கு நிறுத்தி வைத்துக்கொள்ள முடிந்ததா என்ன! அம்மன் போய்விட்டாள்.

எல்லோரும்: இதென்ன அனர்த்தம்! இதென்ன பேச்சு குருக்களய்யா! நாங்கள் என்ன அபராதம் செய்தோம்?

நிஸ்தாரிணி: (ஊர்ப் பெண்மணி) என் மருமகன் தேக அசௌக்கியமாக இருந்ததால் நான் சில நாட்களாகப் பூஜைக்கு வரமுடியவில்லை.

கோவர்த்தனன்: நான் இரண்டு ஆடுகளைத் தேவிக்கு பலியிட வேண்டுமென்று கருதிப் பல நாட்களாக வைத்திருந்தேன். இதற்கிடையில் ராஜா பலியையே நிறுத்திவிட்டால் நான் என்ன செய்வது?

ஹாரு: நமது கந்தமாதனன் அம்மனுக்குப் பிரார்த்தனை பண்ணிக்கொண்டு பிறகு செலுத்தத் தவறினான். அம்மன் தக்க தண்டனை அளித்தாள். அவன் வயிறு ஓரேயடியாக வீங்கிவிட்டது. ஆறுமாதம் படுத்த படுக்கையாகக் கிடந்தான். பிறகு எப்படியோ குணமாயிற்று. அவன் நமக்குள் பெரிய பணக்காரனாய் இருக்கலாம். அதற்காக அம்மனை ஏமாற்ற முடியுமா?

அக்ரூரன்: வாயை மூடடா! சும்மா இரைச்சல் போடாதீர்கள்.

நல்லது, குருக்களய்யா! அம்மன் ஏன் போய்விட்டாள்? எங்களால் என்ன அபசாரம் நேர்ந்துவிட்டது?

ரகுபதி: அன்னைக்கு ஒரு சொட்டு ரத்தம் அளிக்க உங்களால் முடியுமா? இதுதான் உங்களுடைய பக்தியோ!

பல குரல்கள்: அது அரசனின் ஆணை. நாங்கள் என்ன செய்வோம்?

ரகுபதி: யாரடா அந்த அரசன்? அன்னையின் பீடம் அரசனின் சிங்காதனத்தைவிடத் தாழ்ந்ததா? அப்படியானால் தெய்வமில்லாத இந்த நாட்டில் உங்கள் அரசனை வைத்துக் கொண்டு சுகமாக வாழுங்கள். உங்களுடைய அருமை அரசன் உங்களை எப்படிக் காப்பாற்றப் போகிறான் என்பதை நான் பார்த்துவிடுகிறேன்.

[எல்லோரும் பயத்துடன் ரகசியமாகப் பேசிக்கொள்ளுகின்றனர்.]

அக்ரூரன்: எல்லோரும் சும்மாவிருங்கள். குருக்களய்யா! மக்கள் அபராதம் செய்தால் அம்மன் அவர்களுக்குத் தண்டனை கொடுக்கட்டும். ஆனால் ஒரேயடியாக ஊரை விட்டே போய்விட்டால் அது அவளது தெய்வத் தன்மைக்குப் பொருந்துமா? நாங்கள் என்ன செய்தால் அன்னை திரும்பி வருவாள் என்பதைச் சொல்லிவிடுங்கள்.

ரகுபதி: உங்களுடைய அரசன் என்று நாட்டைவிட்டுப் போகிறானோ அன்றுதான் அன்னை திரும்பவும் இங்கு அடியெடுத்து வைப்பாள்.

[எல்லோரும் வாய்பேசாமல் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிறார்கள்.]

நீங்கள் இன்னும் தரிசனம் செய்ய விரும்புகிறீர்களா? அப்படியானால் வாருங்கள். பாவம்! வெகு தொலைவிலிருந்து மிகுந்த ஆவலுடன் அம்மனைத் தரிசிக்க வந்திருப்பீர்கள். இதோ பாருங்கள்!

[கோவிலின் கதவைத் திறக்கிறார். விக்ரஹத்தின் பின்புறம் காணப்படுகிறது.]

எல்லோரும்: தாயே! திரும்பி நில், அம்மா திரும்பி நில்! ஒரு முறை திரும்பி நில். அம்பிகே! நாங்கள் உன்னைத் திரும்பி வருமாறு அழைக்கிறோம். உன்னை நாங்கள் விடமாட்டோம். எங்களுக்கு அரசன் வேண்டாம், அவன் மடிந்து ஒழியட்டும்.

ஜயசிங்கன்: (ரகுபதியின் அருகில் வந்து) சுவாமி! நான் ஒரு வார்த்தை கூறலாமா?

ரகுபதி: முடியாது.

ஜயசிங்கன்: என் சந்தேகத்தைத் தீர்ப்பீர்களா?

ரகுபதி: மாட்டேன்.

ஜயசிங்கன்: எல்லோரையும் நம்பலாமா?

ரகுபதி: ஆம்.

[அபர்ணு வருகிருள்]

அபர்ணு: ஜயசிங்கா, ஏ ஜயசிங்கா! சீக்கிரம் வெளியே வா. இக்கோயிலைவிட்டு வா.

ஜயசிங்கன்: என் இதயம் பிளந்துவிடும் போலிருக்கிறது.

[ரகுபதி, ஜயசிங்கன், அபர்ணு மூவரும் போகின்றனர்.]

[கோவிந்த மாணிக்கியன் பிரவேசிக்கிருன்.]

பிரஜைகள்: எங்களைக் காப்பாற்றுங்கள், மகாராஜா! காப்பாற்றுங்கள். அம்மனைத் திரும்பவும் வரவழையுங்கள்.

கோவிந்த: என்னருமைப் பிரஜைகளே! அமைதியாக இருங்கள். அன்னையை மறுபடியும் பீடத்தில் அமர்த்துவதே என் உயிரினுமினிய விருப்பமாகும்.

பிரஜைகள்: நமது மன்னன் வாழ்க!

கோவிந்த: உங்களை ஒரு வார்த்தை கேட்கிறேன். நீங்களெல்லோரும் தாய் வயிற்றில் பிறக்கவில்லையா? தாய்மார்களே! உங்கள் கனிவு பொருந்திய இதயங்களிலிருந்து தாயின் அன்பு என்கிற அமுதத்தைப் பெருகச் செய்வதில்லையா? தாயின் வாத்ஸல்யம் அனைத்தையும் விட தொன்மையும் தூய்மையும் பொருந்திய அன்பு. சிருஷ்டியின் ஆதிகாலத்தில் தாயின் அன்பு ஒன்றே தனித்து விழித்திருந்தது. தாய் தன் கனிந்த பார்வையுடன் புதிதாகச் சிருஷ்டிக்கப்பெற்ற உலகைத் தன் மடியில் அமரச் செய்தாள். இன்று அதே தாயின் அன்பு கம்பீரமான சிலை வடிவமாகி நம்மெதிரே நிற்கிறது. எத்தனையோ உபத்திரவங்களை, எவ்வளவோ துயரத்தை, மனக்கஷ்டத்தை, அனுதரவை, அவள் சகித்திருப்பாள். தன் கண்ணெதிரிலேயே எவ்வளவு ரத்த வெள்ளத்தை, கொடுமையை, அவநம்பிக்கையை வாய்திறவாமல் சகித்துக்கொண்டு இன்னும் நம்மெதிரில் நிற்கிருள். பலவீனர்களுக்குச் சற்று ஆதரவளித்தும் வேறு கதியின்றி அவளையே முற்றிலும் நம்பிச் சரணடைந்தவர்களுக்குத் தன் அருள் முழுவதையும் அளித்துக்கொண்டும் அமர்ந்திருக்கிருள். இத்தகைய எல்லையற்ற அன்பைத் துறந்து அவள் இவ்வுலகைத் தாயற்றதாகச் செய்துவிட்டுப் போவதற்கு நான் என்ன கொடிய அபராதம் செய்துவிட்டேன்? அன்பர்களே! தாய்மார்களே! மனம்விட்டுக் கூறுங்கள். நான் என்ன பிழை செய்தேன்?

சிலர்: அவளுக்குரிய பலியை நீ நிறுத்திவிட்டாய். அதனால் தேவி பூஜையே நின்று போய்விட்டது.

கோவிந்த: பலியை நிறுத்திவிட்டேன் என்ற கோபத்தினால் தேவி பராமுகமாகி விட்டாளா? நாட்டில் கொள்ளை நோய், பட்டினி, மழையின்மை, தீ விபத்துகள், கொலை முதலியவை ஏற்பட்டனவா? நம்முடைய தாய் அவ்வளவு கொடிய தாயா? ஒவ்வொரு கணமும் தன் மக்களுக்குத் தாய்ப்பால் அளித்துக் காப்பாற்றும் அவள் ரத்தவெறி பிடித்தவளா? அவ்வாறு அவளைக் கருதும் தெய்வக் குற்றத்திற்கு நம் மனதில் இடம் அளித்தால் அது நாம் பிறவிமுதல் பூண்டிருக்கும் அன்னையின் பக்திக்கு இழிவை உண்டாக்காதா? அவளுடைய திரு முகம் உங்களுக்கு நினைவில்லையா? 'ரத்தம் வேண்டும், ரத்தம் வேண்டும்' என்று கர்ஜிக்கிறாள் அன்னை? அப்படியாயின் உலகின் சகல வாயில்லாத ஜீவன்களும் உயிருக்குப் பயந்து நடுங்கவேண்டுமே! கருணையற்ற மாந்தர் ரத்த வெறிபிடித்து ஆடுவார்களே! அவர்களா நமது அன்னையின் பக்தர்கள்? இதுவா நம் அன்னையி னுடைய கருணையின் உண்மையான உருவம்?

பிரஜைகள்: நாங்கள் பாமரமக்கள், மகாராஜா. எங்களுக்கு இதெல்லாம் எப்படித் தெரியும்?

கோவிந்த: உங்களுக்குப் புரிந்துகொள்ள முடியாதா? பிறந்து இரண்டு நாட்களான சிசுவிற்கு—வேறு ஒன்றுமே புரிந்து கொள்ள முடியாத பச்சைக் குழந்தைக்குக்கூட—தாயை மாத்திரம் அறிந்துகொள்ள முடியும். பயம் ஏற்பட்டால் அது தாயை அணைத்துக்கொள்ளும். பசித்தால் தாய்ப் பால் இருக்குமிடம் அதற்குத் தெரியும். வேதனை ஏற்பட்டால் தாய் முகத்தை நோக்கியே அழும். அத்தகைய தாயையே மறந்துபோய் விடும்படி உங்களுக்கு என்ன மதி மயக்கம் ஏற்பட்டுவிட்டது? அன்னை கருணை வடிவமானவள் என்பதை ஏன் நீங்கள் உணரவில்லை? சகல உயிர்களுக்கும் தாயாகிய அவளுக்குகந்த காணிக்கை, பிராணிகளின் ரத்தம் அல்ல— அன்புதான். எங்கு பயம் இருக்கிறதோ அங்கு அன்னை இல்லை. ஜீவஹிம்சை எங்குளதோ அங்கு அன்னை ஒரு கணமும் தரிக்கமாட்டாள். எங்கு ரத்தம் சிந்துகிறதோ அங்கு அன்னையின் கண்ணீர் வெள்ளமெனப் பெருகும். என்னருமைக் குடிமக்களே! அவள் முகத்தில் தேங்கி யிருக்கும் வேதனையையும் தயை கலந்த துயரத்தையும் நம்மைத் திருத்த முயற்சிக்கும் கண்ணீர் மல்கும்

பார்வையையும் எப்படி நான் உங்களுக்குக் காட்டுவேன்? அப்படிக் காண்பிக்க முடிந்தால் அக்கணமே நீங்கள் உங்கள் அன்னையை அறிந்துகொள்வீர்கள். தாயின் பீடத்தின்மீது ஏற்பட்டிருக்கும் கறையைத் தன் கண்ணீரால் கழுவித் துடைக்கத் தயை எளிய உருவந் தாங்கி ஆலயவாயிலில் வந்து காத்திருக்கிறது. என்ன அபராதத்திற்காகத் தாய் நம்மீது கோபித்துச் சென்று விட்டாள் என்பதை நீங்கள் யோசித்துப் பார்த்தீர்களா?

[அபர்ணு வருகிருள்]

பிரஜைகள்: நீங்களே வேண்டுமானுல் பாருங்கள் மகாராஜா! தேவி நம்மீது கோபித்துக்கொண்டு முகத்தை அப்புறம் திருப்பிக் கொண்டிருக்கிருள்.

அபர்ணு: (கோயிலின் கதவைத் திறந்து) அன்னே பராமுகமாகி விட்டாளா? தாயே! நீ எங்கள் பக்கம் திரும்ப மாட்டாயோ!

[விக்ரகத்தைத் திருப்புகிருள்]

இதோ பாருங்கள்! அன்னே மீண்டும் திரும்பிவிட்டாள்.

எல்லோரும்: ஜய ஜய ஜனனீ! ஜயஜய மகாகாளி!

[சேர்ந்து பாடுகிருர்கள்]

அறிகிலம் தெரியோம் அன்னேயே நின்றன்
காவலைத் துறந்தொருகாலும்
அன்னையென மடியில் ஆர்ந்த நின்சேயர்
அவர்தமை மறுப்பதுன் அழகோ !
குணமிலேம் குற்றம் புரிந்தனம் என்றே
கோடிய சினமுகம் கொண்டாய்.
பணிந்திடும் இந்தப் பாவியர் தமக்குன்
பதமலர்த் துணையருள் புரியே !

[போகின்றனர்]

[ஜயசிங்கனும் ரகுபதியும் பிரவேசிக்கிருர்கள்]

ஜயசிங்கன்: சத்தியமாகக் கூறும், சுவாமி. இது நீங்கள் செய்த காரியந்தாஞ?

ரகுபதி: சொல்வதற்கு என்ன தடை? உண்மையைச் சொல்லுவதற்கு எனக்குப் பயமா என்ன? விக்ரகத்தின் முகத்தைப் பின்புறம் பார்த்துத் திருப்பி வைத்தவன் நான்தான். நீ சொல்ல விரும்புவதைச் சொல்லிவிடு. நீ குருவுக்கு மிஞ்சிய சிஷ்யஞகிவிட்டாய். என்னேக் கண்டிக்கத்தானே போகிருய்? என்ன உபதேசம் செய்யப் போகிருய்?

ஜயசிங்கன்: சுவாமி! சொல்வதற்கு ஒன்றுமே யில்லே.

ரகுபதி: ஒன்றுமே யில்லேயா? என்னேக் கேட்க வேண்டிய

கேள்விகள் ஒன்றுமில்லையா? மனத்தில் சந்தேகம் ஏற்பட்டால் அதை நிவர்த்தி செய்துகொள்ளக் குருவின் உதவி உனக்குத் தேவையில்லையா? ஓகோ! அத்தனை தூரம் போய்விட்டாயா? அல்லது மனத்தில் வெறுப்பு ஏற்பட்டுவிட்டதா? மூடா, கேள். உண்மையிலேயே அன்னை மனக் கசப்புடன்தான் இருக்கிறாள். ஆனால் அதன் காரணமாக அவள் முகத்தைத் திருப்பிக் கொள்ளவில்லை. கோயிலில் பலி கொடுக்கப்பட்ட பொழுது சிந்திய ரத்தத்தை அவள் பருகினாள். ஆனால் விக்ரகத்தின் வாயிலிருந்து ரத்தம் வழிந்ததா? தெய்வம் அதிருப்தி யடைந்தால் அதை விக்ரகத்தின் முகத்தில் காண முடியாது, ஆயினும் இந்த மூடர்கள் இதையெல் லாம் எப்படி அறிவார்கள்? கண்ணால் காண முடியாததைக் காணவேண்டு மென்கிறார்கள். ஆகையால் அவர்களுக்குப் பொய்யைக் கூறி நிஜத்தைப் புரியவைக்க வேண்டி யிருந்தது. முட்டாளே! சத்தியம் என்பது உன் கையிலோ என் கையிலோ இல்லை. சத்தியத்தின் சிலையும் சத்திய மல்ல. உருவமும் சத்திய மல்ல. சிந்தனையும் சத்திய மல்ல. சத்தியம் எங்கிருக்கிறதோ அதை ஒருவரும் அறியார். அதை எவரும் அடைந்ததில்லை. அந்த சத்தியம் கோடிக் கணக்கான பொய் யுருவங்களை அடைந்து நான்கு திசை களிலும் சிதறிக் கிடக்கிறது. அந்தக் கோலத்தில் சத்தியம் அடையும் பெயர் மகாமாயை. ஆனால் வாஸ்தவத்தில் அது 'மகாமித்யை' (பெரும்பொய்). சத்தியமாகிற மகாராஜன் அரண்மனையின் அந்தப்புரத்தில் தனிமையில் அமர்ந்திருப்பான். அவனுடைய பிரதிநிதிகளான நூற்றுக் கணக்கான பொய்கள் நான்கு திசைகளிலும் திரிவார்கள். தலைமீது கை வைத்துக்கொண்டு உட்கார்ந்து நன்கு சிந்தனை செய். எனக்கு நிரம்ப வேலை யிருக்கிறது. ஊர் ஜனங்களின் மனம் மறுபடி அரசன் பக்கம் திரும்பி விட்டது.

ஜயசிங்கன்: எந்த அலை என்னைக் கரைக்குக் கொண்டுவந்து சேர்த்ததோ அதுவே திரும்பவும் என்னைக் கரையற்ற கடலின் நடுவிற்கு இழுத்துக் கொண்டு செல்கிறது. உண்மை இல்லை, உண்மை இல்லை, உண்மை இல்லை. எல்லாம் பொய், பொய், பொய். விக்ரகத்தில் தெய்வ மில்லை என்றால் வேறு எங்குதான் இருக்கிறது? எங்குமே அது இல்லை. அன்னையுமில்லை, ஒன்றுமில்லை. பொய்யே! ?யே சாசுவதம். நீயே புண்ணியசாலி!

[போகிறான்]

## இரண்டாம் காட்சி

### அரண்மனையில் ஓர் அறை

*[கோவிந்த மாணிக்கியனும் சந்திரபாலனும்]*

சந்திரபாலன்: *நம்முடைய பிரஜைகளுக்குத் துர்ப்போதனை செய்யப்பட்டு வருகிறது. மொகலாயரின் படைத்தலைவன் அஸ்ஸாம் வழியாகத் தன் சேனையுடன் வந்து கொண்டிருக்கிறான். அருகிலேயே இரண்டு, மூன்று நாள் பிரயாண தூரத்தில் இருக்கிறான். நம்முடைய குடிமக்கள் உங்களைச் சிங்காதனத்திலிருந்து அகற்ற உதவுமாறு அவனுக்குத் தூது அனுப்பப் போவதாக வதந்தி.*

கோவிந்த: *என்னை அரச பதவியிலிருந்து நீக்கப் போகிறார்களா? என்மீது அவர்களுக்கு அவ்வளவு வெறுப்பா?*

சந்திரபாலன்: *மகாராஜா! உங்கள் ஊழியனாகிய என் விண்ணப்பத்தைக் கேளுங்கள். கொடிய மனம் படைத்த நம் பிரஜைகளுக்கு மிருகங்களின் ரத்தம் இவ்வளவு இஷ்டமென்றால் நீங்கள் பலியைத் தடுக்காதீர்கள். அவர்கள் தங்களுடைய அரக்க சுபாவத்தை அந்த மிருகங்களின் மீது தீர்த்துக் கொள்ளட்டும். எப்பொழுது என்ன நடக்குமோ என்று அனவரதம் பயத்துடனேயே இருக்கிறேன்.*

கோவிந்த: *உன் பயம் எனக்குத் தெரியும், சந்திரபாலா! ஆனால் அரசாங்க நிருவாகம் என்பதும் ஒன்று உண்டு. கடல் பயங்கரமானதுதான். ஆனால் படகைக் கரை சேர்க்கவேண்டும். பிரஜைகளின் தூதன் மொகலாயரிடம் சென்றுவிட்டானா?*

சந்திரபாலன்: *இன்றுதான் போனானும்.*

கோவிந்த: *சந்திரபாலா! அப்படியானால் நீயும் இப்பொழுதே புறப்படு. மொகலாயர்களின் முகாமுக்கு அருகிலேயே மறைவாக இருந்து என்ன நடக்கிறதென்பதை ஒற்றர்கள் மூலம் எனக்குத் தெரியப்படுத்து,*

சந்திரபாலன்: *அப்படியே, மகாராஜா! நீங்கள் சர்வ ஜாக்கிரதையுடன் இருங்கள். இங்கு உள்ளும் புறமும் எங்கும் சத்துருக்களே.*

*[போகிறான்]*

*[ராணி குணவதி வருகிறாள்]*

கோவிந்த: *அன்பே! இவ்வாழ்க்கை வற்றி உலர்ந்து போன ஒரு சூனியம். உள்ளும் புறமும் பகைவர்கள். நீ வந்து ஒரு கணம் புன்னகை புரிந்துகொண்டு என் எதிரில் நில்;*

காதலுடன் என் இதழின்பத்தை விரும்பு. அன்பிலாக் காரிருள், விபத்து, பொருமை, அனைத்திற்கும் மேலாக உன் அன்பாகிற அமுதம் நள்ளிரவில் களங்கமற்ற முழுமதியைப் போல் உதய மாகட்டும். ஆருயிரே! ஏன் மறுமொழி கூறவில்லை? பிழைகளை ஆராய்வதற்கு இதுவா தருணம்? தாகங்கொண்ட உள்ளம் இறக்குந் தருவாயில் பாலைவனத்தில் பரிதவிக்கையில் அமுத கலசத்தைக் கையிலேந்தி அங்கிருந்து சென்று விடுவாயோ?

[குணவதி போகிருள்]

சென்று விட்டாளே! அந்தோ! வாழ்வதற்கு அருகதை யற்ற ஜீவனமே!

[நக்ஷத்திரராய் வருகிருன்]

**நக்ஷத்திரராய்:** (தனக்குள்) எங்கு சென்ருலும் எல்லோரும் 'நீ ராஜா ஆகப்போகிருய்' 'ராஜா ஆகப்போகிருய்' என்று கூறுகிருர்களே, இது ஒரு பெரிய ஆச்சரியமான விஷயம். நான் தனியாக உட்கார்ந்து கொண்டிருக்கும் பொழுது கூட 'ராஜா ஆகப்போகிருய்' என்ற வார்த்தைகள் கேட்ட வண்ணமே இருக்கின்றன. இரு காதுகளின் மீதிலும் இரு கிளிகள் உட்கார்ந்துகொண்டு ஒரே பேச்சைப் பேசுகின்றன. 'ராஜா ஆகப்போகிருய்' 'ராஜா ஆகப்போகிருய்' என்று. நல்லதப்பா! அப்படியே ஆகிறேன். ஆனுல் ஏ! நக்ஷத்திரா! ராஜ ரத்தத்தை உனக்கு யார் கொண்டு வந்து தரப்போகிருர்கள்?

**கோவிந்த:** நக்ஷத்திரா! (நக்ஷத்திரராய் பயத்தினுல் நடுங்குகிருன்.) நக்ஷத்திரா! நீ என்னைக் கொல்ல யத்தனிக்கிருயா? சொல். உண்மையைச் சொல். என்னைக் கொலை செய்யப் போகிருயா? இந்த யோசனை உன் மனத்தை இரவு பகலாக வாட்டுகிற தல்லவா? இந்த உத்தேசத்தை மனத்தில் வைத்துக்கொண்டும் நீ என்னுடன் சிரித்துப் பேசிக்கொண்டிருக்கிருய்! அருகில் வந்து வணங்குகிருய். என் ஆசியைப் பெற்றுக் கொள்ளுகிருய். பகலில் என்னுடன் அமர்ந்து ஒரே போஜனத்தை அருந்துகிருய். கடைசியில் என் மார்பில் வாளைச் செலுத்துவாயோ? தம்பி! நீ பிறந்தபின் முதன் முதலாக இக்கொடிய பூமியின் மீது உன் சின்னஞ் சிறுகால்களை ஊன்றி நடக்க ஆரம்பித்த பொழுது இந்த மார்பின்மீதே உன்னை அணைத்துக் கொண்டு தாலாட்டினேன், நம்முடைய தாயார் என்றைய தினம் கடைசி முறையாக உன் சிரத்தைத் தொட்டு வாழ்த்திய பின்னர் இவ்வுலகை விட்டுச் சென்ருளோ

அன்று முதல் உன்னை இதே மார்பகத்தின் மீது அணைத்து வளர்த்து வந்தேன். இன்று நீ அதே மார்பில் உன் உடைவாளைச் செலுத்துவாயோ! நமது முன்னோர்களின் ரத்தக் குழாய்களில் தொன்று தொட்டுப் பாய்ந்து வந்த அதே ராஜ ரத்தம் நம்மிருவர் சரீரங்களிலும் இன்று ஓடுகிறது. அந்த ரத்தக் குழாயைப் பிளந்து அதே ரத்தத்தைப் பூமியில் பெருக விடுவாயோ? இப்பொழுதே அறையின் கதவைத் தாளிட்டு விடுகிறேன். இதோ என் வாள். திறந்த என் மார்பில் அதைச் செலுத்தி உன் இச்சையைப் பூர்த்தி செய்துகொள்.

நக்ஷத்திரராய்: மன்னித்துவிடு. மன்னித்துவிடு. அண்ணா! என்னை மன்னித்துவிடு.

கோவிந்த: வா தம்பி! திரும்பி வா. இந்த மார்புடனேயே உன்னை மறுபடியும் சேர்த்து அணைத்துக்கொள்கிறேன். மன்னிப்புக் கோருகிறாயா? உன் மனத்தில் பச்சாத் தாபம் ஏற்பட்டவுடனேயே உன்னை நான் மன்னித்து விட்டேன். உன்னை மன்னிக்கவில்லையென்றால் எனக்குப் பொறுமையில்லை என்றுதான் அர்த்தம்.

நக்ஷத்திரராய்: எனக்கு ரகுபதிதான் துர்ப்போதனை செய்தான். அவனிடமிருந்தும் என்னை நீதான் காப்பாற்றவேண்டும்.

கோவிந்த: ஒரு பயமுமில்லை, தம்பீ! அஞ்சாதே.

## மூன்றாம் காட்சி

ராணியின் அந்தப்புரம்

குணவதி: நான் நினைத்தபடி ஒன்றுமே நடக்கவில்லை. 'சில நாட்களுக்கு மனத்தைக் கல்லாக வைத்துக் கொண்டால் அவராகவே ஆசை மேலீட்டால் வந்து சரணடைவார்' என்று நம்பியிருந்தேன். அது என் வீண் இறுமாப் பாகவே முடிந்தது. முகத்தைத் திருப்பிக்கொண்டேன். பேச மறுத்தேன். கண்ணீர் ஒரு சொட்டுக் கூட வரவில்லை. வெறும் வறட்டுக் கோபங் காட்டி உதாசீனம் செய்தேன். இப்படி எத்தனையோ நாட்கள் கழிந்து விட்டன. ஆடவர்களிடம் பெண்கள் கொள்ளும் கோபக் கனல் வைரத்தின் ஒளிபோல் பிரகாசத்தைத் தருமே யல்லாது வெப்பத்தையளிக்காது என்று கேள்விப்பட் டிருக்கிறேன். அதனுடைய பிரகாசத்தினால் என்ன பயன்?

பெண்களின் சினம் இடியைப்போல் வலிமையுடையதாக இருக்குமாயின் அது அரண்மனையின்மீது விழுந்து மன்னனின் நித்திரையைக் கலைத்து அவருடைய இறுமாப்பைப் பொடியாக்கி ராணியின் மகிமையைப் பூர்ணமாக ஸ்தாபிக்குமே! 'நான் ராணி' என்ற வீண் பெருமை எனக்கு ஏன் பிறந்தது? 'என் இதயத்தின் அதிதேவதை நீதான்' என்ற மந்திரத்தைத் தினம் என் காதில் ஏன் ஓதினுர் அவர்? 'நீ விலைக்கு வாங்கப்பட்ட தாதி. அரசனுக்கு வெறும் பணிப்பெண். ராணியல்ல' என்று ஏன் அவர் அறிவிக்க வில்லை? அப்படிக் கூறியிருந்தால் இன்று திடீரென்று வந்த இவ்வீழ்ச்சியையும் தோல்வியையும் அனுபவிக்காம லிருந்திருக்கலாமல்லவா?

[துருவன் வருகிருன்]

எங்கே கிளம்பினுய் நீ!

துருவன்: என்னை ராஜா கூப்பிட்டாராம்.

[போகிருன்]

குணவதி: இச்சிறுவன் அரசனின் இதயத்திற்கு மிகவும் உகந்தவன். ஏ சிறுவனே! என் வயிற்றில் பிறக்கும் குழந்தை அமரவேண்டிய பதவியை நீ அபகரிக்கப் போகிருய்! எனக்குக் குழந்தைகள் பிறக்கவில்லை என்ற காரணத்திஞல் நீ அவர்களுக்குச் சேரவேண்டிய அன்பின் பங்கை அரசனிடமிருந்து பெறுகிருய். அரசனின் இதயமாகிய அமுத கலசத்தில் உனக்குத்தான் முதல் உரிமை கிடைக்கிறது. ராஜத்துரோகி! உண்மையான இளவரசன் ஒருவன் பிறந்தால் அவனுக்குக் கிடைக்கப் போவது நீ உண்டு உமிழ்ந்த எச்சிலோ? காளியம்மா! இது நீ இழைத்த அநீதிதாஞ? உன் சிருஷ்டி எவ்வளவு பிரம்மாண்டமானது! என்னே உன் லீலை! உன் ஒரு சிறு விளையாட்டாக எனக்கு மக்கட்பேறு அளிக்கலாகாதா தாயே! ஒரு சின்னஞ் சிறு குழந்தை! அதஞல் என் மடியும் உள்ளமும் நிரம்பிவிடும். உனக்கு என்ன திருவுள்ளமோ அதை நான் தவருது அளிப்பேன்.

[நக்ஷத்திரராய் வருகிருன்]

நக்ஷத்திரா, எங்கே போகிருய்? ஏன் சட்டென்று திரும்புகிருய்? யாரிடம் உனக்கு இவ்வளவு பயம்? நான் ஒரு பெண்! என் கையில் ஆயுதம் ஒன்றும் இல்லை. நான் பலமற்றவள் துணையற்றவள். நான் என்ன அவ்வளவு பயங்கரமானவளா!

நக்ஷத்திரராய்: உம். இல்லை யில்லை. ஒன்று மில்லை. என்னைக் கூப்பிடாதே.

குணவதி: ஏன்? என்ன நடந்தது?

நக்ஷத்திரராய்: நான் ராஜா ஆகமாட்டேன்.

குணவதி: ஆகவேண்டாம். அதற்காக இவ்வளவு குழப்பம் ஏன்?

நக்ஷத்திரராய்: அரசன் நெடுங்காலம் வாழட்டும். நான் இளவரசனுகவே இறந்து போகிறேன்.

குணவதி: அப்படியே இறந்துவிடு. உன் மனேரதம் நிறைவேறட்டும். நான் உன் காலில் விழுந்து 'உயிர் பிழைத்திரு' என்று வேண்டிக்கொண்டேனு?

நக்ஷத்திரராய்: அப்படியானுல் நீ என்ன கூறப்போகிருய், சொல்.

குணவதி: உன்னுடைய அரச பதவியை அபகரிக்கப்போகும் கள்ளனை ஒழித்துவிடு. நான் சொல்வது புரிகிறதா?

நக்ஷத்திரராய்: எல்லாம் புரிகிறது. ஆனுல் அந்தக் கள்ளன் யாரென்பது மாத்திரம்தான் புரியவில்லை.

குணவதி: அவன்தான் இந்தச் சிறுவன் துருவன். தற்பொழுது அரசன் மடிமீது வளர்கிருன். கொஞ்சங் கொஞ்சமாக அவனுடைய முடியைக் கைப்பற்றி விடுவான்.

நக்ஷத்திரராய்: அப்படியா? ஒரு கணத்தில் இப்பொழுது பளிச்சென்று எல்லாம் புரிந்துவிட்டது. துருவனின் தலையில் ஒரு நாள் அரசன் முடியை வைப்பதைக் கண்டேன். வெறும் விளையாட்டு என்று எண்ணிச் சும்மா இருந்துவிட்டேன்.

குணவதி: ராஜமுடியை வைத்துக்கொண்டா விளையாட்டு? வெகு ஆபத்தான விளையாட்டு அது! அந்த விளையாட்டை நீ நிறுத்தாவிடில் நீ அதில் ஒரு பொம்மையாகி விடுவாய்.

நக்ஷத்திரராய்: அப்படியா! அப்படியானுல் இது நல்ல விளையாட்டல்ல.

குணவதி: இன்று நள்ளிரவில் ரகசியமாகத் துருவனைக் கொண்டு போய் காளிக்குப் பலியிட்டுவிடு. அவனுடைய ரத்தத்திஞல் அன்னையின் கோபக் கனல் அணைக்கப்பட்டு விடும். இந்த ராஜவம்சத்தின் சிங்காதனம் ஸ்திரப்படும். உன் முன்னேர்கள் உன்னை வாழ்த்துவர். புரிகிறதா?

நக்ஷத்திரராய்: புரிகிறது.

குணவதி: அப்படியானுல் நீ போகலாம். நான் சொன்னதைச் செய்துவிடு. என் பெயரில் பலியிடவேண்டு மென்பதை மறக்காதே.

நக்ஷத்திரராய்: அப்படியே செய்து விடுகிறேன். அரசனுடைய கிரீடத்தை வைத்துக்கொண்டு விளையாட்டாம்! இதென்ன அக்கிரமம்! போகட்டும். இப்பொழுது செய்யவேண்டிய காரியம் தெளிவாயிற்று. அன்னை திருப்தி யடைவாள். சிங்காதனம் காப்பாற்றப்படும்; முன்னோர்கள் சாந்தியடைவர். சரி, இனிமேல் புரிந்து கொள்ள வேண்டியது ஒன்றுமே பாக்கியில்லை.

## நான்காம் காட்சி

கோயிலின் படிக்கட்டு

ஜயசிங்கன்: அன்னையே! நீ இன்னும் இக்கோயிலில் இருக்கிறாயா? நீ இருப்பது உண்மைதானா? முடிவற்ற இவ்விரவின் எல்லைக் கோடியில் நீ ஓர் அணுவளவு இருந்தாலும் அங்கிருந்து மெலிந்த குரலிலாவது 'குழந்தாய், நான் இருக்கிறேன்' என்று கூறமாட்டாயா? இல்லை. இல்லை. இல்லை. அன்னை இங்கு இல்லை. ஏன் இல்லை? என்மீது இரங்கி இங்கேயே இரு. ஏ மாயப் பொய்யுருவமே! தயை புரி. ஜயசிங்கன்மீது தயை புரிந்து நிஜ உருவத்தை எடுத்துக்கொள். உன்னிடம் நான் பூண்டிருக்கும் பக்தி என் குழந்தைப் பருவத்திலிருந்து ஜனித்தது. பிறவிமுதல் நான் கொண்டிருக்கும் பரம பக்திகூட உன்னை உயிருள்ள தெய்வமாகச் செய்து நிறுத்த முடியாதா? உன் உருவம் அவ்வளவு பொய்யானதா? ஜயசிங்கா! யாருக்காக உன் வாழ்வை அர்ப்பணம் செய்திருக்கிறாய்? சத்தியமற்ற, தயையற்ற, தாய்மையற்ற ஒரு சர்வ சூனியமான உருவத்தினிடமா அனைத்தையும் நீ தியாகம் செய்தாய்?

[அபர்ணா வருகிறாள்]

அபர்ணா! நீ திரும்பி வந்துவிட்டாயா? உன்னைக் கோயிலுக்கு வெளியே துரத்தினோம். ஆயினும் நீ தரித்திரனின் மனத்தில் சுகத்திற்காக ஏற்படும் துராசையைப்போல் எப்பொழுதும் இங்கேயே நான்கு புறங்களிலும் சுற்றித் திரிந்துகொண் டிருக்கிறாய். சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் உள்ள வித்தியாசம் இதுதான்: பொய்யைப் பிடித்து வெகு சிரமப்பட்டுக் கோயிலுக்குள் அடைத்துவைத்தால் அது அங்கு இருப்பதில்லை.

சத்தியத்தை அனுதரவு செய்து கோயிலுக்கு வெளியே துரத்தினால் அது திரும்பத் திரும்ப வருகிறது. அபர்ணா! நீ இனிப் போகாதே. உன்னை நான் இனிமேல் திருப்பி யனுப்பமாட்டேன். வா. நாமிருவரும் இங்கேயே இருப்போம். நள்ளிரவாகி விட்டது. கிருஷ்ண பக்ஷத்துச் சந்திரன் அதோ அந்த மரங்களுக்கிடையே எழுகிறான். சராசரங்களனைத்தும் உறக்கத்தில் ஆழ்ந்து விட்டன. நாமிருவருமே துயிலின்றி விழித்திருக்கிறோம். அபர்ணா! உனக்கு ஏன் இவ்வளவு சோகம்? மாயத் தெய்வமாகிய அன்னை உன்னையும் ஏமாற்றிவிட்டாளோ? இப்பொழுது நமக்குத் தெய்வம் எதற்கு? இன்பம் நிறைந்த நமது சிறு உலகத்திற்கு அவளை ஏன் அழைக்க வேண்டும்? அவளுக்கு நம் கஷ்ட சுகங்கள் தெரியுமா என்ன? கல்லைப்போல் பேசாமல் பார்த்த வண்ணம் இருப் பாள். நாம் கூடப்பிறந்தவர்களை வஞ்சித்து அவர்களிடம் காட்ட வேண்டிய அன்பை அவளிடம் செலுத்தினால் அதனால் அவளுக்கு ஏதாவது பிரயோஜனம் உண்டா? அழகும் இன்பமும் நிறைந்த இவ்வுலகினின்றும் நம் பார் வையைத் திருப்பி அவள்பால் செலுத்தினால் அதை அவள் லட்சியம் செய்வதில்லை. அவளுக்கு ஒருவன் இழிந்தவ னாயிருக்கலாம். ஆயினும் நமக்குச் சகோதர பாசம் விலக்கலாமா? அவள் ஒருவனைத்தன் தேர்ச்சக்கரத்தின் கீழிட்டு நசுக்கலாம். ஆனால் அவன் நம்மைச் சேர்ந் தவன் என்பதை நாம் மறக்க முடியுமா?

வா, பெண்ணே! இனிமேல் சற்றும் பயமின்றித் தெய்வத்தை மறந்துவிட்டு நாம் ஒருவரோடொருவர் நெருங்கி உறவாடுவோம். அன்னையே! உனக்கு ரத்தமா வேண்டும்? சுவர்க்க லோகத்தின் சகல போகங்களையும் தியாகம் செய்துவிட்டுக் கேவலம் ரத்தத்திற்காகப் புன்மை நிறைந்த இப்பூவுலகிற்கு வந்தாய் போலும்! வானுலகத்தில் மனிதர்கள் இல்லை. ஜீவஜந்துக்கள் இல்லை. ரத்தம் இல்லை. பலியிடத் தகுந்த மிருகங்கள் இல்லை. ஆகவே அவ்வுலகத்தின்மீது உனக்கு வெறுப்பு ஏற்பட்டு இங்கு நிர்ப்பயமாக, நிம்மதியாக வாழும் மனி தர்களிடையே வேட்டை யாடுவதற்கு வந்திருக்கிறாயோ? ஏ பெண்ணே, அபர்ணா! தேவியுமில்லை, ஒன்றுமில்லை.

அபர்ணா: ஜயசிங்கா! அப்படியானால் நீ இக்கோயிலை விட்டு விட்டு என்னுடன் வந்துவிடு.

ஜயசிங்கன்: வருகிறேன். விட்டுவிட்டு வந்துவிடுகிறேன். அதுதான்மேல். ஆயினும் நான் பிறந்ததுமுதல் இந்த

தேசத்தில் வாழ்ந்து வருவதால் நாட்டிற்குச் சேர வேண்டிய சில கடன்களை நான் முதலில் தீர்க்கவேண்டும். அதெல்லாம் இருக்கட்டும். அதோ பார்! கோமதி யாற்றின் குறுகிய நீரோடை வெண்மதியின் முழுநிலவில் உருக்கிவிட்ட தங்கத்தைப்போல் காணப்படுகிறது. 'சலசல' வென்ற அதனுடைய ஓசை நாம் பேசும் ஒவ்வொரு மொழிக்கும் நூறுமடங்கு இன்பத்தை யளிக்கிறது. வானத்தில் பிறைச்சந்திரன் தேய் பிறையினுல் க்ஷீணித்துப்போன வெளுத்த முகத்துடன், அநேக இரவுகள் நித்திரையின்றிக் கண்விழித்ததன் காரணமாக உறக்கம் மேலிட்டுப் பாதி மூடிய கண்களை யுடையவன் போல் உதயமாகிறுன். எவ்வளவு வனப்பு வாய்ந்த உலகம்! ஹா, அபர்ணு! இத்தகைய அற்புத இரவில் தேவி எதற்கு? தெய்வத்திற்குத் தேவையே இல்லை. அபர்ணு! இன்பச் சுவை தோய்ந்த, அமுதமயமான மொழிகளைப் பேச உனக்குத் தெரியுமா? அப்படியாயின் இன்றிரவு அவற்றை மாத்திரம் பேசு. கேட்டவுடன் வாழ்க்கையின் துயரங்கள் ஒரு நொடியில் பாதாளத்திற்குச் சென்று மறைந்துவிட வேண்டும். அபர்ணு! உன் மதுரமான குரலில் இவ்வாறு ஏதாவது பேசு. உன் அழகிய கண்களால் என் முகத்தைப் பருகு. நிர்மானுஷ்யமான இந்த மௌன இரவில், சராசரங்களனைத்தும் நித்திரையில் ஆழ்ந்திருக்கும் இவ்வேளையில், கேட்டவுடன் திசைகளனைத்தும் மறைந்துபோய் பௌர்ணமியின் நள்ளிரவில் சுகந்தி புஷ்பத்தின் வாசனையைப்போல் காதல் ஒன்றே மிதந்து வருமாறு மொழிவாய்.

அபர்ணு: ஹா! ஜயசிங்கா! என் உள்ளம் நிறைந்திருக்கிறது. ஆனுல் பேசுவதற்கு நா எழவில்லை.

ஜயசிங்கன்: அப்படியானுல் இன்னும் அருகில் வா. நம்மிரு உள்ளங்களும் ஒன்ருெடொன்று உரையாடட்டும்.

ஹா! இதென்ன நான் செய்வது? அபர்ணு! அபர்ணு! நீ இக்கோயிலைவிட்டுச் சென்று விடு! அது என் குருநாதரின் கட்டளை.

அபர்ணு: ஜயசிங்கா! திடீரென்று கொடியவனுக மாறி விடாதே. திரும்பத் திரும்ப என்னை வெளியில் அனுப்பாதே. நான் இதுவரை அனுபவித்துள்ள துயரம் என்னுள் அந்தர்யாமியாக இருக்கும் தெய்வத்திற்குத் தான் தெரியும்.

ஜயசிங்கன்: அப்படியானுல் நான் போகிறேன். இங்கு ஒரு கணமும் தாமதிக்கமாட்டேன்.

*[சற்றுத் தூரம் சென்று திரும்புகிருன்]*

*அபர்ணு! நான் கொடியவனு? ஜயசிங்கன் கொடியவன், கல் மனதுடையவன் என்பதுதான் உன் மனத்தில் கடைசியாக எஞ்சி நிற்கும் அபிப்பிராயமா? நான் சிரித்த முகத்துடன் உன்னுடன் என்றும் பேசியதில்லையா? ஒரு முறையேனும் அருகில் வருமாறு உன்னை அழைத்த தில்லையா? உன் கண்களில் நீர் பெருகுவதைக் கண்டு நான் கண்ணீர் வடித்ததில்லையா? அபர்ணு! இதெல்லாம் உன் மனத்தில் நிலை நிற்காமல் ஜயசிங்கனின் மனது ஒரு கொடிய கற்பாறை என்பது மாத்திரம் எஞ்சியிருக் கிறதோ? அதோ இருக்கும் ஒரு கற்சிலையை 'அன்னை' என்று சொல்லுகிருேமே! அத்தகைய கல் நானும் என்று நினைத்துவிட்டாயா? ஹா! தேவி! நீ உண்மையாகத் தேவியாக இருந்து, என்னுள் தகிக்கும் இக்கனலை அறிந்துகொண்டிருந்தால்......*

அபர்ணு: புத்தியற்றவளும், வருத்தமுற்றிருப்பவளுமாகிய இந்தப் பேதையை மன்னித்துவிடு. இந்த நிமிஷமே எழுந்துவா, ஜயசிங்கா! இக்கோயிலைத் துறந்து என் னுடன் புறப்படு.

ஜயசிங்கன்: பொறு அபர்ணு. என்மீது கருணை காட்டு. தயவு செய்து என்னைவிட்டுப் போய்விடு. என் வாழ்வில் இன்னும் ஒரே காரியம்தான் எஞ்சி யிருக்கிறது. அதுவே இனி என் வாழ்க்கையின் லட்சியம். அதனுடைய இடத்தை நீ அபகரித்து விடாதே.

*[விரைந்து போகிருன்]*

அபர்ணு: நூறுமுறை சகித்திருக்கிறேன். இன்று மாத்திரம் ஏன் சகிக்கச் சக்தியில்லை? இன்று ஏன் என் உள்ளம் தத்தளிக்கிறது?

*[போகிருள்]*

## ஐந்தாம் காட்சி

### கோயில்

[நக்ஷத்திரராயும், ரகுபதியும், ஆழ்ந்த நித்திரையிலிருக்கும் துருவனும்.]

ரகுபதி: அழுது அழுது உறங்கிவிட்டான் சிறுவன். ஜயசிங்கனும் இதே வயதில்தான் ஒரு நாள் தாய் தகப்பனின்றி என்னை வந்தடைந்தான். நான்கு புறமும் மலரவிழித்துப் புதிய இடமாயிருந்ததால் இவ்விதமே அழுதான். விம்மி விம்மி அழுததனால் களைத்து உறங்கி அதோ அன்னையின் பாதங்களினருகில் அவன் சயனித்தபொழுது மாலை வேளையாயிற்று. இன்று துருவனைப் பார்த்தவுடன் அன்று நான் கண்ட ஜயசிங்கனின் குழந்தை முகமும் அழுகையும் நினைவிற்கு வருகின்றன.

நக்ஷத்திரராய்: குருவே! இனித் தாமதம் செய்யாதீர்கள். அரசனுக்கு இச்செய்தி எட்டிவிடப் போகிறதே என்று எனக்கு ஒரே நடுக்கமாக இருக்கிறது.

ரகுபதி: செய்தி எப்படி அரசனுக்கு எட்ட முடியும்? நகரம் முழுதும்தான் நள்ளிரவின் நித்திரையின் வசப்பட்டிருக்கிறதே!

நக்ஷத்திரராய்: ஐயோ! ஏதோ ஒரு நிழல் தெரிந்தது போல் இருந்தது!

ரகுபதி: அது உன் பயத்தின் நிழல்தான்.

நக்ஷத்திரராய்: யாரோ அழுததுபோல் கூடக் காதில் விழுந்தது.

ரகுபதி: அது உன் இதயத்தின் அழுகுரல். இந்தப் புனித தீர்த்தத்தைப் பருகு.

[மதுபானம் செய்கிறார்.]

கடமை மனத்திலிருக்கும் வரையில் மிகவும் பெரிதாகக் காணப்படும். நிறைவேற்றப்படும் பொழுது கனத்த மூடுபனி உருகிச் சில துளி நீராக மாறுவதுபோல் சிறியதாகிவிடும். ஒன்றுமில்லை. ஒரு நிமிஷ வேலை. அந்த விளக்கின் சுடரை ஊதி யணைக்க எவ்வளவு நேரம் பிடிக்குமோ அதே நேரம்தான் ஆகும். இச்சிறிய ஜீவன் சாதாரண நித்திரையிலிருந்து நழுவித் தீர்க்க நித்திரையில் ஆழ்ந்து கலந்துவிடும் - ஆடி மாதத்து நள்ளிரவின் மின்னல் வானத்திடை மறைவதுபோல். அதனுடன் கூடிய இடிமட்டும் அரசனுடைய கர்வத்தை மீண்டும் தலையெடுக்க வொட்டாதபடி அழித்துவிடும்.

எழுந்திரு, இளவரசனே, எழுந்திரு. வருந்திய முகத்துடன் ஏன் ஒரு புறமாக உட்கார்ந்திருக்கிறாய்? பேச்சில்லை. முகத்தில் புன்னகையில்லை. அணைபட்ட விளக்கைப் போல் ஒளியிழந்து காணப்படுகிறாய். வா! மகிழ்ச்சியை உண்டாக்கும் இந்த மதுவைக் கொஞ்சம் அருந்து.

நக்ஷத்திரராய்: இன்று வேளை கடந்துவிட்டது. இன்று வேண்டாம். நாளையிரவு துருவனைப் பலியிடுவோம்.

ரகுபதி: நாழியாகி விட்டதா? இரவு முடிய இன்னும் வெகு நேர மிருக்கிறதே!

நக்ஷத்திரராய்: அதோ! காலடிச் சத்தம் கேட்கிறது.

ரகுபதி: எங்கே? எனக்கு ஒன்றும் கேட்கவில்லையே!

நக்ஷத்திரராய்: அதோ கேள்! அதோ பார் வெளிச்சம்!

ரகுபதி: அரசனுக்கு விஷயம்தெரிந்துவிட்டது. இன்னும் ஒரு கணமும் தாமதிக்கக்கூடாது. ஜய மகாகாளி!

[கத்தியை உயர்த்துகிறார். அரசன் கோவிந்த மாணிக்கியனும் சிப்பாய்களும் திடீரென்று பிரவேசிக்கின்றனர். அரசனின் உத்தரவுப்படி காவலாளிகள் ரகுபதியையும், நக்ஷத்திரராயையும் கைது செய்கின்றனர்.]

கோவிந்த: இவர்களைச் சிறையிலிடுங்கள். நாளை விசாரணை செய்வோம்.

# நான்காம் அங்கம்

## முதற் காட்சி

### விசாரணை சபை

*[கோவிந்த மாணிக்கியன், ரகுபதி, நக்ஷத்திர ராய், சபையோர், காவலாளிகள்]*

கோவிந்த: *நீ ஏதாவது கூற விரும்புகிருயா?*

ரகுபதி: *ஒன்றுமில்லே.*

கோவிந்த: *அப்படியென்ருல் குற்றத்தை ஒப்புக்கொள்கிருயா?*

ரகுபதி: *குற்றமா? ஆம், நான் புரிந்தது குற்றந்தான். கடைசியில் அன்னேக்குப் பலி கொடுக்கத் தவறினேன். ஏதோ மயக்கத்தில் மூடனேப்போல் அகாரணமாகத் தாமதம் செய்துவிட்டேன். அதற்காக அன்னே எனக்குத் தண்டனே யளிக்கப் போகிருள். அதற்கு நீ ஒரு கருவி.*

கோவிந்த: *எல்லோரும் கேளுங்கள். இதுவே என் தீர்ப்பு. புனிதமான தேவியின் பூஜையின்பொழுது மோகவசப்பட்டு ஜீவ பலி கொடுப்பவர்களேயும், என்னுடைய ஆக்ஞையைத் துச்சமாக நினேத்து அதற்கு உதவி புரிபவர்களேயும் தேசப் பிரஷ்டம் செய்வதே நான் விதித்துள்ள தண்டனே. ரகுபதி! நீ எட்டு வருடகாலம் இந்த நாட்டிற்குள் வரக் கூடாது. என்னுடைய காவலாளிகள் நால்வர் உன்னேத் தேசத்துக்கு வெளியே கொண்டுபோய் விட்டுவிடுவர்.*

ரகுபதி: *இவ்வுலகில் அன்னேயைத் தவிர வேறு ஒருவர் முன்பும் நான் சிரம் வணங்கமாட்டேன். நான் வேதியன். நீ சூத்திரன். ஆயினும் கை குவித்து மண்டியிட்டு உன்னே ஒன்று வேண்டிக்கொள்கிறேன். சிராவண மாதம் முடிய இன்னும் இரண்டு தினங்கள் இருக்கின்றன. இவ்விரண்டு நாட்களுக்கு மாத்திரம் தவணே கொடு. அதற்குப்பின் சரத்ருதுவின் முதல்தினத்தின் அதிகாலேயில் உன்னுடைய தரித்திரம் பிடித்த - சாபக்கேடு நிறைந்த - திரிபுர ராஜ்யத்தைவிட்டுச் சென்று விடுகிறேன். பிறகு இத்திசையைக் கண்ணுலும் பார்ப்பதில்லே;*

கோவிந்த: நீ விரும்பியபடி இரண்டு நாள் தவணை கொடுத்திருக்கிறேன்.

ரகுபதி: (பரிகாசமாக) மகாராஜனே! ராஜாதி ராஜனே! மகிமைக் கடலாகிய நீ கருணையே உருவானவன். நான் வெறும் புழுதிக்குச் சமானம். எளியவன். நீசன். வருகிறேன்.

[போகிறான்]

கோவிந்த: நக்ஷத்திரா! உன் குற்றத்தை ஒப்புக்கொண்டுவிடு.

நக்ஷத்திரராய்: மகாராஜா! நான் குற்றவாளியே. உங்களை மன்னிப்புக் கேட்கக்கூடத் தைரியம் எழவில்லை.

[காலில் விழுகிறான்.]

கோவிந்த: நீ யாருடைய துர்ப்போதனையினால் இக்காரியம் செய்யத் துணிந்தாய்? உண்மையைச் சொல்; நீ இயற்கையில் கனிந்த உள்ளம் படைத்தவன். இத்தகைய கொடிய புத்தி உனக்கு என்றுமே கிடையாதே!

நக்ஷத்திரராய்: வேறு யார்மீது குறைசொல்வது, மகாராஜா! இப்பொழும் நாவினால் வேறு யாருடைய பெயரையும் கூற நான் விரும்பவில்லை. நான் ஒருவனே இதற்கு முழுப் பொறுப்பாளி. என்னுடைய துர்ப்புத்தியினால் நான் கெட்டழிந்தேன். மதியிழந்த சகோதரனாகிய என்னை இதுவரை நூறு முறையேனும் மன்னித்திருப்பீர்கள். கடைசி முறையாக இப்பொழுது மன்னித்துவிடுங்கள்.

கோவிந்த: நக்ஷத்திரா! என் பாதங்களை விட்டுவிட்டு எழுந்து நில். நான் கூறுவதைக் கேள். எல்லோரையும் மன்னிப்பதுதான் என்னுடைய கடமையா? நியாயம் வழங்குபவன் தன்னுடைய சட்டத்தினால் தானே கட்டுப்பட்டவன். சாதாரணக் கைதியைவிடப் பெரிய கைதி அவன். ஒரே குற்றத்திற்காக ஒருவன் தண்டனையையும் மற்றொருவன் விடுதலையையும் அடைவதென்றால் - அவ்வாறு நியாயம் வழங்குவதற்குப் பிரமனுக்குக்கூட அதிகாரம் கிடையாது; நான் எம்மாத்திரம்?

சபையோர்: மன்னித்துவிடுங்கள், பிரபோ! மன்னித்துவிடுங்கள். நக்ஷத்திரர் உங்களுடைய தம்பியாயிற்றே!

கோவிந்த: எல்லோரும் அமைதியாக இருங்கள். நான் இச் சிங்காதனத்தில் அமர்ந்திருக்கும்வரை எனக்குச் சகோதரனோ உறவினனோ யாருமில்லை. குற்றம் நிரூபிக்கப் பட்டுவிட்டது; ஆகவே நக்ஷத்திரராய் திரிபுர ராஜ்யத்தை விட்டு வெளியேறிப் பிரம்மபுத்திரா நதியின் ஸ்நான கட்டத்திற்கருகில் நாம் கட்டியிருக்கும் அரண்மனையில் எட்டு வருட காலம் சிறையிருக்க வேண்டுமென்பது என் கட்டளை.

[காவலாளிகள் நக்ஷத்திரராயை அழைத்துக்கொண்டு புறப்படும் சமயம் அரசன் சிங்காதனத்தினின்றும் இறங்குகிறுன்.]

தம்பீ! செல்லுமுன் கடைசி முறையாக என்னைத் தழுவிச் செல். இத்தண்டனை உனக்கு மாத்திரம் அல்ல. எனக்கும் இது தண்டனையே. இன்றுமுதல் இவ்வரண்மனை எனக்கு முள் நிறைந்த காட்டிற்குச் சமானம். என் ஆசிகள் உன்னுடன் என்றும் இருக்கட்டும். நீ வெகு தொலைவிலிருக்கும் பொழுது உன்னைத் தேவர்கள் காப்பாற்றுவர்.

[நக்ஷத்திரராய் போகிறுன்.]

(சபையோரை நோக்கி) எல்லோரும் சபையை விட்டுச் செல்லலாம். நான் தனிமையாக இருக்க விரும்புகிறேன்.

[எல்லோரும் செல்கின்றனர்]

[நயனராய் வேகமாக ஓடி வருகிறுன்.]

நயனராய்: மகாராஜா! பேராபத்து வந்துவிட்டது.

கோவிந்த: அரசனென்ருல் அவன் மனிதனல்லவா? அந்தோ விதியே! சாதாரண மக்களைப் போலல்லாது அவனது இதயம் என்ன கற்கோட்டையா? எல்லோரையும் போல் அவனுக்குத் துக்கம் ஏற்படாதா? அவனுக்குக் கண்ணீர் வடிக்கச் சிறிது நேரம் கிடைக்கக்கூடாதா? சீக்கிரம் சொல்.

நயனராய்: சந்திரபாலன் மொகலாயர்களுடைய சைனியத்துடன் திரிபுர ராஜ்யத்தை நாசம் செய்ய வந்துகொண்டிருக்கிறுன்.

கோவிந்த: இது உனக்குத் தகாது, நயனராய்! சந்திரபாலன் உனக்குச் சத்துருவாக இருக்கலாம். அதற்காக அவன் மீது அபாண்டமாக நீ வீண்பழி சுமத்துவது சரியல்ல.

நயனராய்: இவ்வேழை ஊழியனின் மீது நீங்கள் எத்தனையோ தண்டனைகள் விதித்திருக்கிறீர்கள். ஆயினும் இன்று நீங்கள் என்மேல் கொண்டுள்ள அவநம்பிக்கை அனைத்தையும்விடக் கொடிய தண்டனையாகும். என் ஊழியத்தில் பல குறைபாடுகள் இருக்கலாம். ஆயினும் நீங்கள் நினைக்கிற படி அத பாதாளத்திற்கு நான் இன்னும் இறங்கவில்லை.

கோவிந்த: இன்னெரு முறை விஷயத்தைத் தெளிவாகச் சொல். பிறகு ஆலோசிக்கிறேன்.

நயனரரய்: மொகலாயர்களுடன் சேர்ந்துகொண்டு உங்களுடைய ராஜ்யத்தைக் கைப்பற்ற விரும்புகிறுன் சந்திரபாலன்.

கோவிந்த: இச்செய்தி உனக்கு எங்கிருந்து கிடைத்தது?

நயனராய்: மகாராஜா என்றைய தினம் என் வாளைப் பறித்தீர்

களோ அன்று முதல் நான் வெட்கம் மேலிட்டுத் தேசாந்தரம் சென்றேன். அங்கு அஸ்ஸாம் நாட்டிற்கும் மொகலாயர்களுக்கும் போர் மூண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அஸ்ஸாம் நாட்டு அரசனிடம் சென்று ஒரு போர் வீரன் உத்தியோகம் கேட்கலாம் என்று புறப்பட்டேன். வழியிலேயே மொகலாயர்களின் படை திரிபுர ராஜ்யத்தை நோக்கி வருவதைக் கண்டேன். அதனுடன் சந்திரபாலனும் வந்துகொண்டிருந்தான். விசாரித்துப் பார்த்ததில் அவனுடைய சதியாலோசனை தெரிய வந்தது. உடனே இங்கு ஓடோடியும் வந்தேன்.

கோவிந்த: இறைவனே! திடீரென்று இவ்வுலகத்திற்கு என்ன நேர்ந்து விட்டது? மூன்று நான்கு தினங்களுக்குள் பாதாளலோகத்திலிருந்த சர்ப்பங்களனைத்தும் பூமியின் ஏதோ ஒரு சுரங்கத்தின் வழியாக வெளியே வந்து உலகெங்கும் தங்கள் படங்களை விரித்தாடுவது போல் ஆகிவிட்டதே! பிரளயமே வந்துவிட்டதோ! ஆச்சரியப்பட இது நேரமில்லை. சேனைத்தலைவனே! படையைத் திரட்டு.

நான்காம் காட்சி

கோயிலின் முன் பிராகாரம்

[ஜயசிங்கனும் ரகுபதியும்]

ரகுபதி: என் கர்வம் ஒழிந்தது. விரியம் ஒடுங்கியது. பிராமணத்துவம் மறைந்தது. குழந்தாய்! நான் இனி உனக்குக் குரு அல்லேன். நேற்றுவரை நான் குருவென்கிற கௌரவத்துடன் தயக்கமின்றிக் கட்டளையிட்டு வந்தேன். இன்று எனக்கு வணக்கத்துடன் பிச்சை கேட்பதற்குத்தான் அதிகாரம் இருக்கிறது. எனக்குள் எரிந்துகொண்டிருந்த ஜோதியின் பலத்தால் உலகத்தின் செல்வங்களையும் அரசனின் பிரதாபத்தையும் அலட்சியம் செய்து வந்தேன். வானத்திலிருந்து நட்சத்திரம் பூமியின் மீது விழுந்துவிட்டால் அது மீண்டும் பிரகாசிக்காது. அதைவிட அகல் விளக்கே மேல். விழுந்த நட்சத்திரத்தை மின்மினிப் பூச்சிகள் சிரித்துக்கொண்டே தேடினும் அது அகப்படாது. விளக்கைத் தினம் அணைக்கலாம். மறுபடியும் ஏற்றலாம். நட்சத்திரம் ஒருமுறை அணைந்துபோனால்

பிறகு முடிவில்லா இருள்தான் உண்டாகும். என்னுள்ளிருந்த விளக்கும் அவ்வாறே அணைக்கப்பட்டு விட்டது. தெய்வத்தை வேண்டினால் அது வெகு சுலபமாக நீண்ட ஆயுளை அருளும். இரண்டு நாள் தவணைக்காக நான் அரசனின் முன்பு மண்டியிட்டு இரந்து கேட்கவேண்டியதாயிற்று. ஜயசிங்கா! இவ்விரண்டு நாட்களையும் நாம் வீணாக்கக்கூடாது. இவ்விரு தினங்களில் நம்மீது ஏற்பட்டிருக்கும் பெரிய களங்கத்தைப் போக்கடிக்க வேண்டும். அதன் கறுத்த முகத்தில் அரசனின் ரத்தத்தைப் பூசி அதைச் செந்நிறமாக மாற்றவேண்டும். ஏன் பேசாமலிருக்கிறாய்? இது குருவின் கட்டளையல்ல. ஆயினும் நான் உன்னைச் சிறுவயது முதல் வளர்த்து வருவதால் இதைக்கூட வேண்டிக்கொள்ள எனக்கு உரிமை கிடையாதா! தந்தையில்லாத உனக்கு நான் தந்தையைவிட மேலானவனல்லவா? உன் கடமையை உனக்கு இவ்வளவு வற்புறுத்தி ஞாபகப்படுத்த வேண்டியிருப்பதற்கு வருந்துகிறேன். கருணைக்காக ஒருவன் மன்றாடுவது சகஜம். அன்பிற்கு ஏங்கி இரப்பவன் பிச்சைக்காரர்களுக்குள் மிகவும் தாழ்ந்தவன். ஏன் மௌனமாகவிருக்கிறாய்? நான் திரும்பவும் உன் எதிரில் மண்டியிட வேண்டுமா? சின்னஞ் சிறு குழந்தையாக நீ எந்த முழங்கால்களின் வழியாக ஏறி என் மடிமீது அமர்ந்தாயோ, அதே முழங்கால்களை மண்டியிட்டு வேண்டிக் கொள்கிறேன். மகனே! என் வேண்டுகோளை நிறைவேற்று.

ஜயசிங்கன்: அப்பா! ஏற்கனவேயே புண்பட்டிருக்கும் என் இதயத்தில் நீங்கள் வேறு ஈட்டியைப் பாய்ச்ச வேண்டாம்! அன்னைக்கு ராஜரத்தம்தான் வேண்டுமென்றால் நான் அவளுக்கு அதையே கொண்டுவந்து அளிக்கிறேன். வேறு எது வேண்டுமானாலும் அளிக்கிறேன். என் கடன்களனைத்தும் தீர்ந்த பிறகே இங்கிருந்து செல்வேன். அவ்விதமே ஆகட்டும்.

[போகிறான்.]

ரகுபதி: அவ்விதமே ஆகட்டும்! அன்னை வேண்டுமென்றால் எதையும் கொண்டுவந்து அளிப்பானும்! நான் யாருமில்லை போலிருக்கிறது. நன்றிகெட்டவனே! தேவி உனக்காக என்ன செய்திருக்கிறாள்? குழந்தைப் பருவம் முதல் தேவியா உன்னைத் தினந்தோறும் வளர்த்து வந்தாள்? நீ நோய்வாய்ப்பட்ட பொழுது தேவிதான் உன்னைக் கவனித்தாளா? பசித்தபொழுது அவளா அன்னமிட்டாள்? அல்லது உன் அறிவுப் பசிக்கு

உணவளித்தாளா? கடைசியில் செய்ந்நன்றியை மறப்பதற்கு மாத்திரம் தேவியின் பெயரைத் துணைக்கு அழைக்கிறாயோ? அந்தோ! கலியின் கொடுமை!

## *மூன்றாம் காட்சி*

அரண்மனையின் ஓர் அறை

*[அரசன் கோவிந்தமாணிக்கியன் அமர்ந்திருக்கிறான். நயனராய் பிரவேசிக்கிறான்.]*

**நயனராய்:** *நமக்கு எதிராகப் புரட்சி செய்த சேனைகளைத் திரும்ப அழைத்து வந்துவிட்டேன். யுத்தத்திற்குச் சகல ஏற்பாடுகளும் துரிதமாக நடைபெற்று வருகின்றன. உத்தரவு கொடுங்கள், மகாராஜா! உங்கள் ஆசியைப் பெற்றுக்கொண்டு உடனே புறப்படுகிறேன்.*

**கோவிந்த:** *புறப்படு, சேனைத் தலைவனே! நானும் போர்க் களத்திற்கு வருகிறேன்.*

**நயனராய்:** *இந்த அடிமையின் தேகத்தில் உயிருள்ளவரை, மகாராஜா, நீங்கள் போர்முனைக்கு வரக்கூடாது. பயங்கரமான ஆபத்திற்கு எதிரில் தாங்கள்......*

**கோவிந்த:** *பிரதானி! ஆபத்தில் எல்லோருக்கும் பங்கு உண்டு. என் பாகத்தை நான் ஏற்றுக்கொள்ள விரும்புகிறேன். அரசனாகிய என்னுடைய பங்கு மற்றவர்களுடையதைவிட அதிகம். யுத்த வீரர்களே! புறப்படுங்கள். நானும் உங்களிடையே நின்று போர் புரிவேன். உங்கள் அரசனை வெகு தூரத்திலுள்ள சிங்காதனத்தின்மீது அமர்த்திவிட்டுப் போர்வீரன் என்கிற புகழ் அவனுக்குக் கிடைக்காமல் செய்துவிடாதீர்கள்.*

*[ஒற்றன் வருகிறான்.]*

**ஒற்றன்:** *நாடுகடத்தப்பட்ட இளவரசர் நக்ஷத்திரராயை மொகலாயரின் சேனை விடுவித்து விட்டது. அவரை இந்த ராஜ்யத்திற்கு அரசனாக்கப் போகிறார்களாம். மொகலாயரின் படையுடன் அவர் நமது ராஜதானியை நோக்கி வந்துகொண்டிருக்கிறார்.*

**கோவிந்த:** *அப்படியானால் ஆபத்துத் தீர்ந்துவிட்டது. இனிமேல் பயமில்லை. யுத்தம் முடிந்துவிட்டது.*

*[சேவகன் வருகிறான்.]*

**சேவகன்:** *எதிரிகளின் முகாமிலிருந்து கடிதம் வந்திருக்கிறது.*

கோவிந்த: நக்ஷத்திரனின் கையெழுத்து! சமாதானப் பேச்சாகத்தான் இருக்கவேண்டும். (படிக்கிறார்) என்ன! இதுவா சமாதானக் கடிதம்? இது நக்ஷத்திரன் எழுதும் தோரணையல்லவே! நான் ராஜ்யத்தைவிட்டுப் போய் விடவேண்டுமாம்! இல்லாவிடில் பொன்மயமான திரிபுர ராஜ்யத்தை ரத்தவெள்ளத்தில் மிதக்க விடுவார்களாம்! பட்டணங்களையெல்லாம் கொளுத்திவிட்டுத் தேசத்தின் பெண்மணிகளை மொகலாயரின் அந்தப் புரங்களில் சிறையிடுவார்களாம்! நல்லது பார்க்கிறேன்! இது அவனுடைய கையெழுத்துதான்! என்ன! மகாராஜா நக்ஷத்திர மாணிக்கியன்! மகாராஜாவா! இதைப்பார் சேனாபதி! அரசனின் உத்தரவின் மூலம் நாடு கடத்தப்பட்டவன் அரசனுக்கே தேசாந்திர சிட்சை விதித்து விட்டான்! இது விதியின் விளையாட்டோ?

நயனராய்: அரசனுக்கு தண்டனையா? என்ன கொழுப்பு அவனுக்கு? இன்னும் யுத்தமே ஆரம்பிக்கவில்லையே!

கோவிந்த: வருவது மொகலாயரின் படையல்ல. திரிபுரத்தின் இளவரசன் அரசபதவியைக் கைப்பற்ற இந்த உபாயத்தை மேற்கொண்டிருக்கிறான். இதற்காக நமக்குள் போர் எதற்காக?

நயனராய்: தேசத்தின் நன்மைக்காக.

கோவிந்த: தேசத்திற்கு இதனால் நன்மை உண்டாகுமா? அண்ணனும் தம்பியும் ஒருவருக்கொருவர் எதிராக நின்றுகொண்டு மற்றவனின் மார்பில் வாளைப் பாய்ச்சுவதற்குத் தயாராக இருந்தால் நாட்டிற்கு அதனால் நன்மை உண்டாகுமா? ராஜ்யத்தில் வெறும் சிங்காதனம் மாத்திரமே இருக்கிறது. குடும்ப வாழ்வில்லை. சகோதரன் இல்லை. சகோதர பாசம் இல்லை.

மறுபடியும் படித்துப் பார்க்கிறேன். இதென்ன அவனுடைய கையெழுத்துத்தானா! இதை அவன் ஒரு பொழுதும் எழுதியிருக்க முடியாது. நான் கள்ளனும், தெய்வத்தை வெறுப்பவனும், அநீதி புரிபவனும், இந்த நாட்டிற்கே கேடு விளைவிப்பவனும். இல்லை. இல்லை. இதை நக்ஷத்திரன் எழுதியிருக்கவே முடியாது. வாசகம் யாருடையதாகவாவது இருக்கட்டும். கையெழுத்து என்னவோ அவனுடையதுதான். தன்னுடைய கையினாலேயே எழுதியிருக்கிறான். எந்தப் பாம்பின் விஷமாக இருந்தாலும் சரி — தன்னுடைய கையெழுத்துடன் அதைக் கலந்து என் மார்பில் செலுத்தியிருக்கிறான். விதியே! இது நீ எனக்கு அளிக்கும் தண்டனை. அவ

னுடையதல்ல. நான் இந்த நாட்டைவிட்டு அகல வேண்டுமா? அப்படியே ஆகட்டும். நான் அவனுக் களித்த தேசாந்தர சிட்சையை மௌனமாகத் தலை குனிந்து நானே அனுபவிக்கிறேன்.

# ஐந்தாம் அங்கம்

## முதற் காட்சி

கோயில்: வெளியே புயல் வீசுகிறது

ரகுபதி: (பூஜாத்திரவியங்களைக் கையில் எடுத்துக்கொண்டு) இத்தனை நாட்கள் கழிந்த பின்னர் நீ இன்று விழித்துக் கொண்டாய் போலும்! ஆம். நீ புரியும் கோப கர்ஜனை தான் அது. இருள் வடிவமானவளே! உன்னுடைய சாபம் என்கிற விளக்கொளியைத் துணையாகக் கொண்டு நீ நகரில் உலாவுகின்றனையோ? அல்லது உனது பிரளய காலத்துத் தோழிகளாகிய பேய்கள் பெரும்பசி யெடுத்து உலகமாகிற இப்பெரிய மரத்தை உலுக்குகின்றார்களோ? உன்னுடைய நெடுநாள் பசியை இன்று தீர்க்கப் போகிறேன். உன் பக்தர்களைச் சந்தேகம் என்ற கடலில் தள்ளிவிட்டு நீ இத்தனை நாட்களாக எங்கிருந்தாய்? உன் வாளை நீயே எடுத்து அணியாமலிருந்தால் நான் என்ன செய்யமுடியும்? இன்று உனது சண்டி உருவத்தைப் பார்த்து எனக்கு எவ்வளவு ஆனந்தம் தெரியுமா? மனத்தில் தைரியம் ஏற்படுகிறது. ஐயம் ஒழிந்தது. நான் இழந்த மானம் புதிய ஒளியுடன் திரும்பி வந்து குனிந்த என் தலையை உயர்த்துகிறது. அதோ காலடிச் சத்தம் கேட்கிறது. வருகிறது உன் பலி. ஜய் மகாதேவி!

[அபர்ணா வருகிறாள்.]

சீ! இவளா! எட்டிச் செல், மாயக்கள்ளி! உனக்கு ஜயசிங்கன் வேண்டுமோ? பாதகி! நாசக்காரி!

[அபர்ணா திரும்பிச் செல்கிறாள்.]

இதென்ன எதிர்பாராத அபசகுனம்! ஜயசிங்கன் வராமலே போய்விட்டால்! ஒரு பொழுதும் இல்லை. அவன் சொன்ன சொல்லை ஒருநாளும் மீறமாட்டான். ஜய மகாகாளி! சித்தியளிப்பவளே! பயங்கரி! கடைசியில் விக்கினம் ஏற்பட்டுக் காவலாளிகளின் கையினால் நான் உயிரையிழந்து தரையில் சாய்ந்தால் என்னவாகும்?

அபயம் அளிப்பவளே, போற்றி! பக்தர்களேக் காப்பாற்றுபவளே போற்றி! 'அடியார்களேக் காப்பாற்றுபவள்' என்கிற உன் புகழுக்கு ஹானி ஏற்படக் கூடாது. உன்மீது ஜனங்களுக்கு நம்பிக்கை குறைந்தால் நாஸ்திகர்கள் பரிகாசமாக நகைப்பார்கள். 'அன்னே இருக்கிருள்' என்ற தைரியம் ஜனங்களிடையே குறைய ஆரம்பித்தால் உன்னேத் 'தாயே' என்று இனி யார் அழைப்பார்கள்? அதோ காலடிச் சத்தம்! ஜயசிங்கனுகத்தான் இருக்க வேண்டும். ஐய்! மண்டையோடுகளே மாலேயாக அணிந்தவளே! நாஸ்திகர்களே ஒழிப்பவளே! மகாசக்தி! பராசக்தி!

[ஜயசிங்கன் வேகமாக வருகிருன்.]

ரகுபதி: ஜயசிங்கா! ராஜரத்தம் எங்கே!

ஜயசிங்கன்: இருக்கிறது குருவே, இருக்கிறது. என் கையைவிடுங்கள். நானே அதை அன்னேக்கு நிவேதனம் செய்கிறேன்.

தயை நிரம்பியவளே! உலகைக் காப்பவளே! உனக்கு ராஜரத்தம்தான் வேண்டுமோ! வேறு எதனுலும் உன் தாகம் அடங்காதோ? நானும் ஒரு ராஜபுத்திரன்தான். என்னுடைய தந்தையின் முன்னேர்கள் அரசாண்டு வந்தவர்கள். இன்னும் என் தாயின் உறவினர்கள் சில தேசங்களில் ஆட்சிபுரிகின்றனர். என் உடலில் ஓடுவது ராஜரத்தம்தான். அதையே அளிக்கிறேன் உனக்கு. இதுவே உனக்குக் கடைசி ரத்தபலி யாகட்டும். உன் அடங்கா ரத்த தாகம் இதனுல் திருப்தி அடையட்டும். ரத்தவெறி கொண்டவளே!

[தன் மார்பில் உடைவாளேச் செருகிக் கொண்டு கீழே சாய்கிருன்.]

ரகுபதி: (இடிவிழுந்தவர்போல்) ஜயசிங்கா! ஜயசிங்கா! கொடியவனே! இதயமற்றவனே! நன்றிகெட்டவனே! குருத்துரோகி! பிதுர்த்துரோகி! ஜயசிங்கா! கல்மனத்தவனே! என்ன காரியம் செய்துவிட்டாயடா? ஐயோ! ஜயசிங்கா! என் உயிரினும் இனியவனே! என் வாழ்க்கையின் செல்வமே! குழந்தாய்! குருவார்த்தையை மதிப்பவனே! திரும்ப உயிர்பெற்று எழு. என்னிடம் திரும்பி வா. உன்னேத் தவிர எனக்கு வேறு ஒன்றும் தேவையில்லே. அஹங்காரம், அபிமானம், தெய்வம், பிராம்மணன்—எல்லாம் ஒழியட்டும். நீ மாத்திரம் திரும்பி வந்தால் போதும்.

[அபர்ணு வருகிருள்.]

அபர்ணு: இது என்ன பிதற்றல்? ஜயசிங்கா! ஜயசிங்கன் எங்கே?

ரகுபதி: அமுத மொழியையுடைய பெண்ணே, வா! உன் அமுதையொத்த, கனிவு நிரம்பிய, ஆவிகலந்த குரலால் ஜயசிங்கனைக் கூப்பிடு. அவன் திரும்பி வந்தால் நீ அவனை அழைத்துச் செல். எனக்கு வேண்டாம். அவன் எனக்கு வேண்டாம்.

[அபர்ணு ஜயசிங்கனின் உயிரற்ற உடலைப் பார்த்து மூர்ச்சையாகிருள்.]

ரகுபதி: (விக்ரகத்தின் காலடியில் தலையை முட்டிக்கொண்டு) திருப்பிக்கொடு! ஜயசிங்கனைத் திருப்பிக்கொடு! உயிர்ப்பித்துக்கொடு. ஜயசிங்கனை எனக்குத் திரும்பக்கொடு. திருப்பிக்கொடு, திருப்பிக்கொடு.

## இரண்டாம் காட்சி

அரண்மனை

[கோவிந்த மாணிக்கியனும் நயனராவும்.]

கோவிந்த: இதற்குள்ளேயே மகிழ்ச்சியுடன் ஆரவாரமா? இதற்குள் வெட்கமின்றி அரண்மனை முழுதும் தீபாலங்காரமா? பட்டணத்திற்கு வெளியே நகரமே ஆனந்தமடைந்து இரு கரங்களையும் உயரத் தூக்குவது போல் தோரணங்கள் கட்டிவிட்டார்கள்! நான் இன்றும் அரண்மனையைவிட்டு வெளியேகூட வரவில்லை. சிங்காதனத்திலிருந்து இன்னும் இறங்கக்கூட இல்லை. இத்தனை வருடங்களாக அரசனுக இருந்தேன். நான் யாருக்கும் ஓர் உதவியையும் செய்ததில்லையா? எத்தனையோ அநீதிச் செயல்களைத் தடுத்ததில்லையா? கொடுங்கோல் மன்னனுகவா ஆட்சி புரிந்தேன்? அந்தோ, முடிதுறந்த மன்னனின் கதி! தன்னுடைய துக்கத்திற்குத்தானே வருந்தித் தனக்குள்ளேயே கண்ணீர் பெருக்குவதுதான் அவனுடைய முடிவு. மண்ணரசு போய் விட்டது. இனி எனக்கு நானே அரசன். என் உள்ளமாகிற சிங்கானத்தைச் சுற்றி இன்றுதான் பெருவிழா.

[குணவதி வருகிருள்.]

குணவதி: பிராணநாயகா! இனி ஏன் வருத்தப்படுகிறீர்கள்? அன்னையின் சக்தியை நீங்கள் இப்பொழுதாவது அறிந்து கொண்டீர்களா? வாருங்கள். இன்றிரவு கடைசி முறையாகப் பூஜை செய்துவிட்டு ராமனும் சீதையும் வனவாசம் சென்றதுபோல் சென்றுவிடுவோம்.

**கோவிந்த:** அன்பே! எனக்கு இன்றுதான் சுபதினம். ராஜ்யத்தை இழந்தேன். ஆனால் உன்னைத் திரும்பப் பெற்றேன். வா, இருவருமாகச் சேர்ந்து தேவியின் ஆலயத்திற்குச் செல்வோம். ஆயினும் இத்தடவை நாம் அளிக்கப்போகும் காணிக்கைகள் நமது பக்தியும், மலர்களும், ஆனந்தக் கண்ணீரும், அன்னையைப் பிரிவதால் ஏற்படப்போகும் துக்கமுமே யாகும். இன்று ரத்தம் கிடையாது. ஜீவஹிம்சை கிடையாது.

**குணவதி:** நாதா! இன்று நீங்கள் எனக்கு ஒரு வரம் தந்தே தீர வேண்டும்.

**கோவிந்த:** என்ன வேண்டும், சொல்.

**குணவதி:** நீங்கள் கல்லாக மாறிவிடக்கூடாது. அரசன் என்கிற கர்வத்தை ஒழியுங்கள். தெய்வத்தின் முன்னிலையில் நீங்கள் தோல்வியை ஒப்புக்கொள்ள விரும்பாத போதிலும் என் துயரத்தைக் கண்டேனும் உங்கள் மனம் இளகட்டும். நீங்கள் என்றுமே கல்மனத்தவராக இருந்ததில்லையே? யார் உங்களை என் அன்புப் பிடியிலிருந்து களவாடிச் சென்று என்னை அரசனில்லாத ராணியாகச் செய்துவிட்டனர்?

**கோவிந்த:** பிரியே! ஒருமுறையேனும் என் பேச்சில் நீ நம்பிக்கை வைக்கவேண்டும். உனக்காகப் புரியாமற் போனாலும் நான் சொல்வதிலிருந்து அர்த்தம் செய்துகொள். என் கண்ணீரைப் பார்த்தாவது அறிந்துகொள். நான் அன்பினால் கூறுவதை நீயும் அன்பு செலுத்திப் புரிந்துகொள். இனி இந்தத் தேசத்தில் பலிக்காக ரத்தம் சிந்த அனுமதிக்கப்படமாட்டாது. முகத்தைத் திருப்பிக் கொள்ளாதே. என்னை விட்டுச் சென்றுவிடாதே. ஆசை காட்டி மோசம் செய்யாதே. போவதாக இருந்தால் என்னை மன்னித்துவிட்டுப் பிறகு செல்.

[குணவதி விரைந்து போகிறாள்.[

ஐயோ! சென்றுவிட்டாள். எத்தகைய கொடிய உலகம்! யாரங்கே? ஒருவரும் இல்லையா! சிங்காதனமே! நான் விடைபெற்றுக் கொள்கிறேன். என் முன்னோர்கள் வசித்ததால் புனிதமான அரண்மனையே! தேசப்பிரஷ்டம் செய்யப்பட்ட உன் மகன் கோவிந்தமாணிக்கியன் நமஸ்கரித்து விடை பெற்றுக்கொள்கிறான்.

## மூன்றும் காட்சி

அந்தப்புரத்தின் ஒருபுறம்

குணவதி: முழக்குங்கள்! வாத்தியங்களை முழக்குங்கள்! இன்றிரவு அன்னைக்குப் பலியுடன் கூடிய பூஜை நடைபெறப்போகிறது. இன்று என் பிரார்த்தனை நிறைவேறப்போகிறது. பலியைக் கொண்டு வாருங்கள். ஏன் நிற்கிறீர்கள்? என் கட்டளை உங்கள் காதில் விழவில்லையா? ராஜ்யம் என்னவோ போய்விட்டது. அதற்காக வேலைக்காரர்களைக்கூட உத்தரவிட முடியாதபடி இந்த ராணிக்கு அதிகாரம் போய்விட்டதா என்ன? இதோ என் நகைகளை எடுத்துக்கொள்ளுங்கள். வைரமாலையை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். விரைந்து சென்று தேவியின் பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். மகாமாயே! இவ்வடிமையை உன் திருவடிகளில் சேர்த்துக்கொள்.

## நான்காம் காட்சி

கோயில்

ரகுபதி: (விக்ரகத்தைப் பார்த்து) இதோ பார்! இது எதற்காக நின்றுகொண்டிருக்கிறது? உயிரில்லாத கற்றூண், புத்தியில்லாத மூடனைப்போல்! வெறும் ஊமையான கற்சிலை. நொண்டி. குருடு. செவிடு. உன் காலடியில் துயருற்ற சகல மாந்தர்களும் அழுது மடிகின்றனர். வெறும் பாறையான உன் பாதங்களில் தங்களுடைய இதயங்களைப் பிளந்து அர்ப்பணம் செய்கின்றனர். ஹா, ஹா! எந்த அரக்கனின் இக்கொடிய பரிகாசம் உலகில் நிலவுகின்றதோ? 'அன்னையே' என்று மக்கள் எவ்வளவு உருக்கத்துடன் அழைக்கின்றனரோ அவ்வளவு கொடுமையுடனும் கருணையற்ற பரிகாசத்துடனும் நகைக்கிறான் அவ்வரக்கன்.

ஏ கற்சிலையே! திருப்பிக்கொடு ஜயசிங்கனை எனக்கு! திருப்பிக்கொடு. அரக்கி! பெண் பேயே! திருப்பிக்கொடு.

[விக்ரகத்தை உலுக்குகிறார்.]

நான் சொல்வது கேட்கவில்லையா உனக்கு?

செவிகளை இழந்துவிட்டாயோ? நீ என்ன செய்கிருய் என்று தெரியுமா உனக்கு? யாருடைய ரத்தத்தைக் குடிக்கிருய் நீ? அது அன்பு, நட்பு, கருணை முதலியவை நிரம்பிய ஓர் இதயத்தின் ரத்தம் என்பது உனக்குத் தெரியுமா? உனது உண்மையான பக்தர்களிடம் இத் தகைய கொடிய பரிகாசத்தை மறைமுகமாகக் காட்டிக் கொண்டு நீ இக்கோயிலில் வெகுகாலம் அமர்ந் திருப்பாய் போலும்! உன்னை நான் தினம் பூசை செய்கிறேன். உன் பாதங்களில் வீழ்ந்து வணங்கு கிறேன். 'தயை நிரம்பிய தாயே' என்று உன்னை அழைக்கிறேன். உன் உண்மையான அரக்கி ஸ்வரூ பத்தை நான் யாரிடமும் வெளியிடமாட்டேன். என் ஜயசிங்கனை மாத்திரம் திருப்பிக் கொடுத்துவிடு.

சீச்சீ! நான் யாரிடம் அழுது முறையிடுகிறேன்? மக்களின் மனத்தைப் பிளக்கும் இக்கற்சிலை கண்காணுத இடத்திற்கு ஒழியவேண்டும். ஜனங்களுக்கு மனச் சாந்தியாவது ஏற்படும்.

[விக்ரகத்தை எடுத்துக் கோமதியாற்றின் ஜலத்தில் தொலைவில் எறிந்துவிடுகிருர். பெட்டிகளுடன் வாத்தியங்கள் முழங்கக் குணவதி வருகிருள்.]

குணவதி: ஜய ஜய மகாதேவி! ஹா! இதென்ன! தேவி எங்கே?

ரகுபதி: தேவி என்று ஒன்றுமே கிடையாது.

குணவதி: தேவியை மீட்டும் பீடத்தின்மீது அமர்த்துங்கள் குருதேவரே. அவளுடைய கோபத்திற்குச் சாந்தி செய்ய வந்திருக்கிறேன். அவளுக்குப் பலி கொண்டுவந்திருக் கிறேன். ராஜ்யம், கணவன் அனைத்தையும் துறந்து விட்டு அன்னைக்கு என் பிரார்த்தனையை நிறைவேற்றும் ஒரே உற்சாகத்துடன் வந்திருக்கிறேன். இன்று ஓரிரவிற் கேனும் தேவியின் சிலையைக் கொண்டுவாருங்கள். தேவி எங்கே?

ரகுபதி: அவள் எங்குமே இல்லை. வானுலகம் மண்ணுலகம் எங்கும் இல்லை. ஓரிடத்திலும் எக்காலத்திலும் அவள் இருந்ததே கிடையாது.

குணவதி: குருவே! தேவி இவ்வாலயத்தில் இருந்ததில்லையா?

ரகுபதி: அவளையா 'தேவி' என்று அழைத்தாய்? இவ்வுலகில் உண்மையான தேவி எங்காவது இருந்தால் இங்கிருந்த அரக்கியைத் தேவி என்று நாம் அழைத்து வந்ததைச் சகித்திருப்பாளா? இதயங்களைப் பிளந்துவந்த அக்கல்லின் முன்பு பயனில்லாமல் ரத்தத்தைச் சிந்த விடுவதால்

உனக்கு என்ன மகிமை உண்டாகப் போகிறது? ஒரு புண்ணிய புருஷனின் ரத்தத்தைக் குடித்ததனுல் அந்த மகாராக்ஷசி வயிறு வெடித்து இறந்துபோய் விட்டாள்.

குணவதி: குருதேவரே! என்னை வதைக்காதீர்கள். சத்தியமாகச் சொல்லும். தேவி இல்லையா?

ரகுபதி: இல்லை.

குணவதி: தெய்வம் கிடையாதா?

ரகுபதி: கிடையாது.

குணவதி: தேவி இல்லையென்ருல் வேறு யார்தான் இருக்கிருர்கள்?

ரகுபதி: யாரும் இல்லை. ஒன்றுமே கிடையாது.

குணவதி: எடுத்துச் செல்லுங்கள்! பலியைத் திருப்பி எடுத்துச் செல்லுங்கள்! எல்லோரும் திரும்புங்கள். அரசர் எத்திசையை நோக்கிச் சென்ருர் என்பதை மாத்திரம் உடனே கூறுங்கள்!

[அபர்ணு வருகிருள்.]

அபர்ணு: அப்பா!

ரகுபதி: அம்மா! குழந்தாய்! என் தாயே! என்னை முழு மனத்துடன் வெறுக்கவேண்டிய நீ 'அப்பா' என்ரு அழைத்தாய்? மகனைக் கொன்ற பாதகனுகிய என்னை 'அப்பா' என்று அமுதூறும் நாவினுல் எவன் அழைத்து வந்தானே, அவனே என்மீது கருணைகூர்ந்து அப்பெயரை உன் இனிய குரலில் பதித்து வைத்துவிட்டுப் போயிருக்கிருன். எங்கே இன்னொருமுறை 'அப்பா' எல்று அழை.

அபர்ணு: அப்பா! வாருங்கள். இக்கோயிலை விட்டு நாம் வேறிடம் செல்வோம்.

[மலர் மாலைகளையும் பூஜாத் திரவியங்களையும் எடுத்துக்கொண்டு கோவிந்த மாணிக்கியன் பிரவேசிக்கிருன்.]

கோவிந்த: தேவி எங்கே?

ரகுபதி: எங்கும் இல்லை. என்றுமே இருந்ததில்லை.

கோவிந்த: ஹா! இதென்ன ரத்தப் பெருக்கு?

ரகுபதி: பாவம் நிறைந்த இக்கோயிலில் இதுவே இறுதியான புண்ணிய ரத்தப் பெருக்கு. இங்கு எரிந்துவந்த ஜீவ ஹிம்சை என்கிற தீயை ஜயசிங்கன் தன்னுடைய ரத்தத்தைப் பெய்து அணைத்துவிட்டான்.

கோவிந்த: ஆஹா! அவன் புண்ணியசாலி. அமரன். ஜயசிங்கா! நான் கொண்டு வந்திருக்கும் மலர்களை உனக்கே சூட்டுகிறேன்.

குணவதி: மகாராஜா!

**கோவிந்த:** ஆன்பே!

குணவதி: இன்று முதல் எனக்குத் தேவி அவசியமில்லை. நீங்கள்தான் இனி நான் வணங்கும் தனித்தெய்வம்.

*[நமஸ்கரிக்கிறாள்.]*

**கோவிந்த:** தீமை விலகிற்று. மறைந்த தேவி இன்று மறுபடி என்னுடைய தேவியின் உருவத்துடன் திரும்பி வந்து விட்டாள்.

அபர்ணா: அப்பா! எழுந்து வாருங்கள்.

ரகுபதி: கற்சிலை ஒழிந்தது. உண்மையான தாய் இதோ உயிருள்ள சிலையாக என் எதிரில் நிற்கிறாள். தாயே! அபர்ணா!

அபர்ணா: அப்பா! எழுந்து வாருங்கள்.

# மன்மதன் ஆசிரமம்

**சித்திராங்கதை:** நீதான் அம்மலர்க்கணையோன் போலும்?

**மன்மதன்:** ஆம். நானே மன்மதன். அண்டங்கள் அனைத்திலும் வாழும் ஆண்பெண்களின் இதயங்களை வேதனை என்னும் பாசத்தால் பிணைப்பவன்.

**சித்திராங்கதை:** அவ்வேதனையையும் பாசத்தையும் உன் அடிமையாகிய நான் அறிவேன். உன் அடிகளைப் போற்றுகின்றேன். தேவனே! நீ யார்?

**வசந்தன்:** நான் வசந்தன். இருதுக்களின் தலைவன். மூப்பு, மரணம் என்னும் இரு அரக்கர்கள் கணந்தோறும் உலகத்தை எலும்புக்கூடாகச் செய்ய விரும்புகிறார்கள். நான் அவர்களைப் பின் தொடர்ந்து சென்று அடிக்கு அடி அவர்களுடன் போரிடுபவன். இரவு பகலாக இப்போர் நடக்கிறது. நானே பிரபஞ்சத்தின் எல்லையற்ற இளமை.

**சித்திராங்கதை:** தேவா! உன்னை வணங்குகிறேன். உன் தரிசனத்தால் பெருமகிழ்வு எய்தினேன்.

**மன்மதன்:** மங்கையே! நீ ஏன் இக்கொடிய தவம் புரியத் துணிந்தாய்? தவத்தின் வெம்மையினால் உன் இளமையாகிய மலரை வாட்டிக் களையிழக்கச் செய்து கொள்கிறாய்! மன்மதனைப் பூசை செய்வதற்கு இது முறையல்ல. நீ யார்? உன் விருப்பம் யாது, பெண்ணே!

**சித்திராங்கதை:** தயை புரிந்து என் வரலாற்றை முதலில் கேள். என் வேண்டுகோளைப் பிறகு தெரிவிக்கிறேன்.

**மன்மதன்:** கேட்கச் சித்தமாக இருக்கிறேன்.

**சித்திராங்கதை:** நான் சித்திராங்கதை. மணிபுரத்து அரசனின் மகள். என் முன்னோர் செய்த தவத்தினால் மகிழ்ந்த சிவபெருமான் எங்கள் வம்சத்தில் என்றும் ஒரு பெண் மகவு பிறவாதிருக்க வரம் அளித்தார். ஆயினும் நான் பெண்ணாகப் பிறந்து அந்த வரத்தைப் பயனற்றதாகச் செய்துவிட்டேன். என்றுமே வீண் போகாத கடவுளின் கட்டளைகூட, என் தாயின் கரு . புகுந்து என்னை ஓர் ஆண்மகவாகச் செய்ய

இயலவில்லை. அத்தகைய முரட்டுப் பெண்ணுக நான் தோன்றினேன்.

மன்மதன்: ஆம். இவ்வரலாற்றை நான் கேள்வியுற்றிருக்கிறேன். உன் தந்தை உன்னை ஒரு மகனுகவே கருதி வளர்த்து வருகிருர். உனக்கு வில் வித்தையையும் நாட்டை ஆட்சிபுரியும் முறையையும் கற்பித்திருக்கிருர் அல்லவா?

சித்திராங்கதை: ஆம். ஆகவே நான் ஆண்வேடம் தாங்கி இளவரசனுக நாட்டை ஆண்டு வருகிறேன். விருப்பம் போல் திரிந்து வருகிறேன். நாணம், அச்சம், அந்தப்புரத்தில் அரச கன்னியர் வாழும் முறை இவை ஒன்றையும் நான் அறியேன். வில்வித்தை பயின்றேன். ஆனுல் என் விழிக்கோணங்களிலிருந்து உன் மலர் வில்லை நாண் ஏற்றும் கலையைப் பயின்றேன் இல்லை.

வசந்தன்: மான்விழியாளே! அக்கலையை ஒரு மங்கையும் பயில்வதில்லை. விழிகள் தங்களுடைய தொழிலைத் தாமாகவே ஆற்றுகின்றன. • இதயம் துடிக்கும் பொழுது ஒவ்வொருவரும் அதை உணர்கின்றனர்.

சித்திராங்கதை: ஒரு நாள் நான் தனியாக மான்வேட்டையாடுவதற்காகப் பூர்ணு நதிக்கரையில் உள்ள ஓர் அடர்ந்த காட்டிற்குள் புகுந்தேன். என் குதிரையை ஒரு மரத்தின் வேரில் கட்டிவிட்டு வளைந்து சென்ற கடினமான காட்டு வழியில் மானின் அடிச்சுவட்டைப் பின்பற்றிச் சென்றேன். வெட்டுக்கிளிகளின் ''ரிவ்'' என்ற ஒலி நிறைந்த அக்காடு, செடிகொடிகளின் அடர்த்தியால் இருள் சூழ்ந்திருந்தது. சற்று தூரம் சென்றவுடன் குறுகிய அப்பாதையின் குறுக்கே அழுக்கேறிய ஆடைகள் அணிந்த ஒரு மனிதன் படுத்திருப்பதைத் திடீரென்று கண்டேன். சற்று அலட்சியம் நிறைந்த குரலில் அவனை எழுந்து செல்லுமாறு கூறினேன். அவன் அசையவும் இல்லை. என்னைத் திரும்பிப் பார்க்கவும் இல்லை. கோபத்திஞல் பொறுமை இழந்த நான் என் வில் நுனியால் அவனைத் தட்டினேன். நீறுபூத்த நெருப்பில் நெய்யை ஆகுதி செய்தால் அது எப்படி உடனே கொழுந்துவிட்டு எரியுமோ அவ்விதமே அவனுடைய நெடிய உருவம் அம்பின் வேகத்துடன் திடீரென்று எழுந்து என் முன் நின்றது. ஒரு கணம் அவன் என் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். மறுகணமே அவனுடைய கோபப் பார்வை அகன்றது. உதடுகளில் புன்னகை தவழ்ந்தது. என் இளமைத் தோற்றமே

அவனுக்குப் புன்சிரிப்பைத் தோற்றுவித்திருக்க வேண்டும். நான் ஆடவர் பயிலும் கலைகளைப் பயின்றேன்; ஆண் உடையை அணிந்து அவர்களுடனேயே வசித்து வந்தேன். ஆகவே நான் பல நாட்களாக மறந்திருந்த ஓர் உண்மை பளிச்சென்று என் மனத்தில் தோன்றியது. ஆண்மையின் முழு கம்பீரத்துடன் விளங்கிய அவ்வுருவத்தைப் பார்த்த கணமே நான் ஒரு பெண் என்பதை உணர்ந்தேன். அக்கணத்திலேயே என் கற்பனைக் கணவனை என் எதிரில் முதன் முதலாகக் கண்டேன்.

மன்மதன்: அழகி! அதுதான் என்னுடைய சக்தி. வாழ்க்கையில் ஒரு நன்னாளில் ஒரு சுபமான சமயத்தில் மகளிர் தங்கள் பெண்மையையும் ஆடவர் தங்கள் ஆண்மையையும் உணருமாறு நான் செய்கிறேன். பிறகு என்ன நடந்தது!

சித்திராங்கதை: அச்சமும் வியப்பும் கலந்த குரலில் அவனை நோக்கி, ''நீ யார்?'' என்று கேட்டேன். ''நான் அருச்சுனன். குரு வம்சத்தில் தோன்றியவன்'' என்று அவன் கூறினான். நான் சித்திரத்தில் எழுதப்பட்டவள் போல் திகைத்து நின்று, அவனை வணங்கவும் மறந்துவிட்டேன். இவனா அருச்சுனன்? என் வாழ்வின் இலட்சியத் தலைவன் இவன் தானா? சத்தியத்தைக் காப்பதற்காக அவன் பன்னிரண்டு ஆண்டுகள் பிரம்மசரிய விரதத்தை மேற்கொண்டு காடுகளில் வசித்து வந்தான் என்று நான் கேள்வியுற்றிருந்தேன். இவனே அந்த அருச்சுனன்! ''நான் என் புயபலத்தைக் கொண்டு அருச்சுனனது புகழைப் பறித்துக் கொள்வேன். வில் வித்தையில் அவனை மிஞ்சுவேன். ஆண் வேடம் பூண்டு அவனைப் போருக்கழைத்து என் வீரத்தை அவனுக்கு அறிவுறுத்துவேன்'' என்றெல்லாம் என் இளமைப் பருவத்தில் எத்தனை முறை வீண் ஆசைப்பட் டிருந்தேன்? பேதைப் பெண்ணே! உன் வீரம் எங்கு ஓடி மறைந்தது? அவர் காலடியின் கீழ்ப் புல்லாக மாறிவிடலாம் என்று தோன்றியது. உன் வீரத்தையும் வலிமையையும் மண்ணோடு மண்ணாக்கிவிட்டு, கிடைத்தற்கு அரிய மரணம் கிடைத்தால் அவருடைய காலடியின் கீழேயே உயிர் துறப்பது என் பாக்கியம் என்று மனம் உறுதி கூறியது.

நான் வேறு என்னவெல்லாம் எண்ணினேனோ நினைவில்லை. தலைநிமிர்ந்து பார்க்கையில் அவ்வீரன் மெதுவாகக் காட்டிற்குள் மறைவதைக் கண்டேன். திடீரென்று விழித்துக் கொண்டு சுய நினைவை அடைந்

தேன். உடனே என்னை நானே நூறு முறை நொந்து கொண்டேன். "புத்தியற்ற பெண்ணே! நீ அவருடன் பேசவில்லை; அவரை வணங்கவில்லை; மன்னிப்புக் கேட்கவும் இல்லை; முட்டாளைப் போல் நின்றுகொண்டிருந்தாய்; அவர் சென்றுவிட்டார்" என்று என் மனம் குத்திக் காட்டியது. நான் அக்கணமே இறந்து போயிருந்தாலும் வருந்தியிருக்க மாட்டேன்.

மறுநாள் காலை என் ஆண் உடையைக் களைந்து வீசி எறிந்தேன். செந்துகில் ஒன்றையும், கைவளையல்களையும் கங்கணங்களையும் அணிந்து கொண்டேன். வழக்கமில்லாத நகைகளை அணிந்து என் உடல் வெட்கத்தால் குன்றியது.

மறைவாக மீண்டும் அக்காட்டினுள் புகுந்தேன். அவ் வனத்தின் நடுவில் உள்ள சிவபெருமானின் ஆலயத்தில் அவரைக் கண்டேன்.

**மன்மதன்:** பெண்ணே! தொடர்ந்து சொல். என்னிடம் நீ நாண வேண்டுவதில்லை. நான் மனத்தில் பிறந்தவன். ஆகவே மனத்தின் இரகசியங்கள் அனைத்தையும் அறிவேன்.

**சித்திராங்கதை:** அவரைக் கண்டவுடன் நான் கூறிய சொற்களும் அவர் அளித்த மறுமொழியும் எனக்குத் தெளிவாக நினைவில்லை. என்னை மேலும் கேட்காதே, தேவா! இடிபோல என் தலைமீது விழுந்தது அவருடைய இறுதி மொழி. ஆயினும் அது ஏன் என்னை நூறு பகுதிகளாகப் பிளக்கவில்லை! நான் பெண் ஆயினும் என்னுள் இருப்பது ஆணின் இதயமோ? பயங்கரக் கனவினால் மயக்கத்தை அடைந்தவளைப்போல நான் எப்படி வீடு திரும்பினேன் என்பதே நினைவில்லை. அவர் கூறிய இறுதி மொழிகள் என் காதில் பழுக்கக் காய்ந்த சூலத்தைப் போல் நுழைந்து ஒலித்தன. "நங்கையே! நான் பிரம்மசாரி விரதத்தை மேற்கொண்டவன். உனக்குக் கணவனாகத் தகுந்தவன் அல்ல" என்பதே அக்கொடிய சொற்கள்.

ஆடவன் மணம் செய்துகொள்ளா விரதத்தை மேற்கொள்வதா? அந்தோ! நான் இதைக்கூடத் தடுக்கச் சக்தியற்றவளா? மீனக் கொடியோனே! எத்தனை ரிஷிகளும் முனிவர்களும் தாங்கள் நெடுங்காலம் தவம் புரிந்து ஈட்டிய பயனைப் பெண்களின் காலடியில் ஒரு கணத்தில் துறந்தனர் என்பதை நீ அறிவாய். க்ஷத்திரியனுக்குப் பிரம்மசரிய விரதமா? வீடு திரும்பிய

வுடன் என் விற்களையும் அம்புகளையும் ஒடித்தெறிந்தேன். இதுவரை கர்வம்கொண் டிருந்த கரங்களை—தழும்பேறிய வலிய கைகளை—வீண் கோபத்தினுல் வதைத்துக் கொண்டேன். பெண்ணுகப் பிறந்து ஓர் ஆடவனின் மனத்தை வெல்ல முடியாமற் போனுல் நான் கற்ற வித்தைகள் அனைத்தும் வீண் என்பதை இத்தனைக் காலம் கழிந்த பின்னரே அறிந்து கொண்டேன். அபலையாகிய ஒரு பெண்ணின் தாமரைத் தண்டைப்போல் மென்மை பொருந்திய கைகள் என் வலிய கரங்களைக் காட்டிலும் நூறு மடங்கு சிறந்தவை. துவண்ட கொடியைப் போல் பற்றில்லாமல் நிற்க முடியாதவளும் வெட்கத்தினுல் குன்றியவளுமாகிய ஒரு பேதைப் பெண் தன்னுடைய கடைக்கண் வீச்சினுல் வீரிய பலத்தையும் தவப் பயனையும் வென்ருளாகில் அவளே பாக்கியவதி.

அனங்கனே! என் பெருமையை ஒரு நொடியில் நீ பறித்துவிட்டாய். என் பலத்தையும் வித்தைகள் அனைத்தையும் ஒரு கணத்தில் உன் காலடியில் விழச் செய்துவிட்டாய். இப்பொழுது உனது கலையை எனக்குக் கற்றுத் தரவேண்டும். அபலையின் பலத்தையும் உனது கணைகளையும் நீ எனக்கு அளிப்பாயாக.

மன்மதன்: நங்கையே! நான் உனக்குத் துணைபுரிவேன். உலகை வென்ற அருச்சுனனைச் சிறைப்படுத்தி உன் சமுகத்தில் கொண்டுவந்து நிறுத்துவேன். அரசியாகிய நீ உன் விருப்பப்படி அவனுக்குத் தண்டனையோ சன்மானமோ அளிக்கலாம். புரட்சிக்காரனுக்குச் சிட்சை விதிப்பதே முறை.

சித்திராங்கதை: நேரம் மாத்திரம் கிடைத்தால் நான் ஒருத்தியாகவே அவருடைய உள்ளத்தைச் சிறிது சிறிதாக வசப்படுத்தியிருப்பேன். தேவர்களுடைய உதவியை நாடி இருக்கவே மாட்டேன். எப்பொழுதும் அவருக்கு உற்ற துணையாகவும், போர்க்களத்தில் தேர்ப் பாகனுகவும், வேட்டைக்குச் செல்லும் பொழுது பின் தொடர்பவளாகவும், கூடாரத்தின் வாயிலில் இரவு முழுவதும் உறக்கமின்றிக் காவல் புரிபவளாகவும் இருந்து, பக்தியுடன் அவரைப் பூசித்துப் பணிவிடை செய்து, பிறர் துயரைத் தவிர்க்கும் அவருடைய க்ஷத்திரிய தர்மத்தைப் பாதுகாக்கத் துணை புரிவேன். காலப் போக்கில் ஒருநாள் அவர் என்னைக் கனிவுடன் நோக்கி, ''இவ் விளைஞன் யார்? என் முந்தைய சன்மங்களின் உயிர்த்

தோழனே? நான் செய்த நல்வினைப் பயன்போல் இப் பிறப்பிலும் என்னை வந்தடைந்துள்ளான்'' என்று மனத்தில் சிந்திப்பார். அச்சமயம் சிறிது சிறிதாக அவருடைய இதய வாயிலைத் திறந்து அதில் நான் நிரந்தரமான இடத்தைப் பெற்றுவிடுவேன். என் காதல் வெறும் கண்ணீர்ப் பெருக்குடன் முடிவடையும் உணர்ச்சி அல்ல. ஒரு பெண் வாய் திறவாமல் தன் உள்ளத் துயரை அடக்கிக் கொண்டு இரவு முழுவதும் கண்ணீர் வடித்துப் பகல் ஒளியில் துயரம் கலந்த புன்னகையால் அதை ஒளித்து வைக்க முயன்றுளாகில், அவள் பிறவி முதல் விதவையே ஆவள். நான் அத்தகைய மடந்தை அல்லேன். என் விருப்பம் நிறைவேறுமற் போகாது. நான் யார் என்பதை அறிவித்துக் கொண்டால் அவர் எனக்கு ஆதரவு அளிப்பார் என்பது நிச்சயம். ஆயினும், அந்தோ! அன்று அவர் கண்ணிற்கு நான் எப்படிக் காட்சி யளித்தேன்? வெட்கத்தினால் குன்றி, நடுங்கி, தன்னம்பிக்கையற்று ஏதோ பிதற்றிய ஒரு பேதையை அல்லவா அவர் அன்று கண்டார்? நான் உண்மையில் அத்தகைய ஒரு பேதைப் பெண்ணோ? வீடுகளிலும் சாலைகளிலும் கண்ணீர் விட்டு அழுவதையே உரிமையாகக் கொண்ட ஆயிரக் கணக்கான பெண்களைவிட நான் மேலானவள் அல்லவா? ஆயினும், ஆ! உள்ளத்தை வெளியிடுவதற்குத் தைரியமும் நீண்ட காலமும் வேண்டும். அதற்கு ஒரு ஜன்மம் போதாது. பல ஜன்மங்களில் அது உருப் பெற வேண்டும். ஆகவே, உன் வாயிலை வந்தடைந்தேன். தேவா! கடுந்தவம் புரிந்தேன். அண்டங்களை வென்ற அனங்கனே! கட்டழகனாகிய இருதுக்களின் தலைவனே! வசந்தனே! காரணம் இன்றிப் பிரமன் அளித்த சாபக்கேடாகிய இந்த அழகற்ற பெண் உருவத்தை ஒரு நாளைக்காகிலும் அகற்றி மாற்றுருவம் அளியுங்கள்! என்னை நிகரற்ற அழகியாகச் செய்யுங்கள். அந்த நாள் கழிந்தபின் என் வாழ்க்கையை நான் எங்ஙனமேனும் கழிப்பேன்.

நான் அவரை முதன்முதலாகக் கண்டபொழுது எல்லையற்ற வசந்த காலம் என் இதயத்தைப் பற்றியது போல் இருந்தது. இளமையின் மலர்ச்சியால் புளகாங்கிதம் அடைந்த என் உடல் இலட்சுமி தேவியின் திருவடிகளின் கீழ் விளங்கும் தாமரையைப் போல் அலர்ந்து காணப்படவேண்டும் என்ற பேரவா எனக்கு உண்டாயிற்று. வசந்தனே! வசந்

ின் தோழனுகிய மதனனே! என் விருப்பம் ஒருநாளேக்காவது நிறைவேறுமாறு அருள் புரியுங்கள்.

மன்மதன்: அவ்விதமே ஆகட்டும்.

வசந்தன்: அவ்விதமே ஆகட்டும். வசந்த ருதுவின் மலர் ஒளி உன் உடலேத் தழுவி அதை ஒரு வருட காலம் மரலச் செய்யட்டும்.

## 2

# மணிபுரம்

(காட்டில் சிவபெருமானின் ஆலயம்)

அருச்சுனன்: நான் கண்டது என்ன? உண்மையா அல்லது மாயத் தோற்றமா? மக்கள் நடமாட்டமற்ற அடர்ந்த காட்டின் நடுவில் தெள்ளிய நீரையுடைய ஒரு பொய்கை. இத்தகைய இரகசியமான இடத்தில் வனதேவதைகள் நிசப்தமான நடுப்பகலில் நீராடவும், வெண்ணிலவு பொழியும் பௌர்ணமியன்று உறங்கும் பொய்கையின் பசும்புல் நிறைந்த கரைமீது அச்சமின்றித் தங்கள் துகில் களே நழுவ விட்டுத் துயில் கொள்ளவும் வருவர் என்றே தோன்றிற்று.

அங்கு ஒருநாள் பிற்பகல் மரத்தடியில் அமர்ந்து நான் என் குழந்தைப் பருவம் தொடங்கி என் வாழ்க் கையைக் குறித்துச் சிந்தித்தவனுக இவ்வுலகின் மூட விளேயாட்டுக்களேயும், மாறி மாறி வரும் சுகதுக்கங்களே யும் வாழ்வின் துயரத்தையும், நிறைவேருத விருப்புக் களேயும், முடிவில்லா வறுமையையும் பற்றி எண்ண மிட்டேன். அச்சமயம் மரங்களின் அடர்த்தியால் ஏற் பட்ட இருளினின்றும் ஓர் உருவம் மெல்ல வெளிவந்து பொய்கையின் வெண்ணிறப் பளிங்குப் படிக்கட்டின்மீது நின்றது. என்ன வனப்பு! மென்மை பொருந்திய அவளது பாதங்களின் கீழ் பூமி எவ்வாறு சலனமின்றி நின்றதோ? அதிகாலேயின் பொன் முகில் கீழ்த்திசையில் மால் வரையின் களங்கமற்ற சோபையை பலரச் செய்து எப்படி அதனுடன் கலந்துவிடுகிறதோ அப்படியே அவ ளது ஆடை அவளுடைய வடிவழகுடன் ஒன்று சேர

விரும்பியது போல் இருந்தது. படிகளில் அவள் மெல்ல இறங்கி ஆவலுடன் பொய்கையின் நீரில் தன் முகத்தின் நிழலைப் பார்த்துச் சிறிது திடுக்கிட்டாள். அடுத்த கணமே அவள் புன்னகை பூத்துத் தன் இடது கரத்தால் கூந்தலை அவிழ்த்துவிட்டாள். அவிழ்ந்த கருங்குழல் வியக்கும் வண்ணம் அவள் கணுக்கால் வரை சரிந்தது. பின்னர் அவள் தன் மேலாடையை நழுவ விட்டுக் காதல் இன்பம் நிறைந்து காதலனின் அணைப்பிற்கு ஏங்கும் தன் களங்கமற்ற கரங்களை நோக்கினாள்: தலை குனிந்து தன் உடலில் சுடர்விட்டுப் பிரகாசிக்கும் இளமையின் மலர்ச்சி கண்டாள்; வெண்ணிற மயமான தன் உடல் வெட்கத்தினால் ஆங்காங்கு சிவப்பதும் கண்டாள். இரு பாதங்களையும் பொய்கை நீரில் அமிழ்த்தி, அவற்றின் அழகைக் கண்டு மகிழ்ந்தாள். தன்னைத் தானே முதன் முறையாகக் கண்டவள்போல் அவள் அடைந்த வியப்பிற்கு எல்லையே இல்லை. நூறு இதழைக் கொண்ட வெண்டாமரை, மொக்காக இருக்கையில் கண்களைக் குவித்திருந்து அதிகாலையில் முகமலர்ச்சி அடைந்தவுடன் கண்களை மலர விழித்துத் தலைகுனிந்து நீல வண்ணப் பொய்கையில், தன் நிழலைக் கண்டு நாள் முழுவதும் வியப்புற்றுக்கொண் டிருந்ததுபோல இருந்தது அவளது நிலை. மறுகணம் என்ன நிகழ்ந்ததோ நான் அறியேன். ஏதோ துயரத்தால் அவளது புன்னகை மறையக் கண்கள் ஒளி இழந்தன. நெகிழ்ந்த கூந்தலை முடித்துக்கொண்டு மேலாடையால் உடலை மறைத்துக் கொண்டாள். ஒரு முறை பெருமூச்செறிந்தாள். மாலைக் காலத்தின் பொன்னொளி வெளுத்த முகத்துடன் இரவுப் போதின் இருளைப் பருகச் செய்வதுபோல் பைய நடந்து மறைந்துவிட்டாள்.

பூமியே பிளந்து தன் செல்வத்தை எனக்கு அளித்ததுபோல் தோன்றிற்று. என் உள்ளக்கிடக்கையின் முழு உருவம் ஒரு கணம் என் எதிரில் தோன்றி மறைந்தது. விலங்குகளின் அரசனாகிய சிங்கம் உலகம் போற்றும் அன்னை துர்க்கையின் சேவடிகளில் பணிந்து படுத்திருப்பது போல, என் போர் வன்மையும், வீரமும், மிடுக்கும், ஆண்மைச் செருக்கும் வெற்றிப் புகழ்மீது எழுந்த வேணவாவும், அந்த அழகியின் காலடியின் கீழ் தரையில் சாய்ந்துவிடும் என்று எண்ணினேன். மீண்டும் முறை அவளை—

கதவைத் தள்ளுவது யார்?

*[கதவைத் திறந்து]*

*இது என்ன! அதே தோற்றம்! நெஞ்சே! பதருதே! அழகியே! அஞ்ச வேண்டாம். அரச குடியில் பிறந்தவன் நான். நலிந்தவர் நடுக்கத்தை ஒழிப்பதே என் தொழில்.*

சித்திராங்கதை: *ஐய! தாங்கள் என் விருந்தினர். இக் கோயில் என் ஆசிரமம். தங்களை எங்ஙனம் வரவேற்பது என்பதும் எத்தகைய உபசாரங்களால் இன்புறுத்துவது என்பதும் நான் அறியேன்.*

அருச்சுனன்: *அழகி! உன்னைக் காண்பதே சிறந்த விருந்தாகும். உன் இனிய சொற்களே எனது பாக்கியம். நீ வேறு விதமாக எண்ணுமல் இருந்தால் உன்னை ஒன்று கேட்க என் உள்ளம் விழைகின்றது.*

சித்திராங்கதை: *தாங்கள் அச்சமின்றிக் கேட்கலாம்.*

அருச்சுனன்: *மென்னகையாளே! மனித சஞ்சாரமற்ற இக் கோயிலில் எத்தகைய கடிய விரதத்தை மேற்கொண்டு அபாக்கியசாலிகளாகிய ஆடவரை வஞ்சனை செய்துவிட்டு உன் இலாவண்யம் அனைத்தையும் வீணுகத் தியாக செய்கிருய்?*

சித்திராங்கதை: *ஒரு இரகசிய விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக நான் ஒருமனப்பட்டுச் சிவபூஜை செய்கிறேன்.*

அருச்சுனன்: *உலகமே உன்னை அடைவதற்கு விரும்ப நீ யாரை அடைய விரும்புகின்ருய்? வடிவழகி! பரிதி எழும் உதயகிரி முதல் அவன் மறையும் அத்தமனகிரி வரை நான் யாத்திரை செய்திருக்கிறேன். ஏழு தீவுகளிலும், எவ்விடத்திலும், கற்பனைக்கும் எட்டாத அரிய அழகு இருக்குமாயின் அதையும் நான் கண்டுள்ளேன். உனக்கு என்ன வேண்டும்? யார் மீது விருப்பம்? என்னிடம் உரைத்தால் விவரமாகச் சொல்வேன்.*

சித்திராங்கதை: *நான் காதலிக்கும் தலைவர் மூவுலகிலும் புகழ் பெற்றவர்.*

அருச்சுனன்: *அத்தகைய ஆண்மகனும் இவ்வுலகில் உளனே? தேவர்களும் விரும்புகின்ற உன் மனோ ராஜ்ஜியத்தில் கிடைத்தற்கரிய இடத்தைப் பெறத் தக்க புகழுடைய அவனது பெயரைக் கூறு. கேட்டு நான் தன்யனுவேன்.*

சித்திராங்கதை: *அவர் மிகவும் மாண்புமிக்க மன்னர் மரபைச் சேர்ந்தவர்; மாபெரும் வீரர்.*

அருச்சுனன்: *கதிரவன் எழுவதன் முன்னே, கணத்தில் மறையும் மூடுபனி காலைப் பொழுதை நீட்டிக் காட்டுவது போல மக்களின் வாய்மொழி மூலம் ஒருவனுடைய பொய்ம்மைப் புகழ் உலகு எங்கும் பரவக்கூடும். கபட*

மற்றவளே! கிடைத்தற்கரிய உன் வனப்பைக் கொண்டு அநித்தியப் புகழைப் போற்ருதே! உயர்ந்த அரச குடியில் தோன்றிய அந்த மாபெரும் வீரன் யார் என்று கூறு. கேட்போம்.

சித்திராங்கதை: பிறர் புகழ் கண்டு சகியாத துறவியே! நீ யார்? உலகில் உள்ள அரச குலங்கள் எல்லாவற்றிலும் தலை சிறந்தது குரு வம்சம் என்று அறியாதவரும் உளரோ?

அருச்சுனன்: குரு வம்சமா?

சித்திராங்கதை: ஆம். அந்த வம்சத்தில் தோன்றி அழியாப் புகழுடன் விளங்கும் வீராதி வீரனின் பெயரை நீ கேள்வியுற்றதில்லையா?

அருச்சுனன்: நீயே சொல். உன் நாவில் இருந்தே அதைக் கேட்போம்.

சித்திராங்கதை: அவன்தான் அருச்சுனன். காண்டீவம் என்ற வில்லைப் பிடித்தவன். உலகத்தை வென்றவன். அவனது அழியாப் பெயரை உலகில் இருந்து கொள்ளையடித்து என் கன்னியுள்ளம் நிரம்புமாறு ஒளித்து வைத்திருக்கிறேன்:

பிரம்மசாரியே! ஏன் இந்தப் பதற்றம்? நான் கூறியதெல்லாம் பொய்யா? அருச்சுனனின் பேரும் புகழும் பொய்தாஞ? அப்படியாஞல் இப்பொழுதே கூறி விடு. என் இதயத்தைப் பிளந்து நான் அவற்றை வெளியில் விட்டு விடுகிறேன். மக்கள் நாவிலே அவை வெறும் சூனியமாக உழலட்டும். ஒரு கன்னியின் உள்ளத்தில் அமர அவை தகுதியற்றவை.

அருச்சுனன்: நேரிழாய்! அருச்சுனன், பாண்டவன், காண்டீவன் என்ற பெயர்களுடைய அந்தப் பாக்கியசாலி இதோ உன்னைச் சரண் அடைகின்ருன். என் பெயரும், புகழும், ஆண்மையும், வீரமும் உண்மையாகவோ பொய்யாகவோ இருக்கட்டும். நீ உன் இதயத்தில் அளித்துள்ள கிடைத்தற்கரிய இடத்திலிருந்து என்னை நீக்கிவிட்டு நான் பெற்ற சுவர்க்கத்தையும் பேரதிர்ஷ்டத்தையும் ஒரு கணத்தில் இழக்குமாறு செய்துவிடாதே.

சித்திராங்கதை: நீயா அருச்சுனன்!

அருச்சுனன்: தேவி! நானே அருச்சுனன்; உன் இதய வாயிலிலே காதலுக்காகக் காத்துக் கிடக்கும் அதிதி.

சித்திராங்கதை: அருச்சுனன் பன்னிரண்டு வருட காலம் பிரம்மசரிய விரதத்தை மேற்கொண்டிருக்கிருன் என்று கேள்விப்பட்டேனே! அத்தகைய வீரஞ விரதத்தைப்

புறக்கணித்து விட்டுப் பெண்கள் மீது காதல் கொள்வான்? துறவி! உண்மையாக நீ அருச்சுனனு?

அருச்சுனன்: இரவின் யோக நித்திரையாகிய இருளை வெண்ணிலவு எழுந்து அகற்றுவதுபோல என் விரதத்தை முறித்தவள் நீயே!

சித்திராங்கதை: அந்தோ! அருச்சுனு! நான் யார்? எனக்கு என்ன பெருமை உளது? நீ என்னிடம் கண்டது என்ன? என்னைப் பற்றி நீ அறிந்தது என்ன? யாருக்காக நீ மயங்குகின்றுய்? யார் பொருட்டு நீ விரதத்தைப் புறக்கணித்துவிட்டு அருச்சுனன் என்ற பெயருக்கே களங்கத்தை விளைவித்துக் கொள்கிருய்? நீலோற்பலங்களை யொத்த இவ்விரு விழிகளுக்காகவும் வெண்ணெயைப் போல் மென்மையையுடைய இவ்விரு கரங்களுக்காகவும் இருகை வீரனுகிய அருச்சுனன் சரண் புகுந்து தன் கைகளினுலேயே சத்தியத்தின் தலையை அறுத்தெறிந்து விடப் போகிருனு? காதலின் ஏற்றம் எங்கு போயிற்று? பெண்மையின் பெருமை பின் தங்கிவிட்டதா? அந்தோ! துச்சமான இவ்வழகிய உடல் என் பெருமையை மறைத்துவிட்டதே! ஆத்மாவின் மாய வேடம் அழிவு இல்லாத அதன் உண்மை உருவத்தையே மறைத்து விட்டதே! உன் புகழ், வீரம் யாவும் பொய் என்பதை இப்பொழுதே உணர்ந்தேன்.

அருச்சுனன்: ஆம். வீரமும் புகழும் பொய் என்பதை நானும் இன்று உணர்ந்தேன். ஏழுலகங்களும் இன்று எனக்குக் கனவு போல் தோன்றுகின்றன. நீ ஒருத்தியே எனக்கு எல்லாம் ஆகவும் அண்டத்தின் செல்வமாகவும் விளங்குகின்றுய். நீயே என் வறுமையனைத்திற்கும் சிந்தாமணியாகவும் என் பணிகள் அனைத்திற்கும் பயனுகவும் இருக்கின்றுய். உன்னைத் தற்செயலாகக் கண்ட அக்கணத்திலேயே, இருள் என்ற பெருங்கடலிலிருந்து சிருஷ்டி என்ற நூறு இதழ்த் தாமரை உலகில் முதன் முதலாகத் தோன்றிய அதிகாலையின் இன்பக் கிரணங்களை எவ்வாறு நான் உணர்ந்தேன் என்பதை நானே அறிய முடியவில்லை. பிறரைச் சிறிது சிறிதாகவே அறிந்துகொள்ள முடியும். ஆயினும் உன்னைக் கண்டவுடன் நான் முழுவதும் தெரிந்து கொண்டு விட்டேன். முடிவை மாத்திரம் உணரவில்லை. ஒருநாள் நடுப்பகலில் வேட்டையால் களைத்து நீர் வேட்கை கொண்டவனுகக் கயிலாய மலையின் சிகரத்தில் மலர் சூழ்ந்த மானசை என்ற பொய்கையை அடைந்தேன். அந்த வானகப்

பொய்கையின் தெள்ளிய நீரை எட்டிப் பார்த்த பொழுது அதன் அடியே காணப்படவில்லை. செங்கதிரின் நண்பகற் கிரணங்கள் பொன்னிறங்கொண்ட அல்லித் தண்டுகளுடன் சேர்ந்து, வளைந்து வளைந்து பொய்கையின் அடித்தலத்தை நோக்கிச் சென்றன. நீர்ப் பரப்பிலே சிற்றலைகள் ஏற்பட்டபொழுது அவை கோடிக் கணக்கான அழற் பாம்புகளைப் போலக் காட்சி அளித்தன. பிறப்பினுல் களைத்தும் வினையினுல் துயருற்றும் வாடும் மக்களுக்கு அளவற்ற குளிர்ச்சியையுடைய அழகிய மரணம் இங்குதான் இருக்கிறது என்று செங்கதிர்ச் செல்வன் ஆயிரம் விரல்களால் சுட்டிக் காட்டுவதுபோல் இருந்தது அக்காட்சி. அத்தகைய ஆழ்ந்த தெளிவை உன்னிடம் கண்டேன். நாற்புறங்களிலும் தேவர்கள் தங்கள் விரல்களால் உன்னைச் சுட்டிக்காட்டி, ''அதோ அந்த தேவலோகத்து ஒளியால்தான் உன் புகழற்ற வாழ்க்கை மலரும்'' என்று கூறுவது போல இருந்தது.

**ராங்கதை:** பாவம்! அது நான் அல்ல, அருச்சுனு! நான் அல்ல. இது எந்தத் தெய்வத்தின் சூழ்ச்சியோ? செல்! செல்! வீரனே! இங்கு இருந்து சென்றுவிடு. பொய் உருவைப் போற்றுதே. உன் வீரத்தையும் ஆண்மையையும், புகழையும் பொய்த் தோற்றத்தின் காலடியில் அர்ப்பணம் செய்துவிடாதே. திரும்பிச் செல்! திருப்பிச் செல்!

## 3

# மரத்தின் அடியில்

**ராங்கதை:** அந்தோ! அவரை நான் எங்ஙனம் மறுப்பது? நெடிய பெருமூச்சுடன் கொழுந்து விட்டெரியும் வேள்வித் தீயைப் போல் வேட்கையினுல் துடித்துத் தவிக்கும் அவருடைய இதயத்தை நான் எப்படி மறுக்க முடியும்? உள்ளத்தில் இருந்து வெளியில் வந்து என்னைத் தழுவி அழைத்துச் செல்ல விரும்பும் கரங்களைப் போன்ற அவருடைய பார்வையை எங்ஙனம் மறப்பேன்? பொங்கி எழும் அவரது உள்ளம் ஒவ்வொரு அங்கத்தையும் பிளந்துகொண்டு என்னை நோக்கி வருவது போலவும்

அதனுடைய துயரக் குரல் அவரது அவயவங்கள் அனைத்திலும் எழுவது போலவும் தோன்றுகிறது. அவரது வேட்கையை எங்ஙனம் மறுப்பேன்?

[மன்மதனும் வசந்தனும் வருகின்றனர்.]

அனங்கனே! அழகு என்னும் பெரும் தீ என்னைச் சூழுமாறு செய்துவிட்டாயே. அதில் நானும் வெந்து மற்றொருவரையும் எரித்துக்கொண்டிருக்கிறேன்.

மன்மதன்: மெல்லியலே! நேற்று நடந்ததைக் கூறு. நான் எய்த மலர்க் கணைகள் சாதித்த முடிவைக் கேட்க விரும்புகிறேன்.

சித்திராங்கதை: இளவேனிற் பருவத்தால் உதிர்ந்த மலர்களைத் திரட்டி நான் நேற்று மாலை பொய்கையின் பசும் புல் படர்ந்த கரையில் ஒரு படுக்கை அமைத்தேன். மனம் எங்கோ அலைய, களைப்புற்ற என் உடலை அம்மலர்ப் பள்ளியில் கிடத்தினேன். தலையை இடது கையின் மீது வைத்துக்கொண்டு முந்தைய நாளின் நிகழ்ச்சிகளைப் பற்றி எண்ணமிடலானேன். அருச்சுனன் நாவில் இருந்து நான் கேட்ட துதியை நினைந்து நினைந்து சேர்த்து வைத்திருந்த அமுதத் திரளைத் துளித்துளியாகச் சுவைத்தேன். முற்பிறப்பில் நடந்த நிகழ்ச்சிகளைப்போல் என்னுடைய பழங்கதையைச் சிறிது மறந்தேன். நான் ஒரு அரசகுமாரி அல்லேன் என்றும் எனக்கு முன்பின் வாழ்க்கையின் தொடர்பு இல்லை என்றும் நான் கானிலே கொடியின்றி அலர்ந்த ஒரு மலர் என்றும் எனக்கு ஆயுள் ஒரு பகலே என்றும் கற்பனை செய்து கொண்டேன். அவ்வொரு பொழுதிற்குள் வண்டுகளின் முரல்வையும் அடவியின் ஆனந்த உள்ளோசையையும் கேட்டுவிட வேண்டும். அது முடிந்ததும் நீல வானத்தினின்றும் என் கண்களைத் தாழ்த்தித் தலைவணங்கி இளங்காற்று அடித்தாலும் ஓசையின்றித் தரையில் சாய்ந்துவிட வேண்டும். மலரின் கதை ஆதியும் அந்தமும் இல்லாமல் இடையிலேயே முடிந்துவிடும்.

வசந்தன்: அழகி! எல்லையற்ற வாழ்வு சிறு காலையில்தான் மலர்கிறது.

மன்மதன்: இசையில் ஒரு சுரம், முடிவற்ற கதையின் துயரக் குரலை ஒலித்து எழுப்புவது போல. பின்னர் என்ன நிகழ்ந்தது?

சித்திராங்கதை: அவ்வாறு நான் எண்ணமிடுகையில் தென்றல் என் அங்கங்களின் மீது துயிலின் அலைகளை மெல்ல வீசியது. உயர்ந்த கிளைகளையுடைய ஒரு மரத்தைத் தழுவி

மலர் குலுங்கும் ஒரு மல்லிகைக் கொடி, களைத்திருக்கும் என் வெண்ணிற உடலின் மீது மவுன முத்தங்களை ஈந்தது. அக்கொடியின் மலர்கள் என் குழல்மீதும், பாதங்களின்மீதும் கொங்கைகளின் மீதும் உதிர்ந்து தங்கள் மரணப் படுக்கையை விரித்துக்கொண்டன.

அசைவின்றிச் சில கணங்கள் கழிந்தன. பாதி உறக்கத்தில் இருந்த நான் திடீரென்று யாரோ ஒருவருடைய காமம் நிறைந்த கூரிய பார்வை, பத்து விரல்களாலும் பற்றுவதுபோல், என் களைப்புற்ற உடலைப் பற்றியது உணர்ந்தேன். சட்டென்று விழித்துக்கொண்டேன்.

விழித்துப் பார்க்கையில் நான் ஆலயத்தில் சந்தித்த அதே சந்நியாசி என் காலடியில் ஒரு கற்சிலையைப் போல் நின்று கொண்டு கண் இமைக்காமல் என்னையே பார்த்துக்கொண் டிருப்பதைக் கண்டேன். கீழ்வானில் இருந்து மேல் நோக்கிச் செல்லும் சுக்கில பட்சத்துத் துவாதசிச் சந்திரனின் பூர்ண ஒளியானது, என்னை அறியாமல் என் ஆடைகள் இங்கும் அங்கும் நழுவியதால் திறந்திருந்த இளமை மிக்க என் கன்னி உடலின் பல அங்கங்களின்மீது வீசிற்று. மரத்தின் அடியில் மலர்களின் நறுமணம் கமழ்ந்தது. வெட்டுக்கிளிகளின் ஒலி மட்டும் நிறைந்திருந்த இரவு உறங்குவதுபோல் காட்சியளித்தது. பொய்கையின் அசைவற்ற தெளிந்த நீரில் சந்திரனின் பிரதி பிம்பம் சலனமின்றிக் காணப்பட்டது. காற்றும் உறங்கிற்று. மரங்கள் எல்லாம், கரிய இலைக் குவியல்களாக நிலவொளியில் ஸ்தம்பித்து நின்றன. அத்துறவி ஒரு நெடுமரம் போலக் கையில் ஒரு கோலுடன் தம் நிழலையே துணையாகக் கொண்டு சித்திரம் போல நின்றுகொண் டிருந்தார்.

நான் கண்களை விழித்து நான்குபுறமும் பார்க்கையில் என்றோ மறந்துபோன ஒரு மாலைப் பொழுதில் என் உயிர் உடலைவிட்டு வெளி வந்து கனவு வாழ்க்கையை எய்தி வைதரணி[1] நதிக்கரையில் மக்களே இல்லாத மோக நித்திரை உலகில் மங்கிய நிலவொளியில் நிற்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. எழுந்து நின்றேன். நழுவிய துகில் தரையில் விழுவதுபோல என் வெட்கம் மறைந்தது. ''அன்பே! ஆருயிரே!'' என்று

1. புராணங்களில் கூறப்பெறும் ஒரு நதி: மரண... ஜீவன்கள் வானுலகு செல்லும்போது இதைக் கடந்தே செல்ல வேண்டும்.

அவர் அழைத்தது காதில் விழுந்தது. கம்பீரமான அவ்வழைப்பைக் கேட்டவுடன் இந்த ஒரு உடலிலே நூற்றுக் கணக்கான பழம் பிறப்புக்கள் விழித்து எழுந்தன. ''வாழ்க்கைத் துணைவனே! ஏற்றுக் கொள்க! என்னிடம் இருக்கும் அனைத்தையும் ஏற்றுக் கொள்க!'' என்று வேண்டி நின்று என் இரு கரங்களையும் அவர்பால் நீட்டினேன். சந்திரன் மரங்களுக்குப் பின் மறைந்தான். காரிருள் எங்கும் கவிந்தது. இன்ப நுகர்ச்சியில் வானமும் வையமும், நாடும் பொழுதும், இன்பமும் துன்பமும், வாழ்வும் மரணமும்—யாவும் மறைந்து ஒழிந்தன.

அருணோதயமானவுடன் புள்ளினம் இன்னிசை பாடத் தொடங்கவும், நான் கண் விழித்து இடது கையை ஊன்றிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தேன். பக்கத்தில் திரும்பிப் பார்த்த பொழுது வீரன் அயர்ந்து உறங்குவதைக் கண்டேன். அதிகாலைச் சந்திரனின் கிரணத்தைப் போல் அவரது உதடுகளில் புன்னகை தவழ்வதைக் கண்டேன். அது கங்குலின் இன்பங்களின் இறுதிச் சின்னம் போல விளங்கிற்று. கதிரவன் ஒளி அவரது உயர்ந்த நெற்றியின் மீது விழுந்த காட்சி இந்த உலகிலேயே ஒரு புதிய உதயகிரியிலிருந்து புதுப் புகழ் என்ற சூரியன் உதிக்கப் போகிறான் என்பதைக் காட்டுவது போல் இருந்தது.

நீண்ட பெருமூச்சுடன் படுக்கையில் இருந்து எழுந்தேன். அவருடைய வதனத்தின் மீது வெயில் படாதவாறு மல்லிகைப் பந்தரைத் தாழ்த்தினேன். நான்கு புறமும் நோக்கிய பொழுது மீண்டும் பழைய உலகிலேயே இருக்கிறோம் என்பது தெரிந்தது. நான் யார் என்பதையும் உணர்ந்தேன். உடனே எழுந்தேன். பெண்மான் தன் நிழலைக் கண்டு அஞ்சி யோடுவதுபோல உதிர்ந்த மலர்கள் சிதறிக் கிடந்த காட்டு வழியிலே விரைந்து ஓடினேன். தனித்த ஒரு கொடி வீட்டில் அமர்ந்து கண்களைக் கையால் மூடிக்கொண்டு அழ ஆசைப்பட்டேன். ஆனால் அழுகை வரவில்லை.

மன்மதன்: அந்தோ! மானிடப் பெண்ணே! சுவர்க்கத்தின் ஒரு இன்ப நாளை என் கைகளாலேயே பறித்துப் பூமியின் மீது உனக்கு ஓர் இரவின் இன்பத்திற்காக அளித்தேன். [1]சசீதேவியினால் ஆசி கூறப்பட்டு, [2]இரதிதேவியால்

1. இந்திரன் மனைவி. 2. மன்மதன் தேவி.

முத்தமிடப்பெறும், [1]நந்தனப் பொழிலின் நறுமணம் கமழும் அமுதத்தை உன் இதழ் அருகில் வைத்துப் பருகச் செய்தேனே! இவ்வளவு செய்தும் அழுகைதானா?

ிராங்கதை: தேவ! அமுதத்தைப் பருகும்படி தாங்கள் செய்தது யாரை? யாருடைய வேட்கை தணிந்தது? அந்த இதழ் இன்பமும், வீணையின் ஜங்காரத்தைப் போல இன்னும் என் உடலில் நாதத்தை எழுப்பிக்கொண்டிருக்கின்ற தழுவலும் என்னுடையவை அல்லவே! நீண்ட காலத்துச் சாதனையின் விளைவாக ஏற்படுகிறது முதல் காதல் சந்திப்பு. என்னை வஞ்சம் செய்து அதன் இன்பத்தை யார் அபகரித்துச் சென்றனர்? என்னுடைய மாய அழகு, கிடைத்தற்கு அரிய அச்சந்திப்பின் ிய நினைவுகளை அபகரித்துக்கொண்டு, நன்கு மலர்ந்த பூக்களின் இதழ்கள் தாமாகவே உதிர்வது போல விழுந்து விடும். உள்ளே இருக்கின்ற அழகற்ற உருவம் பின் தங்கி இரவு பகலாக வருந்திக் கொண்டிருக்கும். மீனக் கொடியோனே! இவ்வுடலுடன் எத்தகைய கொடிய அரக்கியை, நிழலைப் போல, நீ பிணைத்து விட்டிருக்கிறாய்? இது என்ன கொடிய சாபம்? நெடுங்கால வேட்கையினால் ஆசைமிக்க என் இதழ்களின் அருகே வந்த முத்தங்களை அந்த அரக்கி அபகரித்துவிட்டாள். காலையில் எழுகின்ற இளஞாயிற்றின் ஒளிக் கிரணங்களைப் போல என் உடல்மேல் எங்கு பட்டாலும் அங்குக் காதலின் முத்திரையை இட்டுச் சென்ற அவருடைய அன்புப் பார்வை கங்குற் போது முழுவதும் காத்திருந்த இக் கன்னியின் இதயத் தாமரையைத் தீண்ட வந்தது. அதையும் அவ்வரக்கி கொள்ளை கொண்டாள்.

மன்மதன்: அப்படியானால் நேற்றைய இராப்பொழுது வீணே கழிந்தது. ஆசை யென்ற படகு கரையின் அருகே வந்தது; ஆனால் அலைகளின் மோதலால் மீண்டும் மீண்டும் தொலைவில் சென்றுவிட்டது.

சித்திராங்கதை: தேவனே! நேற்றிரவு நிகழ்ச்சிகள் ஒன்றும் என் மனத்தில் தங்கவில்லை. சுவர்க்கத்தின் இன்பம் என் அருகில் இருந்ததால் என்னை மறந்து எது கிடைத்தது, எது கிடைக்கவில்லை என்பதை எண்ணிப் பார்க்கவேயில்லை. இன்று காலையில் எழுந்தவுடன் ஆசை நிராசையாகப் போன துயரம் என் இதயத்தைப் பிளந்தது. நேற்றிரவு நிகழ்ந்தது சிறிது சிறிதாக நினைவிற்கு

1. சுவர்க்கத்தில் இருக்கும் ஒரு பூம் பொழில்.

வந்தவுடன் இடியால் தாக்குண்டது போல என் உள்ளம் என்னை வருத்தியது. உடலும் உள்ளமும் சக்களத்திகள் போலப் போரிடுகின்றன. அதை என்னால் மறக்கவும் இயலவில்லை. என் காதலனின் மற்றொரு மனைவியை என் கைகளாலேயே அழகு செய்து என் ஆசைகளுக்கு எல்லாம் முடிவிடமான பள்ளி அறைக்கு ஒவ்வொரு இரவும் அனுப்பி, அவளுடனேயே அல்லும் பகலும் இருந்து, அவள் மேல் பொழியப் பெறும் காதலை நான் கண்ணால் காண வேண்டுமா? உடலின் மீது காட்டப் பெறுகின்ற காதலைக் கண்டு உள்ளம் எரிகின்றது. இதுபோன்ற கொடிய சாபத்தை மானிட உலகில் யாரும் அநுபவித்ததில்லை. அனங்கனே! நீ அளித்த வரத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்.

மன்மதன்: நான் அதைத் திரும்பப் பெற்றுக்கொண்டால் இந்த மாய வேடத்தைக் களைந்துவிட்டுப் பனிக்காலத்தில் தளிரும் மலரும் அற்ற கொடி போலாகி எத்தகைய தோற்றத்தோடு நாளைக் காலை அருச்சுனனின் எதிரில் நிற்கப் போகிறாய் என்பதை எண்ணிப் பார். இன்பத்தின் முதற் சுவையை அவனுக்கு அளித்துவிட்டு நீ அவன் வாயில் இருந்து அமுத கலசத்தைப் பிடுங்கித் தரையில் மோதி உடைத்தாயாகில் அந்த அதிர்ச்சியினால் திகைப்படைந்த அருச்சுனன் உன்னை எத்தகைய வெறியுடன் நோக்குவான் என்பதையும் சிந்தித்துப் பார்.

சித்திராங்கதை: அதுவே நல்லது. இந்த மாயத் தோற்றத்தை விட என் பழைய உருவம் நூறு மடங்கு சிறந்தது. என் உண்மையான நிலைமையை அவருக்கு அறிவித்து விடுகிறேன். அதனால் ஏற்படும் அதிருப்தியினால் அவர் என்னைவிட்டு அகல, நான் மனம் உடைந்து இறந்தால், சித்திராங்கதையாக இறப்பேன். அதுவே மேல், இந்திரனின் தோழனே!

வசந்தன்: நான் கூறுவதைக் கேள். பூக்களின் மலர்ச்சி முடிந்தவுடன் கனிகள் வெளிவரும். கதிரவன் வெம்மையால் உலர்ந்த மலரின் இதழ்கள் உதிர்வது போல உன் மாய அழகு மறைந்தவுடன் உனது பெருமை வெளிப்படும். பங்குனித் திங்கள் உன்னை உன் புதுத் தோற்றத்தில் கண்டு வரவேற்கும். அதுவரையில், குழந்தாய்! உன் இளமையின் மதனவிழா நீடிக்கட்டும்.

4

# அருச்சுனனும் சித்திராங்கதையும்

சித்திராங்கதை: வீர! எதைப் பார்த்துக்கொண்டிருக்கிறாய்?

அருச்சுனன்: மென்மைமிக்க உன் விரல்கள் மலர்க் கொத்துக்களை ஏந்தி மாலை தொடுக்கும் அழகைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அழகு, திறன் என்ற இரு சகோதரிகளும் உன் விரல் நுனிகளில் உல்லாசமாக விளையாடுகின்ற அழகிய காட்சியைக் கூர்ந்து கவனித்து யோசித்துக்கொண்டிருக்கிறேன்.

சித்திராங்கதை: என்ன யோசனையோ?

அருச்சுனன்: இப்படியே உன் காதல் மிகுந்த ஸ்பரிசத்தால் என் வனவாச நாட்களை எல்லாம் ஒவ்வொன்றாகத் தொடுத்து அழகான மாலையாகக் கட்டிவிடுவாயல்லவா என்று எண்ணுகிறேன். அப்படித் தொடுக்கும் மாலையை அழியாத ஆனந்தத்தின் அடையாளமாக நான் அணிந்து கொண்டு வீடு திரும்புவேன்.

சித்திராங்கதை: இக்காதலுக்கு வீடுகூட இருக்கிறதா?

அருச்சுனன்: இல்லை என்று நினைக்கிறாயோ?

சித்திராங்கதை: ஆமாம். இதற்கு வீடு கிடையாது. வீட்டைப் பற்றிப் பேசாதே. வீடு நிரந்தரமானது. நிரந்தரமான பொருள்களையே வீட்டிற்கு எடுத்துச் செல்ல வேண்டும். காட்டில் அலரும் மலர் உலர்ந்து போனால் அதை வீட்டில் வலிய கல்தரையின்மேல் வெறுப்புடன் வீசி எறிந்துவிடுவாயா? இக்காட்டில் ஆயிரக் கணக்கான அரும்புகள் மடிந்து போகின்றன. இளந்தளிர்கள் விழுந்து விடுகின்றன. தாதுக்கள் சிந்தி விடுகின்றன. அற்ப வாழ்வுடைய இவை கணந்தோறும் தோன்றி மறைந்தவண்ணமே இருக்கின்றன. என் இன்ப விளையாட்டு முடிந்தவுடன் நானும் இக்காட்டின் நூற்றுக் கணக்கான இன்பங்கள் முடிவது போல உதிர்ந்து விடுவேன். யாருடைய நெஞ்சிலும் எத்தகைய துக்கமும் எஞ்சியிராது.

அருச்சுனன்: இவ்வளவுதானா?

சித்திராங்கதை: இவ்வளவேதான் வீரனே! இதற்காக நீ ஏன் கவலைப்படுகின்றாய்? உன் வனவாச காலத்தில் எது உனக்கு இன்பம் அளித்ததோ அதை அந்நாட்கள் முடியு முன் பரிபூர்ணமாக நுகர்ந்துவிடு. அதன் கால அளவை

மீறி அதைக் கட்டுப்படுத்தி வைத்தால் இன்பம் துன்பமாக மாறிவிடும். கிடைப்பதை அநுபவித்து விடு; அது எவ்வளவு காலம் நீடிக்கின்றதோ அது வரையில் அதைச் சுவைத்துவிடு. காதல் பெருக்கெடுத்து ஓடும் காலைப் பொழுதில் உனக்குக் கிடைத்த சுகத்தைவிட மேலானதாக உன் ஆசை நிறைவேறிய மாலைப் பொழுதில் எதிர் நோக்கி நில்லாதே.

பகல் கழிந்தது. இந்த மாலையைக் கழுத்தில் அணிந்து கொள். களைத்திருக்கும் என் உடலை உன் கரங்களால் வலிய அணைத்துக்கொள். நமது அதரங்கள் ஒன்று கூடுவதால் அதிருப்தி என்ற பொய் உணர்ச்சி அகலட்டும். இதோ, என் கைகளின் அணைப்பிற்குள் வா, வா! காதலை வென்று கலவியின் அமுதமயமான தோல்விக்குள் உன்னைச் சிறைப்படுத்துகின்றேன்.

அருச்சுனன்: அன்பே! அதோ! அதைக் கேள். இக்கானகத்திற்கு வெளியில் மிகத் தொலைவில் இருக்கும் வீடுகளில் தெய்வத்திற்குத் தீபாராதனை செய்யும் காலத்தில் மக்கள் ஊதும் சங்குகளின் இன்னிசை ஒலிக்கிறது.

## மன்மதனும் வசந்தனும்

மன்மதன்: தோழ! நான் ஐங்கணைகளை உடையவன். ஒரு கணையில் சிரிப்பு; மற்றொன்றில் கண்ணீர். ஒன்றில் நம்பிக்கை; பிறிதொன்றில் அச்சம். ஒரே கணையில் ஊடலையும் கூடலையும், ஆசையையும் அச்சத்தையும், சுகத்தையும் துக்கத்தையும் ஒரு கணத்தில் விளைவிக்க வல்லவன் நான்.

வசந்தன்: நான் களைத்துவிட்டேன், தோழ! சிறிது ஓய்வு கொடு. அனங்கனே! உன் போரை முடித்துவிடு. நான் இன்னும் எவ்வளவு காலம் உன் பெருந் தீயை என் ஆலவட்டத்தால் விசிறி எரியச் செய்வதற்கு முடியும்? சில சமயம் உறக்கம் கண்ணைச் சுற்றுகிறது; விசிறி கையிலிருந்து நழுவுகிறது; எரியும் நெருப்பு வெளுத்த சாம்பரால் மூடப்பட்டுவிடுகிறது; நான் சட்டென்று விழித்துக்

கொண்டு புதிய மூச்சுடன் அதை ஊதி மீண்டும் கொழுந்துவிட்டு எரியுமாறு செய்கின்றேன். போதும், நண்பனே! இனி எனக்கு விடை அளித்து விடு.

மன்மதன்: நீ எப்பொழுதுமே நிலையற்ற ஒரு குழந்தை என்பது எனக்குத் தெரியும். ஒருவிதத் தளையுமின்றி நீ பூவுலகிலும் வானுலகிலும் உன் விளையாட்டை நடத்து கிறாய். தனிமையில் நீ எப்பொருளைச் சிறிது சிறிதாக நெடுங்காலம் அழகு செய்கின்றாயோ அதை ஒரு நொடி யில் புழுதி மீது எறிந்துவிடுகிறாய். அதை மீண்டும் நீ திரும்பிக்கூடப் பார்ப்பதில்லை. இன்னும் சில நாட்களே எஞ்சியுள்ளன. இன்பம் நிறைந்த நாட்கள், உதிரும் இலைக் குவியலைப் போல் உன் சிறகுகளில் இருந்து எழும் காற்று வேகத்தில் பறந்து செல்கின்றன. இன்ப மய மான வருடம் ஏறக்குறைய முடிந்துவிட்டது.

## 6

# காட்டில் அருச்சுனன்

அருச்சுனன்: கனவில் கண்ட மாணிக்கத்தைக் காலையில் துயில் எழுந்தவுடன் பெற்றது போல் இருக்கின்றது. அதை வைக்கத் தக்க இடமும் பதிக்கத் தக்க மணி முடியும் இவ்வுலகில் இல்லை. அதைக் கோக்கத் தகுந்த சரடும் இல்லை. அதை வீசி எறிந்துவிட்டுச் செல்லக் கூடிய கீழ்மகன் நான் அல்லன். க்ஷத்திரியனாகிய என் னுடைய கைகள் அதனுடன் இரவு பகலாகப் பிணைக்கப் பட்டுத் தொழிலற்றுக் கிடக்கின்றன.

சித்திராங்கதை: ஆழ்ந்து என்ன சிந்தனை செய்து கொண் டிருக்கிறீர்கள்?

அருச்சுனன்: வேட்டையைப் பற்றிச் சிந்தித்துக்கொண் டிருக்கின்றேன். அதோ பார்! தொலைவில் இருக்கும் அந்த மலைகளின்மேல் பெருமழை பெய்திருக்கிறது. இக் காட்டிற்குள் நிழல் இருள் போலப் பரவி இருக்கின்றது. மலை அருவி வெள்ளமெனப் பரந்து பாய்ந்து இறுமாப் புடன் பெரு முழக்கம் செய்து அதன் கரைகளின் மேல் எழும் சிற்றொலிகளை அசட்டை செய்கின்றது. இவ்வாறு முன்னொரு நாள் மழை பெய்த காலத்தில் சகோதரர்

களாகிய நாங்கள் ஐவரும்[1] சேர்ந்து சித்ரக வனத்தில் வேட்டையாடச் சென்றது இப்பொழுது நினைவிற்கு வருகிறது. இரவியின் கதிர்கள் நுழைய முடியாத அக்கானகத்தின் குளிர்ந்த இருளில் நாங்கள் பகற் பொழுதை உற்சாகத்துடன் கழித்தோம். மேகங்களின் இடியையொத்த கர்ஜனையைக் கேட்டு எங்கள் இதயங்கள் நாட்டியமாடின. மழையின் பேரொலியாலும் நீரோடைகளின் சலசலவென்ற ஓசையாலும் எங்கள் காலடிச் சப்தம் நாங்கள் பின்தொடர்ந்த மானின் செவியில் விழவில்லை. சிறுத்தைப் புலி தன் கால் நகங்களைக் காட்டு வழியில் சேற்றில் பதித்து அடையாளமிட்டுக் கொண்டே தன் குகைக்கு வழிகாட்டிச் சென்றிருந்தது. மயில்களின் அகவல் காடெங்கும் ஒலித்தது. வேட்டை முடிந்தவுடன் நாங்கள் ஐவரும் பந்தயம் போட்டுக் கொண்டு மழையின் வள்ளன்மையால் இறுமாப்போடு பெருகிக் கரை புரண்டு ஓடும் ஆற்றை நீந்திக் கடந்தோம். அன்று போலவே இன்றும் வெளிக் கிளம்பி வேட்டையாட வேண்டும் என்று என் மனம் பேரவாக் கொண்டு நிற்கின்றது.

சித்திராங்கதை: வில்லாளியே! நீ இப்பொழுது மேற்கொண்டிருக்கும் வேட்டை முதலில் முடியட்டும். பொன் நிறங் கொண்ட இந்த மாய மான் உன்னிடம் சரண் அடைந்து விட்டது என்று நீ உறுதியாக நம்புகிறாயா? அதுதான் இல்லை. இந்தக் காட்டுமான் தன் வசத்தில் தன்னையே கட்டுப்படுத்தி வைத்துக் கொள்ள இயலாதது. கனவு போல என்றோ ஒரு நாள் திடீரென்று மறைந்துவிடும். சிறிது காலமே துள்ளி விளையாட இணங்கும். வாழ்நாள் முழுவதும் அடிமைத்தளையில் கட்டுப்பட மறுக்கும். அதோ பார்! காற்றும் மழையும் ஒன்றோடு ஒன்று விளையாடுவதை. காற்றின் முதுகின்மேல் மழை ஆயிரம் சரங்களை எய்வதுபோல் பொழிகிறது. ஆயினும் காற்று ஒரு காட்டுமானைப் போல் கட்டுப்படாமல் துள்ளிக் குதித்துத் தாண்டவம் ஆடுகின்றது. தலைவ! உனக்கும் எனக்கும் இடையே அத்தகைய விளையாட்டே நிகழ்ந்துகொண் டிருக்கின்றது. பெருமழை பொழியும் இந்நாளில் நீ உன் உயிரைப் பந்தயம் வைத்துச் சஞ்சலம் நிறைந்த என்னை வேட்டையாட வேண்டும். உன் அம்புறாத் தூணியில் எத்தனை சரங்களும் அஸ்திரங்களும் உள்ளனவோ அவற்றை எல்லாம் என் மேல் முழுமனத்

---

1. பஞ்ச பாண்டவர்

துடன் இன்று நீ ஏவ வேண்டும், சில சமயம் கார் இருள் சூழும்; சில சமயம் மின்னல் பளிச்செனப் புன்னகை பூக்கும்; சில சமயம் குளிர்ந்த மழை பொழி யும்; சிலசமயம் நெருப்புடன் கூடிய பேரிடி விழும்; ஆயினும் இம் மாயமான் கார்மேகங்கள் கவினுற வானில் சூழ்ந்த இவ்வையத்து எப்பொழுதும் தளையின்றித் திரிந்துகொண்டே இருக்கும்.

## மன்மதனும் சித்திராங்கதையும்

ராங்கதை: மன்மதனே! என் உடல்மீது நீ அணிவித் திருக்கும் புதுமைப்பொருள் என்னவென்று என்னல் அறியமுடியவில்லை. நெடுமயக்கத்தைத் தரும் மதுவைப் போல அது என் இரத்தத்துடன் கலந்து என்னை உன்மத் தம் பிடித்தவளாகச் செய்துவிட்டது. மதங்கொண்ட மான்போல் வேகத்திஞல் இறுமாந்த நான் அவிழ்ந்த கூந்தலும் நெகிழ்ந்த துகிலும் காற்றில் பறக்க, இந்த உலகத்தைத் தாண்டி அதிவேகத்துடன் ஓடிக்கொண் டிருக்கிறேன். மேகவண்ணனும் வில்லாளியுமான என் வேடனை மிகவும் களைத்து ஏறக்குறைய ஆசையை இழந்தவனுகச் செய்து அவனைச் சாலைதோறும் வனந் தோறும் திரியுமாறு செய்துகொண்டிருக்கிறேன். நான் அடைந்த வெற்றிச் செருக்கால் தயையற்றவளாகிப் பரி காச நகை புரிகின்றேன். இந்த விளையாட்டை ஒரு கணம் நிறுத்திஞல் துயரக் குரலின் ஒலி என் இதயம் நிறையப் புகுந்து அதை வெடிக்கும்படி செய்துவிடுமோ என்று என் மனம் அஞ்சுகிறது.

மன்மதன்: பொறு. உன் காதல் விளையாட்டை நிறுத்தி விடாதே. உண்மையில் இது என் விளையாட்டே. என் கணைகள் விரைந்து தாக்கட்டும். இதயங்கள் பிளக்கட் டும். இக்காட்டில் இன்று இப் பெருமழையில்தான் என் வேட்டை நிகழப் போகிறது. அவனைக் களைப்படையு மாறு செய்து உன் காலடியில் வீழ்த்திவிடு; உனது இறு கிய பாச வலையால் அவனைப் பிணைத்துவிடு. கருணை காட்டாதே. உன் மலர்ச் சிரிப்பால் அவனைத் தகர்த்

தெறி. நஞ்சு கலந்த அமுதம் தோய்ந்த உன் சொல் லம்புகளை அவன் மார்பிலே செலுத்து. வேட்டையாடும் போது இரக்கத்திற்கு இடமில்லை.

# 8

# அருச்சுனனும் சித்திராங்கதையும்

அருச்சுனன்: அன்பே! உன் இல்லம் எங்கே உன்னைப் பிரிந்து உன் பெற்றோரும் சுற்றத்தாரும் வருந்தமாட்டார்களா? நீ எவ்விடத்தை உனது அன்பினு லும் ஆதரவினாலும் அனவரதமும் இன்பம் பெருகி அமுத வெள்ளத்திலே மிதக்கும் வண்ணம் செய்தாயோ, அவ்விடத்தில் ஒளி வீசிக் கொண்டிருந்த சுடரை ஊதி அணைத்துவிட்டுக் காட்டிற்கு வந்தனை போலும்! உன் இளமை நினைவுகள் எப்போதாயினும் சென்று ஒரு கணம் கண்ணீர் உகுக்கும் இடம் ஒன்று இல்லையா?

சித்திராங்கதை: இக்கேள்வி இப்பொழுது பிறப்பதற்குக் கார ணம் என்ன? இன்பம் உனக்குக் கசந்து விட்டதோ? நான் உனக்கு முன் தோன்றும் இப்பெண் உருவமே தவிர வேறில்லை. எனக்கு அடைமொழிகள் வேறு ஒன் றும் இல்லை. அதோ அந்தப் பூவரச மரத்தின் இலை நுனியில் காலையில் ஒரு பனித்துளி தொங்கிற்றே, அதற்கு ஊர், பெயர் ஏதேனும் உண்டா? அது எங் கிருந்து வந்தது என்று யாரேனும் கேட்டார்களா? நீ இதுவரையில் காதலித்து வந்த மங்கை அந்தப் பனித் துளியைப் போன்றவள். அவளுக்குப் பெயரோ இல்லமோ கிடையாது.

அருச்சுனன்: அவளுக்கு இவ்வுலகில் ஒருவிதத் தளையும் கிடையாதா? சுவர்க்கத்தின் ஒரு துளி தவறிப்போய் பூவுலகின்மீது சிந்தியதைப் போன்றவளா அவள்?

சித்திராங்கதை: ஆம். அவள் அத்தகைய பெண்மணிதான். கானகத்து மலர்கள் தம் அழகொளியை அவளுக்குச் சிறிது காலமே பரிசாக வழங்கியுள்ளன.

அருச்சுனன்: அதனால்தான் உன்னை இழந்துவிடுவேனோ என்ற கவலை என் உள்ளத்தை வருத்துகிறது. மனத்தில் நிறைவு தோன்றவில்லை; அமைதியும் நிலவவில்லை.

கிடைத்தற்கு அரிய செல்வமே! இன்னும் சற்று அருகில் வா. உன் பெயர், இருப்பிடம், குலம், மனம், மொழி, மெய் முதலிய அனைத்தையும் கொண்டு என்னை ஆயிர வகையான பிணைப்புக்களால் பிணைத்துவிடு. உன்னை நான்கு புறங்களிலிருந்தும் தழுவி உன்னிடம் அச்சமின்றிச் சரண்புகுந்துவிடுகிறேன். உனக்குப் பெயர் இல்லையா? அப்படியானால் என் இதயக் கோயிலில் எப்பெயர் கொண்டு உன் காதல் மந்திரத்தை ஜபிப்பேன்? உனக்குக் குலம் இல்லை எனில் தாமரையாகிய உன்னை என் கரங்களில் ஏந்துவதற்குப் பற்றுக் கோடான தண்டு எங்கே இருக்கின்றது?

சித்திராங்கதை: இல்லை, இல்லை. நீ சிறை செய்ய விரும்புபவள் எப்பொழுதும் ஒருவிதத் தளையும் அறியாதவள். அவள் மேகங்களின் பொன் மயமான இரேகையையும், மலர்களின் நறுமணத்தையும், அலைகளின் சலனத்தையும் ஒத்தவள்.

அருச்சுனன்: இத்தகைய ஒரு வனிதையைக் காதலிப்பவன் துரதிருஷ்டசாலி. அன்பே! காதலின் கையில் காற்றுருவம் கொண்ட ஒரு மலரை அளிக்காதே. இன்பத்திலும், துன்பத்திலும் நன்னாளிலும் தீ நாளிலும் காதல் தன் இதயத்திலே வைத்துப் போற்றத் தகுந்த ஒரு செல்வத்தை நீ வழங்க வேண்டும்.

சித்திராங்கதை: ஓர் ஆண்டுகூட இன்னும் கழியவில்லை. அதற்குள் உனக்கு வெறுப்புத்தட்டி விட்டதே. அந்தோ, அந்தோ! ஒரு மலரின் குறுகிய ஆயுளே கடவுள் அதற்கு அளிக்கும் சிறந்த வரம் என்பதை இப்பொழுதுதான் நான் உணர்கிறேன். ஓடி மறைந்த வசந்த காலத்தில் வாடி உதிர்ந்த மலர்க் கூட்டங்களுடன் என்னுடைய இவ்வழகான உடலும் மறைந்துபோயிருப்பின் அது அன்பின் அணைப்பிற்குள் இறந்திருக்கும். அருச்சுனா! எஞ்சியுள்ள நாட்கள் சிலவே உள்ளன. மிகுந்துள்ள இந்நாட்களில் உன் வேட்கை தீர இன்பத் தேனை இறுதி வரையில் பருகிவிடு. முந்தைய நாள் மாலைக் காலத்தே மலர்ந்து உதிர்ந்த குருக்கத்தி அரும்பைப் தாகங் கொண்ட தேன்வண்டு தேடி வருவதுபோல, பழைய நினைவுகளால் இழுக்கப்பட்டு மீண்டும் மீண்டும் வராதே.

# 9
# காட்டில் வாழும் மக்களும் அருச்சுனனும்

காட்டுமக்கள்: ஐயோ! எங்களை யார் காப்பாற்றுவார்கள்?

அருச்சுனன்: என்ன நிகழ்ந்தது?

ஒருவன்: வடக்குத் திசையிலுள்ள மலைகளிலிருந்து கொள்ளைக் கூட்டத்தினர் மலையருவியின் வேகத்துடன் எங்கள் வீடுகளைச் சூறையாட வந்துகொண் டிருக்கிறார்கள்.

அருச்சுனன்: இந்த நாட்டில் மக்களைக் காப்பவர் ஒருவரும் இல்லையா?

ஒருவன்: கொடியவர்களை அடக்குவதற்கு இந் நாட்டின் இளவரசி சித்திராங்கதை இருந்தாள். அவள் இருந்தபொழுது யம பயத்தைத் தவிர வேறு ஒரு பயமும் இந்த நாட்டில் இல்லை. அவள் இப்பொழுது தீர்த்த யாத்திரை செய்யும் விருப்பத்துடன் அஞ்ஞாத வாசம் புரிவதாக நாங்கள் அறிகிறோம்.

அருச்சுனன்: இந்நாட்டைப் பெண்ணா ஆள்கிறாள்?

ஒருவன்: ஆம். அவள் குடிகளைத் தந்தையைப் போல் காப்பாற்றுபவள்; தாயைப் போல் அன்பு செலுத்துபவள்; வீரத்தில் இளவரசனுக்கு ஒப்பானவள்.

[செல்கின்றனர்.]

[சித்திராங்கதை வருகிறாள்.]

சித்திராங்கதை: தலைவ, என்ன சிந்தனையோ?

அருச்சுனன்: இந்நாட்டின் இளவரசி சித்திராங்கதையை நான் கண்டதில்லை. எனினும் என் மனம் அவளையே நினைக்கிறது. தினமும் அவளைப் பற்றிப் புதிய புதிய புகழ் உரைகளைக் குடிமக்களிடம் இருந்து நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

சித்திராங்கதை: அவள் அழகு சிறிதும் அற்றவள். குரூபி: எனக்கு இருப்பதுபோன்ற அழகிய வளைந்த புருவங்களும் கருவிழிகளும் அவளுக்கு இல்லை. அவள் தன் வலிய கரங்களால் வில்லை ஏந்தித் தன் கணையால் இலக்கைச் சிதறச் செய்து விடுவாள். ஆனால் ஒரு வீரனை மென்மை பொருந்திய கரங்களாகிய நாகபாசத்தால் பிணைக்கும் கலையை அவள் அறியாள்.

அருச்சுனன்: அவள் வீரத்தில் ஆண்மகனை யொத்தவளே

தவிர அன்பிற்குப் பெண்மையே உருவானவள் என்றல்லவா கேள்விப்பட்டேன்!

**சித்திராங்கதை:** சீச்சீ! அதுவே அவளது துரதிருஷ்டம். ஒரு பெண் பெண்மை நிறைந்தவளாகவும், உலகின் அணிகலனுகவும் ஒளிரும் காதலுக்கு உறைவிடமாகவும் நூறு வித இனிய நடிப்புக்களை உடையவளாகவும் விளங்கித் தன் கணவனிடம் கெஞ்சியும், கொஞ்சியும், கோபித்தும், நகைத்தும், அழுதும் அவனைப் பேணிப் பணிவிடை செய்வாளாகில் அவளுடைய வாழ்வு பயனுடையதாகும். தொழில், கல்வி, வீரம், வலிமை, புகழ், இவற்றால் அவளுக்கு என்ன பயன்? அன்ப! நீ நேற்று அவளை இக்காட்டு வழியின் அருகிலோ, இந்தப் பூர்ணு நதிக் கரையிலோ அந்த சிவாலயத்திலோ கண்டிருந்தால் நகைத்துச் சென்றிருப்பாய். அந்தோ! இன்று உனக்குப் பெண்மையின் இயற்கை அழகு மீது வெறுப்புண்டாகி, ஆண்மையின் வலிமையைப் பெண்ணிடம் சுவைக்க விரும்புகிறுய் போலும்!

தலைவ! எழுந்து வா: அதோ பார்! அந்த மலையின் குகைவாயிலில் அடர்ந்த நிழலில் பசுமையான இளந் தளிர்களைப் பரப்பி நம் பகற் படுக்கையை அமைத்து அதை மலை அருவியின் நீர்த்துளிகளால் குளிர்வித்திருக்கிறேன். செறிந்த கொடி வீட்டின் நிழலில் அமர்ந்திருக்கும் புரு களைத்த குரலில், ‘பொழுது கழிகிறது; பொழுது கழிகிறது’ என்று கூவுகின்றது. மர நிழலில் அருவி சலசல என ஓடிக்கொண்டிருக்கின்றது. அதன் தெளிந்த நீரில் அடியில் உள்ள கற்களுக்கு இடையே இங்கும் அங்கும் படிந்த குளிர்ந்த பாசி தன் மெல்லிய அதரங்களினுல் நமது கண்களை முத்தமிடுகின்றது. எழுந்து வா, ஆருயிரே! இளைப்பாறச் செல்வோம்.

**அருச்சுனன்:** அன்பே! இன்று வேண்டாம்.

**சித்திராங்கதை:** ஏன்!

**அருச்சுனன்:** கொள்ளைக்கூட்டங்கள் கிராமங்களைத் தாக்க வந்துகொண்டிருக்கின்றனவாம். அச்சத்தால் நடுங்கும் மக்களை நான் சென்று காப்பாற்ற வேண்டும்.

**சித்திராங்கதை:** தலைவ! ஒன்றும் பயப்பட வேண்டியதில்லை. அரசகுமாரி சித்திராங்கதை தீர்த்த யாத்திரை செய்வதற்குப் புறப்படுமுன் மிகுந்த ஜாக்கிரதையுடன் ஆங்காங்கு காவல் புரிய யுத்த வீரர்களை நிறுத்தி ஆபத்து அணுகக் கூடிய ஒவ்வோர் வழியையும் அடைத்துவிட்டுச் சென்றிருக்கிருள்.

அருச்சுனன்: ஆயினும், க்ஷத்திரியனுடைய கடமையை ஒரு முறையேனும் செய்வதற்கு, அன்பே, எனக்கு அநுமதி கொடு. என் கைகள் நெடுங்காலமாகச் சோம்பலுற்றுத் தினவெடுக்கின்றன. சிற்றிடையாளே! பல நாட்களாகப் புகழ் குன்றி வரும் இவ்விரு புயங்களுக்கும் புதிய புகழை யளித்து அவற்றை உன் அழகிய சிரத்திற்குகந்த தலை அணைகளாகச் செய்வதற்கு விரும்புகின்றேன்.

சித்திராங்கதை: நீ செல்வதற்கு நான் அநுமதி தராமல் உன்னை என் அணைப்பிற்குள் சிறை செய்துவிட்டால் தளையை அறுத்துக்கொண்டு நீ ஓடி விடுவாயோ? அங்ஙனமாகில் அவ்விதமே ஓடிவிடு. ஆயினும் அறுந்த கொடி மீண்டும் ஒன்று கூடுவதில்லை என்பது மாத்திரம் நினைவு இருக்கட்டும். உனக்குத் திருப்தி ஏற்பட்டுவிட்டால் நீ செல்லலாம். நான் உன்னைத் தடுக்க மாட்டேன். திருப்தி ஏற்படவில்லையானால் இன்ப லட்சுமி யார் பொருட்டும் காத்திருக்க மாட்டாள் என்பதை நினைவில் வைத்துக்கொள். அவள் யாருக்கும் அடிமை அல்லள். மக்களே அவளுக்கு அடிமை செய்து அச்சத்துடன் அவளுடைய புன்னகைக்காக இரவு பகலாகக் காத்திருக்கின்றனர். இன்பம் என்ற அரும்பைக் காலையில் விட்டுச் சென்று வேலை முடிந்து மாலையில் வந்து நோக்கினல் அது முதலில் மலர்ந்து, பிறகு வாடி, இறுதியில் இதழ்கள் உதிர்ந்து காணப்படும். எடுத்த முயற்சிகள் அனைத்தும் வீண் என்றே தோன்றும். எப்பொழுதும் நீங்காத மனக்குறை வாழ்நாள் முழுவதும் மனத்தை வருத்தும். தலைவ! இங்கு வந்து உட்கார். இன்று ஏன் இந்த அசட்டை? உன் மனம் யாரைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கிறது? சித்திராங்கதையைக் குறித்தா? அவளுக்கு இன்று ஏன் இந்தப் பேரதிர்ஷ்டம்?

அருச்சுனன்: அந்த வீரப் பெண்மணி எதை விரும்பிக் கடுமையான விரதத்தை மேற்கொண்டிருக்கிறாள்? அவளுக்கு என்ன குறை இருக்கக்கூடும்?

[சித்]திராங்கதை: என்ன குறையா? அந்த அபாக்கியசாலியிடம் எப்பொருள் இருந்தது? அவளது வீரம் என்ற நெருங்க முடியாத, வானளாவிய கற்கோட்டையின் நான்கு சுவர்களுக்கிடையே கண்ணீர் உகுக்கும் ஒரு மங்கையின் இதயம் சிறை வைக்கப் பெற்றிருந்தது. பெண்கள் என்றுமே தங்கள் உணர்ச்சிகளை வெளிக் காட்டாமல் இதயத்திற்குள்ளேயே மறைத்து வைப்

பார்கள். ஆகவே அவள் இதயத்தின் பிரதி பிம்பம் உடல் வனப்பில் காணப்படாவிட்டால் யார் அவளைக் கண்டுகொள்ள முடியும்? அவளுக்கு என்ன குறையா? அருணனின் பொன்னொளி அணுகாத விடியற்காலையைப் போல் தன் இருளால் தானே கனத்துச் சூழப்பட்ட அம் மடந்தை தன் வீரம் என்னும் மலையுச்சியின் மேல் என்றுமே தனித்து அமர்ந்திருந்தாள் ஆகில், அவளுக்கு என்ன குறை? போதும் அவளைப் பற்றிய பேச்சு. நிறுத்து. அவள் வரலாறு ஆண்களின் செவிக்கு இன்பம் அளிக்கவல்லதன்று.

அருச்சுனன்: சொல், மேலும் சொல். அவளைப்பற்றி மேலும் மேலும் கேட்க வேண்டும் என்ற ஆவல் எனக்கு அதிகரிக்கிறது. என் நெஞ்சோடு அவள் நெஞ்சம் கலந்தாற் போன்ற உணர்வினை நான் பெற்றுள்ளேன். நள்ளிரவில் வழிப்போக்கனாக ஓர் அற்புத நாட்டிற்குள் நான் புகுந்தது போல் இருக்கிறது. உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் அந்த மாபெரும் நாட்டின் ஆறுகளும், மலைகளும், காடுகளும், நிலங்களும், மேல் மாடங்களின் வெண்ணிறச் சிகரங்களும் நிழல்போல மங்கிக் காட்சி அளிக்கின்றன. கடலின் பேரொலியும் காதில் விழுகிறது. பொழுது புலர்ந்ததும் நாற்புறங்களிலும் வியப்பை விளைவிக்கும் விசித்திரக் காட்சிகள் தோன்றும். பேராவலுடன் அவற்றைக் காண நான் காத்திருப்பதுபோல் இருக்கின்றது. இத்தகைய மனோ வேட்கையை எழுப்பியுள்ள அவள் வரலாற்றைச் சொல்; சொல்.

சித்திராங்கதை: அவளைக் குறித்து நீ இன்னும் என்ன கேட்க விரும்புகின்றாய்?

அருச்சுனன்: அவளை என் மனக் கண் முன்னால் தெளிவாகக் காண்கிறேன். குதிரையின் மேல் அமர்ந்து அலட்சியமாக இடது கையில் கடிவாளத்தையும் வலது கையில் வில்லோடு அம்புகளையும் ஏந்திக் கொண்டு, மகிழ்ச்சி பொங்கும் நகரத்தில் விஜயலட்சுமி பிரவேசிப்பதுபோல் பிரவேசித்துக் குடி மக்களுக்கு அபயம் அளிக்கிறாள். அரசனுடைய மாட்சிமை நுழைவதற்கு நாணுகின்ற ஏழை மக்களது குடிசைகளின் சிறுவாயில்களுள் அவள் புகுந்து தாயைப் போல் அன்பை வழங்குகின்றாள். பெண் சிங்கம் தன் குட்டிகளைக் காப்பதுபோல் அவள் குடிகளைக் காக்கிறாள். அச்சத்தினால் பகைவர் அவளை அணுகுவதில்லை! சிங்கத்தின் மீதூர்ந்த தேவி ஜகத்தாத்ரியைப்

போல் அவள் அச்சத்தை விட்டு நகை தவழும் முகத்துடன் தயையின் வடிவாகத் திரிகின்ருள். ஒரு பெண்ணின் அழகிய இரு கைகளிலும் உள்ள சங்கோஜமற்ற இயல்பான வலிமை அவளது கைவளையல்கள் குலுங்க எழும் ஓசையை விடச் சாலச் சிறந்தது. அழகியே! நெடுங்காலம் செயலற்றுக் கிடந்த என் உள்ளம், குளிர் காலத்தின் பெரும் உறக்கத்தில் இருந்து விழித்தெழும் பாம்பைப் போல் அமைதியற்று எழுகின்றது. புறப்படு. இரண்டு சிறந்த குதிரைகளின் மீது ஏறிக்கொண்டு வானிடைத் தோன்றும் இரு வால் நட்சத்திரங்களைப் போல அதிவேகமாகச் சென்றுவிடுவோம். இக்கானகத்தின் அசைவற்ற காற்றையும், மிக்க நறுமணத்தால் மயக்கம் தரும் மலர்ச் சூழலில் நெடுந்துயில் புரியும் பேரிருளையும் விட்டு வெளியேறுவோம்.

சித்திராங்கதை: குந்திபுத்திர! இந்த சௌந்தரியத்தையும் நாணத்தையும், தீண்டிஞல் வருந்துகின்ற கரு நெய்தல் மலரை யொத்த மென்மையுடைய இவ்வுருவத்தையும், நான் இரவல் பெற்ற உடைகளைக் களைவது போலக் களைந்து வெறுப்புடன் தரைமீது எறிந்து விட்டால் அதை உன்ஞல் தாங்கமுடியுமா? பெண்களின் வஞ்சனை என்ற மாய மந்திரத்தைக் கைவிட்டுச் சிறந்த மனோ பலத்துடன் மலையுச்சி மீது செழித்து நிற்கும் மரம் காற்று வேகத்தால் தன் கிளைகளை அசைத்து நிற்பது போல் கம்பீரமாக நின்ருல் அது ஆண்கள் விரும்பக் கூடிய காட்சியா? இல்லை. இல்லை. அதைவிட இதுவே மேல். குறுகிய வாழ்வை யுடைய மாணிக்கமாகிய இளமையை நான் நன்கு அலங்கரித்து வைத்து நீ வரும் வழியை எதிர் நோக்குவேன். அவ்வேளை நீ வருவாயாகில் அமுதத்தை அதிலே நிரப்பி உன் அதரங்களால் நீ பருகும் வண்ணம் செய்வேன். இன்ப நுகர்ச்சியால் நீ களைத்துவிட்டால் உன் கடமையை நிறைவேற்ற நீ சென்றுவிடலாம். என் அழகு வாடிவிட்டால் உன் பக்கலில் நீ அளிக்கும் இடத்தில் நான் பணிந்து அமர்ந்துவிடச் சித்தமாக இருக்கிறேன். இரவின் மதனவிழாவிற்குத் தோழியாக விளங்கும் நான் பகலின் கடமைகளை நிறைவேற்ற உன் உற்ற துணையாக அமைந்து, வலக்கை புரியும் தொழிலை இடக்கை பின் பற்றுவதுபோல எப்பொழுதும் சித்தமாக இருந்தால் அதை வீரனுகிய நீ விரும்புவாய் அல்லவா?

அருச்சுனன்: அன்பே! உன் மர்மத்தை என்னுல் அறிய

முடியவில்லை. இவ்வளவு காலம் நான் உன்னுடன் வாழ்ந்தும் உன்னுடைய உண்மை உருவத்தைக் கண்டு கொள்ளவில்லையே! ஏதோ ஓர் இரகசியத்தை வெளியிடாமல் என்னை நீ வஞ்சனை செய்கிறாய். சிலைக்குப்பின் மறைந்திருக்கும் ஒரு பெண் தெய்வத்தைப் போல நீ எனக்கு மாணிக்க முத்தங்களையும் ஆலிங்கனஅமுதத்தையும் வழங்குகின்றாய். உனக்கென நீ ஒரு பொருளையும் விரும்புவதில்லை; பெற்றுக் கொள்வதுமில்லை. இந்த உருவமற்ற, சந்தமில்லாத காதல் ஒவ்வொரு கணமும் என் நெஞ்சிலே வேதனையை உண்டாக்கிக்கொண் டிருக்கிறது. ஒண் சுடரே! உன் மொழிகளுக்கு இடையே இங்கும் அங்கும் உன் உண்மை உருவத்தை ஒரு சிறிது உணர்கிறேன். அதனுடன் ஒப்பிட்டால், இதோ என் முன் நிற்கும் உன் வனப்புமிக்க உருவம் மண் பாவைபோலவும் ஓவிய நிபுணன் வண்ணம் தீட்டிய மாயத்திரை போலவும் காட்சி தருகின்றது. சிலசமயங்களில் உன் அழகுப் போர்வை உனது உண்மை உருவை மறைத்து வைக்க இயலாமல் நடுக்கத்துடன் வெளியிட்டுவிட விரும்புவதுபோல் தோன்றுகின்றது. உன் ஒளிவீசும் புன்னகைக்குப் பின் கண்ணீர் வெள்ளத்தின் சுவடுகள் காணப்படுகின்றன. சிலசமயம் அது விம்மி எழுந்து விழிகளை மறைப்பது போலவும் சில சமயம் திரையைக் கிழித்துக்கொண்டு வெளி வருவது போலவும் தோன்றுகின்றது. ஒரு பயிற்சியாளனிடம் முதலில் பிரமை எனப்படும் மயக்கம் தான் ஒரு அழகான மாயத் தோற்றத்தோடு அணுகும். பின்னரே உண்மையானது எவ்வித அணிகலனும் இன்றிக் காட்சி அளித்து உள்ளும் புறமும் ஒளிபெற்று விளங்கும்படி செய்யும். அத்தகைய உண்மை உன்பால் எங்கு இருப்பினும் அதை எனக்கு அளித்துவிடு. என்னிடம் ஏதேனும் உண்மை இருப்பின் அதை எடுத்துக் கொள். அத்தகைய கூடல் தான் களைப்பை உண்டாக்காமல் நிலையாக விளங்கும்.

அன்பே! ஏன் கண்ணீர் உகுக்கின்றாய்? கைகளால் முகத்தை மூடிக்கொண்டு ஏன் மனம் வருந்துகின்றாய்? ஆருயிரே! உன் மனத்தை நான் புண்ணாக்கிவிட்டேனா? அப்படியானால் நான் கூறியதை மறந்துவிடு. உனது இந்த அழகான உருவத்தை நான் என் நல்வினைப் பயன் என்று கருதுவேன். உன் இளமையாகிய யமுனையின் அக்கரையிலிருந்து வசந்தத்தின் இளந்தென்றலுடன்

கலந்து இடையிடையே மிதந்துவரும் மெல்லிசையே எனது பெரும் பாக்கியம் எனப் போற்றுவேன். இவ் வேதனையே எனக்குப் பேரின்பம்; அழியாத நம்பிக்கை; என் உள்ளத்தைக் காட்டிலும் இனிப்பது. அன்பே, அது என் இதயத்தின் துயர கீதம் என்பதை நீ அறிந்து கொள்.

# 10

# மன்மதன், வசந்தன், சித்திராங்கதை

மன்மதன்: இன்றே கடைசி இரவு.

வசந்தன்: இன்றிரவுப்பொழுது கழிந்தவுடன் உன் எழிலானது வசந்த ருதுவின் எப்பொழுதும் குறையாத கருவூலத்துக்குத் திரும்பிப் போய்விடும். உன் அதரங்கள் அருச்சுனனின் முத்தங்களின் நினைவை இழந்து கொடியில் புதிதாகத் தளிர்த்த இரு இளந் தளிர்களை ஒத்துக் காட்சியளிக்கும். உன் திருமேனி நூற்றுக் கணக்கான வெள்ளை மலர்களை அணிவதால் புது வண்ணத்தோடு மிளிரும். உனது இந்தப் புதிய விழிப்பில் உன் பழம் பிறப்பின் வரலாற்றைக் கனவுபோல் மறந்து விடுவாய்.

சித்திராங்கதை: மன்மத! வசந்த! அப்படியானால் மடியப் போகும் என்னுருவம், அணைய இருக்கும் விளக்கின் இறுதிச் சுவாலையைப் போல், இக் கடைசி இரவில் மிகவும் சுடர்விட்டுப் பிரகாசிக்குமாறு அருள்புரிவீராக.

மன்மதன்: அவ்விதமே ஆகட்டும். தோழ! புத்துயிர் நிறைந்த வேகத்தோடு தென்றலை வீசுவாயாக. களைப்பால் வேகம் அற்ற இளமைப் பெருக்கு புது மலர்ச்சியுடன் மீண்டும் ஒவ்வொரு அங்கத்திலும் பாய்ந்து கரைபுரண்டு ஓடட்டும். நானும் என் ஐந்து மலர்க்கணைகளால் இன்றைய இரவின் உறக்கத்தைப் பிளந்து அணைப்பினுல் ஒன்று கூடும் இவ்விரு காதலர்களின் மேனிகளை இன்ப நுகர்வு என்னும் பேராற்றின் பொங்கி எழும் அலைகளின் இடையில் மூழ்கடித்து விடுகின்றேன்.

# 11

# கடைசி இரவு

ராங்கதை: தலைவ! மன நிறைவு ஏற்பட்டதா? பேரழகும், எழில் வடிவும், வெண்ணெய் போன்ற மென்மையும் உடைய இவ்வுருவம் அளித்த நறுமணத்தையும் செந்தேனையும் முழுவதும் பருகிவிட்டாயா? அல்லது ஏதேனும் எஞ்சி யுள்ளதா? இன்னும் நீ ஏதாவது விரும்புகிருயா? அல்லது என்னிடம் இருந்த அனைத்தையும் சுவைத்தாகிவிட்டதா? இல்லையெனில், அன்பே, என்னிடம் இன்னும் ஒரு பொருள் எஞ்சி யுள்ளது; அது சிறந்ததோ, இழிந்ததோ நான் அதை உனக்கு இன்று அளிக்கப் போகிறேன்.

ஆருயிரே! உன்னைக் காதலித்ததால் நான் கடுந் தவம் இயற்றித் தேவர்களின் நந்தன வனத்திலிருந்து சேகரித்து வந்த இவ் வழகு மலர்க் குவியலைக் கொண்டு உன் திருவடித் தாமரைகளில் அருச்சனை செய்தேன்; என் வழிபாடு விதிப்படி முடிந்துவிட்டதாயின், நீ வாடிக் களைந்த இம்மலர்களைக் கோயிலுக்கு வெளியே எறிந்துவிட உத்தரவு கொடு. இம் முறை நீ உன் மலர்ந்த விழிகளால் உன் அடியாளைக் கருணையோடு நோக்க வேண்டுகின்றேன்;

எம்மலர்களைக் கொண்டு உன்னை நான் வழிபட்டேனே அவற்றைப்போல நான் அழகும் இனிமையும் மென்மையும் பெற்றவள் அல்லேன். என்னிடம் குறைகளும் உள்ளன; குணங்களும் உள்ளன; பாவமும் புண்ணியமும் உள்ளன; சில விருப்புகளும் உண்டு; பிறவி முதல் அடங்காமல் வரும் வேட்கைகளும் உண்டு; புழுதி படிந்த ஆடைகளோடு சம்சாரம் என்னும் பாதையில் நடந்து செல்லும் பாதசாரியாகிய நான் எவ்வாறு மலரின் அழகையும் குறுகிய ஆயுளின் மாசற்ற ஒளியையும் பெற முடியும்? ஆயினும் மங்கையின் உள்ளம் என்ற குறையாத, அழியாத பொருள் ஒன்று என்னிடம் உள்ளது. துன்பம், இன்பம், நம்பிக்கை, அச்சம், நாணம், பலவீனம் முதலிய பூவுலக உணர்ச்சிகள் அனைத்தும் என்னிடம் குறைகளையும், துயரத்தையும், காதலையும் ஒருங்கே கலந்து இழைத்திருக்கின்றன; ஒரு எல்லையற்ற பெரிய குறையும் உள்ளது; மலரின் நறுமணம்

மறைந்துவிட்டது. ஆகையால், இதோ பல பிறவி களிலும் உன்னைப் பூசித்துவரும் அடியாளின் உண்மை உருவைக் காண்பாய்.

[சூரியோதயம்]

[முகமூடியை அகற்றிவிட்டு]

நானே சித்திராங்கதை. பேரரசனின் மகள். அன் றொரு நாள் பொய்கையின் கரைமீதுள்ள சிவாலயத்தில் அழகற்ற தன்னுடலைப் பல ஆடைகளால் மறைத்துக் கொண்டு ஒரு பெண் உன் எதிரில் தோன்றியது உனக்கு நினைவு இருக்கலாம். நாணத்தை விட்டு ஏதோ குறும் பாகப் பேசி ஓர் ஆண்மகனைப் போல் அவள் உன்னை நேசிக்க முயன்றாள். நீ அவளைக் கண்ணெடுத்தும் பாராமல் சென்றுவிட்டாய். நீ செய்தது நன்றே. சாமானிய மடந்தையாகிய அவளை அன்று நீ ஏற்றுக் கொண்டிருப்பின் இறக்கும் வரையில் அவள் நெஞ்சைப் பரிதாபம் வாட்டியிருக்கும். தலைவ! நானே அம் மடந்தை. ஆயினும் அதே மடந்தையும் அல்லள். அது என் மாயத் தோற்றம். பின்னர் வசந்தனின் அருளால் நிலைபெற்ற அழகான உருவைப் பெற்றேன். அம்மாய உருவுடன் வீரனாகிய உன் உள்ளத்தைக் களைப்புறச் செய்தேன். அவ்வுருவமும் நான் அல்லள்.

நான் சித்திராங்கதை. பெண் தெய்வம் அல்லேன். ஆயினும் சாமானியப் பெண்ணும் அல்லேன். தலைமீது வைத்துப் போற்றத்தக்கவளும் இல்லை; ஆயினும் அலட் சியம் செய்து புறத்தே ஒதுக்கத் தக்கவளும் இல்லை. உனக்கு இன்னல் நேரும்போது என்னை உன் பக்கல் வைத்துக்கொண்டு உனது ஆழ்ந்த சிந்தனையின் ஒரு பகுதியை எனக்களித்து, நீ மேற்கொள்ளும் கடும் விரதங் களில் உதவி புரிய எனக்கு அநுமதி தந்து, இன்பத் திலும் துன்பத்திலும் என்னை உன் துணைவியாக்கிக் கொள்வாயாகில் என் உண்மை இயல்பை நீ அறிவாய்.

இன்று என் கருவில் வளர்வது உன் சந்ததி. அது மகனாகப் பிறந்தால் வீரனுக்குரிய பயிற்சிகளைக் குழந் தைப் பருவமுதல் அளித்து இரண்டாம் அருச்சுனனாகச் செய்து என்றாே ஒரு நாள் தந்தையிடம் அடிபணிய அனுப்புவேன். அன்று நீ என் இயல்பை அறிவாய்.

இன்று வெறும் இளவரசி சித்திராங்கதையாக உன் அடிகளில் என்னை அர்ப்பணம் செய்கிறேன்.

அருச்சுனன்: அன்பே! இன்றே நான் பாக்கியவான் ஆனேன்.

## நாடக பாத்திரங்கள்

| | |
|---|---|
| சந்திரமாதவ பாபு: | கல்கத்தாவில் ஒரு கலாசாலையின் ஆசிரியர்; பிரம்மசாரிகள் சங்கத்தின் தலைவர். |
| ஸ்ரீசர், விபினர், பூரணர்: | பிரம்மசாரிகள் சங்கத்தின் அங்கத்தினர்கள். |
| அக்ஷயகுமாரர் | ஜகத்தாரிணியின் மூத்த மாப்பிள்ளை. |
| ரசிகர்: | ஜகத்தாரிணியின் சிறிய தகப்பனார். |
| வனமாலி: | கலியாணத் தரகர். |
| குருதாஸர்: | ஸங்கீத ஆசிரியர். |
| தாருகேச்வரன், மிருத்யுஞ்சயன் | குலீன பிராம்மண இளைஞர்கள். |
| ஜகத்தாரிணி: | ஒரு ஹிந்து விதவை. |
| புரபாலா: | ஜகத்தாரிணியின் மூத்த பெண்; அக்ஷயகுமாரரின் மனைவி. |
| சைலபாலா: | ஜகத்தாரிணியின் இரண்டாவது பெண்: விதவையானவள். |
| நிருபபாலா, நீரபாலா: | ஜகத்தாரிணியின் இளைய பெண்கள். விவாகமாகாதவர்கள். |
| நிர்மலா: | சந்திரமாதவ பாபுவின் மூத்த சகோதரியின் பெண். மணமாகாதவள். |

# முதல் அங்கம்

## முதற் காட்சி:

### அக்ஷயகுமாரரின் ஆபீஸ் அறை

[அக்ஷயகுமாரரும் அவர் மனைவி புரபாலாவும்]

புரபாலா: அவர்கள் உங்களுடைய சொந்தத் தங்கைகளாக இருந்தால் நீங்கள் இப்படி வாயை மூடிக்கொண்டு சும்மா உட்கார்ந்திருப்பீர்களா என்பதைப் பார்த்திருப்பேன்! இதற்குள் ஒவ்வொருத்திக்கும் மூன்று நான்கு வரன் களாவது தேடிப் பிடித்துக்கொண்டு வந்திருப்பீர்களே! ஆனால் அவர்கள் என் தங்கைகள் ஆகையால்—

அக்ஷயகுமாரர்: மனித சுபாவத்தைப் பற்றி நீ அறியாத ரகசியமும் உண்டோ? ஒருவனுடைய சொந்தத் தங்கைக்கும் மனைவியின் தங்கைக்கும் உள்ள நுண்ணிய வித்தியாசத்தை இந்த இளம் பருவத்திலேயே நீ புரிந்துகொண்டிருக்கிறாயே! இதோ பார், புரபாலா! உண்மையாக, என் மாமனின் பெண்களுள் ஒருத்தியையும், பிறருடைய கையில் ஒப்புவிக்க என் மனம் சம்மதிக்கவில்லை. இந்த விஷயத்தில் எனக்குத் தாராள புத்தி கிடையாது என்பதை நான் ஒப்புக்கொண்டே தீர வேண்டும்.

புரபாலா: இதோ பாருங்கள்! உங்களுடன் நான் இப்பொழுது ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டாக வேண்டும்.

அக்ஷயகுமாரர்: ஒரு தீராத உடன்படிக்கைதான் மந்திர கோஷத்துடன் நமது விவாக தினத்தன்றே செய்து முடித்தாகிவிட்டதே! இப்பொழுது மற்றொன்று?

புரபாலா: இல்லை. இது அவ்வளவு பயங்கரமான ஒப்பந்தம் அல்ல. வெறுக்கத்தக்க விஷயமும் அல்ல.

அக்ஷயகுமாரர்: அப்படியானால் வெளிப்படையாகக் கூறி விடு.

[பாடுகிறார்.]

**உன்னுடைய உள்ளம் எண்ணுவது அறியேன்**
**விளம்புக பெண்ணே விருப்பொடு கேட்பேன்**

உன்னுடைக் கண்கள் உகுக்கும் துளிகள்
உரைத்திடும் கதையை உணர்கிலன் நானே

புரபாலா: ஐயா சங்கீத வித்வானே! உமது கச்சேரியை நிறுத்தும். என்னுடைய கோரிக்கை என்னவென்றால்-தினம் எப்பொழுதாவது ஒரு சமயம் இந்தக் கோமாளித் தனத்தை நிறுத்திக்கொண்டு-முக்கியமான விஷயங்களைப் பற்றி ஏதோ ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசுவதற்கு எனக்கு அவகாசம் அளிக்க வேண்டும்.

அக்ஷயகுமாரர்: இதோ பார்! நான் ஏழைக் குடித்தனக் காரன். என் மனைவியை அவள் இஷ்டப்படி பேச விடுவதற்கு வேண்டிய தைரியம் இல்லை. பிறகு திடீ ரென்று ஏதாவது நகை வேண்டுமென்று கேட்டுவிட் டால்— [பாடுகிறார்]

என்மனம் நின்னை ஏங்கியே நாடும்
என்றே யானும் அஞ்சி நிற்கின்றேன்
கண்ணொடு கண்கள் கலவா திருக்கக்
கவிழ்ந்திடு சிரத்தைக் கலங்கி நிமிர்க்கிலன்

புரபாலா: அப்படியானால் போங்கள்.

அக்ஷயகுமாரர்: இல்லை, இல்லை. கோபம் வேண்டாம். சரி, நீ எது சொன்னாலும் கேட்கிறேன். உன்னுடைய 'பரி காச ஒழிப்புச் சங்கத்தில்' அங்கத்தினனாகச் சேர்ந்து சந்தாப் புத்தகத்தில் கையெழுத்துப் போடுகிறேன். இனி மேல் உன்னுடைய முன்னிலையில் மரியாதைக் குறை வாக நடந்துகொள்ள மாட்டேன். சரி. என்ன விஷ யத்தைப் பிரஸ்தாபித்தாய்? என் மைத்துனிகளின் கலியாண விஷயம் அல்லவா? மிக முக்கியமான விஷ யந்தான். சந்தேகம் இல்லை.

புரபாலா: இதோ பாருங்கள். என் தந்தையோ காலமாகி விட்டார். அம்மா உங்களையே நம்பியிருக்கிறாள். உங்க ளுடைய வார்த்தையைக் கேட்டு அவள் என்னுடைய சகோதரிகளை விவாக வயசு கடந்த பிறகுகூட அநேக வருடங்கள் வரையில் படிக்க வைத்து விட்டாள். இப் பொழுது நீங்கள் அவர்களுக்குத் தகுந்த வரன்களைத் தேடி மணம் செய்து வைக்காவிட்டால் என் தாயாருக்கு எத்தகைய அநீதியை இழைத்தவர் ஆவீர்கள் என்பதைத் தீர யோசித்துப் பாருங்கள்.

அக்ஷயகுமாரர்: நீ இந்த விஷயத்தில் ஒருவிதக் கவலையும் அடைய வேண்டாமென்று முதலிலேயே சொல்லிவிட் டேனே. என்னுடைய மைத்துனிகளுக்குக் கணவர்கள் 'கோகுலத்தில்' வளர்ந்து வருகிறார்கள்.

புரபாலா: கோகுலமா? அது எங்கே இருக்கிறது?

அக்ஷயகுமாரர்: நீ எவ்விடத்திலிருந்து அபாக்கிய சாலி யாகிய என்னைப் பிடித்துக்கொண்டு வந்து இந்தக் கோஷ்டியில் சேர்த்துவிட்டாயோ அவ்விடம்தான். அது தான் 'பிரம்மசாரிகள் சங்கம்.'

புரபாலா: பிரம்மதேவனுடன் போர்புரிய முயலும் அந்தக் கூட்டம்தானே?

அக்ஷயகுமாரர்: தேவர்களுக்கு ஈடாக மனிதனால் யுத்தம் புரிய முடியுமா? அது அவர்களுக்குக் கோபத்தையே உண்டுபண்ணும். அதற்காகத்தான் சர்வ வல்லமை யுள்ள நான்முகக் கடவுளின் தனிப்பார்வை இச்சங் கத்தின் மீது விழுந்திருக்கிறது. மூடிய தவலைக்குள் புலால் வெந்து வெந்து பக்குவமாவதுபோல் விவாகம் செய்துகொள்வதில்லை என்ற பிரதிக்ஞைக்குள் அடை பட்டு அவர்கள் எலும்புகள் உள்பட நன்றாக வெந்து பக்குவ்மாகி, மணம் முடித்துக் கொள்வதற் குச் சித்தமாக வெளியே வருகிறார்கள். அப்பொழுது அவர்கள் தின்பதற்குத் தயாராக இருக்கும் மாமி சத்தை ஒத்த பக்குவத்துடன் இருப்பார்கள். ஒரு காலத்தில் நான் இந்தச் சங்கத்திற்குத் தலைவனாக இருந்தேன்.

புரபாலா: அப்படியானால் உங்களுக்கு இந்தக் கதி ஏன் வந்தது?

அக்ஷயகுமாரர்: அந்தக் கதையை ஏன் கேட்கிறாய்? பெண் என்ற வார்த்தையை வாயினால்கூட உச்சரிப்பதில்லை என்ற சபதம் ஆதியில் இருந்தது. ஆனால் கடைசியில் என்னவாயிற்று? கிருஷ்ண பரமாத்மாவின் சகிகளான பதினாயிரம் கட்டழகிகளான கோபியர்களையாவது அல் லது ஒரு வேளை அவர்கள் கிடைக்காவிடினும் மகாகாளி யின் பயங்கரத் தோழிகளான அறுபத்தாறாயிரம் யோகினி களையாவது தேடிப் பிடித்துக் காதல் புரியத் தயாராக இருந்தேன். சரியாக அந்த சமயத்தில் நீ எனக்கு வந்து சேர்ந்தாய். பிறகு நடந்ததுதான் உனக்குத் தெரியுமே!

புரபாலா: அறுபத்தாறாயிரம் யோகினிகளிடம் கிடைக்கும் சுகம் கிடைத்துவிட்டதாக்கும்!

அக்ஷயகுமாரர்: அதை நான் உனக்கு எதிரில் எப்படிச் சொல்ல முடியும்? பெருமையடித்துக் கொள்வதுபோல ஆகிவிடும். சுற்றி வளைத்துச் சொல்வதென்றால், மொத் தத்தில் மகா காளி என்னிடம் கிருபை செய்தாள் என்றே சொல்ல வேண்டும்.

புரபாலா: அப்படியானால் நான் ஒன்று சொல்கிறேன். சிவபெரு

மானுக்கு நந்தி, பிருங்கி முதலிய கணங்கள் ஏராளமாக இருந்ததால், அவர்களுள் ஒருவரை அனுப்பிவைத்து எனக்கு அருள்புரிந்தார் என்றே நான் நினைக்கிறேன்.

அக்ஷயகுமாரர்: அப்படியும் இருக்கலாம். அதனால்தான் நீ இந்த வடிவழகனை குமாரக் கடவுளைக் கணவனாக அடைந்திருக்கிறாய்.

புரபாலா: மறுபடியும் கோமாளித் தனத்தை ஆரம்பித்து விட்டீர்களே!

அக்ஷயகுமாரர்: முருகக் கடவுளைப்பற்றிப் பேசினால் அது பரிகாசமா? உன் மீது ஆணையாகச் சொல்கிறேன். இது தான் எனது நிச்சயமான நம்பிக்கை.

[சைலபாலா வருகிறாள்.]

சைலபாலா: அத்திம்பேரே[1]! உங்களுடைய இளைய மைத்துனிகள் இருவரையும் இன்று நீங்கள்தான் காப்பாற்றவேண்டும்.

அக்ஷயகுமாரர்: அவர்கள் காப்பாற்றப்பட வேண்டிய நிலையில் இருந்தால் நான் இருக்கவே இருக்கிறேன். விஷயம் என்ன?

சைலபாலா: அம்மாவின் உபத்திரவம் பொறுக்க முடியாமல் சிற்றப்பா ரசிகர் எங்கிருந்தோ இரு குலீன பிராம்மண இளைஞர்களைத் தேடிப் பிடித்து அழைத்து வந்திருக்கிறார். என் இரு தங்கைகளையும் அவர்களுக்கு மணம் செய்து கொடுத்து விடுவது என்று அம்மா தீர்மானித்து விட்டாள்.

அக்ஷயகுமாரர்: அடேயப்பா! ஒரே யடியாகக் கலியாணத் தொத்து வியாதி (Epidemic) பிளேக்கைப் போல் பரவுகிறதே! ஒரே வீட்டில் ஒரே சமயத்தில் இரு கன்னிகைகள் மீது படையெடுப்பா? கடைசியில் என்னையும் பிடித்துக் கொண்டு போய் விடுவார்களோ என்று பயமாக இருக்கிறது.

[பாடுகிறார்]

அருகினில் நின்றிடும் நானே
அஞ்சி நடுங்கு கின்றேனே
கருவிழி நாவுடன் சேர்ந்தால்
காப்பது எப்படிக் கூடும்?

சைலபாலா: உமது சங்கீதக் கச்சேரிக்கு இதுதான் தருணமோ?

அக்ஷயகுமாரர்: என்ன செய்வது சைலா? எனக்கு நாகசுரம் வாசிக்கத் தெரியாது. தெரிந்திருந்தால் வாசித்திருப்பேன். என்ன சொன்னாய்? சுப காரியமா? இரு

1. அத்திம்பேர் என்றால் தமக்கையின் கணவன் என்று பொருள்.

மைத்துனிகளுக்கு ஒரே சமயத்தில் கலியாணம். ஆனால்— இவ்வளவு அவசரம் எதற்கு?

சைலபாலா: வைசாக மாதம் முடிந்த பிறகு வருகிற ஆண்டின் ஆரம்பத்தில் நல்ல முகூர்த்த நாள் கிடைக்காதாம்.

புரபாலா: நீ ஏன் முன்னாடியே எல்லாவற்றையும் முடிவு கட்டி விடுகிறாய்? முதலில் வரன் தேடும் விஷயத்தை கவனிப்போம்.

[ஜகத்தாரிணி வருகிறாள்.]

ஜகத்தாரிணி: மாப்பிள்ளை! மாப்பிள்ளை!

அக்ஷயகுமாரர்: ஏன் மாமி!

ஜகத்தாரிணி: உன் பேச்சைக் கேட்டுக்கொண்டு இனிமேல் என் பெண்களை வீட்டில் வைத்திருக்க முடியாது.

சைலபாலா: வீட்டில் வைத்திருக்க முடியாதென்றால் வெளியே துரத்திவிட வேண்டும் என்பது உன் அபிப்பிராயமா?

ஜகத்தாரிணி: அப்படித்தான். உங்களுடைய பேச்சைக் கேட்டால் எனக்கு உடம்பு காய்ச்சல் அடிப்பது போல் எரிகிறது. மாப்பிள்ளை! இதோ பார். சைலா விதவையானவள். அவள் இவ்வளவு படித்துப் பாஸ் செய்து விட்டு என்ன செய்யப் போகிறாள்? அவளுக்கு இவ்வளவு உயர்ந்த படிப்பு எதற்கு?

அக்ஷயகுமாரர்: மாமி! பெண்ணாகப் பிறந்தவளுக்கு ஏதாவது ஒரு பேராபத்து இருந்தே தீரும் என்று சாத்திரங்கள் முறையிடுகின்றன. கணவன் ஓர் ஆபத்து. இல்லாவிட்டால் படிப்பு. அதுவும் இல்லாவிடில் ஹிஸ்டீரியா. இதோ பார். லட்சுமிக்கு விஷ்ணு கணவனாக இருப்பதால், அவளுக்குப் படிப்புத் தேவையில்லை. ஒரு கணவனும் ஓர் ஆந்தையும்[1] போதும். ஸரஸ்வதிக்கோ—கணவனில்லை. ஆதலால் வித்தையை வைத்துக் கொண்டு அவள் பிழைக்க வேண்டி யிருக்கிறது.

ஜகத்தாரிணி: நீ எது வேண்டுமானாலும் சொல். வருகிற வைசாக மாதத்தில் இரு பெண்களுக்கும் கலியாணத்தை முடித்துவிட வேண்டும்.

புரபாலா: ஆம் அம்மா! என் அபிப்பிராயமும் அதுதான். பெண்களுக்குக் காலா காலத்தில் விவாகம் செய்விப்பது தான் அழகு.

அக்ஷயகுமாரர்: (புரபாலாவிடம் ரகசியமாக) ஆமாம், ஆமாம்; கால, அகாலத்தில், அதிலும் — ஒருவனுக்கு

1. சில புராணங்களில் லக்ஷ்மியின் விளையாட்டுப் பறவை ஓர் ஆந்தை என்றும் ஸரஸ்வதி பிரம்மனின் மகள், விவாகம் ஆகாதவள் என்றும் கூறப்பட்டுள்ளது.

மேற்பட்டவர்களை மணப்பது சாஸ்திர விரோதம். ஆகையால் கூடிய சீக்கிரம் கலியாணம் செய்துகொண்டால் கணவர்களை மாற்றிக் கொள்ளப் போதிய அவகாசம் கிடைக்குமல்லவா?

புரபாலா: என்ன உளறுகிறீர்கள்? அம்மாவின் காதில் விழப்போகிறது.

ஜகத்தாரிணி: சிற்றப்பா ரசிகர் இன்று இரு வரன்களை அழைத்துக் கொண்டு வரப் போகிறார். வா, அம்மா, புரபாலா! வருபவர்களுக்கு ஏதாவது சிற்றுண்டி தயார் செய்வோம்.

[ஜகத்தாரிணியும் புரபாலாவும் போகிறார்கள்]

சைலபாலா: இனிமேல் தாமதம் செய்யாதீர்கள், அத்திம்பேரே! இத்தடவை உங்கள் 'பிரம்மசாரிகள் சங்கத்' தின் முக்கிய அங்கத்தினர்களாகிய விபினர், ஸ்ரீசர் ஆகிய இருவரையும் சிறிது தூண்டினால் தான் காரியம் நடக்கும். இருவரும் நல்ல சூடிகையான இளைஞர்கள். நமது நிருபபாலாவிற்கும் நீரபாலாவிற்கும் சரியான ஜோடிகள். நீங்கள் சித்திரை மாதம் வந்ததும் வராததுமாக ஆபீசைத் தோளின் மீது சுமந்து கொண்டு சிம்லா போய்விடுவீர்கள். இந்தத் தடவை அம்மாவை வாயை மூடிக்கொண்டு தொந்தரவு செய்யாமல் வைத்திருப்பது ஒருக்காலும் முடியாது.

அக்ஷயகுமாரர்: அதற்காகத் திடீரென்று சபையின் அங்கத்தினர்களை இவ்வாறு தூண்டினால் அவர்கள் பிரமித்துப் போவார்கள். முட்டையின் ஓட்டை உடைத்து எறிந்து விட்டால் குஞ்சு பொறித்தல் ஆகிவிடுமோ? குஞ்சு வரும்வரை அடைகாக்க வேண்டும். அதற்குக் காலம் பிடிக்கும்.

சைலபாலா: அடைகாக்கும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்கிறேன்.

அக்ஷயகுமாரர்: அப்படியானால் விஷயத்தை இப்பொழுதே வெளிப்படையாகச் சொல்லிவிட வேண்டும்.

சைலபாலா: இதே தெருவில் பத்தாம் நம்பர் வீட்டில் அல்லவா இருக்கிறது அச்சங்கம்? நம் வீட்டு மாடியிலிருந்து பக்கத்து வீட்டு வழியாக அங்கு இறங்கிவிட முடியும். நான் ஆண் வேடம் பூண்டு சங்கத்தில் அங்கத்தினனாகச் சேர்ந்து விடுகிறேன். அதன் பிறகு சபை எத்தனை நாட்கள் நடக்கிறது என்பதைப் பார்த்து விடுவோம்.

அக்ஷயகுமாரர்: அப்படியானால் நானும் மறு ஜன்மம் எடுத்

துக்கொண்டு மீண்டும் அங்கத்தினனுகச் சேர்ந்து விடு கிறேன். ஒரு தடவை உன் அக்காவின் கையில் அகப்பட்டுக்கொண்டு அவஸ்தைப் பட்டாயிற்று. இத்தடவை உன் கையில் அகப்பட்டுக்கொள்கிறேன். பிரம்மசாரியாக இருப்பதன் முக்கிய அநுகூலம் இதுதான். பெண்களின் கண் வீச்சுக்குக் குறியாகும் நல்ல வாய்ப்பு மீண்டும் கிடைக்குமல்லவா?

சைலபாலா: சீ! இதென்ன அத்திம்பேரே! உமக்கு அந்த வயசெல்லாம் கடந்து எத்தனையோ காலமாயிற்றே. கண் வீச்சு, கிண்வீச்சு எல்லாம் இனிமேல் செல்லாது. தற்காலத்து யுத்த முறைகள் எல்லாம் வெகுவாக மாறிப் போய்விட்டன.

[நிருபபாலாவும் நீரபாலாவும் வருகிருர்கள்.]
(நிருபபாலா சாந்தமும் சரளமும் கூடிய சுபாவமுடையவள். நீரபாலா அதற்கு நேர்விரோதம். குதூகலமும் விஷமமும் நிறைந்தவள்.)

நீரபாலா: (சைலபாலாவைக் கட்டிப் பிடித்துக்கொண்டு) அக்கா! அக்கா! இன்று நம் வீட்டுக்கு யார் வரப் போகிருர்கள்? உடனே சொல்! சொல் அக்கா!

நிருபபாலா: அத்திம்பேரே! இன்று உங்களுடைய சிநேகிதர்கள் யாராவது வரப் போகிருர்களா? உள்ளே தடபுடலாக பலகார, பட்சணங்கள் தயாராகின்றனவே!

அக்ஷயகுமாரர்: ஆமாம். புத்தகத்தைப் படித்துப் படித்துக் கண்ணைக் குருடாக்கிக் கொண்டால் பூமியின் ஆகர்ஷணத்திஞல் நட்சத்திரம் எப்படி விழுகிறது என்கிற ஒரு லட்சம் இரண்டு லட்சம் மைல் தூரத்துச் செய்திகளெல்லாம் உனக்குத் தெரிகிறது. ஆனல் மது மிஸ்திரி சந்து 18-ஆம் நம்பர் வீட்டில்[1] யாருடைய ஈர்க்கும் சக்தியால் இழுக்கப்பட்டு யார் வருகிருர்கள் என்பதை உன்ஞல் ஊகிக்க முடியவில்லை போலும்!

நீரபாலா: புரிந்து கொண்டேன் சின்னக்கா! உனக்குக் கணவன் வரப் போகிருன். அதனுல்தான் இன்று காலை என் இடது கண் துடித்தது.

நிருபபாலா: போடி! உன் இடது கண் துடித்ததென்ருல் எனக்குக் கணவன் வருவானுக்கும்!

நீரபாலா: உன் கணவன் வருகைக்காக என் இடது கண்

1. அக்ஷயகுமாரர் வீட்டு விலாசம்.

துடித்ததனுல் எனக்கு ஒன்றும் நஷ்டமில்லை. ஆனுல், அத்திம்பேரே! இரண்டு மூன்று பேர்களுக்குச் சிற்றுண்டி தயாராவதைப் பார்த்தேனே! அக்காவுக்கு சுயம்வரம் ஏதாவது நடக்கப்போகிறதா என்ன?

அக்ஷயகுமாரர்: பார்த்தாயா! என் சின்ன மைத்துனியை யாராலும் ஏமாற்ற முடியாது.

நீரபாலா: ஆகா! அத்திம்பேரே! என்ன சுப வார்த்தையைக் கூறினீர்கள்! உங்களுக்கு நான் என்ன வெகுமானம் கொடுப்பது? இதோ என் கழுத்துச் சங்கிலியையும் இரு கைவளையல்களையும் எடுத்துக் கொள்ளுங்கள்.

சைலபாலா: சீ! கைகளிலிருந்து வளையல்களைக் கழற்றக்கூடாது.

நீரபாலா: இன்று எங்கள் இருவருக்கும் வரன்கள் வரப் போவதால் படிப்பிற்கு விடுமுறை அளித்துவிட வேண்டும் அத்திம்பேரே!

நிருபபாலா: சீ! சும்மா வரன் வரன் என்று உளராதே! இவளைப் பார் அக்கா!

அக்ஷயகுமாரர்: ஆதற்காகத்தான் நான் இவளுக்கு 'வரவரா' என்று பெயரிட்டேன். அடி பெண்ணே வரவரா! பகவான் சகோதரிகளான உங்கள் அனைவருக்குமே இந்த ஓர் அக்ஷயகுமாரனைக்[1] கணவனுக அளித்திருக்கிருரே! அப்படியும் உங்களுக்குத் திருப்தி இல்லையா?

நீரபாலா: அதனுல்தான் உங்கள் பேராசை அதிகரித்துக் கொண்டே வருகிறது.

[நிருபபாலா அவளைப் பிடித்து இழுத்துக்
கொண்டே வெளியேறுகிருள்.]

நீரபாலா: (போய்க் கொண்டே) அவர்கள் வந்தவுடன் சொல்லி அனுப்புங்கள் அத்திம்பேரே! ஏமாற்றிவிடாதீர்கள்! அக்கா நிருபபாலா எவ்வளவு தத்தளிக்கிருள் பார்த்தீர்களா?

[பாடுகிருள்]

அவன் அமுத மொழி கேளேன் என்ருல்
அறியுமோ துயிலுமென் அலர் விழிகள் நன்றே.

அக்ஷயகுமாரர்: பயப்படாதே! ஒருவன் போனுல் மற்ருருவன் வருவான். நெருப்பைப் படைத்த பிரமன் அதில் விழுவதற்கு விட்டிற் பூச்சிகளையும் படைக்கிருன். சங்கீதம் நடக்கட்டும்.

நீரபாலா: (பாடுகிருள்)

அவன் எந்தன் அருகிருக்கக் கண்டும்
அமுத மொழி உளம் மறக்கப் போமோ?

1. அக்ஷயன் என்ருல் அழியாத, சாசுவதமானவன் என்று பொருள்.

அக்ஷயகுமாரர்: இதோ பார் நீரு! இது வரப்போகிறவர்களுக்காகக் கவனம் செய்த பாட்டு அல்ல. ஆதலால் அருகில் இருக்கும் மனிதன் யார் சொல்.

நீரபாலா: (பாடுகிருள்)

எவ்வழிப் போக்கன் தன்வழி மறந்து
என்னுயிர்க் கரையை வந்தடைந் தானே
அவ்வழிப் பின்னர் அவன்வெறுத் தேகிடில்
இவ்விழி உறக்கம் இனியும் பெறுமோ!

அக்ஷயகுமாரர்: இது எனக்கு மிகவும் பொருந்துகிறது. ஆனால் நான் தெரிந்தே வழியை மறந்துபோகிறேன். ஆகையால் மீண்டும் நினைவை அடைவதற்கு இடமே யில்லை.

நீரபாலா: (பாடுகிருள்)

தாளை உடைத்து என் தாமரை நெஞ்சில்
தனியன் ஆகப் புகுந்தவன் ஆங்கோர்
வேளை யறிந்தே ஏகினும் ஏகுவன்
வெறியால் மயங்கி விழித்தவன் போலே
ஆதலால்,
அவன் அமுத மொழி கேளேன் என்றால்
அறியுமோ துயிலுமென் அலர்விழிகள் நன்றே.

அக்ஷயகுமாரர்: (பாடுகிருர்)

இல்லை இல்லை ஒன்றும் எண்ணுதே
இரவாகினும் நான் போகேன் போகேன்
செல்வன் எனினும் வருகை உரைப்பேன்
சேர்ந்தே செல்லும் ஒளிநிழல் போல
ஊடல் கூடல் பிரிவே என்ற
ஆகிய அனைத்திலும் அழியாப் பொருள் நீ
என்றென் உள்ளம் ஊசலும் ஆடும்
கண்ணில் நின்றே கணம் நீ மறையக்
கண்டால் வாழேன் கனியே அறிவாய்.

நீரபாலா: நிச்சயமாக அறிந்துகொண்டேன். இனி எனக்கு உறக்கம் தப்பாமல் வரும்.

அக்ஷயகுமாரர்: சற்றும் பயமின்றி வரும்.

[நிருபபாலாவும் நீரபாலாவும் போகிருர்கள்.]

சைலபாலா: அத்திம்பேரே! நான் உண்மையில் விளையாடவில்லை. நான் 'பிரம்மசாரிகள் சங்க'த்தில் அங்கத்தினளுகச் சேர்ந்துவிடுகிறேன். ஆனால் எனக்குத் தெரிந்தவர் யாராவது ஒருவராவது இருக்க வேண்டுமல்லவா! நீங்கள் அங்கத்தினராகச் சேர்வதற்கு இனிமேல் அநுமதி கிடையாதென்று நினைக்கிறேன்.

அக்ஷயகுமாரர்: இல்லை. நான் ஒரு பெரிய தவறு செய்துவிட்

டேன். உன் தமக்கை என்னுடைய தவத்தைக் குலைத்து எனக்குச் சுவர்க்கம் கிடைக்காத வண்ணம் செய்துவிட்டாள்.

**சைலபாலா:** அதனுல்தான் சிற்றப்பா ரசிகரை நாம் இப்பொழுது பிடித்துக் கொள்ள வேண்டும். அவர் ஒரு சபையிலும் அங்கத்தினராகச் சேராமலேயே பிரம்மசாரி விரதத்தைக் கடுமையாக அநுஷ்டித்து வருகிருர்.

**அக்ஷயகுமாரர்:** அவர் பிரம்மசாரிகள் சபையில் அங்கத்தினராகச் சேர்ந்தால் இந்தக் கிழ வயசில் கண்டிப்பாக விரதம் போய்விடும். ஹில்ஸா மீன் பார்ப்பதற்கு அழகாக இருக்கும். பிடித்தால் உடனே இறந்துவிடும். பிரதிக்ஞையும் அப்படித்தான். எடுத்துக் கொண்டவுடன் ஏதாவது இடையூறு வந்துவிடும்.

[சிற்றப்பா ரசிகர் வருகிருர். வழுக்கை விழுந்த தலை; நரைத்த மீசை; சிவந்த நெட்டையான உருவம்.]

**அக்ஷயகுமாரர்:** வருக! வருக! பாஷண்ட, பண்ட, அகால கூஷ் மாண்டமே! (பாஷண்டியே, நாஸ்திகனே, விநோதமான பூசிணிக்காயே)

**ரசிகர்:** என்ன ஓய்! மத்த மந்தர குஞ்ச குஞ்சர புஞ்ஜ அஞ்ஜன வர்ணனே! (மதம் பிடித்த, மலைபோன்ற, தந்தங்களையுடைய யானையே! பருத்துக் கருத்த மேனியனே!)

**அக்ஷயகுமாரர்:** ஓய் ரசிகரே! நீர் என் மைத்துனிகளின் மலர்ப் பூங்காவில் காட்டுத் தீயை மூட்டுகிறீராமே!

**சைலபாலா:** சிற்றப்பா! இதனுல் உமக்கு என்ன லாபம்?

**ரசிகர்:** அம்மா சைலா! என்னுல் பொறுக்க முடியாமல் போய்விட்டது. என்ன செய்வேன்? வருடத்திற்கு வருடம் உன் தங்கைகளின் வயசு ஏறிக்கொண்டே போனுல் அதற்கு நானு பொறுப்பாளி? உன் தாயார் பழியை என் மீது போடுகிருள். 'தினம் வயிறு புடைக்கத் தின்றுவிட்டு வீட்டில் சும்மா கார்ந்திருக்கிருயே! என் பெண்களுக்கு இரண்டு வரன்களைத் தேடித்தரக் கூடாதா?' என்று என்னை வதைத்துவிட்டாள். நல்லது அம்மா! நான் வேண்டுமானுல் சாப்பிடுவதை நிறுத்தி விடுகிறேன். அதனுல் வரன் கிடைத்துவிடப் போகிறதா? அல்லது உன் தங்கைகளுக்கு வயசு குறைந்துவிடப் போகிறதா? வரன் கிடைக்காத இரண்டு பெண்களும் வேளா வேளைக்குச் சாப்பிடுவதில் ஒன்றும் குறைவில்லை. சைலா! குமார சம்பவத்தில் படித்திருப்பாயே, நினைவிருக்கிறதா?

ஸ்வயம் விசீர்ண த்ருமபர்ண வருத்திதா
பரா ஹி காஷ்டா தபஸஸ்தயா புன:
ததப் யபாகீர்ண மத: ப்ரியம் வதாம்
வதந்த்ய பர்ணேதி ச தாம் புராவித:

*(தாமாகவே மரங்களிலிருந்து உதிர்ந்த இலைகளைப் புசித்து உயிர் வாழ்வதே தவத்தின் எல்லைக் கோடி என்பர். பார் வதியோ அவற்றைப் புசிப்பதையும் நிறுத்திவிட்டாள். ஆகவே, பழைமையை அறிந்த பெரியோர்கள் இனிமையாகப் பேசும் அவளை அபர்ணு [இலையையும் புசிக்காதவள்] என்று அழைத்தனர்.)*

*துர்க்கா தனக்குகந்த வரனை அடைவதற்காக உணவு முதலியவை அனைத்தையும் துறந்து தானே தவம் கிடந்தாள். ஆனுல் என் பேத்திகளுக்கு வரன் தேடு வதற்காக நான் இத்தள்ளாத வயதில் சாப்பாட்டை நிறுத்த வேண்டும் என்கிருள் உன் தாயார்! என்ன சைலா, பேசாமல் இருக்கிருய்? காளிதாஸன் என்ன அழ காக எழுதியிருக்கிருன் பார்! 'ததப்ய பா கீர்ண மத: ப்ரியம் வதாம்—'இனிமையாகப் பேசும் அவளை' என்று:*

சைலபாலா: *நீ சொல்வது புரிகிறது சிற்றப்பா. ஆனுல் இந்த சந்தர்ப்பத்தில் காளிதாஸனுடைய கவிதை பொருத்தமாக இல்லை.*

ரசிகர்: *அப்படியானுல் இது சரியான சந்தர்ப்பம் அல்ல என்றுதான் முடிவு கட்ட வேண்டும்.*

சைலபாலா: *அதனுல்தான் உன்னைக் கலந்து யோசிக்க வேண்டியிருக்கிறது.*

ரசிகர்: *மிகவும் சரி. எனக்கு ஓர் ஆட்சேபணையும் கிடை யாது. எந்த விதமான யோசனை வேண்டுமோ அதை அளிக்க நான் தயார். 'ஆகட்டும்' என்று சொல்ல வேண்டுமானுல் ஆகட்டும் என்கிறேன். 'வேண்டாம்' என்று சொல்ல வேண்டுமானுல் அப்படியே செய்கிறேன். இதுதான் என்னிடமிருக்கும் ஓர் உயர்ந்த குணம். நான் எல்லோருடைய அபிப்பிராயத்தையும் 'சரி' என்று ஒப்புக் கொண்டு விடுவதால் எல்லோரும் என்னைத் தங் களைப் போலவே புத்திசாலி என்று எண்ணி விடுகிருர்கள்.*

சைலபாலா: *நீ உன்னிடம் வளர்த்து வைத்திருக்கும் எத் தனையோ அருமையான குணங்களுள் இதுவே மிகவும் உபயோகமானது.*

**ரசிகர்:** இன்னொரு விஷயம். 'யாவத் கிஞ்சிந்ந பாஷதே' நான் மற்ற ஜனங்களுடன் அதிகமாகப் பேசுவதே கிடையாது.

**சைலபாலா:** அதையெல்லாம் சேர்த்து வைத்து எங்களுடன் பேசிவிடுகிறீர்கள்.

**ரசிகர்:** உன் கையில் நான் சரியாக அகப்பட்டுக்கொண்டிருக்கிறேன்.

**சைலபாலா:** அப்படியானால் நான் சொல்கிறபடி எல்லாம் கேட்க வேண்டும்.

**ரசிகர்:** பயப்படாதே. அப்படியே ஆகட்டும். நான் இப்பொழுது அழைத்துக் கொண்டு வந்திருக்கும் இரண்டு குலீன பிராம்மணப் பையன்களை நீ பார்க்கவில்லையே! பெண்களை மணம் செய்யாமல் வைத்திருப்பதே ஆயிரம் மடங்குமேல் என்றே தோன்றும்! சோளக்காட்டுப் பொம்மைகள்தான். அவர்களைப் பார்த்தால் உன் தாயார் ஜகத்தாரிணி உன் தங்கைகளுக்காக இந்த வீட்டிலேயே ஒரு 'கன்னிகைகள் சங்கம்' ஏற்படுத்தி விடுவாள். நான் வருகிறேன். உன் தாயார் கூப்பிடுகிறாள். [போகிறார்]

**சைலபாலா:** அத்திம்பேரே!

**அக்ஷயகுமாரர்:** உத்தரவு என்ன?

**சைலபாலா:** ஏதாவது தந்திரம் செய்து குலீன இளைஞர்களை வெளியே துரத்திவிட வேண்டும்.

**அக்ஷயகுமாரர்:** இது தானா பிரமாதம்? [பாடுகிறார்]

தனித் துணைவன் நான் இருக்க
ஒருவர் உனை நெருங்க
எண்ணு வரோ கண்டிடுவேன்?

**சைலபாலா:** (சிரித்துக் கொண்டே) நான் தனியரசியா?

**அக்ஷயகுமாரர்:** வேண்டுமானால் நீங்கள் நால்வரும் நான்கு அரசிகளாகி விடுங்கள். சாஸ்திரத்தில் 'அதிகம் து ந தோஷாய' (அதிகமானால் தோஷமில்லை) என்று கூறப்பட்டிருக்கிறது.

**சைலபாலா:** நீங்கள் மாத்திரம் தனியாக இருந்து விடுவீர்களாக்கும்? சாஸ்திரத்தில் கூறப்பட்டது உங்களுக்குச் சம்பந்தமில்லை போலும்.

**அக்ஷயகுமாரர்:** இதைப் பற்றி சாஸ்திரத்தில் மற்றொரு இடத்தில் கூறப்பட்டுள்ளது. 'ஸர்வம் அத்யந்த கர்ஹிதம்' (எல்லாம் வெறுக்கத் தக்கனவே) என்று.

சைலபாலா: இந்த வறட்டு வேதாந்தமெல்லாம் இங்கு நடக்காது அத்திம்பேரே! வேறு உறவினர்களும் வருவார்கள்.

அக்ஷயகுமாரர்: உனக்கு இந்த ஒரு அத்திம்பேருக்குப் பதிலாகப் பத்து அத்திம்பேர்கள் கிடைப்பார்களோ? அப்படியானால் புதிய ஏற்பாடுகள் செய்தாக வேண்டும். அது வரையில் இந்தக் குலீனப் பையன்களை நெருங்கவொட்டாமல் அடிக்கிறேன்.

வேலைக்காரன்: யாரோ இரண்டு பேர் வந்திருக்கிறார்கள்.

[போகிறான்]

சைலபாலா: வந்திருப்பது அவர்கள் என்றே நினைக்கிறேன். அக்காவும் அம்மாவும் சமையற் கட்டில் வேலையாக இருக்கிறார்கள். அவர்களுக்கு அவகாசம் கிடைக்குமுன் ஏதாவது ஒரு சாக்கை முன்னிட்டு இவர்களை நீங்கள் அனுப்பி விடவேண்டும்.

அக்ஷயகுமாரர்: அப்படி அனுப்பிவிட்டால் என்ன வெகுமதி கிடைக்கும்?

சைலபாலா: நானும் உங்களுடைய மற்ற 'சாலி' களும்[1] சேர்ந்து உங்களுக்குச் 'சாலி வாகனன்' என்ற பட்டப் பெயரைச் சூட்டுவோம்.

அக்ஷயகுமாரர்: இரண்டாம் சாலிவாகனன் (Salivahan the Second) என்று?

சைலபாலா: 'இரண்டாம்' என்ற அடைமொழி ஏன்? முதல் சாலிவாகனனின் பெயர் சரித்திரத்திலிருந்தே அகற்றப் பட்டுவிடும். அப்பொழுது நீங்கள் மகா சாலிவாகனன் (Salivahan the Great) ஆகி விடுவீர்கள்.

அக்ஷயகுமாரர்: அப்படியானால் என்னுடைய ஆட்சிக்காலத்திலிருந்து ஒரு புதிய சகாப்தம் பிறக்கும்.

[பாடுகிறார்]

உலகாளும் ஒருவேந்தாய்
எனை ஆக்கி உன்கண்ணின்
நிலவொளியால் நெற்றியிலோர்
நற்றிலகம் இடுவாயே

[சைலபாலா போகிறாள்]

[மிருத்தியுஞ்சயனும் தாருகேசுவரனும் வருகிறார்கள். ஒருவன் பனைமரத்தைப் போல் நெட்டையானவன்; மெலிந்த மேனி; காலில் பூட்ஸ் முழங்காலுக்கு

1. வங்காளி பாஷையில் 'சாலி' என்றால் மைத்துனி என்று பொருள்.

மேல் தூக்கிக் கட்டப்பட்ட வேஷ்டி; கண்களைச் சுற்றிலும் கறுத்த வளையங்கள். மலேரியா சுரத்தில் அடிபட்டு வாடிய முகம். வயது இருபத்திரண்டு முதல் முப்பத்திரண்டு வரை இஷ்டப்படி மாறும். இன்னொருவன் குட்டை; தாடி, மீசை, உருண்டையான மூக்கு, முன்புறம் நீண்ட நெற்றி; கறுப்பு நிறம்; தடித்த உருவம்)

அக்ஷயகுமாரர்: (மிகவும் சிநேக பாவத்துடன் எழுந்திருந்து பலமாக அவர்கள் கைகளைக் குலுக்கி) வாருங்கள் மிஸ்டர் நாதானியல், வாருங்கள், மிஸ்டர் ஜெரீமியா, உட்காருங்கள், உட்காருங்கள். அடே, யாரங்கே! ஐஸ் போட்ட ஜலம் கொண்டு வா! சிகரெட் கொண்டு வா!

மிருத்தியுஞ்சயன்: (திடீரென்று பேசிய இங்கிலீஷ் வார்த்தைகளைக் கேட்டு) மன்னிக்க வேண்டும். என் பெயர் மிருத்தியுஞ்சய காங்கூலி.

தாருகேசுவரன்: என் பெயர் ஸ்ரீ தாருகேசுவர முக்கியோபாத்தியாயர்.

அக்ஷயகுமாரர்: சீச்சீ! இந்த மாதிரிப் பெயர்கள் எல்லாம் இக்காலத்தில் பயன்படா. உங்கள் கிறிஸ்துவப் பெயர்கள் (Christian names) என்ன? (இளைஞர்கள் இருவரும் பதில் கூறாமல் ''திறுதிறு'' என்று விழிப்பதைப் பார்த்து) ஓகோ! இன்னும் உங்களுக்குப் புதுமாதிரிப் பெயர்கள் இடப்படவில்லை போலும்! அதனால் ஒன்றும் நஷ்டமில்லை. இன்னும் வேண்டிய அவகாசம் இருக்கிறது.

[புகை பிடிக்கும் உக்காக் குழாயை மிருத்தியுஞ்சயனின் கையில் கொடுக்கிறார். அவன் அது என்னவென்று தெரியாமல் அதை மேலும் கீழுமாகத் திருப்பிப் பார்த்து விழிக்கிறான்.]

நிரம்ப அழகுதான். என்னிடம் என்ன சங்கோசம் உமக்கு? நான் ஏழாவது வயசு முதலே சிகரெட் பிடிக்க ஆரம்பித்து விட்டேன். இதற்கெல்லாம் வெட்கப்படுவது என்றால் அப்புறம் சமூகத்தில் முகத்தைக் காட்டுவதற்கே தைரியம் வராதே!

[இதனால் தைரியம் அடைந்த தாருகேசுவரன், உக்காக் குழாயை மிருத்தியுஞ்சயன் கையிலிருந்து வெடுக்கென்று

பிடுங்கி குடுகுடு என்ற சப்தத்துடன் புகை பிடிக்க ஆரம்பித்தான். பிறகு அக்ஷயர் சட்டைப் பையிலிருந்து பர்மா சுருட்டு ஒன்றை எடுத்து மிருத்தியுஞ் சயனின் கையில் கொடுத்தார். அவனுக் குச் சுருட்டுப் பிடிக்கும் வழக்கம் ஏற் கனவே இல்லையெனினும் அக்ஷயரின் வார்த்தையினுல் ஏற்பட்ட அசட்டுத் தைரியத்தினுல் வெட்கத்தை விட்டுச் சுருட்டைப் பற்ற வைத்து மெதுவாகப் புகையை இழுக்க ஆரம்பித்தான். அத ஞல் ஏற்பட்ட இருமலைக் கஷ்டத்துடன் அடக்கிக் கொண்டான்.]

அக்ஷயகுமாரர்: வந்த காரியத்தைப் பற்றி விவாதிப்பதற்கு இப்பொழுதுதான் சரியான சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. என்னவோ சொன்னீர்களே?

[மிருத்தியுஞ்சயன் ஒன்றும் பேசாமல் மவுனமாக இருந்தான்.]

தாருகேசுவரன்: அதுதான் ஐயா! 'சுபஸ்ய சீக்ரம்' என்று சொல்லியிருக்கிறதே! பேச்சை ஆரம்பிக்கலாமே!

அக்ஷயகுமாரர்: (உரத்த குரலில்) கோழியா? ஆட்டுக்கறியா?

[மிருத்தியுஞ்சயன் வியப்படைந்து தலையைச் சொரிய ஆரம்பித்தான். தாருகேசுவரனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஆதலால் பலமாகச் சிரிக்க ஆரம்பித்தான்.]

இதென்ன வேடிக்கை ஐயா! பெயரைக் கேட்டவுடனேயே இப்படிச் சிரிப்பா? அப்படியானுல் உங்களுக்கு அவற்றின் வாசனை கிடைத்தால் மூர்ச்சை போட்டு விழுந்து விடுவீர்கள். கிடைத்தால் செத்தே போய் விடுவீர்கள் என்று நினைக்கிறேன். நிச்சயமாகச் சொல்லி விடுங்கள். கோழியா? ஆடா?

[அப்பொழுதுதான் அவ்விருவருக்கும் அக்ஷயர் குறிப்பிடுவது உணவு விஷயம் என்று புரிந்தது. மிருத்தியுஞ்சயன் மிகுந்த பயத்துடன் வாயைத் திறவாமல் இருந்துவிட்டான். தாருகேசுவரனுக்கு மாத்திரம் நாவில் ஜலம் ஊற ஆரம்பிக்க அவன் நாற்புறமும் பார்க்க ஆரம்பித்தான்.]

என்ன பயம் உங்களுக்கு? சதிர் ஆட வந்த பிறகு முட்டாக்கை எடுக்க வேண்டாமா?[1]

தாருகேசுவரன்: (இரு கைகளாலும் கால்களாலும் தாளம் போட்டுக் கொண்டு, சிரித்து) அப்படியானல் கோழி தான் வேண்டும். 'சிக்கென் கட்லட்' (Chicken cutlet) மிகவும் சிறந்தது. என்ன மிருத்தியுஞ்சயா?

மிருத்தியுஞ்சயன்: (தைரியத்துடன்) ஆட்டுமாமிசம் (Mutton) நன்ருயிராதென்று உன் அபிப்பிராயமோ! நீ பேசாமலிரு:

அக்ஷயகுமாரர்: இவ்வளவுதாளு! பயப்படாதே அண்ணு! இரண்டையும் வரவழைப்போம். மனக்குறையுடன் தின்ருல் ஒன்றும் சுகப்படாது. (வேலைக்காரனைக் கூப்பிட்டு) அடே! இந்தத் தெருக்கோடியில் இருக்கும் ஹோட்டலுக்குப் போய் கலிமத்தின் பட்லரை அழைத்துக் கொண்டு வா. (என்று கூறிவிட்டு வலது கைக் கட்டை விரலால் மிருத்தியுஞ்சயனைக் குத்தி) பீரா (Beer) ஷெர்ரியா (Sherry)?

[மிருத்தியுஞ்சயன் வெட்கத்தினுல் தலை குனிகிருன்.]

தாருகேசுவரன்: அப்படியானுல் விஸ்கி (Whisky) கிடைக்காதென்றே தோன்றுகிறது.

அக்ஷயகுமாரர்: (அவன் முதுகைத் தட்டிக்கொடுத்து) ஏன் கிடைக்காது? நாம் உயிரோடிருப்பதற்கு வேறு என்ன தான் பயன்?

[பாடுகிருர்]

அடைக்கலம் எனக்கே அளித்தால் சொல்வேன்
அடியேன் நெஞ்சின் Wish கீ(ழ்)
அடித்தால் போதும் சோடா வதனில்
மூன்றே திராம் விஸ்கீ

[பயந்த சுபாவமுள்ள மிருத்தியுஞ்சயன் கூட இப்பாட்டைக் கேட்டு என்ன வரப் போகிற தென்பதைப் புரிந்து கொண்டான். தாருகேசுவரன் திடீரென்று ஒரு புத்தகத்தைக் கையிலெடுத்துக் கொண்டு கஞ்சிரா வாசிப்பதுபோல் அதில் தாளம் போட ஆரம்பித்தான்.]

தாருகேசுவரன்: அண்ணு, அதை இன்னெரு முறை பாடுங்கள்!

அடைக்கலம் எனக்கே அளித்தால் சொல்வேன்
அடியேன் நெஞ்சின் Wish கீழ்

1. இது ஒரு வங்க நாட்டுப் பழமொழி.

அக்ஷயகுமாரர்: (மிருத்தியுஞ்சயனைத் தட்டி) நீயும் ஓரடி பாடு, தம்பீ, பாடு.

[வெட்கம் மிகுந்த மிருத்தியுஞ்சயன் வேறு ஒன்றும் தோன்றாமல் மெல்லிய குரலில் பாட ஆரம்பித்தான். அக்ஷய குமாரர் மேஜை மீது தாளம்போட ஆரம்பித்தார். ஓரிடத்தில் திடீரென்று நிறுத்திவிட்டு]

முக்கியமான விஷயத்தை மறந்துவிட்டோம். எங்களைப் பொறுத்தவரையில் எல்லாம் சம்மதந்தான். உங்களுடைய அபிப்பிராயம் என்னவோ?

தாருகேசுவரன்: கலியாணம் ஆனபிறகு எங்கள் இருவரையும் மேல் நாடுகளுக்கு அனுப்பவேண்டும்.

அக்ஷயகுமாரர்: அதென்னவோ நிச்சயம்தான். மேலே சுற்றியிருக்கும் கம்பியை வெட்டாமல் சாம்பெயின் (Champaigne) புட்டியின் கார்க்கைத் திறக்க முடியுமா? நம் தேசத்தில் உங்களைப் போன்ற மேதாவிகளின் சாமர்த்தியம் வீணாகப் போய்விடுகிறது. வெளி நாடுகளுக்குப் போனால் தான் அது சுடர்விட்டுப் பிரகாசிக்கும்.

தாருகேசுவரன்: (பெரு மகிழ்ச்சியுடன் அக்ஷய குமாரரின் கையைப் பிடித்துக் குலுக்கி) அண்ணா! இது உங்களால் தான் முடியவேண்டிய விஷயம். புரிந்ததா?

அக்ஷயகுமாரர்: பார்க்கலாம். ஆனால் உங்களுக்கு ஞான ஸ்நானம் (Baptism) இன்றே நடந்தாக வேண்டும்.

தாருகேசுவரன்: (சிரித்துக்கொண்டே) அதென்ன ஞானஸ்நானம்?

அக்ஷயகுமாரர்: (வியப்படைந்தவர்போல்) ஏன் உங்களுக்குத் தெரியாதா? பாதிரி விசுவாசர் (Reverend Biswas) இன்றிரவு வரப்போகிறார். ஞானஸ்நானம் ஆகவில்லையானால் கிறிஸ்தவக் குடும்பத்துடன் எப்படி சம்பந்தம் செய்து கொள்ள முடியும்?

மிருத்தியுஞ்சயன்: (நடுங்கிப்போய்) கிறிஸ்தவக் குடும்பமா? நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லையே!

அக்ஷயகுமாரர்: என்னய்யா இது! நீங்கள் என்ன ஆகாயத்திலிருந்து குதித்து வந்தீர்களா? இன்றிரவே உங்களுக்கு ஞான ஸ்நானம் செய்விக்கப்படும். இல்லாவிடில் நாங்கள் விடமாட்டோம்.

மிருத்தியுஞ்சயன்: ஐயையோ! நீங்கள் எல்லோரும் கிறிஸ்தவர்களா?

அக்ஷயகுமாரர்: அமைதியாக இருங்கள். உங்களுக்கு ஒன்றுமே தெரியாது போலிருக்கிறதே!

மிருத்தியுஞ்சயன்: (மிகவும் பயந்துபோய்) ஐயா! நாங்கள் ஹிந்துக்கள். பிராம்மண வீட்டுப் பையன்கள். ஜாதியை இழக்க முடியாது.

அக்ஷயகுமாரர்: (திடீரென்று உரத்த குரலில்) ஜாதி எதற்கு ஐயா? பட்லர் கலிமத்தின் சமைத்த கோழியைத் தின்னலாம். மேல் நாடுகளுக்குப் போகலாம். இவ்வளவுக்கும் மேல் ஜாதிப் பெருமையா?

மிருத்தியுஞ்சயன்: (கெஞ்சும் குரலில்) சத்தம் போடாதீர்கள். யார் காதிலாவது இது விழப்போகிறது.

தாருகேசுவரன்: பதற வேண்டாம். நிதானமாக யோசிக்க வேண்டிய விஷயம் இது.

[மிருத்தியுஞ்சயனைத் தனியாக உள்ளே அழைத்துச் சென்று]

நாம் வெளிநாடுகளுக்குச் சென்று திரும்பினால் ஒரு முறை பிராயச்சித்தம் செய்துகொண்டு தீர வேண்டும். இரு முறை பிராயச்சித்தம் செய்துகொண்டு விட்டால் திரும்பவும் ஹிந்து தர்மத்தில் சேர்ந்துவிடலாம். இந்தச் சந்தர்ப்பத்தை விட்டுவிட்டால் மறுபடி மேல்நாட்டிற்குச் செல்லும் வாய்ப்புக் கிடைக்காது. இந்த நிபந்தனைக்குப் பெண்ணைக்கொடுக்க வந்த ஒரு தகப்பனும் சம்மதிக்கவில்லை. ஆகையால் தம்பீ, கிறிஸ்தவன் வீட்டுச் சுருட்டையும் உக்காவையும் பிடித்துவிட்ட பிறகு நாம் கிறிஸ்தவர்கள் ஆவதற்கு இன்னும் என்ன பாக்கி கிறது? (அக்ஷயகுமாரரிடம் வந்து) எங்களை மேல் களுக்கு அனுப்புவது நிச்சயமெனில் நாங்கள் கிறிஸ்தவர்களாவதற்குத் தயார்.

மிருத்தியுஞ்சயன்: ஆயினும் இன்றிரவு போகட்டும்.

தாருகேசுவரன்: ஏதாவது ஒன்றை ஆரம்பித்தால் சட்புட்டென்று முடித்துவிடுவதே நன்று. ஆரம்பத்திலேயே சொன்னேனே. 'சுபஸ்ய சீக்ரம்' என்று.

[இதற்குள் அடுத்த அறையில் பெண்கள் எல்லோரும் வந்து நின்றனர். தட்டுக்கள், பழம், பட்சணங்கள், பூரி, குளிர்ந்த ஜலம் முதலியவற்றுடன் வேலைக்காரன் பிரவேசம்.]

தாருகேசுவரன்: இதென்ன சுவாமி! எங்கள் அதிர்ஷ்டம் கோழிக்குஞ்சு பறந்துபோய் விட்டதா என்ன? 'கட்லெட்' எல்லாம் எங்கே?

அக்ஷயகுமாரர்: (மெல்லிய குரலில்) இன்று இவை போதும்.

தாருகேசுவரன்: அதெப்படி ஐயா! ஆசை காட்டி மோசம்

செய்துவிட்டீரே! மாமனார் வீட்டிற்கு வந்தால் மட்டன் சாப் (Mutton chop) தின்பதற்குக் கிடைக்காதா? மேலும் இந்த ஐஸ் போட்ட தண்ணீர் எதற்கு? எனக்கு அடிக்கடி ஜலதோஷம் பிடித்துவிடுகிறது. வெறும் தண்ணீரையே சாப்பிட முடியாத நிலைமையில் இருக்கிறேன்.

[பாடுகிறான்]

அடைக்கலம் எனக்கே அளித்தால் சொல்வேன்
அடியேன் நெஞ்சின் wish கீ

அக்ஷயகுமாரர்: (மிருத்தியுஞ்சயனைக் தட்டி) நீயும் பாடு தம்பீ! மவுனம் ஏன்?

[பாட்டு முடிந்தவுடன் பட்சணத் தட்டை நீட்டி]

தற்பொழுது இத்துடன் திருப்தியடையலாமே?

தாருகேசுவரன்: (தீர்மானமாக) முடியாது சுவாமி. அந்த நோயாளிப் பத்திய மெல்லாம் நடக்காது. நாம் கோழி தின்னாததால்தான் நம் தேசத்தின் சுதந்திரத்தை வெள்ளைக்காரனுக்கு விட்டுக் கொடுத்தோம்.

அக்ஷயகுமாரர்: (அவன் காதினருகில் சென்று லக்நௌ தும்ரி மெட்டில் பாடுகிறார்)

பருப்பும் சோறும் தின்று எத்துணைக் காலம்
பாரத நாட்டினைக் காப்பது கோலம்?

[தாருகேசுவரன் உற்சாகத்துடன் தானும் அக்ஷயருடன் சேர்ந்து பாடினான். முதலில் வெட்கத்தினால் சும்மா இருந்த மிருத்தியுஞ்சயன் சிறிது சிறிதாகத் தைரியம் அடைந்து தாளம் போட ஆரம்பித்தான்.]

அக்ஷயகுமாரர்: (திரும்பவும் காதைக் கையால் பொத்திக் கொண்டு)

அற்புதமான நம் நாட்டினில் எங்கும்
அன்னம் தண்ணீருக்கு ஆச்சுதே பஞ்சம்
அற்பமாம் ஆடு சோடா விஸ்கி
அனைத்தும் நமக்கு ஆகுமே தஞ்சம்.

[தாருகேசுவரன் எழுந்து நின்று உரத்த குரலில் அக்ஷயர் பாடிய பாட்டைத் திரும்பவும் பாடினான். மிருத்தியுஞ்சயனும் அக்ஷயரின் கட்டை விரல் ஜாடையைப் பார்த்துத் தாளம் போட ஆரம்பித்தான்.]

தாருகேசுவரன்: *(மெல்லிய குரலில்)*

சென்றிடுவீர் நும் சிகையுடனே
சீர்மிகு சைதன்ய குருவே நீர்
அன்புடனே வந்திடுவீர் தாடி
அழகான கலிமத்தின் சாயபுவே!

*[உற்சாகத்துடன் பாட்டு நடந்து கொண்டிருக்கையில் கதவிற்குப் பின்புறத்திலிருந்து 'உஷ்' உஷ்' என்ற சத்தம் கேட்டது. அக்ஷயகுமாரர் ஒன்றும் அறியாதவர்போல் அடிக்கடி அந்தப்புறம் திரும்பித் திரும்பிப் பார்த்தார். அதே சமயத்தில் கையில் ஓர் அழுக்குத் துணியுடன் பட்லர் கலிமத்தின் சாயபு வந்து எல்லோருக்கும் சலாம் போட்டுவிட்டு நின்றான்.]*

தாருகேசுவரன்: *(கலிமத்தின் சாயபுவைப் பார்த்து) என்ன பாய்? ஓட்டலில் இன்று என்னென்ன ஸ்பெஷல், சொல் பார்க்கலாம்! அக்ஷயபாபு! உங்களுக் கென்ன கறியா? கட்லெட்டா?*

அக்ஷயகுமாரர்: *(உள் பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண்டே) உங்களுக்கு என்ன விருப்பமோ அதையே நானும் சாப்பிடுகிறேன்.*

தாருகேசுவரன்: *என்னுடைய வழக்கம் 'பிராம்மணேப்யோ நம:' என்று சொல்லிவிட்டு எல்லாவற்றையும் விழுங்கி விடுவது.*

அக்ஷயகுமாரர்: *அப்படியா? பாய்! அவருக்கு எல்லாமே பிடிக்குமாம்.*

*[சாயபு சலாம் போட்டுவிட்டுப் போகிறான்.]*

அக்ஷயகுமாரர்: *(சிறிது உரத்த குரலில்) அப்படியானால் இன்றிரவு ஞான ஸ்நானத்திற்கு ஏற்பாடு செய்து விடலாமல்லவா?*

தாருகேசுவரன்: *நான்தான் அடிக்கடி சொல்லிக் கொண்டேயிருக்கிறேனே, சுபஸ்ய சீக்ரம் என்று? இன்றைக்கே, ஏன் இப்பொழுதே கிறிஸ்தவர்களாகி விடுகிறோம். ஆனபிறகு அது வேறு விஷயம். ஐயா! பருப்பும் சோறும் மரக்கறி உணவும் சாப்பிட்டு விட்டு இனி என்னால் உயிர் வாழ முடியாது. உங்கள் பாதிரியை உடனே வரவழையுங்கள்.*

*[உரத்த குரலில் பாடுகிறான்]*

சென்றிடுவீர் நும் சிகையுடனே
சீர்மிகு சைதன்ய குருவே நீர்

அன்புடனே வந்திடுவீர் தாடி
அழகான கலிமத்தின் சாயபுவே!

[வேலைக்காரன் வருகிறான்.]

வேலைக்காரன்: (அக்ஷயகுமாரரின் காதில் ரகசியமாக) அம்மா உங்களை அவசரமாகக் கூப்பிடுகின்றார்கள்.

[அக்ஷயகுமாரர் எழுந்து உள்ளே போகிறார்.]

ஜகத்தாரிணி: இது என்ன கூத்து? என்ன நடக்கிறது அங்கே?

அக்ஷயகுமாரர்: (உரத்த குரலில்) அம்மா, அதெல்லாம் பிறகு பார்க்கலாம். இப்பொழுது இவர்களுக்கு விஸ்கி வேண்டுமாம். நான் என்ன செய்வேன்? உங்கள் கால் வீக்கத்திற்குத் தடவுவதற்காகக் கொஞ்சம் பிராண்டி வரவழைத்தோமே? அதில் ஏதாவது மிச்சம் இருக்கிறதோ?

ஜகத்தாரிணி: (ஒன்றும் புரியாமல்) இதென்ன அநியாயம்? இவர்களுக்கு குடிப்பதற்குப் பிராண்டி கொடுக்கவேண்டுமா?

அக்ஷயகுமாரர்: நான் என்ன செய்யட்டும்? அவர்களுள் ஒருவனுக்கு வெறும் தண்ணீர் குடித்தால் உடனே ஜலதோஷம் பிடித்துக்கொள்ளுமாம்; மற்றொருவனுக்கு மது அருந்தினால்தான் வாயிலிருந்து வார்த்தை வெளிக்கிளம்புமாம்.

ஜகத்தாரிணி: ஏதோ கிறிஸ்தவர்கள் ஆவதாகப் பேசிக்கொண்டிருந்தீர்களே!

அக்ஷயகுமாரர்: ஹிந்துக்களாக இருந்தால் சாப்பாடு முதலிய விஷயங்களில் மிக அசௌகரியங்கள் ஏற்படுகின்றனவாம். பருப்புச் சோறும் மரக்கறி உணவும் புசித்தால் ஆரோக்கியம் கெட்டு விடுகிறதாம்.

ஜகத்தாரிணி: (வியப்புடன்) அதற்காக இன்றிரவே கோழிக்கறி தின்று கிறிஸ்தவர் ஆகப் போகிறார்களா?

அக்ஷயகுமாரர்: ஆமாம், இவர்கள் இருவரும் கோபித்துக்கொண்டு போய்விட்டால் இரண்டு நல்ல வரன்கள் கையை விட்டு நழுவி விடும். ஆகையால் அவர்கள் சொல்லுவதை எல்லாம் கேட்டே தீரவேண்டும்.

[புரபாலாவை நோக்கி]

அவர்கள் என்னையும் குடிகாரனாகச் செய்துவிடுவார்கள் போலிருக்கிறது.

புரபாலா: அனுப்பிவிடுங்கள். இவர்களை இப்பொழுதே அனுப்பிவிடுங்கள்.

ஜகத்தாரிணி: (கவலையுடன்) மாப்பிள்ளை! இந்த வீட்டில் கோழி கீழி ஒன்றும் தின்பதற்கு அநுமதிக்க முடியாது;

நீ இவர்களை உடனே அனுப்பிவிடு. சிற்றப்பா ரசிகரை வரன் தேடுவதற்காக அனுப்பியது என்னுடைய தவறு. அவருக்கு ஒரு வேலையையும் சரியாக முடிக்கத் தெரியாது.

*[ஜகத்தாரிணியும் பெண்களும் போகிறார்கள். அக்ஷயர் திரும்பி வந்து பார்த்த பொழுது மிருத்தியுஞ்சயன் ஓடுவதற்கு எத்தனிப்பதையும் தாருகேசுவரன் அவனுடைய கையைப் பிடித்து அவனைப் பலவந்தமாக நிறுத்த முயற்சிப்பதையும் காண்கிறார். மிருத்தியுஞ்சயன் மேலும் கீழும் பார்த்து யோசித்துத் திடீரென்று எழுந்து நிற்கிறான்.]*

மிருத்தியுஞ்சயன்: *(அக்ஷயகுமாரரைப் பார்த்துக் கோபம் கலந்த குரலில்)* இதோ பாரும். நான் கிறிஸ்தவனாகப் போவதில்லை. ஆகையால் இந்த வீட்டில் நான் விவாக சம்பந்தம் செய்துகொள்வதாக உத்தேசம் இல்லை.

அக்ஷயகுமாரர்: நிரம்ப சரி. உங்களை யார் கையைப் பிடித்துப் பலவந்தம் செய்கிறார்கள்?

தாருகேசுவரன்: கிறிஸ்தவனாக மாறுவதற்கு நான் தயார், ஐயா!

அக்ஷயகுமாரர்: அப்படியானால் நீர் மாதாக் கோவிலுக்குச் செல்லுங்கள். நாங்கள் ஏழு தலைமுறைக்கு ஒருவரையும் கிறிஸ்தவராக மாற்றுவதாக உத்தேசம் இல்லை.

தாருகேசுவரன்: யாரோ பாதிரி விசுவாசர் என்பவர் வரப் போவதாகச் சொன்னீர்களே!

அக்ஷயகுமாரர்: அவர் டெரிடி பஜாரில் இருக்கிறார். வேண்டுமானால் அவருடைய விலாசத்தை எழுதித் தருகிறேன்.

தாருகேசுவரன்: அப்புறம் கலியாணம்?

அக்ஷயகுமாரர்: அது இந்தக் குடும்பத்துடன் நடக்காது.

தாருகேசுவரன்: அப்படியானால் இத்தனை நாழிகையாக எங்களைப் பரிகாசம் செய்துகொண்டிருந்தீர்களாக்கும். சிற்றுண்டியைக்கூட......

அக்ஷயகுமாரர்: அதுவும் இந்த வீட்டில் கிடைக்காது.

தாருகேசுவரன்: தெருவின் மூலையில் இருக்கும் ஓட்டலில்...

அக்ஷயகுமாரர்: அதுதான் நல்லது.

*[மணிபர்ஸைத் திறந்து சில ரூபாய்களை எடுத்து இருவருக்கும் கொடுத்து அனுப்பி விடுகிறார். நிருபபாலாவின் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டே நீரபாலா புயற் காற்றைப்போல் அறைக்குள் பிரவேசிக்கிறாள்.]*

நீரபாலா: அத்திம்பேரே! இந்த இரண்டு பேரையும் இம்மாதிரி விட்டுவிடுவதற்கு அக்காவுக்கு இஷ்டமேயில்லை.

நிருபபாலா: (நீரபாலாவின் நெற்றியில் லேசாக இரண்டு அடி கொடுத்து) மறுபடியும் பொய் சொல்ல ஆரம்பித்து விட்டாயா?

அக்ஷயகுமாரர்: கவலைப்படாதே அம்மா. உண்மைக்கும் பொய்க்கும் உள்ள வித்தியாசம் எனக்கும் கொஞ்சம் தெரியும்.

நீரபாலா: நல்லது அத்திம்பேரே. வந்த இரண்டு பிரகிருதிகளும் சிற்றப்பா ரசிகரின் புரளியைக் காட்டுகிறதா அல்லது என் அக்காவின் துரதிருஷ்டமா?

அக்ஷயகுமாரர்: துப்பாக்கியிலுள்ள குண்டுகள் அனைத்துமே குறியில் பாய்ந்துவிடுமா? பிரம்ம தேவன் சுடுவதற்குப் பயிற்சி செய்துகொண்டிருக்கிறுன். இவை இரண்டும் என்னவோ தப்பிவிட்டன. முதலில் இப்படித்தான் தப்பிப் போகும். உன் அக்கா கையில் தூண்டிலைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்த பொழுது அநேக மீன்கள் புழுவைக் கவ்வாமலே சென்றுவிட்டன. கடைசியில் அபாக்கியசாலியாகிய நான்தான் தூண்டிலில் மாட்டிக்கொண்டேன்.

[தலையில் அடித்துக்கொள்கிறுர்]

நிருபபாலா: இன்று முதல் பிரம்மதேவனின் பயிற்சி, தினம். இந்த வீட்டில் தொடர்ந்து நடக்குமல்லவா அத்திம்பேரே! அப்படியானுல் நாங்கள் பிழைக்கமாட்டோம்.

நீரபாலா: இதற்காக நீ ஏன் வருந்துகிறுய்? தினமுமா குறி தப்பிவிடும்? ஒருநாள் இல்லாவிடில் மற்றொரு நாள் குண்டு குறியில் பாய்ந்துவிடும்.

[சிற்றப்பா ரசிகர் வருகிறுர்.]

நீரபாலா: சிற்றப்பா! இன்று முதல் நாங்கள் எல்லோரும் சேர்ந்து உனக்கு மணப்பெண் தேடப் போகிறேம்.

ரசிகர்: நிரம்ப சந்தோஷகரமான செய்தி.

நீரபாலா: ஆம்! நீ சந்தோஷப்படுவதைப் பார்த்துவிடுகிறேம். நீ கூரை வீட்டில் இருந்துகொண்டு மற்றவர்களுடைய செங்கல் வீட்டிற்கு நெருப்பு வைக்கப் பார்க்கிறுயே? எங்கள் கையில் தீ மூட்டும் சாதனங்கள் இல்லையென்று நினைக்கிறுயா? நீ இனி எங்கள் வழிக்கு வந்தால் உனக்கு இரண்டு பெண்களை மணம் செய்து உன் தலையிலிருக்கும் சில உரோமங்களையும் நீ காப்பாற்றிக்கொள்ள முடியாமல் செய்து விடுவோம்.

ரசிகர்: இதோ பார் அம்மா! நான் அந்த இரு விநோதப் பிராணிகளைப் பிடித்துக்கொண்டு வந்ததால்தான் நீங்கள்

இருவரும் பிழைத்தீர்கள். கொஞ்சம் நடுரகமாக இருந்தால் உங்களுக்குப் பேராபத்து நேர்ந்திருக்கும். மிருகங்கள் என்று முதலிலேயே கண்டுபிடிக்க முடியாத பிராணிகளிடம் நாம் ஜாக்கிரதையாக இருப்பது நலம்.

அக்ஷயகுமாரர்: இது சரியான பேச்சு. எனக்கு முதலில் கொஞ்சம் சந்தேகமாகத்தான் இருந்தது. ஆனால் அப்பிராணிகளுடைய முதுகில் ஷொட்டுக் கொடுத்தவுடன் வாலை வேகமாக ஆட்ட ஆரம்பித்து விட்டன. மாமியின் அபிப்பிராயம் என்ன?

ரசிகர்: அவள் கூறியதை நான்கு பேர் காதில் விழும்படி கூற முடியாது. அதை நான் என் மனத்திலேயே ரகசியமாக வைத்துக்கொண்டிருக்கிறேன். எது நடந்தாலும் ஒன்று மாத்திரம் நிச்சயம். அவள் காசியிலிருக்கும் தன் மருமகனின் வீட்டிற்குப் போய் விடுவாளாம். 'அங்கே வேண்டிய வரன்களும் கிடைக்கும். தீர்த்த யாத்திரையின் பயனும் கிடைக்கும்' என்கிறாள்.

நீரபாலா: பலே! அப்படியானால், சிற்றப்பா, இங்குத் தினந்தோறும் புதிய புதிய விநோதப் பிராணிகளைக் கொண்டு வந்து கண்காட்சி நடத்துவது நின்றுவிடுமல்லவா?

நிருபபாலா: அவ்விஷயத்தில் உனக்கு இன்னும் சந்தேகமா?

நீரபாலா: சந்தேகம் ஒன்றும் இல்லை. நமக்கு நடப்பது ஒருவிதப் பயிற்சி. தினந்தோறும் பலவிதமான மாதிரிகளைப் பார்த்துப் பார்த்து சகஜமாகிவிடும். கடைசியில் எந்த மிருகத்துடன் நமக்குத் திருமணம் நடக்கப் போகிறதோ அதை நாம் அறிந்து கொள்வது வெகு சுலபமாகிவிடும்.

நிருபபாலா: உனக்குக் கிடைக்கப் போகும் பிராணியை நீ அறிந்துகொள்ள முயற்சி செய். என் விஷயமாக நீ கவலைப்பட வேண்டாம்.

நீரபாலா: நல்லது. நீ உன் விஷயத்தைக் கவனித்துக் கொள். என் வேலையை நான் பார்த்துக்கொள்கிறேன். ஆனால் நம்மிருவருக்காகச் சிற்றப்பா ரசிகர் அவதிப்படுவது இன்றுடன் நின்றுவிட வேண்டும்.

[நிருபபாலாவும் நீரபாலாவும் போகிறார்கள். சைலபாலா வருகிறாள்.]

சைலபாலா: சிற்றப்பா! உன்னுடன் எனக்கு ஒரு முக்கியமான வேலையிருக்கிறது.

அக்ஷயகுமாரர்: பலே, சைலா! புரிந்துகொண்டேன். இன்று

முதல் சிற்றப்பாதான் முக்கிய மந்திரி. நான் வெறும் பூஜ்ஜியம்.

சைலபாலா: (சிரித்துக்கொண்டே) அத்திம்பேரே! உங்களுடன் கலந்து ஆலோசிக்க வேண்டிய விஷயம் என்ன இருக்கிறது? இதெல்லாம் வயது முதிர்ந்தவர்களுடன் கூடி யோசிக்க வேண்டிய விஷயமாகும்.

அக்ஷயகுமாரர்: அப்படியானால் மந்திரி பதவிக்காக நான் அனுப்பிய மனுவை வாபஸ் பெற்றுக் கொள்ளுகிறேன்.

[திடீரென்று எழுந்து நின்று உரத்த குரலில் பாடுகிறார்.]

உனைக்காக்க மிகுவலியும்
உரைகூற நல்லறிவும்
எனைத்துணையும் இலன் ஏனும்
எழிலார்நின் மலர்க்கரங்கள்
தனக்கேநன் மலர்கொய்து
தந்திடுவேன் இதுகண்டாய்
மனத்தேநன் மந்திரியாய்
எனைக்கொள்ள மறுக்கினுமே.

சைலபாலா: சிற்றப்பா! நான் அந்தப் பிரம்மசாரிகள் சங்கத்தில் அங்கத்தினராகச் சேர வேண்டும். நீதான் அதற்கு உதவி புரியவேண்டும்.

ரசிகர்: மஹாவிஷ்ணு மோகினி அவதாரத்தை எடுத்துப் புருஷர்களை மயக்கினாராம். சைலா! நீயும் புருஷ வேஷம் தாங்கி ஆண்களை மயக்கினால் நான் விஷ்ணு பக்தியில் நம்பிக்கை அடைந்து என் ஆயுள் முழுவதும் உன்னைப் பூஜை செய்வதிலேயே கழிப்பேன். ஆனால் இது உன் தாயாருக்குத் தெரிந்துவிட்டால்........

சைலபாலா: என் தாயார் கலியாணமாகாத இரு பெண்களைப் பற்றி நினைத்து நினைத்து மனம் களைத்துப் போய்விட்டாள். ஆகவே இனி அவள் எங்களைப்பற்றி நினைக்கப் போவதில்லை. கவலைப்பட வேண்டாம்.

ரசிகர்: ஆனால் அச்சங்கத்தில் எப்படிச் சேர்வது என்கிற விஷயம் எனக்கு ஒன்றுமே தெரியாதே!

சைலபாலா: அதை நான் பார்த்துக்கொள்கிறேன். ஏற்கனவேயே அங்கத்தினராகச் சேர வேண்டியதற்கான மனுவில் கையெழுத்துப் போட்டுப் பிரவேசக் கட்டணம் பத்து ரூபாயுடன் சேர்த்து அதை அனுப்பிவிட்டேன் சிற்றப்பா! நீயும் அம்மாவுடன் காசிக்குப் போய்விட்டால் இந்த யுக்தி ஒன்றுமே பலிக்காதே!

அக்ஷயகுமாரர்: உன் அம்மாவுடன் காசிக்குப் போவதற்கு

வேறு துணை இப்பொழுதே ஏற்பாடு செய்துவிடுகிறேன். அதைப்பற்றிக் கவலைப் படாதே.

**சைலபாலா:** அத்திம்பேரே! நீங்கள் அவ்விரண்டு குலீன யுவர்களையும் மிகவும் பரிகாசம் செய்து குரங்கு களாக்கி அனுப்பிவிட்டீர்கள். அவர்கள் சென்றபிறகு எங்களுக்கெல்லாம் அவர்கள் மீது இரக்கம்தான் உண் டாயிற்று.

**அக்ஷயகுமாரர்:** ஒருவன் விரும்பினுல் குரங்காக மாறிவிட முடியாது, சைலா! இவர்கள் தோன்றிய பொழுதே அந்த உருவத்துடனேயே தோன்றினர். அதற்குக் கட வுளின் விசேஷக் கருணை வேண்டும். கவியாகப் பிறப்ப தற்கும் அப்படியே. வால் ஆகட்டும், கவிதை யாகட்டும். உள்ளே சித்தமாக இல்லாமற் போனுல் வேகமாக இழுத்தாலும் வெளியே வராது.

[புரபாலா வருகிருள்]

**புரபாலா:** (அரிக்கேன் விளக்கை எடுத்துத் திரியை மேலும் கீழுமாகத் திருப்பி) இந்த வேலைககாரன் இதைச் சரியாக ஏற்றி வைக்காமல் போய்விட்டான். இது ‘குப் குப்’ என்று எரிகிறது. எவ்வளவு சொல்லியும் அவன் திருந்தும் வழியைக் காணேம்.

**அக்ஷயகுமாரர்:** நமக்கு இருட்டுத்தான் மிகவும் இஷ்டம் என்று அவனுக்குத் தெரியாதா என்ன?

**புரபாலா:** வெளிச்சம் உங்களுக்குப் பிடிக்காதா? இதென்ன கூத்து நீங்கள் பேசுவதெல்லாம் புதிதாக இருக்கிறதே!

**அக்ஷயகுமாரர்:** நானே சந்திரன் ஆதலால் எனக்கு வெளிச் சம் தேவையில்லை என்று அவன் நினைத்திருக்கலாம்.

**புரபாலா:** நிரம்ப அழகுதான். அவன் சம்பளத்தை உயர்த்தி விடுங்களேன்!

சிற்றப்பா! இன்று என்ன இந்த மாதிரி ரகளை செய்துவிட்டீர்கள்?

**ரசிகர்:** இதோ பார் அம்மா! வரன்கள் ஏராளமாகக் கிடைக் கும். ஆனுல் வருவது எல்லாமே கலியாணத்திற்குத் தகுந்ததாக இராது. அதற்கு இரு உதாரணங்களை இன்று அழைத்துக்கொண்டு வந்து காட்டினேன்.

**புரபாலா:** இந்த மாதிரி உதாரணங்களை எல்லாம் கொண்டு வந்து கண்காட்சி நடத்தாமல் நமது பெண்களுக்குத் தக்க வரன்களாக ஒன்றிரண்டு பார்த்துக்கொண்டு வந்தீர்களானுல் மிகவும் நன்ருக இருக்கும்.

**சைலபாலா:** அக்கா! அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டுவிட்டேன்.

புரபாலா: அது எனக்கும் தெரியும். நீயும் உன்னருமை அத்திம்பேருமாகச் சேர்ந்துகொண்டு ஏதோ சூழ்ச்சி செய்துவருவதால் ஏதோ நடந்தே தீரும்.

அக்ஷயகுமாரர்: இன்று கிஷ்கிந்தா காண்டம் நடந்தாயிற்றே!

ரசிகர்: லங்கா காண்டத்துக்கும் ஏற்பாடுகள் தயாராகிக் கொண்டிருக்கின்றன. பிரம்மசாரிகள் சங்கம் என்ற பொன்னிலங்கைக்குத் தீவைக்க இதோ கிளம்பிக் கொண்டிருக்கிறேன்.

புரபாலா: இந்த நாடகத்தில் சைலாவிற்கு என்ன வேஷம்?

ரசிகர்: ஆனுமன் வேஷம் அல்லவென்று நினைக்கிறேன்!

அக்ஷயகுமாரர்: இல்லையில்லை, லங்கா தகனக் கட்டத்தில் அவள்தான் நெருப்பு.

ரசிகர்: இவளை ஒருவன் வாலில் சுற்றிக் கொண்டு செல்ல வேண்டும்.

புரபாலா: எனக்கு ஒன்றுமே புரியவில்லை, சைலா! நீ பிரம்மசாரிகள் சங்கத்தில் சேரப் போகிருயா?

சைலபாலா: ஆம், நான் அதில் சேரத்தான் போகிறேன்.

புரபாலா: நீ பேசுவதெல்லாம் சரியான பேச்சல்ல சைலா, பெண்கள் எப்படி அச்சங்கத்தில் அங்கத்தினர்களாக முடியும்?

சைலபாலா: தற்காலத்தில் பெண்களும் அதில் சேரலாமாம். நான் புடவை உடுத்துவதை விட்டு விட்டு நிஜார் அணிவதற்கு எல்லா ஏற்பாடுகளும் சித்தம் செய்து விட்டேன்.

புரபாலா: மாறுவேடம் பூண்டு அதில் சேர்ந்துவிடலாம் என்று உன் எண்ணம் போலும். நீண்ட கூந்தல் ஒன்று பாக்கி இருந்தது. அதையும்தான் பிடரிவரையில் கத்தரித்துவிட்டாய். உன் இஷ்டம் போல் நடந்துகொள். நான் உன் விஷயத்தில் தலையிடுவதில்லை.

அக்ஷயகுமாரர்: அதுதான் சரி. நீ அவள் வழிக்கே போகாதே. யார் யாருக்கு இஷ்டமோ அவர்களெல்லாம் புருஷர்களாக மாறட்டும். என் நல்லதிர்ஷ்டம் காரணமாக நீ மாத்திரம் என்றும் பெண்ணுக இருந்தால் போதும். இல்லாவிடில், 'ஒப்பந்த ரத்து' (Breach of contract) என்ற பயங்கரமான வழக்கில் பிரதிவாதியாக நீ ஆஜராக நேரும்.

(பாடுகிருர்)

அழியா மதியே! அழகார் மதியே!
ஒழியா தென்றும் ஒளிர்வாய் நீயே!
இதுவென் விருப்பே அறிவாய் மதியே!

பழமை மிகும்நின் பல்கதிர் நிலவும்
எழிலார் முறுவலும் இனிதே வேட்கை
தணிக்கக் கண்டேன் தண்டார் மதியே!
புதுமை மிக்க சகோரப் புள்ளும்
பாக்கியம் இதனைப் பெறுதல் ஆமோ?

*[புரபாலா செல்கிறாள்]*

*அச்சமில்லை. கோபித்துக்கொண்டு சென்றாலும் மனம் சாந்தியடைந்து விடுகிறது. உள்ளத்தில் பச்சாத்தாபம் ஏற்படும் சமயமே நற்காலத்திற்கு அறிகுறி.*

**ரசிகர்:** கோபோ யத்ர ப்ருகுடிரசநா
நிக்ரஹோ யத்ரமௌனம்
யத்ராந்யோந்ய ஸ்மித மநுநயோ
யத்ர த்ருஷ்டி ப்ரஸாத.[1]

**சைலபாலா:** *சிற்றப்பா! நீ அருமையான சுலோகங்களை எடுத்து வீசுவது என்னவோ உண்மைதான். ஆனால் கோபம் என்றால் என்ன என்பது அத்திம்பேருக்குக் கடைசியில் தெரியப் போகிறது.*

**ரசிகர்:** *அடேயப்பா! நான் வேண்டுமானால் அவருடன் இடம் மாற்றிக்கொள்கிறேன். அவர் சுலோகம் சொல்லட்டும். கோபம் என்மீது விழட்டும். நான் இந்த துரதிருஷ்ட நெற்றிக்குத் தங்க முலாம் பூசி வைக்கிறேன்.*

**சைலபாலா:** *அத்திம்பேரே!*

**அக்ஷயகுமாரர்:** *(பயந்த குரலில்) மீண்டும் அத்திம்பேர் தானா? இந்த வாலகில்யமுனிவரின்[2] தவத்தைக் கெடுக்கும் முயற்சியில் நான் பங்கெடுத்துக் கொள்ள மாட்டேன்.*

**சைலபாலா:** *தவத்தைக் குலைக்கும் நற்காரியத்தை நாங்கள் மேற்கொள்கிறோம். அந்த முனி குமாரர்களை இந்த வீட்டிற்கு நீங்கள் அழைத்துக்கொண்டு வந்து விட்டால் போதும்.*

**அக்ஷயகுமாரர்:** *சங்கத்தையே அடியுடன் பெயர்த்து இங்கு கொண்டுவந்து விடவேண்டுமோ? இத்தகைய சிரம*

1. *இதன் பொருள்: "புருவங்களை நெரித்தல் கோபத்தைக் காட்டும்; மௌனம் அடக்கத்திற்கு அடையாளம்; பரஸ்பர புன்முறுவலே சமாதானம்; காதற் பார்வையே அனுக்கிரகம்."*
2. *புராணங்களில் கூறப்பெறும் முனிவர்; கட்டை விரல் அளவே உள்ளவர்கள்; இத்தகைய முனிவர்கள் அறுபதினாயிரம் பேர்; இவர்கள் சூரியனின் தேரின் முன் சென்று அவனைத் துதிபாடிச் செல்வர் என்பது புராண வரலாறு. பொதுவாக இளம் வயதிலேயே ஞானிகளாக இருப்பவர்களைக் குறிக்கும் சொல்.*

சாத்தியமான காரியத்தை இந்த அத்திம்பேர் ஒருவன் தலைமேல்தான் போட வேண்டுமோ?

சைலபாலா: (சிரித்துக்கொண்டே) வீராதி வீரன் ஆகவேண்டுமானால் இதுதான் சங்கடம். கந்தமாதன பர்வதத்தை எடுத்துக்கொண்டுவர நேர்ந்த பொழுது நளன், நீலன், அங்கதன் இவர்களை யாராவது கூப்பிட்டார்களா?

அக்ஷயகுமாரர்: அடி, மந்திமுகப் பெண்ணே! திரேதாயுகத்தின் குரங்குகளைத் தவிர வேறு ஓர் உதாரணமும் உன் மூளையில் தோன்றவில்லையோ! என் மீது அவ்வளவு பிரியம் உனக்கு!

சைலபாலா: ஆமாம், அவ்வளவு பிரியம்தான்!

அக்ஷயகுமாரர்: (பாடுகிறார்)

எழிலார் பெண்கள் எண்ணிலர் ஏனும்
அழியா அழகுச் செந்தா மரையாம்
பழிதீர் நின்முகம் பாவியென் உள்ளம்
அழியாது அளிக்கும் அமுதே கண்டாய்!

சரி, அப்படியே ஆகட்டும். விட்டிற்பூச்சிகளைத் துரத்திக்கொண்டு வந்து நெருப்பில் விழச் செய்கிறேன். அதற்காகச் சட்டென்று ஒரு பீடா கொண்டு வந்து கொடு, பார்க்கலாம். உன் மலர்க்கையினாலேயே கட்டிக் கொண்டு வரவேண்டும்.

சைலபாலா: அக்கா கையினால் கட்டின பீடாவானால்......

அக்ஷயகுமாரர்: உன் அக்காவின் கைகளைத்தான் நான் ஏற்கனவேயே பிணைத்துவிட்டேனே? இல்லாவிடில் பாணிக்கிரகணம் செய்ததற்கு அர்த்தம் என்ன? இப்பொழுது செந்தாமரையை யொத்த மற்றொரு கரத்தின் பக்கம் பார்வையைச் செலுத்தும் அவகாசம் கிடைத்திருக்கிறது.

சைலபாலா: நிரம்ப சரி, அத்திம்பேரே! என் தாமரைக் கைகளால் சுண்ணாம்பை நிறையத் தடவி ஏற்கனவேயே வெந்துள்ள உங்கள் வாய் திரும்பவும் வேகும்படி செய்துவிடுகிறேன்.

அக்ஷயகுமாரர்: (பாடுகிறார்)

விளக்கில் வீழ்ந்து வீவது கண்டும்
விட்டில் மேலும் வீழ்தல் போலக்
கலக்க மிலாமல் உணர்ந்தும் மாந்தர்
காசினி இறத்தல் காண்பாய் நீயே.

சைலபாலா: அத்திம்பேரே! அந்தக் காகித உருண்டைக்குள் என்ன

அக்ஷயகுமாரர்: நீ அந்தப் பிரம்மசாரிகள் சங்கத்தில் சேருமுன் அனுப்ப வேண்டிய அப்ளிகேஷன் பத்திரம், பத்து ரூபாய் சந்தா ஆகியவற்றைக் கோட்டுப் பையில் வைத்திருந்தேனல்லவா! அதை வண்ணான் இவ்வாறு ஒரு உருண்டையாகச் செய்து கொண்டு வந்திருக்கிறான். ஒரு எழுத்துக்கூடப் படிக்க முடியவில்லை. அவன் பெண் விடுதலையைப் பலமாக எதிர்க்கும் விரோதி போலும்! ஆகவே உன் விண்ணப்பத்தை உருத் தெரியாமல் செய்து கொண்டு வந்திருக்கிறான்.

சைலபாலா: அடடா! அப்படியா?

அக்ஷயகுமாரர்: இங்குப் பலர் வந்து என் ஞாபக சக்தியைக் குலைத்துச் சென்றனர். மனத்தில் ஒன்றுமே நிற்கவில்லை.

[பாடுகிறார்]

அனைத்தையும் மறந்தது என்றன் மனம்
தினையும் மலர்ந்திலது நின்மதி முகம்.

[சைலபாலாவும் ரசிகரும் போகின்றனர்.
புரபாலா பிரவேசிக்கிறாள்]

அக்ஷயகுமாரர்: கணவனே பெண்களுக்குத் தெய்வம். இது உனக்குத் தெரியுமல்லவா?

புரபாலா: மகா பண்டிதராகிய உம்மிடம் நீதிசாத்திரம் கற்க வரவில்லை. நான் அம்மாவுடன் இன்று காசிக்குப் போகிறேன். இதைச் சொல்லிவிட்டுப் போகலாம் என்று வந்தேன்.

அக்ஷயகுமாரர்: செய்தி நற்செய்தி அல்ல. கேட்டவுடன் உனக்கு ஜோடி சால்வை பரிசளிப்பேன் என்று நினைத்தாயோ?

புரபாலா: ஐயோ பாவம்! இதயம் பிளந்துவிடுமோ! என் பிரிவைத் தாங்க மாட்டீர்கள் போலும்!

அக்ஷயகுமாரர்: நான் இன்று ஏற்படப் போகும் பிரிவைப் பற்றிப் பேசவில்லை. நீ வீட்டில் இரண்டு நாட்களுக்கு இல்லாமற் போனாலும் சரி, அதற்குப் பதிலாக இன்னும் பலர் இருந்தாலும் சரி, அபாக்கியசாலியாகிய , என் பொழுது எப்படியோ போய்விடும். ஆனால் இனிமேல் என்ன நடக்கப் போகிறது? இதோ பார்! தர்மம், புண்ணியம் இவற்றில் கணவனை முந்திக்கொண்டு நீ போகாமல் இருந்தால், சுவர்க்கத்தில் உனக்கு 'டபிள் பிரமோஷன்' காத்துக்கொண்டிருக்கும். நான் பின் தங்கி விடுவேன். உன்னை மகாவிஷ்ணுவின் கணங்கள் ரதத்தின் மீது ஏற்றிக்கொண்டு செல்வர். என்னை யமதூதர்கள்

*கரகரவென்று காதைப் பிடித்து இழுத்துக்கொண்டு பின்தொடர்வர்.*

*[பாடுகிறார்]*

விண்ணிடைப் பறந்து நீ வானுலகு ஏக
நொண்டியே பின்னர் தொடருவேன் யானும்
எண்ணுவேன் உன் குழல் என் கரம் பற்றக்
கண்ணிலாக் காலனைக் காலிற் சிதைப்பேன்.

புரபாலா: *வெகு அழகுதான்! நிறுத்துங்கள். நிறுத்துங்கள்:*

அக்ஷயகுமாரர்: *நிறுத்திவிடுகிறேன். நீ தனியாகவா போகிறாய்? இது என்ன பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஏற்பாடோ? உண்மையிலேயே புறப்படப் போகிறாயா?*

புரபாலா: *ஆமாம்.*

அக்ஷயகுமாரர்: *என்னை யார் கையில் ஒப்படைத்துவிட்டுச் செல்ல இருக்கிறாய்?*

புரபாலா: *சிற்றப்பா ரசிகர் கையில்தான்.*

அக்ஷயகுமாரர்: *அடி பெண்ணே! சொத்தைப் பிறருக்கு மாற்றும் சட்டம் உனக்கு என்ன தெரியும்? பிரிவாற்றாமையிலிருந்து நான் தப்புவதற்காகத் தகுந்த கையை நானே தேடிப்பிடித்து என்னை ஒப்படைத்துக்கொள்ள வேண்டும்.*

புரபாலா: *இதற்காக நீங்கள் அதிகம் தேடுவதற்கு அவசியம் இல்லை என்று தோன்றுகிறது.*

அக்ஷயகுமாரர்: *[பாடுகிறார்]*

என்னுயிர் காப்பவர் யாவர் என்றே
எண்ணியே காலம் ஏகிடக் கண்டேன்
தன்னுயிர் போல என்னுயிர் காக்கத்
தானே வருபவர் யாவரு மிலரே.

*சரி. என்னைச் சமாதானப் படுத்திக்கொள்ள ஓரிரண்டு நல்ல உபாயங்கள் உள்ளன. ஆனால்*

*[பாடுகிறார்]*

பிரிந்து நீ கங்குலை எங்ஙனம் போக்குவாய்?
பிரிவுக் கனலின் வெம்மை பொறுப்பாய்
தரியாது அணையில் தனியே புரண்டு
கரிப்பாய் மீனக் கொடியோன் தனையே!

புரபாலா: *மிகவும் தயவு செய்து அந்தப் பாட்டை அங்கேயே நிறுத்திவிடுங்கள்.*

அக்ஷயகுமாரர்: *துயர மிகுதியால் கவிதை வெள்ளமெனப் பெருகி வருகையில் அதை எப்படி அடக்க முடியும்? எதுகை, மோனை, யாப்பிலக்கண விதிப்படி அமையாவிட்டாலும், நீ காசியில் இருக்கும்பொழுது, 'ஆர்த்தநா*

வத காவியம்'[1] என்ற ஒரு காவியம் எழுதப்போகிறேன். அதன் ஆரம்பத்தை இப்பொழுதே கேட்டுவிட்டுப் போ.

[உச்ச சுரத்தில் பாடுகிறார்]

புகைவண்டி எனும்சகடம் ஊர்ந்தே நல்ல
புனிதமாம் காசிநகர் புரபாலா சென்றாள்
முகைமுல்லை மணம்வீசும் மாலைப் போதில்
மூவராம் மைத்துனிகள் தம்முள் யாரே
நகையவிழ்க்கும் மலர்மாலை சூடி என்றன்
மாதுயரைப் போக்கிடுவர் மானே! தேனைப்
பகையாக்கும் பாகொத்த மொழியாளே நீ
பரிவுடனே உரைத்துப் பின் ஏகு வாயே!

புரபாலா: என் தலையை வேண்டுமானாலும் தானம் செய்கிறேன். இந்த மாதிரி காவியங்களை எல்லாம் நீங்கள் இயற்ற வேண்டாம்.

அக்ஷயகுமாரர்: தலையைத் தானம் செய்யும் விஷயத்தில் எனக்கு நிறைய சொந்த அநுபவம் உண்டு. தலை எதற்கும் உதவாத ஒரு பொருள். காவியம் எழுதுவது சுலபமான காரியம் அல்ல. என் மூளையில் ஒரு புறம் கொஞ்சம் பழுது. மகா காவியம் இயற்றுவதற்கு வேண்டிய ஞாபக சக்தியில்லை.
இங்கு கொஞ்சம் அங்கு கொஞ்சம் வரும்.

[பாடுகிறார்]

முற்றிலும் நற்கனிகள் முன்னே நல்க
முடியாத மறைப்பொருளை முழுதும் ஓர்வாய்
எற்றேனும் எழிலார்நன் மலர்கள் கொய்துன்
எழிலடிக்கோர் அணிசெய்வேன் உவகை யோடே!

ஆமாம்! நான் கேட்ட கேள்விகளில் ஒன்றிற்கும் இது வரையில் பதிலே வரவில்லையே! எனக்கு ஒன்று மாத்திரம் அறிய ஆவல் அதிகரிக்கிறது. காசிக்குப் போவதில் உனக்கு ஏன் இவ்வளவு உற்சாகம்? அந்த விஷ்ணு தூதனை ஒருவேளை மன்னித்து விடலாம். ஆனால் பூத, வேதாளங்களுக்குத் தலைவனும் பவானியின் நாதனுமாகிய சிவபெருமானின் கணங்களின் மீது எனக்கு மிகவும் சந்தேகம். நந்தி, பிருங்கி முதலியோர் அநேக விஷயங்களில் என்னையே மிஞ்சிவிடுவார்கள் என்று கேள்விப் படுகிறேன். ஒருவேளை நீ திரும்பி வந்த பிறகு இந்த

1. பிரசித்த வங்கக் கவி மைகேல் மதுசூதனதத்தர் எழுதிய 'மேகநாத வத காவியம்' வங்காளி பாஷையில் சிறந்த காவியமாகும். அதன் முதலில் உள்ள சில வரிகளைப் போலவே அக்ஷயகுமாரர் கவனம்செய்து புரபாலாவைப் பரிகசிக்கிறார்.

பூத கணத்தை உனக்குப் பிடிக்காமலும் போய்விடலாம்.

**புரபாலா:** போங்கள். நான் காசிக்குப் போகவில்லை.

**அக்ஷயகுமாரர்:** இதென்ன பேச்சு! இதைக் கேட்டால் ஒரு முறை இறந்து பூதங்களாகி சிவபெருமானின் கணங்களாயிருக்கும் அவர்கள் மறுபடியும் இறந்து போய்விடுவார்கள்.

[ரசிகர் வருகிறார்]

**புரபாலா:** இன்று சிற்றப்பா ரசிகரின் முகம் எக்காரணத்தினலோ மலர்ந்து காணப்படுகிறதே!

**ரசிகர்:** அம்மா! உன் சிற்றப்பனின் முகத்திலிருந்து அந்த வியாதி மாத்திரம் இன்னும் குறையவில்லை. பேச்சு வார்த்தை உண்டோ இல்லையோ மலர்ச்சிக்கு மட்டும் குறைவில்லை. அதிலும் விவாகம் ஆனவர்களைப் பார்த்து உள்ளம் கொதித்துக் கொதித்து—

**புரபாலா:** இதைக் கேட்டீர்களல்லவா, கலியாணமான மனிதரே! இதற்குச் சரியான பதில் கூறிவிட்டு அப்பாற் செல்லும்;

**அக்ஷயகுமாரர்:** என்னுடைய அகமலர்ச்சியைப் பற்றி இக் கிழவனுக்கு என்ன தெரியும்? அது ஒரு மகா ரகசியம்; அதைப் பிளந்து இதுவரை யாரும் கண்டதில்லை. அது என் உள்ளத்தின் அடியில் மிக ஆழத்தில் இருக்கிறது. நானே துழாவிப் பார்த்தாலும் அகப்படுவதில்லை.

**புரபாலா:** ஆமாம். பளிச்சென்று விளங்கிவிட்டது உமது பேச்சு. (கோபத்துடன் புறப்பட முற்படுகிறாள்)

**அக்ஷயகுமாரர்:** (அவளைத் தடுத்து நிறுத்தி) கடவுள் மீது ஆணையாக நீ இவர்கள் முன்னிலையில் என் மேல் கோபித்து விழாதே. அப்படிச் செய்தால் இவர்கள் என்னையே எதிர்க்க ஆரம்பித்துவிடுவர்.

இதோ பார்! இல்வாழ்க்கையின் தத்துவத்தை அறியாத கிழவனே! எங்களுக்குள் கோபம் மிகுந்து விட்டால் குரலின் சுரம் ஏறிக்கொண்டு போய் நாங்கள் பேசுவது உன் காதில் விழுந்து விடும். பிறகு காதல் மீண்டும் சுரந்து ஒருவர் காதில் ஒருவர் ரகசியமாகப் பேசும் இன்ப மொழிகள், ஓய்! உமது காதில் விழா.

**புரபாலா:** ஐயோ! வாயை மூடுங்களேன்!

**அக்ஷயகுமாரர்:** வாயை மூடுவதா? நகைகளுக்கு நீ ஜாப்தா போடும்பொழுது வீட்டின் கணக்குப் பிள்ளை முதல் நகைக் கடைக்காரர் வரை எல்லோருக்கும் தெரிந்து

போய் விடுகிறதே, அது பரவாயில்லை. வசந்த காலத்தின் நள்ளிரவில் காதலியானவள்......

புரபாலா: தயவு செய்து இந்த உளறலை நிறுத்துங்கள்.

அக்ஷயகுமாரர்: நள்ளிரவில் காதலியானவள்......

புரபாலா: நீங்கள் பிதற்றுவது நன்றாயில்லை.

அக்ஷயகுமாரர்: வசந்த காலத்தின் நள்ளிரவில் காதலியானவள் கர்ஜித்து உரைப்பாள் - 'நான் நாளைக் காலை என் தந்தையின் வீட்டிற்குப் போய் விடுவேன். எனக்கு இவ்வீட்டில் இனி ஒரு கணமும் இருக்க இஷ்டமில்லை. என் பொறுமை முடிந்து விட்டது. என் எலும்பெல்லாம் முறிந்துவிட்டன. என்—'

புரபாலா: நிறுத்துங்கள், நிறுத்துங்கள். எப்பொழுது உமது காதலி தந்தை வீட்டிற்குப் போய் விடுவதாகக் கர்ஜனை செய்தாள்?

அக்ஷயகுமாரர்: சரித்திரப் பாடத்தில் பரிட்சை நடத்துகிறாயா? சில காட்சிகளைக் கற்பனை செய்துகொள்ளக் கூடாதா? வருடம், மாதம், தேதி எல்லாவற்றையும் நினைவு வைத்துக்கொண்டு ஒப்புவிக்க முடியுமா? நான் என்ன ஒரு மேதாவி என்று நினைத்தாயோ?

ரசிகர்: (புரபாலாவைப் பார்த்து) இதோ பார்! உன் கணவன் உன்னுடன் பேசும்பொழுது ஒழுங்காகப் பேச மாட்டான் போல் இருக்கிறது. அவனுக்குப் பொறுமையே கிடையாது. பேசுவது எல்லாம் கோணல். இனிமையாகப் பேசிச் சமாளிக்க முடியாது போனால் வைது சமாளித்து விடுகிறான்.

புரபாலா: நிரம்ப சரி, மல்லி நாதரே![1] நீர் இதற்கு மேல் வியாக்கியானம் ஒன்றும் செய்ய வேண்டாம். அம்மா கடைசியில் உங்களைத்தான் காசிக்கு அழைத்துக் கொண்டு போவதாகத் தீர்மானித்திருக்கிறாள்.

ரசிகர்: மிக நல்லது. இனி என்ன பயம்? தீர்த்த யாத்திரை போவதற்கு இதுதான் எனக்குச் சரியான வயசு. இப்பொழுது உன்னைப் போன்ற பெண்களின் கண்வீச்சுக்கள் இந்தக் கிழவனை ஒன்றும் செய்ய முடியாது. இனி என் மனம் சந்திரசூடனாகிய சிவ பெருமானிடத்தில்தான் லயிக்கும். மகாகவி பர்த்ருஹரி என்ன சொல்லுகிறான் என்றால்,

1. மல்லி நாத ஸூரி என்பவர் காளிதாச மகாகவி இயற்றிய காவிய நாடகங்களுக்கு ஒப்பற்ற உரைகளை எழுதிப் புகழ்பெற்ற உரையாசிரியர்.

முக்த ஸ்மிக்த விதக்த லுப்த
மதுரைர் லோலை: கடாக்ஷைரலம்
சேத: ஸம்ப்ரதி சந்த்ரசூட
சரண த்யானும்ருதே வர்த்ததே[1]

புரபாலா: மிகவும் சரியான வார்த்தை. இனி என் கண் வீச்சுக்களை உன் மீது வீசி வீணுக்குவதில்லை. நீர் இப்பொழுது அந்த சந்திரசூடனின் சரணத்தை நாடிச் சென்று விடும். இதற்காக அம்மாவை இதோ கூப்பிடுகிறேன்.

ரசிகர்: (கைகளைக் கூப்பிக்கொண்டு) அம்மா! பரதேவதே! உன் தாயார் என்னுடைய முன்னேற்றத்திற்காக மிகப் பாடு படுகிருள். ஆனுல் அவள் காரியத்தை ஆரம்பித்த வேளை நல்ல வேளை யல்ல. ஆகவே அவளுடைய முயற்சிகள் ஒன்றும் பலனளிக்கப்போவதில்லை. நான் என்னவோ பிரம்மதேவனின் கருணையால் இதுவரை வாழ்க்கையை ஒருவிதமாகத் தள்ளி விட்டேன். திருந்தும் வயசு கடந்துவிட்டது. உன் தாயார் ஜகத்தாரிணி காசிக்குப் போகிருள். அங்குச் சென்ற பிறகும் இக்கிழக் குழந்தையைத் தடுத்தாட்கொள்ளும் பாரம் அவளுக்கு வேண்டாம். சிவனே என்று சில நாட்கள் இருக்கட்டுமே! நீங்கள் ஏன் அவளை உபத்திரவம் செய்கிறீர்கள்?

[ஜகத்தாரிணி வருகிருள்.]

ஜகத்தாரிணி: மாப்பிள்ளை! நான் போய் வருகிறேன்.

அக்ஷயகுமாரர்: கிளம்பி விட்டீர்களா மாமி? சிற்றப்பா ரசிகர் இப்பொழுதுதான் வருத்தத்துடன் சொல்லிக் கொண்டிருந்தார்......

ரசிகர்: (உண்மையான வருத்தத்துடன்) என்னைப்பற்றி யார் எது பேசினுலும் கேலிப் பேச்சுத்தான்! எனக்குஒரு வருத்தமும் இல்லை. யாருக்காக நான் துக்கப்படவேண்டும்?

அக்ஷயகுமாரர்: 'பெரியம்மா தனியாகக் காசிக்குப் போகிருள். என்னைக் கூப்பிடவில்லை' என்று சொன்னீரா இல்லையா?

ரசிகர்: அதுசரி. ஒப்புக்கொள்கிறேன். ஆனுல் அதற்காக வருத்தம் இல்லை. ஏன் அம்மா! நீ தனியாக......

ஜகத்தாரிணி: இல்லையப்பா! வெளியூர்களுக்குச் சென்ருல் இந்த ரசிகனை யார் கவனித்துக்கொள்வது? இவனை அழைத்துக் கொண்டு என்ருல் பிரயாணம் கிளம்பமுடியாது.

1. இது கவி பர்த்ருஹரி இயற்றிய வைராக்கிய சதகத்தின் ஒரு சுலோகம். இதன் பொருள்: அழகியே! யௌவனப் பருவத்தால் அழகியதும் விட புருஷர்களால் விரும்பப்படுவதும் எப்பொழுதும் இனித்துக்கொண்டிருப்பதுமான கடைக்கண் வீச்சினுல் பயனில்லை. இப்பொழுது என் மனம் பிறை சூடிய பெம்மானின் திருவடியைத் தியானித்தல் என்னும் அமுதத்தைப் பருகுவதில் நிலை பெற்றுள்ளது.'

புரபாலா: ஏன் அம்மா? சிற்றப்பாவை அழைத்துக்கொண்டு போனால் போகுமிடங்களில் பேசுவதற்கு, வேடிக்கை பார்ப்பதற்கெல்லாம் உதவியாக இருப்பாரே!

ஜகத்தாரிணி: ஐயோ, போதுமே! எனக்கு இனி ஒன்றும் பார்க்கவும் வேண்டாம், கேட்கவும் வேண்டாம். உன் அருமைச் சிற்றப்பா ரசிகரின் புத்திசாலித்தனத்தை நான் வேண்டிய அளவு பார்த்தாயிற்று.

ரசிகர்: (வழுக்கைத் தலையைத் தடவிக்கொண்டே) எனக்கு உள்ள ஏதோ சிறிது புத்தியை நான் எப்பொழுதும் பயன் படுத்தத் தயாராக இருக்கிறேன். அதை ஒளித்து வைக்கப் போவதில்லை. ஒடிந்த சக்கரம்தான் எல்லாவற்றையும்விட லொட லொட வென்று சத்தம் போடும். அது உடைந்திருக்கிறது என்று சுற்றுப்புறமெல்லாம் தெரிந்துவிடும். ஆதலால், பெரியம்மா, வாயைமூடிக் கொண்டு நான் இங்கேயே இருக்கிறேன். நீ மாத்திரம் என்னை மறுபடியும் சுழலும்படி செய்துவிடாதே.

ஜகத்தாரிணி: நான் ஹாரானுடைய வீட்டுக்குப் போகிறேன். அங்கிருந்தே ரயில் ஏறி விடுகிறேன். இதை விட்டால் நல்ல வேளையில்லை. புரபாலா, உனக்குப் பொழுது போவதே தெரியாதே! சரியான வேளைக்கு ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்துவிடு.

புரபாலா: அம்மா! நான் காசிக்கு வரவில்லை.

[என்றதும் ஜகத்தாரிணி வருத்தத்துடன் மருமகனின் முகத்தைப் பார்த்தாள்]

அக்ஷயகுமாரர்: (மாமியின் உள்ளத்தை அறிந்துகொண்டு) இது என்ன பேச்சு, புரபாலா? நீ அம்மாவுடன் போகாவிடில் அவளுக்கு அநேக அசௌகரியங்கள் உண்டாகும். சரி, மாமி! நீங்கள் புறப்படுங்கள். நான் சரியான வேளைக்குப் புரபாலாவை ஸ்டேஷனில் கொண்டுவந்து விடுகிறேன்.

[என்றதும் ஜகத்தாரிணி கவலைநீங்கிப் புறப்பட்டாள். சிற்றப்பா ரசிகர் தம்முடைய வழுக்கைத்தலையைத் தடவிக்கொண்டே சோர்ந்த பார்வையை முகத்தில் வரவழைத்துக் கொண்டு உட்கார்ந்தார்]

[புருஷ வேஷத்தில் சைலபாலா பிரவேசம்]

அக்ஷயகுமாரர்: யாரையா? நீர் யார்?

சைலபாலா: உயர்திரு ஐயா! உங்கள் சகதர்மிணியாகிய புரபாலாவுடன் நெருங்கிய தொடர்புடையவன் நான். (அக்ஷயகுமாரருடன் கைகுலுக்கி) என்ன அத்திம்பேரே? அடையாளம் தெரியவில்லையா?

புரபாலா: ஒரு விஞடி திகைக்க வைத்துவிட்டாய், சைலா! உனக்கு வெட்கமில்லே?

சைலபாலா: அக்கா! வெட்கம் என்பது பெண்களுக்கு இருக்க வேண்டிய குணம். ஆண்வேஷம் போட்டுக்கொண்ட பிறகு அதைவிட்டு விடத்தானே வேண்டும்? அதே போல் இப்பொழுது அத்திம்பேருக்குப் பெண் வேஷம் போட்டால் அவர் வெட்கத்திஞல் முகத்தை வெளி யிலேயே காண்பிக்க மாட்டார். சிற்றப்பா ஏன் வாயை மூடிக்கொண்டு மவுனம் சாதிக்கிருர்?

ரசிகர்: சைலா! உன்னேப் பார்த்தால் ஒரு குட்டி மன்மதன் என்றே சொல்ல வேண்டும். பார்வதி தேவியின் மடியி லிருந்து இறங்கி வரும் பாலசுப்ரமணியனேப் போலவே இருக்கிருய். உன்னே நான் தினம் பார்த்துக்கொண் டிருப்பதால் நீ அழகா, நடுத்தரமா, சுமாரா என்ற எண் ணமே என் மனத்தில் எழுந்ததில்லே. நீ இன்று மாறு வேடத்தில் காட்சியளிப்பதால் உன் வனப்பு முழுவதும் வெளிப்பட்டது. புரபாலா! ஏதோ வெட்கம், கிட்கம் என்று சொன்ஞயே! சைலாவை என்னருகில் இழுத்துத் தலேமீது என் கையை வைத்து ஆசீர்வாதம் செய்ய வேண்டுமென்று ஆசை மிஞ்சுகிறது.

அக்ஷயகுமாரர்: (அன்பின் மிகுதியால் உண்டாகும் பெருமிதத் துடன் மாறுவேஷந் தாங்கிய மைத்துனியை ஒரு கணம் பார்த்து) உண்மையாகச் சொல்லுகிறேன். சைலா! நீ என் மைத்துனியாக இல்லாமல் என் தம்பியாகமட்டும் இருந் திருந்தால் என் மகிழ்ச்சிக்குச் சற்றும் குறைவு இருந் திருக்காது.

சைலபாலா: (சிறிது பயந்தவளாய்) எனக்கும் அவ்விதமே இருந் திருக்கும், அத்திம்பேரே!

புரபாலா: (சைலபாலாவை இழுத்து அணேத்துக்கொண்டு) இந்த வேஷத்துடஞ நீ பிரம்மசாரிகள் சங்கத்தில் சேரப்போகிருய்?

சைலபாலா: சொந்த உருவத்துடன் சென்ருல் அது அவர்களின் சங்க இலக்கணத்துக்குப் பொருந்தாதே! நீ என்ன நினேக்கிருய், சிற்றப்பா?

ரசிகர்: அதற்கென்ன சந்தேகம்? சங்கத்தின் இலக்கண விதிகளே அநுசரித்துத்தான் செல்ல வேண்டும். இல்லா விடில் பாணினி, போப தேவர்[1] முதலியோர் இவ்வுலகில் ஏன் பிறக்க வேண்டும்? ஆயினும் ஸ்ரீமதி சைலபாலா ஒரு நிஜாரையும் கோட்டையும் அணிந்துகொண்டவுட

1. இவ்விருவரும் வடமொழியில் சிறந்த இலக்கண ஆசிரியர்கள்.

னேயே இலக்கணத்தைப் பின்பற்றிவிட்டதாக ஆகி விடுமோ?

அக்ஷயகுமாரர்: நவீன முக்தபோதத்தில்[1] அப்படித்தான் எழுதியிருக்கிறது. நான் வேண்டுமானால் எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுக்கிறேன். பாரும்! பிரம்மசாரிகள் சங்கத்தின் அங்கத்தினர்கள் சைலா எப்படிச் சொல்லுகிறாளோ அப்படியே ஆடப்போகிறார்கள். அந்த யுவர்களின் சாயம் வெளுத்துவிடப் போகிறது.

புரபாலா: (ஒரு முறை பெருமூச்சுவிட்டு) உன் அத்திம்பேரையும் இந்தக் கிழப் பிரம்மசாரியையும் வைத்துக் கொண்டு உன் நாடகத்தை நடத்து. நான் அம்மாவுடன் காசிக்குப் போய் வருகிறேன்.

[என்று கூறிப் புரபாலா சாமான்களைக் கட்டுவதற்கு வீட்டிற்குள் சென்றாள். அப்பொழுது நிருபபாலாவும் நீரபாலாவும் அறைக்குள் நுழைந்தனர். தங்கள் அத்திம்பேரின் அருகில் ஓர் இளைஞன் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்துத் திரும்பவும் வீட்டிற்குள் ஓட முற்பட்டனர். வாயிற்படியைத் தாண்டிய பிறகு நீரபாலா திரும்பிப் பார்த்து சைலபாலாவை அடையாளம் தெரிந்து கொண்டு 'சின்னக்கா' என்று கூவிக் கொண்டே திரும்பிவந்தாள்.]

நீரபாலா: சின்னக்கா! உன்னை அப்படியே அணைத்துக் கொள்ள வேண்டும்போல ஆசை உண்டாகிறது. ஆனால் உன் நிஜாரும் கோட்டும் தடுக்கின்றன. ஏதோ கதையில் வரும் இராஜகுமாரன் கடல்களைக் கடந்து எங்களைக் காப்பாற்றுவதற்கு வந்தாற்போல் காட்சியளிக்கிறாயே!

[நீரபாலாவின் கூவுதலைக் கேட்ட நிருபபாலா தானும் உள்ளே வந்து கண்களை மலர விழித்து ஆண்வேஷம் அணிந்த சைலபாலாவைப் பார்த்தாள்.]

நீரபாலா: (அவளைப்பிடித்திழுத்து) உலோபி பணக்குவியலைப் பார்ப்பது போல் ஏன் விழித்து நின்று விட்டாய்? நீ மனத்தில் நினைப்பது போல் இவர் உன் துஷ்யந்தன் அல்ல. இது நமது சின்னக்கா சைலபாலா.

1. இது ஒரு வடமொழி இலக்கணம்

ரசிகர்: இயமதிக மநோக்ஞா சாப்கானேநாபி தன்வீ
கிமிவ ஹி மதுராணும் மண்டனம் நாக்ருதீநாம் [1]
(இம்மெல்லியல் கோட்டை அணிந்திருந்தாலும் மிகவும் மனத்தைக் கவர்கிருள். ஏனெனில் அழகிய வடிவத்தையுடைய மங்கையருக்கு அணியாக ஆகாத பொருளும் உண்டோ?)

அக்ஷயகுமாரர்: பேதைப் பெண்ணே! வெறும் நிஜாரையும் கோட்டையும் பார்த்தே மகிழ்ந்து போய் விட்டாயே! முலாம் பூசிய நகைக்கா இவ்வளவு மதிப்பு? இதோ எதிரில் பத்தரை மாற்றுத் தங்கம் நின்றுகொண்டிருக்கையில்!

நீரபாலா: இக்காலத்தில் பவுன்விலே ஏறிக்கொண்டே போகிறது. எங்களுக்கு இந்த முலாம்பூசிய நகையே போதும். நீ என்ன சொல்லுகிருய், சின்னக்கா?

[என்று கூறி சைலபாலாவின் பொய் மீசையைக் கையினுல் முறுக்கினுள்.]

ரசிகர்: (தன்னையே சுட்டிக் காண்பித்துக் கொண்டு) இதோ இந்தப் பத்தரை மாற்றுத் தங்கம் மலிவாக ஏலம் போகிறது. இது இன்னும் ஒரு தங்க சாலைக்கும் போய் ஒரு மகாராணியின் முத்திரையையும் பெற்றதில்லை.

நீரபாலா: பலே! பேஷ்! அப்படியானுல் உங்களை என் தங்கைக்குப் பரிசளித்து விடுகிறேன். (ரசிகரின் கையைப்பிடித்து நிருபபாலாவின் கைமேல் வைத்து) சம்மதம்தானே, நிருபா?

நிருபபாலா: எனக்குச் சம்மதம்தான்.

[சிற்றப்பா ரசிகரை ஒரு பெஞ்சியின் மீது உட்காரவைத்து அவருடைய தலையிலுள்ள நரைத்த உரோமங்களை இழுக்க ஆரம்பித்தாள். நீரபாலா சைலபாலாவின் பொய் மீசையை எடுத்துவிட முயன்ருள்.]

சைலபாலா: சீ என்ன காரியம் செய்கிருய்? நீரு! அப்புறம் என் மீசை கீழே விழுந்து விடும்.

ரசிகர்: அப்படியானுல் என்னிடம் வா, நீரபாலா! என் மீசையைப் பற்றி அந்தப் பயம் கிடையாது.

நீரபாலா: பார்த்தாயா! பலே! இதற்குத்தான் உங்களை என் தங்கையின் கையில் ஒப்புவித்தேன். சரி சிற்றப்பா! உங்கள்

1. இது மகாகவி காளிதாஸர் இயற்றிய 'சாகுந்தல' நாடகத்தில் வரும் ஒரு சுலோகம்; வடிவழகியாகிய சகுந்தலையை மறைவில் இருந்து பார்த்த துஷ்யந்த மகாராஜன் அவளை வருணிக்கும் செய்யுள். சிற்றப்பா ரசிகர் அந்த சுலோகத்தில் "வல்கலே நாபி" (மரவுரி) என்பதை "சாப்கானே நாபி" (கோட்டு) என்று மாற்றியமைத்து விகடம் செய்கிருர்.

*தலைமயிர் பாதிதான் நரைத்திருக்கிறது. மீசை மட்டும் தும்பைப்பூவைப்போல் ஆகிவிட்டதே!*

ரசிகர்: *சிலருக்குத் தலை நரைக்குமுன் மீசை வெண்ணிறம் பூண்டுவிடும்.*

அக்ஷயகுமாரர்: *அப்படியானால் நான் பிரம்மசாரிகள் சங்கத்தின் தலைமேல் ஒருமுறை கை வைத்துவிட்டுவருகிறேன்.*

நீரபாலா: *(பாடுகிறாள்)*

வெற்றி யாத்திரை தொடங்குவீர் - நும்
விஜயத் தேரின் மீதிலே
வெற்றி வாகை சூட்டவே - நான்
வேட்கையோடு நிற்பனே
வெற்றிப்பாதை மீதிலே - மணி
வீரக் கம்பளம் விரிப்பனே
வெற்றியோடு வருவிரேல் - மன
மாலை நல்கி மகிழ்வனே.

அக்ஷயகுமாரர்: *ரதம் சித்தமாக இருக்கிறது. இப்பொழுது என்ன வேண்டும் சொல்!*

நீரபாலா: *(பாடுகிறாள்)*

அழுகணீர் துயராலே மல்கும் எங்கள்
அலர்விழியில் செவ்வரிகள் ஓடச் செய்வீர்
விழுமியநல் வசந்தஒளி வெற்றி டத்தே
வீறுகொண் டெழுந்திடச் செய்கு வீரே
அழியாமல் ஒளிவீசும் மணி விளக்கை
அகல்க இருள் எனஏற்றி வைப்பீரேல்நும்
எழிலார்நள் ளிரவென்னும் நுதலின் மீதே
இன்பமெனும் பிறைத்திலகம் அணிவிப் பேனே!

அக்ஷயகுமாரர்: *எல்லாம் சரிதான். ஆனால் உன் ஜாபிதாவில் வரும் பொன் விளக்குத்தான் சிறிது அதிக விலையாகும் என்று தோன்றுகிறது. அதைக் கொண்டு வர முயற்சிக்குமட்டும் குறைவு இராது.*

நீரபாலா: *அக்காவின் சங்கம் எந்த வீட்டில் கூடும், அத்திம் பேரே?*

அக்ஷயகுமாரர்: *நமது வீட்டின் பொது அறையில்.*

நீரபாலா: *அப்படியானால் அதைச் சுத்தம் செய்துவைக்க வேண்டாமா?*

அக்ஷயகுமாரர்: *நான் இத்தனை நாட்களாக அதை உபயோகித்து வருகிறேன். ஒரு நாளாவது அதை ஒழுங்கு செய்து வைக்க வேண்டும் என்று உனக்குத் தோன்றியதுண்டா?*

நீரபாலா: உங்களுக்கென்றே தனியாக ஒரு வேலைக்காரன் இருந்தும் திருப்தி இல்லையே!

[புரபாலா வருகிறாள்]

புரபாலா: இங்கு என்ன நடந்துகொண்டிருக்கிறது?

நீரபாலா: அத்திம்பேரிடம் பாடம் சொல்லிக் கொள்ளலாம் என்று வந்தோம் அக்கா! அதற்கு அவர் வராந்தாவில் இருக்கும் அறையைச் சுத்தம் செய்து ஒழுங்கு பண்ணி வைத்தால்தான் பாடம் சொல்லித் தருவேன் என்கிறார். நானும் நிருபாவும் அதைச் சுத்தம் செய்யப் போகிறோம். நிருபா! வா, போகலாம்.

நிருபபாலா: நீ வேண்டுமானால் போய்ச் சுத்தம் செய். நான் வரமாட்டேன்.

நீரபாலா: ஓகோ! நான் ஒண்டியாகப் போய் வேலை செய்ய வேண்டும். நீ பிறகு வந்து ஒய்யாரமாகப் பாடம் படிக்க வேண்டும். இது ஒருநாளும் முடியாது.

[நிருபபாலாவைப் பலவந்தமாகப் பிடித்துத் தள்ளிக் கொண்டு போகிறாள் நீரபாலா]

புரபாலா: சாமான்கள் எல்லாம் கட்டியாகிவிட்டன. ரெயிலைப் பிடிக்க இன்னும் நிறைய நேரம் இருக்கிறதென்று நினைக்கிறேன்.

அக்ஷயகுமாரர்: ரெயில் தவறிப் போக வேண்டுமானால் நிறைய நேரம் இருக்கிறது. கிளம்பு.

# இரண்டாம் அங்கம்

## முதற் காட்சி

### சந்திரமாதவ பாபுவின் வீடு

*[பிரம்மசாரிகள் சங்கத்தின் காரியாலயத்தில் ஸ்ரீசரும் விபினரும் உட்கார்ந்திருக்கின்றனர்.]*

**ஸ்ரீசர்:** என்ன இருந்தாலும் நமது அக்ஷய பாபு நம் சங்கத்திற்குத் தலைவராக இருந்தபொழுதுதான் அது சிறப்பான முறையில் நடந்து வந்தது. தற்சமயம் நமது தலைவராக இருக்கும் சந்திரமாதவ பாபு கொஞ்சம் முரட்டு சுபாவக்காரர்.

**விபினர்:** அக்ஷயர் தலைவராக இருந்தபொழுது இருந்த ஜோர் அலாதிதான். ஆனால் - பிரம்மசாரிகளாகவே இருந்துவிடுவது என்ற விரதத்தை மேற்கொண்ட ஒரு சங்கத்தில் தமாஷுக்கு அதிக இடமில்லை என்பது என் அபிப்பிராயம்.

**ஸ்ரீசர்:** என் அபிப்பிராயம் அதற்கு நேர் விரோதமானது. நமது விரதம் மிகக் கடினமானதாகையால் சங்கத்தில் நகைச்சுவைக்குத் தேவை அதிகம். வறண்ட நிலத்தைச் சாகுபடி செய்து அறுவடை செய்ய வேண்டுமானால் அதற்குத் தகுந்தபடி நீர்ப்பாசனம் செய்ய வேண்டாமா? சாகும் வரையில் மணம் செய்து கொள்வதில்லை என்ற சபதம் போதாதா? அதற்காக நகைச் சுவையையும் தமாஷையும் தியாகம் செய்துவிட்டால் நாமே வறண்டு போய் இறக்க வேண்டியதுதான்.

**விபினர்:** நீ எது வேண்டுமானாலும் சொல். திடீரென்று நமது சங்கத்திலிருந்து விலகி அக்ஷய பாபு விவாகம் செய்துகொண்டு சங்கத்தை நிராதரவாக விட்டுச் சென்றார். இதன் மூலம் நமக்குள் பலருக்கு விரதத்தில் சிரத்தை குறைந்துவிட்டது.

**ஸ்ரீசர்:** இல்லவேயில்லை. உதாரணமாக என் விஷயத்தை எடுத்துக்கொண்டால் எனக்கு நாம் செய்திருக்கும்

சபதத்தில் நம்பிக்கை அதிகரித்து வருகிறது. விரதம் எல்லோராலும் எளிதில் அநுசரிக்கக் கூடியதாக இருந்தால் அதன்மீது ஒருவருக்கும் சிரத்தை இராது.

விபினர்: சரி, போகட்டும். உனக்கு ஒரு நற்செய்தி சொல்லப் போகிறேன்.

ஸ்ரீசர்: உன் கலியாணத்தைப்பற்றித்தானே?

விபினர்: ஆமாம், உன் பேத்தியைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். ஏய்! பரிகாசத்தை நிறுத்து. நான் சொல்ல வந்த விஷயம் என்னவென்றால், பூரணன் நேற்றைய தினம் நமது பிரம்மசாரிகள் சங்கத்தின் அங்கத்தினனாகச் சேர்ந்துவிட்டான்.

ஸ்ரீசர்: பூரணனா? என்ன ஆச்சரியம்? பாறாங்கல் நீரின்மேல் மிதந்தது என்றது போல் இருக்கிறதே!

விபினர்: கல் தானாவே மிதக்கவில்லையடா? வேறு யாரோ அதை மிதக்கும்படி செய்திருக்கின்றனர்.

ஸ்ரீசர்: ஏ விபினா! பூரணன் எதற்காக நமது சங்கத்தில் சேர்ந்திருக்கிறான் என்பதற்குக் காரணம் எவ்வளவு தேடினாலும் அகப்படாது போலிருக்கிறதே! இங்கு கூந்தல் வசீகரம், ஆகர்ஷணம், காந்தத்தின் இழுப்பு முதலிய வசீகர சக்திகள் ஒன்றும் கிடையாதே!

விபினர்: ஏன் கிடையாது? எல்லாம் திரைக்குப் பின்னால் இருக்கிறது.

ஸ்ரீசர்: இன்னும் கொஞ்சம் மனசைத் திறந்து சொல்லு. உனக்குப் புத்தி எவ்வளவு இருக்கிற தென்பதைப் பார்த்து விடுகிறேன்.

விபினர்: பூரணன் சபையில் அங்கத்தினனாகச் சேர்ந்ததிலிருந்து நான் அவனைக் கூர்ந்து கவனித்து வருகிறேன். அவன் கண்களிரண்டும் அதோ அந்த வாயிற்படியின் பின்னால் போடப்பட்டிருக்கும் திரையின் ரகசியத்தைப் பிளந்து கொண்டு நோட்டம் போடுவதற்கே முயற்சி செய்துகொண் டிருக்கின்றன. பிறகு ஆராய்ச்சி செய்து பார்த்ததில் அந்தத் திரையின் கீழ் இரண்டு அழகிய பாதங்கள் அடிக்கடி தெரிவதே அந்த ரகசியம் என்பது தெளிவாயிற்று. பார்த்தவுடனேயே, 'அப்பாதங்களை நோக்கி எவனுடைய மனம் தாவுகிறதோ, அவன் பிரம்மசாரி விரதத்தை ஒரு பொழுதும் அநுசரிக்கப் போவதில்லை' என்பது எனக்குத் தெளிவாயிற்று.

ஸ்ரீசர்: அப் பாதங்களின் தத்துவம் முழுவதையும் நீ தெரிந்துகொண்டு விட்டாயா? எவனுக்கு ஒரு விஷயத்தைப் பற்றிச் சிறிது புரிந்துகொண்டவுடனேயே

ஆவல் அதிகரிக்கிறதோ, அவனுக்கு அதை முழுவதும் ஆராய்ச்சி செய்தால்தான் மனம் சாந்தி யடையும். நீ வருணித்த பொற்பாதங்கள் யாருடையனவோ?

**விபினர்:** அந்தக் கதையைச் சொல்கிறேன், கேள். பூரணன் தினம் மாலையில் பாடம் சொல்லிக் கொள்வதற்காக, நோட்டுப் புத்தகங்களை எடுத்துக் கொண்டு சந்திரபாபு வின் வீட்டிற்குப் போவது உனக்குத் தெரியுமே! ஒரு நாள் நானும் பூரணனும் சேர்ந்து சற்று முன்னதாகவே சந்திரபாபுவின் வீட்டிற்கு வந்து சேர்ந்தோம். அவர் எங்கோ ஒரு பொதுக்கூட்டத்திற்குச் சென்றுவிட்டு அப்பொழுதுதான் திரும்பினார். வேலைக்காரன் விளக் கேற்றி வைத்துவிட்டுச் சென்றான். பூரணன் புத்தகத் தைப் புரட்ட ஆரம்பித்தான். அப்பொழுது....வேறு என்ன சொல்வது ஸ்ரீசா! பங்கிம் சந்திர சாட்டர்ஜி எழுதாத ஒரு நாவலுக்குள்ளிலிருந்து வருவது போல வெளி வந்தாள் ஒரு பெண்! பின்னல் முதுகின் மேல் புரள.....

**ஸ்ரீசர்:** சட்டென்று சொல். விபினா, வேகமாகப் பேசு.

**விபினர்:** சொல்லிக்கொண்டுதான் வருகிறேனே! ஒரு கையில் சந்திரபாபுவிற்காகப் பலகாரங்கள் அடங்கிய தட்டை யும் மற்றொரு கையில் ஒரு கிளாஸ் தண்ணீரையும் ஏந்திக் கொண்டு திடீரென்று வெளியே வந்து நின்றாள். எங்களைப் பார்த்தவுடன் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலியவை அவளைத் தாக்கஅவள் முகம் சிவந்து விட்டது. இருகரங்களிலும் சாமான்கள் இருந்ததால் புடைவையை இழுத்துத் தலையைப் போர்த்திக்கொள்ள முடியவில்லை.[1] பளிச்சென்று தட்டையும் கிளாஸை யும் மேஜைமீது வைத்துவிட்டு மறைந்துவிட்டாள். பூரண னின் முகத்தைப் பார்த்தவுடனேயே அவனுடைய மனம் அப்பெண்ணின் அசைந்தாடிய பின்னலைத் தொடர்ந்து போய்விட்டது என்பது தெளிவாக விளங்கிற்று. அவ ளும் பிரம்ம சமாஜத்தைச்[2] சேர்ந்த வீட்டுப் பெண்ணா னாலும் முப்பத்து முக்கோடி தேவர்களுடன் தன் நாணத் தையும் தியாகம் செய்துவிடாமல் தன் பெண்மையைக் காப்பாற்றிக் கொண்டதை நான் மிகவும் பாராட்டு கிறேன்.

1. இது வங்காளத்து வழக்கம்.
2. பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்தவர்கள் ஹிந்து மதத்தின் கொள் கைகள் பலவற்றில் நம்பிக்கையற்றவர்கள்.

ஸ்ரீசர்: ஆஹா! அப்படியானால் அப்பெண் வடிவழகியாக இருக்க வேண்டும். , இல்லையா, விபினா?

விபினர்: கட்டழகி. திடீரென்று மின்னலைப் போல் தோன்றி மறைந்து எங்கள் படிப்பின்மேல் இடிவிழச் செய்து சென்றுவிட்டாள்.

ஸ்ரீசர்: அடடா? நான் ஒரு நாள் கூடப் பார்த்ததில்லை. அந்தப் பெண் யார், விபினா?

விபினர்: நமது சங்கத் தலைவரான சந்திரமாதவ பாபுவின் சகோதரியினுடைய மகள். பெயர் நிர்மலா.

ஸ்ரீசர்: சகோதரியின் மகளா? வேறு வினை வேண்டியதில்லை. இங்கேயே வசிக்கிறாளோ?

விபினர்: அதைப்பற்றிச் சந்தேகமே கிடையாது. நமது சபைத் தலைவருக்கு வியாதி ஒன்றும் கிடையாது. ஆனால் தொத்து வியாதியைக் கூடவே வைத்துக்கொண்டிருக்கிறார்.

ஸ்ரீசர்: ஆனால் அவளுடன் கணவன் என்ற மற்றொரு தொத்து வியாதி இல்லை போலிருக்கிறது.

விபினர்: இல்லை. கணவன் என்ற தொத்து வியாதி தற்பொழுது பிரம்மசாரி உருவத்தில் நேற்று முதல் சபைக்குள் நுழைந்திருக்கிறது; அது பூர்ணமாகி வெளிப்படும் பொழுது பிரம்மதேவன் அதற்கும் ஒரு முடிச்சுப் போட்டு வைத்து விடுவான்.

ஸ்ரீசர்: அப்படியானால் அவள் மணம் ஆகாத குமாரி என்று தானே அர்த்தம்?

விபினர்: குமாரி அல்ல. நமது குமாரசங்கத்திற்கு அவள் மகாமாரி[1]. இச்சம்பவம் நிகழ்ந்தவுடனேயே பூரணன் நமது சங்கத்தில் அங்கத்தினனாகச் சேர்ந்துவிட்டான்.

ஸ்ரீசர்: பூசாரி வேடம் பூண்டு விக்கிரகத்தை அபகரிக்க வேண்டும் என்று உத்தேசம் போலும். நானும் இனிமேல் இந்த விஷயத்தைக் கூர்ந்து கவனித்தாக வேண்டும்.

விபினர்: பெண் விஷயத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்வது ஆரோக்கியத்திற்கு நல்லதல்ல.

ஸ்ரீசர்: உன் ஆரோக்கியத்திற்கு ஒன்றும் கேடு வராமல் இருக்கும் வரையில் நீ....

விபினர்: இந்த நோய் உள் நுழையும் போது நமக்குத் தெரியாது. ஆனால் பிரம்மசாரிகளுக்கு இது வெளிக் கிளம்பும் பொழுது தேவலோகத்து வைத்தியர்களான

1. மகாமாரி என்பது ஒரு பயங்கரத் தொத்து வியாதி. அம்மை நோய் போன்றது.

அசுவினி குமாரர்களால்கூட அதைத் தீர்க்க முடியாது. முதலிலிருந்தே ஜாக்கிரதையாக இருப்பது மேல்.

[ஒரு பெரியவர் வருகிருர்]

விபினர்: ஐயா! தாங்கள் யார்?

பெரியவர்: ஐயா! என் பெயர் ஸ்ரீவனமாலிபட்டாசார்யர். தந்தையின் பெயர் ராமகமல நியாய சுஞ்சு. இருப்பிடம்....

ஸ்ரீசர்: போதும். இதற்கு மேல் விவரங்கள் எங்களுக்குத் தேவையில்லை. இங்கு வந்த வேலையைச் சொன்னீர்களாகுல்....

வனமாலி: வேலை ஒன்றும் இல்லை. நீங்கள் பெரிய வீட்டுப் பிள்ளைகள். உங்களை யெல்லாம் அறிமுகப்படுத்திக் கொண்டு.....

ஸ்ரீசர்: உங்களுக்கு ஒன்றும் வேலையில்லை என்ருல் எங்களுக்கு நிறைய இருக்கிறது. ஆகவே நீங்கள் இப்பொழுதே வேறு பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகளைத் தேடிப் பிடித்து அவர்களுடன் அறிமுகம் செய்து கொள்ளலாம்.

வனமாலி: அப்படியாகுல் வந்த காரியத்தை முதலில் சொல்லிவிடுகிறேன்.

ஸ்ரீசர்: அதுதான் நல்லது.

வனமாலி: குமாரடூலி நீல மாதவ சௌதுரிக்கு மிக அழகிய இரு பெண்கள் இருக்கிருர்கள். அவர்களுக்கு விவாகத்திற்குத் தக்க பருவம் வந்துவிட்டது.

ஸ்ரீசர்: தாராளமாக வரட்டும். அதற்கும் எங்களுக்கும் என்ன சம்பந்தம்?

வனமாலி: நீங்கள் மனம் வைத்தால் சம்பந்தம் தாகுகவே ஏற்பட்டுவிடுகிறது. அதில் என்ன கஷ்டம்? மற்ற எல்லா ஏற்பாடுகளும் நான் செய்து விடுகிறேன்.

விபினர்: உங்களுடைய இந்த மகத்தான தயவைப் பாத்திரமல்லாத எங்கள் மீது வீணுக்குகிறீர்கள்.

வனமாலி: பாத்திரமல்லாதவர்களா? நிரம்ப அழகுதான்! உங்கள் இருவரையும் போல் நல்ல மாப்பிள்ளைகள் எங்கு கிடைக்கப் போகிருர்கள்? உங்களுடைய அடக்கமான குணத்தைப் பார்த்து எனக்குப் பெருமகிழ்ச்சி உண்டா

ஸ்ரீசர்: அந்த சந்தோஷத்தை அப்படியே வைத்துக் கொள்ள வேண்டுமாகுல் உடனே இங்கிருந்து சென்று விடுங்கள். எங்கள் அடக்க குணத்திற்கும் ஓர் எல்லை உண்டு.

வனமாலி: பெண்களின் தகப்பஞர் நிறையப் பணம் கொடுக்கத் தயாராக இருக்கிருர்.

ஸ்ரீசர்: ஊரில் பிச்சைக்காரர்களுக்குக் குறைவில்லையே! ஏ விபினு! என்ன இளிக்கிருய்? இது போன்ற வீண் பேச்சிற்கு இப்பொழுது சமயமில்லை.

விபினர்: எங்கு ஓடுவது? கடவுள் இவருக்குத்தான் ஒரு ஜோடி நீண்ட கால்களை அளித்திருக்கிருர். நம் பின்னேயே வந்துவிடுவார்.

ஸ்ரீசர்: வந்தால் இவர் கடவுள் அளித்த அந்த சாதனங்களை நம்மிடம் இழக்க நேரிடும்.

வனமாலி: நான் வருகிறேன் (போகிருர்).

[சந்திரமாதவ பாபு வருகிருர்]

சந்திரபாபு: பூரணு!

ஸ்ரீசர்: ஸார்: நான் ஸ்ரீசன்.

சந்திரபாபு: நம்முடைய இந்த சங்கத்தின் மெம்பர்களின் தொகை குறைந்துவிடுமோ என்று யாருமே கவலைப்பட வேண்டியதில்லை.

ஸ்ரீசர்: கவலையா? மெம்பர்களின் தொகை குறைவாக இருப்பதுதான் நமது சங்கத்தின் கௌரவம். நமது சபையின் உயர்ந்த இலட்சியங்களையும் கடினமான விதிகளையும் அநுசரிப்பது எல்லோராலும் சாத்தியமான காரியமா? நமது சங்கம் சிறுபான்மையோரின் சங்கம்.

சந்திரபாபு: (நிகழ்ச்சிப் பட்டியலைக் கண்களுக்குக்கெதிரில் பிடித்து) நமது இலட்சியங்கள் மிகவும் உயர்ந்தவையாகவும் விதிகள் கடினமானவையாகவும் இருந்தாலும் நாம் அடக்கத்தை இழக்கக்கூடாது. நாம் மேற்கொண்டுள்ள விரதத்தை நிறைவேற்ருமல் போய்விடுவோமோ என்ற பயம் நமக்கு எப்பொழுதும் இருக்க வேண்டும். யோசித்துப் பார்த்தோமாகில், நமது சங்கத்தில் நம்மைக் காட்டிலும் சிறந்த பல அங்கத்தினர்கள் இருந்ததும், அவர்கள் கடைசியில் சுயநலம், மணவாழ்க்கையில் ஆசை, இவற்ருல் வசீகரிக்கப்பட்டுத் தங்கள் இலட்சியத்தை இழந்ததும் நமக்கு நினைவு வரும். இப்பொழுதிருக்கும் அங்கத்தினர்களுக்கும் அத்தகைய வசீகரணிகள் எங்கு காத்துக்கொண் டிருக்கின்றன என்று கூறுவது அசாத்தியம். ஆகவே, நாம் இறுமாப்பை முதலில் விட வேண்டும். ஒருவித சபதத்தையும் அவசரப்பட்டு மேற்கொள்ளக்கூடாது. சபதம் செய்துவிட்டுப் பிறகு காரியத்தை நிறைவேற்ருமல் தவறுவதை விடச் சபதம் செய்யாமல் காரியத்தை நிறைவேற்றுவது மேல் என்பது என் அபிப்பிராயம்.

*[அடுத்த அறையில் கொஞ்சம் திறந்து வைக்கப்பட்ட கதவின் வழியாக இந்த சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டிருந்த ஒரு பெண் திடீரென்று எழுந்திருக்கவும், அவளுடைய சாவிக் கொத்து 'ஜல்' என்ற சப்தத்தை உண்டுபண்ணிற்று; இதைப் பூரணனைத் தவிர வேறு ஒருவரும் கவனிக்கவில்லை.]*

**சந்திரபாபு:** நம்முடைய சங்கத்தை அநேகர் பரிகசிக்கின்றனர். சிலரோ, 'நீங்கள் தேசத் தொண்டு புரிவதற்காகவா இந்தப் பிரம்மசாரி விரதத்தை மேற்கொண்டிருக்கிறீர்கள்? எல்லோருமே இந்த மகத்தான விரதத்தை மேற் கொண்டால் ஐம்பது வருடங்களுக்குப் பிறகு நாட்டில் மக்களே இல்லாமல் போய்விடுவர். அப்புறம் தேசத்திற்குத் தொண்டு புரிய யாருமே தேவையில்லை' என்று கேலி செய்கின்றனர். நான் ஒன்றுமே பதில் கூறாமல் மவுனமாக இருந்து விடுவது வழக்கம். ஆனால் இதற்குச் சரியான பதில் கிடையாதா?

*[என்று அங்கிருந்த மூன்றே அங்கத்தினர்களின் முகங்களைப் பார்த்தார்.]*

**பூரணர்:** *(கதவிற்குப் பின்னிருக்கும் உருவத்தில் லயித்த மனத்துடன், உற்சாகமாக)* இல்லாமல் என்ன? கலியாணம் செய்து கொண்டு குடும்ப வாழ்க்கை நடத்தாமல் பிரம்மசாரிகளாகவோ, கன்னிகைகளாகவோ இருப்பதற்காகவே பிறப்பவர்கள் ஒவ்வொரு நாட்டிலும் உண்டு. ஆனால் அவர்களுடைய தொகை மிகக் குறைவு. அவர்களை எல்லாம் ஒன்று கூட்டி ஓர் இலட்சியத்திற்குக் கட்டுப்படுத்துவதே நமது சபையின் நோக்கம். உலகில் வசிக்கும் எல்லா மக்களையும் இந்தப் பிரம்மசாரி விரதத்தைப் பின்பற்றச் செய்வது நமது நோக்கமல்ல. நமது இலட்சியத்தைப் பின்பற்றுவதாகக் கூறிக்கொண்டு அநேகர் முன் வருவார்கள். அவர்களுள் பெரும்பான்மையோர் நாளாவட்டத்தில் விலகிவிடுவர். கடைசியில் மூன்று, நான்கு அங்கத்தினர்கள்தான் எஞ்சுவர். யாராவது நம்மை, 'அந்த மூன்று அங்கத்தினர்கள் நீங்கள்தானா' என்று கேட்டால் நாம் .எப்படி பதில் கூற முடியும்? நாங்கள் இந்த வலையில் வந்து விழுந்திருப்பது என்னவோ உண்மைதான். ஆனால் பரிட்சை முடியும் வரை நிலைப் போமா என்பது நமக்குள் அந்தர்யாமியாக இருக்கும் கடவுளே அறிவார். நாம் பிடித்த பிடியை விடாமல்

இருக்கிறோமோ, இல்லேயோ, நமது மனவுறுதியை இழக்கிறோமோ, இல்லேயோ, இதற்காக நமது சங்கத்தைப் பரிகாசம் செய்வதற்கு வேறு ஒருவருக்கும் அதிகாரம் கிடையாது. நமது சங்கத் தலேவர் ஒருவரே கடைசி அங்கத்தினராக எஞ்சிய போதிலும் இந்தப் புனிதமான சங்கக் கட்டடம் அவர் ஒருவருடைய தவ வலிமையினுல் புண்ணிய ஸ்தலமாக விளங்கும். மேலும் அவர் நீண்ட காலம் புரியும் தவத்தின் பயன் வீண் போகாமல் தேசத்திற்கு இறுதியில் நன்மையையே தரும்.

[இதைக் கேட்டுச் சற்றுக் குழப்பமடைந்த தலேவர் சந்திரபாபு மறுபடியும் நிகழ்ச்சித்தாளே எடுத்து எங்கோ ஞாபகமாகப் படிக்க ஆரம்பித்தார். ஆனுல் பூரணர் நினேத்த காரியம் நிறைவேறிவிட்டது. சந்திரமாதவபாபு ஒருவர்தான் கடைசியில் சங்கத்தின் அங்கத்தினராக எஞ்சுவார் என்று பூரணர் கூறியதைக் கேட்டுக் கலக்கம் அடைந்த நிர்மலா மறுபடி எழுந்திருக்கவும், சாவிக் கொத்து ஜல் என்று சப்தித்தது.]

விபினர்: நாம் இந்த சபையின் அங்கத்தினர்களாக இருக்கத் தகுதியுள்ளவர்களோ அல்லரோ என்பது காலப் போக்கில் தாளுகவே விளங்கிவிடும். ஆனுல் நாம் ஏதாவது தொண்டு புரிய வேண்டும் என்ற உத்தேசம் இருந்தால் அதை ஒரே சமயத்தில் தொடங்குவது நலம். இப்பொழுது நம்முடைய பிரச்னே நமது கடமை என்ன என்பதே.

சந்திரபாபு: (சிறிது உற்சாகத்துடன்) இப்பிரச்னேயையே நாம் இதுகாறும் எதிர்பார்த்துக்கொண் டிருந்தோம். நமது கடமை என்ன? இக்கேள்வியே நம் எல்லோரையும் ஒவ்வொரு கணமும் வாட்டுகிறது. 'நமது கடமை என்ன?' மித்திரர்களே! பணி ஒன்றுதாம் நம்மை ஒன்று சேர்க்கும் பாசவலே. ஒற்றுமையுடன் பணியாற்றுபவர்கள் பலராயினும் ஒருவர் என்றே கொள்ள வேண்டும். இச்சங்கத்தின் அங்கத்தினர்களாகிய நாம் எப்பொழுது ஒன்று சேர்ந்து ஒரே பணியில் ஈடுபடுகிறோமோ அப்பொழுதே, உண்மையாக ஒன்று பட்டவர்களாகிறோம். ஆகவே இன்று விபினர் ஒரு முக்கியமான பிரச்னேயை எழுப்பியிருக்கிருர். 'நமது கடமை என்ன?' இதற்குப் பதிலளிப்பதை இனி ஒத்திப் போட முடியாது. சபை

யோர்களே! நமது கடமை என்ன என்பது பற்றி உங்கள் அபிப்பிராயங்களைக் கூறுங்கள்.

ஸ்ரீசர்: (கலக்கமடைந்து) 'நமது கடமை என்ன' என்று என்னைக் கேட்டீர்களானால் என் பதில் இதுவே. நாமெல்லோரும் சந்நியாசிகளாக மாறி பாரத நாட்டின் மாகாணங்கள் தோறும், கிராமங்கள்தோறும் சுற்றித் திரிந்து தேசத் தொண்டு என்ற விரதம் பூண்டு நம்முடைய சங்கத்தைப் பலப்படுத்த வேண்டும். நம் சங்கத்தின் சூட்சும உருவம் என்னும் நூலைக் கொண்டு பாரத நாட்டைப் பிணைத்துவிட வேண்டும்.

விபினர்: (சிரித்து) இதற்கெல்லாம் வேண்டிய நேரம் இருக்கிறது. நாளையே ஆரம்பிக்கக்கூடிய காரியம் ஏதாவது ஒன்று கூறு. 'வேட்டையாடினால் காண்டாமிருகத்தை வேட்டையாட வேண்டும். கொள்ளையடித்தால் அரண்மனையைக் கொள்ளையடிக்க வேண்டும்'[1] என்று சபதம் செய்தால் காண்டாமிருகமும் பிழைக்கும். அரண்மனையும் பிழைக்கும். நாம் இருக்குமிடத்திலேயே இருப்போம். என்னுடைய யோசனை என்னவென்றால், நாம் ஒவ்வொருவரும் இரண்டு அயல்நாட்டு மாணவர்களை ஏற்றுக்கொண்டு படிக்க வைக்க வேண்டும். அவர்களுடைய படிப்பு, வளர்ப்பு முதலிய எல்லாப் பொறுப்புகளையும் நாமே வகிக்க வேண்டும்.

ஸ்ரீசர்: இதுதானா உன் யோசனை! இதற்காகவா நாம் சந்நியாசம் வாங்கிக் கொள்ள வேண்டும். பிள்ளைகளை வளர்த்துப் படிக்க வைப்பதுதான் நமது நோக்கமென்றால் நமது பிள்ளைகள் என்ன பாவம் செய்தனர்?

விபினர்: (களைப்படைந்து) அப்படியானால் சந்நியாசிக்கு வேலையே கிடையாது என்றுதான் முடிவுகட்ட வேண்டும். பிச்சை எடுத்து உண்பது, ஊர் ஊராகத் திரிவது, வறட்டு வேதாந்தம் பேசுவது, இவை தான் அவனுடைய வேலை போலும்!

ஸ்ரீசர்: (கோபத்துடன்) நமது சங்கத்தின் அங்கத்தினர்களுக்கு நமது இலட்சியத்தின்மீது கொஞ்சங்கூட சிரத்தையில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். அத்தகைய மெம்பர்கள் எவ்வளவு சீக்கிரமாகச் சங்கத்தை விட்டு விலகி மக்களைப் பெற்று வளர்க்கும் தொண்டில் ஈடுபடுகிறார்களோ, அவ்வளவு சீக்கிரமாக நமது ஸ்தாபனத்திற்கு நன்மை ஏற்படும்.

விபினர்: (முகம் சிவந்து போய்) என்னைப் பற்றி நான் ஒன்றும்

1. இது ஒரு வங்கப் பழமொழி

கூற விரும்பவில்லை. ஆனால் இச்சங்கத்தில் சந்நியாசம் ஏற்றுக்கொள்வதற்கு வேண்டிய மன உறுதியோ, சம்சாரத்தில் இறங்குவதற்கு வேண்டிய தைரியமோ இரண்டும் இல்லாத சில மகானுபாவர்கள் அங்கத்தினர்களாக இருப்பதால்தான்....

சந்திரபாபு: (நிகழ்ச்சிக்குறிப்பைக் கீழே வைத்துவிட்டு) இப்பொழுது விவாதிக்கப்படும் விஷயத்தைப்பற்றிப் பூரணரின் அபிப்பிராயமும் தெரிந்துவிட்டால் நம்முடைய ஏகமனதான தீர்மானத்தை வெளியிடுவது சுலபமாகிவிடும்.

பூரணர்: சங்கத்தின் ஒற்றுமையை நிலைநாட்டுவதற்காக நாமெல்லோரும் சேர்ந்து ஒரு காரியத்தை ஆரம்பிக்க வேண்டும் என்ற தீர்மானம் விவாதிக்கப்படுகிறது. ஆயினும் காரியாம்சத்தில் நமக்குள் எத்தகைய ஒற்றுமை இருக்கிறது என்பதை நான் உங்களுக்கெல்லாம் எடுத்துரைப்பது அவசியமில்லை என்று நினைக்கிறேன். இதற்கிடையில் நான் ஒரு மூன்றாவது அபிப்பிராயத்தைத் தெரியப்படுத்தினால், அபிப்பிராயபேதம் என்னும் தீயில் நெய்யை ஊற்றுவது போலாகும். ஆகவே என் யோசனை என்னவென்றால், சங்கத் தலைவர் நமக்கு ஏதாவது ஒரு பணியில் ஈடுபடுமாறு உத்தரவிட்டால் நாமெல்லாரும் அதைத் தலைமீது தாங்கி வேறு கவலை ஒன்றும் இல்லாமல் முடித்து விடுவோம். கடமை, ஒற்றுமை இரண்டையும் சாதிப்பதற்கு இது ஒன்றே வழி.

[பக்கத்து அறையில் இருக்கும் பெண் நகரவும், சாவிக்கொத்து ஜல் என்று சப்தித்தது.]

சந்திரபாபு: பாரத நாட்டின் சாபக் கேடாகிய வறுமையைப் போக்குவதே நமது முதற் கடமை. அதற்கு உபாயம் வியாபார அபிவிருத்தியே. சிறுபான்மையோராகிய நம்மால் வியாபாரம் எதுவும் செய்ய முடியாத போதிலும், பிறருக்கு நாம் வழி காட்ட முடியும். உதாரணமாக, நெருப்புப் பெட்டித் தொழிலைக் குறித்து நாம் யோசனை செய்து பார்க்கலாம். நாடெங்கும் சுலபமாகக் கிடைக்கக் கூடியதும் சீக்கிரமாகப் பற்றிக்கொள்ளக் கூடியதும் அதிக நேரம் எரியக் கூடியதுமாகிய ஒரு வஸ்துவை நாம் கண்டுபிடித்தால் நாட்டில் மலிந்த விலைக்கு நெருப்புப் பெட்டிகளை நாம் விற்க முடியும். நெருப்புப் பெட்டி தயார் செய்யும் முறையை மாத்திரம் நாம் அறிந்து கொண்டு பயனில்லை. நமது நாட்டில் எத்தனை விதமான மரங்கள் உள்ளன; அவற்றுள் எவை நன்றாக எரியக்

கூடியவை என்பது போன்ற விஷயங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டும்.

விபினர்: எரியும் பொருள்களைப்பற்றிப் பூரணன் தீவிரமான ஆராய்ச்சி செய்திருக்கிறான் என்று நினைக்கிறேன்.

சந்திரபாபு: அப்படியா, பூரணா! நீ எந்தெந்த எரிபொருள் களைக் குறித்து ஆராய்ச்சி செய்திருக்கிறாய்?

பூரணர்: நான் அறிந்த வரையில் துடைப்பம்தான். சீக்கி ரம் எரியக் கூடியது. விலையும் மலிவு.

விபினர்: ஆமாம். ஒரு பொறி பட்டால் பற்றிக் கொண்டு விடும். ஆனால் அதைப் பரிசோதனை செய்ய நமது பிரம்மசாரிகள் சங்கம் இடமல்ல.

சந்திரபாபு: எனக்கு ஒன்றுமே விளங்கவில்லையே?

விபினர்: நான் சொன்னது என்னவென்றால், 'நமது தேசத் தில் கொளுத்தப்படவேண்டிய பொருள்கள் ஏராளமாக இருக்கின்றன. கொளுத்தும் சாதனங்களுக்கும் குறை வில்லை. ஆனால் இந்த அக்கினிப் பரீட்சையை நன்கு ஆலோசித்த பிறகே மேற்கொள்ள வேண்டும்.'

சந்திரபாபு: நன்கு கூறினீர்கள். அநேகக் கட்டைகள் எவ்வளவு சீக்கிரம் தீப்பற்றிக் கொள்கின்றனவோ அவ்வளவு விரைவில் எரிந்து சாம்பராகிவிடும்.

விபினர்: முற்றிலும் உண்மை.

சந்திரபாபு: ஆகவே சீக்கிரம் பற்றிக்கொள்வதும், மெது வாகத் தீப்பற்றி எரிவதும், வெகுநேரம் கழித்துப் பற்றிக் கொள்வதும் ஆகிய வெவ்வேறு பொருள்கள் தேவை. தேடினால் கிடைக்காமலா போய்விடும்?

ஸ்ரீசர்: நிறையக் கிடைக்கும். கடைசியில் பார்த்தால் நமது அருகிலேயே இருந்தாலும் இருக்கும்.

பூரணர்: நல்ல துடைப்பக்குச்சிகளைக் கொண்டு சீக்கிரமாகவே பரீட்சையை நடத்தி விடுகிறேன்.

[ஸ்ரீசர் முகத்தைத் திருப்பிக்கொண்டு சிரிக்கிறார். அக்ஷயர் வருகிறார்.]

அக்ஷயர்: ஐயன்மீர்! உள்ளே பிரவேசிக்கலாமா?

[மங்கிய கண்பார்வையுடைய சந்திரபாபு வந்தவரை அடையாளம் கண்டுபிடிக்க முடியாமல் புருவங்களை நெரித்துக் கொண்டு மவுனமாக இருக்கிறார்.]

அக்ஷயர்: ஐயா! பயப்படாதீர்கள். புருவத்தை நெரித்து என்னைப் பயப்படுத்தாதீர்கள். நான் புதியவன் அல்ல. உண்மையில் நான் உங்களுக்கு முன்னால் இருந்தவன். என் பெயர்....

சந்திரபாபு: பெயர் நீங்கள் கூறவேண்டியதில்லை. அக்ஷயரே! வாரும், வாரும்.

[மூன்று இளைஞர்களும் எழுந்து அக்ஷயரை வணங்கினர். நண்பர்களாகிய விபினரும் ஸ்ரீசரும் சற்று முன்பே சண்டை போட்டு ஓய்ந்தனர் ஆதலால் வாய் திறவாமல் மறுபடியும் உட்கார்ந்தனர்.]

பூரணர்: ஐயா! புதியவனைக் காட்டிலும் பழைய ஆசாமியிடமே ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

அக்ஷயர்: பூரணர் நல்ல புத்திசாலியைப்போல் பேசுகிறார்; உலகில் எல்லோரும் பூதத்தைக் கண்டு அஞ்சுகின்றனர்; ஒருவன் பூதமாகிவிட்டால் அவனுக்கு உயிருடனிருப்பவர்கள் சுகம் அநுபவிப்பதைக் கண்டால் பிடிக்காது. ஆகவே பூதம் என்றால் பயங்கரமான ஓர் உருவம் என்று எல்லோரும் நினைக்கின்றனர். ஆகையால் சபைத் தலைவர் அவர்களே, உங்கள் பிரம்மசாரி சங்கத்தின் பூதமான என்னை விரட்டப் போகிறீர்களா? அல்லது பழைய தொடர்பை முன்னிட்டு உட்காருவதற்கு ஒரு நாற்காலி போடுகிறீர்களா?

சந்திரபாபு: நாற்காலி போடுவதற்குத் தடையில்லை, அக்ஷயரே!

[ஒரு நாற்காலியை அக்ஷயரின் சமீபத்தில் தள்ளுகிறார்.]

அக்ஷயர்: உங்கள் எல்லோருடைய அநுமதியின் பேரில் இந்த நாற்காலியின்மீது அமருகிறேன். நீங்கள் என்னிடம் மிகவும் மரியாதை காட்டி உட்காரும்படி கூறினீர்கள்: நான் அதிக நேரம் உட்கார்ந்து அந்த மரியாதையைக் குறைத்துக் கொள்ள மாட்டேன். எனக்கு வெற்றிலை பாக்கு, புகையிலை போடுவது, மனைவியுடன் பேசுவது முதலிய கெட்ட பழக்கங்கள் உள்ளன. இவை உங்கள் சங்கத்தில் அடியோடு விலக்கப்படுபவையாதலால் நான் சட்டென்று வந்த காரியத்தைப் பார்த்துக்கொண்டு வீடு திரும்புகிறேன்.

சந்திரபாபு: (சிரித்து) நீங்கள் இந்தச் சங்கத்தின் அங்கத்தினர் அல்லவாதலால் எங்களுடைய விதிகளைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. வெற்றிலை பாக்கு, புகையிலை இரண்டும் இங்கேயே வரவழைத்துக் கொடுக்கிறேன். ஆனால் நீங்கள் கூறிய மூன்றாவது லாகிரிவஸ்து.....

அக்ஷயர்: அதை மாத்திரம் இங்கு சேர்த்து விடாதீர்கள், சுவாமி! அது என்னுடைய தனிப்பட்ட பழக்கம்.

[சந்திரபாபு வெற்றிலை பாக்கு புகையிலை வாங்கி வருவதற்காக வேலைக்கார சநாதனனைக் கூப்பிட ஆரம்பித்தார். அதற்குள் பூரணர் 'நான் கூப்பிடுகிறேன்' என்று எழுந்திருந்தார். பக்கத்து அறையில் சாவிக்கொத்தும் கைவளையல்களும் ஜல் என்று சப்திக்க, யாரோ ஓடும் சப்தம் கேட்டது.]

அக்ஷயர்: ''யஸ்மின் தேசே யதாசார:'' எங்கு இருக்கிறோமோ அங்குள்ள வழக்கத்தை அநுசரிக்க வேண்டும். நான் இங்கு இருக்கும் வரையில் பிரம்மசாரிதான். சரி. வந்த காரியத்தைச் சொல்கிறேன்.

[சந்திரபாபு மேஜையின் மீதிருந்த தாளை மடித்து வைத்துவிட்டு மிகவும் கவனமாகக் கேட்க ஆரம்பித்தார்.]

அக்ஷயர்: வெளியூரில் இருக்கும் என்னுடைய பணக்கார உறவினர் ஒருவர் தம்முடைய ஒரே மகனை உங்கள் சங்கத்தின் அங்கத்தினனாகச் சேர்க்க விரும்புகிறார்.

சந்திரபாபு: (வியப்புடன்) என்ன விந்தை! பணக்காரத் தந்தை மகனைப் பிரம்மசாரியாகவே வைத்திருக்க விரும்புகிறாரா?

அக்ஷயர்: அதைப் பற்றி உங்களுக்குக் கவலையே வேண்டாம். அவன் மணம் செய்து கொள்ளப் போவதில்லை என்பதற்கு நான் உத்தரவாதம் கொடுக்கிறேன். அவனுடைய தூர பந்துவாகிய ஒரு கிழவரும் சங்கத்தில் சேரப் போகிறார். அவரைப்பற்றி நீங்கள் யாதொரு விதமான கவலையும் கொள்ள வேண்டாம். அவர் உங்களைப்போல் அழகானவரல்லர் எனினும் உங்களைவிடத் தீவிரமான பிரம்மசாரி. வயசு அறுபதுக்குமேல் ஆகிவிட்டது. சந்தேகத்துக்கிடம் தரும் பருவம் தாண்டிவிட்டது. நல்ல வேளையாக நீங்கள் நால்வரும் அந்த சந்தேகப்படுகிற பருவத்திலேயே இருக்கிறீர்கள்.

சந்திரபாபு: அங்கத்தினராகச் சேர விரும்பும் நபர்களின் ஊர், பெயர் முதலிய விவரங்கள் வேண்டும்.

அக்ஷயர்: அவர்களுடைய முழுவிவரங்களும் கிடைக்கச் செய்கிறேன். அவற்றை உங்களிடமிருந்து மறைப்பதாக உத்தேசமில்லை. அங்கத்தினர்களாகச் சேர்ந்தவுடன், விவரங்கள் அனைத்தும் கிடைத்துவிடும். ஆனால் இச் சிறிய இருள் நிறைந்த வீடு உங்கள் ஆரோக்கியத்திற்குத் தகுந்த இடமல்ல. இதே உங்கள் சாசுவதமான காரியாலயமாக ஆகிவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

சந்திரபாபு: (சிறிது வெட்கமடைந்து நிகழ்ச்சித் தாளினால் முகத்தை மறைத்துக்கொண்டு) அக்ஷயரே! நமது சங்கத்தின் சந்தா வசூல் உங்களுக்குத்தான் தெரியுமே!

அக்ஷயர்: சங்கத்தின் பொருளாதார நிலைமையைப் பற்றிப் பகிரங்கமாக நாம் சொல்லிக் கொள்ளக்கூடாது. அது மகிழ்ச்சி தரும் விஷயம் அல்ல. உங்களுக்கென்று ஒரு பெரியவீடு ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. இதற்காக நீங்கள் உங்கள் பொக்கிஷதாரரைத் தொந்தரவு செய்ய வேண்டாம். கிளம்புங்கள். இப்பொழுதே எல்லாவற்றையும் காண்பித்து அழைத்து வருகிறேன்.

[இதைக் கேட்டவுடன் விபினர், ஸ்ரீசர் ஆகிய இருவரின் முகங்கள் மலர்ந்தன. தலைவரான சந்திரபாபுவும் மகிழ்ச்சி யடைந்து தம் தலைமயிரை விரல்களால் தடவிக்கொண்டார். பூரணர் மாத்திரம் முக வாட்டத்துடன் உட்கார்ந்துவிட் டார்.]

பூரணர்: காரியாலயத்தைத் திடீரென்று மாற்றுவது அவ்வளவு உசிதமல்ல.

அக்ஷயர்: ஏன் மாற்றக்கூடாது? இந்தக் கட்டடத்திலிருந்து மற்றொரு கட்டடத்திற்குப் போனால் உங்கள் விரதம் பங்கமாகிவிடுமோ?

பூரணர்: இந்த வீட்டிற்கு என்ன குறைவு என்று எனக்குப் புரியவில்லையே!

அக்ஷயர்: குறை ஒன்றுமில்லை. ஆனால் இதைவிட நல்ல காரியாலயம் கிடைத்தால் அது சிறந்ததல்லவா?

பூரணர்: என்னைக் கேட்டால், சுகமாக இருப்பதற்கு முயற்சி செய்வதைவிட நாம் கொஞ்சகாலம் கஷ்டத்தைச் சகித்துக் கொள்வதற்குப் பழக்கம் செய்துகொண்டால் நலம் என்று தோன்றுகிறது.

ஸ்ரீசர்: இவைகள் எல்லாம் சங்கத்தின் கூட்டங்களில் செய்யக் கூடிய காரியங்களல்ல. வெளியில் செய்யவேண்டியவை.

விபினர்: ஏதாவது ஒரு காரியத்தைச் சாதிக்க இத்தகைய கஷ்டத்தை அநுபவிக்கவேண்டியதே தவிர காரணமில்லாமல் நமது சரீரங்களை வாட்டிக் கொள்வது முட்டாள்தனம்.

அக்ஷயர்: அன்பர்களே! என்னுடைய யோசனையைக் கேளுங்கள். இந்த இருள் சூழ்ந்த வீட்டில் அடைப்பட்டு உங்கள் பிரம்மசாரி விரதத்தையும் இருள் சூழச் செய்துவிடாதீர்கள். வெளிச்சமும், காற்றும் பெண் பால் அல்ல. ஆகவே அவ்விரண்டையும் உள்ளே வரவொட்டாமல்

தடுத்துவிடாதீர்கள். இந்த இடம் சுவை நிறைந்த இடம். உங்கள் விரதத்திற்கு ஏற்றதல்ல. விவாகம் செய்து கொள்வதில்லை என்பது உங்கள் விரதமே தவிர இவ் வீட்டில் அடைபட்டு வாதநோயை வரவழைத்துக் கொள்ள வேண்டும் என்பது உங்கள் நோக்கம் அல்லவே! ஸ்ரீசரே! விபினரே! உங்கள் அபிப்பிராயம் என்ன?

ஸ்ரீசரும் விபினரும்: சரியான பேச்சு. வேறு வீட்டைப் பார்த்து விட்டுத்தான் திரும்பவேண்டும்.

[பூரணர் ஒன்றும் பேசாமலிருந்தார். பக்கத்து அறையில் சாவிக்கொத்து ஈன மான சுரத்தில சப்தித்தது.]

அக்ஷயர்: சந்திரபாபு! இப்பொழுதே வாருங்கள். வீட்டைப் பார்த்துவிட்டு வருவோம்.

சந்திரபாபு: போவோம் வாருங்கள்.

[சந்திரபாபுவும் அக்ஷயரும் போகிறார் கள்.]

விபினர்: இதோ பார் பூரணு! உனக்கு ஓர் உபதேசம் செய்கிறேன். பிரம்மசாரிகள் சங்கத்தின் எல்லைப்புற நடவடிக்கைகளைத் திரைக்குப் பின்னிருப்பவர்கள் ஆமோதிக்கவில்லை. எல்லைப்புறத்தின் வழியாகவே பகை வர் உள் நுழைவர்.

பூரணர்: அப்படியென்றால் என்ன அர்த்தம்?

விபினர்: திரையைப்போல் அசையும் வஸ்து ஒரு காற்றடித் தால் அசைந்தாடும். அது பிரம்மசாரிகள் சங்கத்திற் குப் பொருத்தமில்லாத விஷயம்.

ஸ்ரீசர்: நமது சங்கத்தைப் பாதுகாக்க நல்ல கற்சுவர்களைப் போன்ற அசையாப் பொருள்கள் தேவை. மெல்லிய திரை பயன்படாது.

பூரணர்: நீங்கள் பேசுவதெல்லாம் ஏதோ ஒரு பெரிய மர்ம மாகவல்லவா தோன்றுகிறது.

விபினர்: மர்மந்தான். சந்தேகமில்லை. மர்மமென்றாலே ஆபத்துத்தான். பிரம்மச்சாரிகள் சங்கத்தின் முக்கிய மான சத்துரு ஒரு திரையின் மறைவில்தான் வசிக்கிறது.

ஸ்ரீசர்: அத்திரையைத் தாக்கி அதைச் சின்னபின்னம் செய் வதே நமது விரதம். அத்திரையிருளில் மறைந்திருக்கும் மாயப் பெண்மான் ஒளியைக் கண்டவுடன் கானல் நீரைப்போல் மறைந்துவிடும்.

பூரணர்: ஸ்ரீசா! கானல் நீரைக் கண்டுபிடித்துவிடலாம். ஆனால் தாகம் கிடைக்காது போலிருக்கிறதே.

ஸ்ரீசர்: எப்படிக் கிடைக்கும்? அது ஏற்கனவேயே உள்ளே இருக்க வேண்டும். அது இல்லாவிடில் நமக்கு ஒருவித முயற்சியும் செய்ய உற்சாகம் இராது. எந்த வழியில் சென்றால் பலன் கிடைக்கும் என்பதையும் நாம் அறிந்து கொள்ளவேண்டும்.

[திரைக்குப்பின் கானம்]

''அக்கரை சேர்பவர் அனைவரும் வாரீர்''

விபினர்: சற்றே பேச்சை நிறுத்துவோம். பாட்டு காதில் விழவில்லையா? என்ன இனிமை!

பூரணர்: அந்தக் கானமும் ஒரு திரை போன்றதே. அதன் பின் ஒளிந்திருக்கும் ரகசியமும் நம்மைச் செல்லக் கூடாத பாதைகளில் இழுத்துச் சென்றாலும் சென்று விடும்.

விபினர்: இரு தம்பி! உன் வேதாந்தத்தையெல்லாம் சற்று நிறுத்து. மிகவும் அருகிலுள்ள ஏதோ ஒரு வீட்டிலிருந்து கேட்கிறது பாட்டு. அக்ஷய குமாரரின் வீடும் அப்பக்கம் தான் இருக்கிறது.

ஸ்ரீசர்: பாட்டின் வார்த்தைகள் நன்றாகப் புரிகின்றன.

[திரைக்குப்பின் கானம்]

அக்கரை சேர்பவர் அனைவரும் வாரீர்
அழகிய படகொடு அழைப்பேன் கேளீர்
அக்கரை யதனில் எழில்மிகு பூங்கா
மக்கள் பலரை மகிழ்வுடன் காண்பீர்
இக்கரை இதனில் இன்மை இன்னல்
மிக்கிடும் பாலை வனமே பாரீர்
பொழுது கடக்குமுன் படகினிற் போந்து
விழுமிய கரையைச் சேர்ந்திட வாரீர்
பொய்யுல கிதனை எண்ணிக் காலம்
போக்காதே நீர் எழுவீர் அன்றேல்
கதிரவன் மறைவன்; காற்றும் நின்றிடும்;
மாலை யிருளில் மயங்கிப் படகும்
போக்கும் ஒழிந்தே போகும் கண்டீர்

ஸ்ரீசர்: பிரம்மசாரிகள் சங்கத்திற்கு அச்சத்தை விளைவிப்பதற்காகவே யாரோ பாடுவது போலிருக்கிறது. தோணி நின்று போய் விட்டால் பிறகு மிகவும் கஷ்டமாகி விடும்.

விபினர்: அதைக் கேட்டாயா? ''இக்கரை இதனில் இன்மை இன்னல் மிக்கிடும் பாலைவனமே பாரீர்''

பூரணர்: ஆகையால் இனிமேல் தாமதம் எதற்கு? அக்கரை செல்லும் வழியைப் பார்ப்போம்.

ஸ்ரீசர்: அக்குரலைக் கேட்டால் அது நம்மை அக்கரைக்குக் கொண்டு போய்ச் சேர்க்காது. பாதாளத்தில் தள்ளிவிடும் என்றே தோன்றுகிறது.

[எல்லோரும் போகின்றனர்]

## இரண்டாம் காட்சி

### ஸ்ரீசருடைய வீடு

*[ஸ்ரீசர் தம் வீட்டின் தென்புறத்தில் இருக்கும் ஒரு வராந்தாவில் சாய்வு நாற்காலி ஒன்றின் இரு கைகளின்மீதும் கால்களை நீட்டிக்கொண்டு சிகரெட் பிடித்த வண்ணம் படுத்திருக்கிறார். பக்கத்தில் ஒரு சிறிய மேஜையின்மீது ஐஸ் போட்ட லெமனேடும் ஒரு மல்லிகை மாலையும் காணப்படுகின்றன]*

*[விபினர் பிரவேசிக்கிறார்]*

விபினர்: என்ன ஓய்! முற்றும் துறந்த முனிவரே!

ஸ்ரீசர்: (எழுந்து உட்கார்ந்து பலமாகச் சிரித்து) நான் இப்பொழுது சண்டைக்குத் தயாராக இல்லை. ஓ மகா சம்சாரியே! உண்மையிலேயே நான் சந்நியாசி ஆக முடியாது என்று நீ நினைக்கிறாயா?

விபினர்: ஏன் முடியாது? ஆனால் பின்னாலேயே மூட்டை தூக்கும் சிஷ்யர்கள் அநேகர் இருக்க வேண்டும்.

ஸ்ரீசர்: ''ஒருவன் மல்லிகை மாலை தொடுக்க வேண்டும். மற்றொருவன் கடைத் தெருவிற்குப் போய் யாசகம் செய்து ஐஸ் போட்ட லெமனேடு வாங்கி வரவேண்டும்'' என்றுதானே பரிகாசம் செய்கிறாய்? அதனால் என்ன முழுகிப் போய்விடும்? மல்லிகைப் பூவின் மீது வைராக்கியமும் ஐஸ்போட்ட லெமனேடின்மீது வெறுப்பும் இருந்தால் தான் அது உயர்ந்த சந்நியாச தர்மமோ?

விபினர்: சாதாரணமாக உலகில் எல்லோரும் அப்படித்தான்

ஸ்ரீசர்: கேள், தம்பி! ஜனங்கள் பேசிக்கொள்ளும் பேச்சிற்கு ஒரே அர்த்தம்தான் என்று நினைக்கிறாயா? சந்நியாச தர்மம் என்று எதை ஒருவன் நம்புகிறானோ அதையே மற்றொருவனும் நம்பினால் மனிதர்களுக்கு மனம் என்ற ஒரு சுதந்திரக் கருவி இருந்து என்ன பயன்?

விபினர்: உன் மனம் சந்நியாச தர்மத்தைப்பற்றி என்ன நினைக்கிறது என்பதை அறிய என் மனம் ஆசைப்படுகிறது.

ஸ்ரீசர்: என் அபிப்பிராயப்படி ஒரு சந்நியாசியின் தோற்றம் எப்படி இருக்கவேண்டும் என்றால்-கழுத்தில் பூமாலை, மார்பில் சந்தனம், காதுகளில் குண்டலம், முகத்தில் புன்னகை. மாந்தரை வசீகரப்படுத்துவதுதான் அவனுடைய தொழில். அழகிய வதனம், இனிய குரல், பேச்சுத் திறன் இவையெல்லாம் இல்லையெனில் சந்நியாசியாக இருப்பதன் பலன் கிடைக்கவே கிடைக்காது. ருசி, புத்தி, பொறுமை, முகமலர்ச்சி முதலிய சகல விஷயங்களிலும் சந்நியாசி இல்லறத்தில் வாழ்பவர்களுக்கு வழிகாட்டியாக விளங்க வேண்டும்.

விபினர்: அதாவது சுப்பிரமணியக் கடவுளைப் போன்ற அழகிய இளைஞர்களை ஒன்றுகூட்டி மயில் வாகனத்தின்மீது ஏற்றி ஊர்வலம் விடவேண்டும் என்கிறாய்?

ஸ்ரீசர்: மயில் வாகனம் இல்லாவிடில் டிராம் வண்டி. அதுவும் இல்லையென்றால் கால்நடை இருக்கவே இருக்கிறது. நமது குமார (பிரம்மசாரி) சங்கம் குமாரசுவாமி சங்கமாகிவிடும். ஆனால் சுப்பிரமணியக் கடவுள் அழகிய புருஷர் மாத்திரமில்லை; தேவலோகத்துச் சேனைத்தலைவரும் கூட.

விபினர்: சண்டை போடுவதற்கு அவருக்கு ஒரு ஜோடி கைகள். சொற்பொழிவாற்றுவதற்கு மூன்று ஜோடி வாய்கள்.

ஸ்ரீசர்: இதிலிருந்து பெரியோர்களாகிய நமது முன்னோர்கள் புயபலத்தைவிட நாவன்மை மூன்று மடங்கு முக்கியமானது என்று கருதினார்கள் என்பது தெளிவாகிறது. மல் யுத்தம் புரிவதுதான் வீரத்திற்கு அழகு என்னும் அபிப்பிராயத்தை ஒப்புக் கொள்ளாதவர்களுள் நானும் ஒருவன்.

விபினர்: இது என்னைச் சண்டைக்கு அழைக்கும் அறை கூவலோ?

ஸ்ரீசர்: இதோ பார்! அகங்காரம் மனிதனை எவ்விதமெல்லாம் கெடுக்கிறது? வீரன் என்று நான் அழைத்தது உன்னையா? சரி! ஏ கலியுக பீமசேனனே! வா யுத்தத்துக்கு. ஒருகை பார்த்துவிடுவோம்.

[என்று இருவரும் கைகளை முஷ்டிபிடித்துக்கொண்டு விளையாட்டுச் சண்டை போட வாரம்பித்தனர். விபினர் திடீரென்று ''இதுதான் பீமசேனனின் வீழ்ச்சி'' என்று கூவி ஸ்ரீசரின் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து அதன் கைகளின்மீது கால்களை நீட்டிக்கொண்

டார். பிறகு ''இதென்ன தாகம்'' என்று கூறிக் கிளாஸில் இருந்த லெமனேடை ஒரே மூச்சில் குடித்தார். ஸ்ரீசரோ சட்டென்று அங்கிருந்த மல்லிகை மாலையைத் தம் கழுத்தில் போட்டுக்கொண்டு ''கடைசியில் வெற்றி வாகை எனக்கே'' என்று கூவி அங்கிருந்த ஓர் ஆசனத்தின்மீது உட்கார்ந்தார்]

**ஸ்ரீசர்:** உண்மையைச் சொல் விபினு! நல்ல படிப்பாளிகள் அடங்கிய ஒரு கோஷ்டி இவ்விதமாக உலகைத் துறந்து ஊர் ஊராகச் சுற்றி மலர்ந்த முகத்துடனும் இன்னிசையுடனும் சொற்பொழிவுகளாற்றி நறபோதனை செய்தால் அதனால் நாட்டிற்கு நன்மை ஏற்படாதா?

**விபினர்:** உன் 'ஐடியா' வெகு பிரமாதம்.

**ஸ்ரீசர்:** அப்படியென்றால்-கேட்பதற்கு நன்றாக இருக்கிறது; நடப்பது மாத்திரம் அசாத்தியம் என்று அர்த்தமோ? இது முற்றிலும் சாத்தியமே என்பதை ஒரு திருஷ்டாந்தத்தின் மூலம் நிரூபிக்கிறேன். பாரத தேசத்தில் சந்நியாச தர்மம் என்ற மகத்தான ஒரு சக்தி இருக்கிறது. அதனுடைய சாம்பரை அகற்றித் தோளில் சுமந்து செல்லும் பையைப் பிடுங்கி எறிந்து, சடையைக் கத்தரித்து, அதை அழகுடையதாகவும் பயன் தரும் பணிகளில் ஈடுபடுமாறும் செய்வதே நமது பிரம்மசாரி சங்கத்தின் ஒருமனப்பட்ட நோக்கம். சிறுவர்களைப் படிக்கவைப்பதற்கோ, நெருப்புக்குச்சி தயார் செய்வதற்குத் தகுந்த மரங்களைத் தேடுவதற்கோ, நம்மைப் போன்றவர்கள் ஆயுள் முழுவதும் அநுசரிக்க வேண்டிய இந்த விரதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. என்ன சொல்லுகிறாய்? விபினு! என் அபிப்பிராயத்தை நீ ஆமோதிக்கிறாயா, இல்லையா?

**விபினர்:** நீ விவரிக்கும் சந்நியாசிக்கு வேண்டிய தோற்றமோ குரலோ மற்ற தளவாடங்களோ என்னிடம் கிடையாது. ஆகவே நான் சீடனாகிப் பின் செல்லத் தயாராக இருக்கிறேன். காதுகளில் தங்கக் குண்டலங்களும் கண்களுக்கு மூக்குக் கண்ணாடியும் அணிந்து நீ ஊர் ஊராகத் திரிந்தால் உனக்கு ஒரு காவலாளி அவசியம் தேவையாக இருக்கும். அந்த உத்தியோகத்தை ஓரளவுக்கு நான் ஏற்க முடியும்.

**ஸ்ரீசர்:** உனக்கு எப்பொழுதும் பரிகாசந்தான்.

**விபினர்:** நான் பரிகசிக்கவில்லை. உன் யோசனையைக் காரியாம்சத்தில் நீ காட்ட முடிந்தால் மிக நன்றாக இருக்

கும். ஆனுல் எல்லோருமே அதை அநுசரித்து ஒரே விதத்தில் தொண்டு புரிய முடியாது. அவரவர்கள் சாமர்த்தியத்திற்குத் தகுந்தவாறுதானே வேலை செய்ய முடியும்?

ஸ்ரீசர்: அது வாஸ்தவம்தான். ஆனுல் ஒரு விஷயத்தில் நாம் மிகவும் உறுதியாக இருக்க வேண்டும். யாதொரு காரணத்தைக் கொண்டும் பெண்களைச் சமீபத்தில் அண்ட விடக் கூடாது.

விபினர்: மல்லிகை மாலை, சந்தனம், கர்ணகுண்டலங்கள் எல்லாவற்றையும் அநுமதித்துவிட்டு இந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் ஏன் இந்த வைராக்கியமோ?

ஸ்ரீசர்: வைராக்கியம் இருந்தே தீரவேண்டும். இதற்காகவே சைதன்யர்[1] தம்முடைய சிஷ்யர்களுக்குப் பெண்களுடைய உறவு கூடாதென்ற கடுமையான விதியை ஏற்படுத்தியிருந்தார். அவருடைய மதம், அன்பு, அழகு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது. ஆகவே அதில் மனத்தை வசீகரிக்கும் அம்சங்கள் பல நிறைந்துள்ளன.

விபினர்: ஆகவே பயமும் அதிகம்தான்!

ஸ்ரீசர்: என்னைப் பொறுத்தவரையில் பயம் கொஞ்சமும் இல்லை. என் மனம் இப்பூவுலகின் ஆச்சரியமான சௌந்தர்யத்தில் லயித்துவிட்டது. எவ்வித ஆசையும் என்னை வசீகரிக்க முடியாது. ஆனுல் நீ இரவு பகலாகக் கால் பந்து, டென்னிஸ், கிரிக்கெட் எல்லாம் ஆடுபவனுதலால் உன் மனம் மாறிவிட்டால் டென்னிஸ் பந்து, கிரிக்கெட் மட்டை எல்லாம் போய்விடுமே!

விபினர்: நல்லது தம்பி! சமயம் வரும்போது பார்ப்போம்.

ஸ்ரீசர்: அதுதான் நடக்காது. சமயம் வராது. சமயம் தானுக வருவதற்கு நான் விடவும் மாட்டேன். சமயம் தானுக ரதமேறி வராது. அதைக் குடுமியைப் பிடித்து இழுத்துக்கொண்டு வரவேண்டும். இல்லாவிடில் அது வாகனம் இல்லாமல் இருப்பிடத்திலேயே நின்று விடும்.

[பூரணர் வருகிருர்]

இருவரும்: வா, வா, பூரணு!

[விபினர் நாற்காலியை விட்டு எழுந்திருந்து வேறு ஆசனத்தில் உட்காருகிருர்]

பூரணர்: இந்த வராந்தாவில் நிலவு மிகவும் அழகாகப் பிரகாசிக்கிறது. இதற்கிடையில் தூண்களின் நிழல் ஆங்காங்கே விழும்படி செய்தால் இன்னும் நன்ருக இருக்கும்.

ஸ்ரீசர்: வராந்தாவின் மீது நிலவு அழகாக விழச் செய்யும்

1. வங்காளத்தின் பிரசித்திபெற்ற வைணவ ஆசாரியர்.

யோசனை எங்களுக்கு வெகு காலமாக உண்டு. ஆனால், பூரணரே, அந்தத் தீப்பெட்டி தயார் செய்யும் யோசனை மாத்திரம் அடியோடு பிடிக்கவில்லை.

பூரணர்: (மல்லிகை மாலையைப் பார்த்து) சந்நியாச தர்மத்தின் மீது உங்களுக்கு அசாத்தியமான பற்றுதல் என்றே தோன்றுகிறது.

ஸ்ரீசர்: அந்த விஷயத்தைப் பற்றித்தான் நீர் வரும்வரையில் பேசிக்கொண்டிருந்தோம். துறவறத்தைப் பற்றி உங்களுடைய தீர்மானமான அபிப்பிராயம் என்ன?

பூரணர்: என்னுடைய அபிப்பிராயப்படி-எந்த தர்மத்தைப் பின்பற்றினால் தையற்காரன், வண்ணான், நாவிதன் இவர்களின் உதவி தேவையாக இராதோ சேணியனின் உதவியை அடியோடு விலக்கலாமோ, பியர்ஸ் சோப்பின் விளம்பரத்தைக் கண்ணால்கூடப் பார்க்க வேண்டாமோ அதுதான்—

ஸ்ரீசர்: சீச்சீ! அந்த சந்நியாச தர்மம் மறைந்துபோய் எத்தனையோ காலமாகிவிட்டது. இப்பொழுது நவீன சந்நியாச தர்மம் என்று ஒன்றை நாம் அமுலுக்குக் கொண்டு வரவேண்டும்.

பூரணர்: வித்தியாசுந்தர நாடகத்தில் [1]ஓர் இளம் சந்நியாசி வருகிறானே அவன் சரியான உதாரணம். ஆனால் அவன் பிரம்மசாரி சங்கத்தின் நிபந்தனைகளால் கட்டுப்பட்டவனல்லவே!

ஸ்ரீசர்: உதாரணத்திற்குத் தகுந்தவனானால் அவனையே எடுத்துக்காட்டாக வைத்துக்கொள்ளலாமே! ஆனால் அவன் தோற்றத்தில் உடையில், பேச்சில், நடத்தையில் எல்லாம் அழகுடையவனாகவும் நிபுணனாகவும் இருக்கவேண்டும்.

பூரணர்: சரி. ராஜகுமாரியின் மீது வைத்த கண்ணை எடுத்துவிடவேண்டும். அவ்வளவுதானே. நார் இல்லாமல் மாலை கட்ட வேண்டும். அந்த மாலையை யார் கழுத்தில் போடுவது?

ஸ்ரீசர்: பாரதமாதாவின் கழுத்தில். கதை சற்று உயர்ந்த ரகமாகப் போய்விட்டது. என்ன செய்வது? நமது கதையில் பூக்காரியாக வரும் அத்தை, ராஜகுமாரி முதலிய

1. இது வங்காளத்தில் மிகப் பிரசித்தி பெற்ற ஒரு நாடகம். பாரத சந்திரர் என்னும் கவி இதை அடிப்படையாகக் கொண்டு ஒரு சிறந்த காவியத்தை இயற்றியுள்ளார். இக் கதையில் வித்யா என்ற அரச குமாரி, சுந்தர் என்ற இளவரசன், ஹீரா என்ற பூக்காரி முதலிய பாத்திரங்கள் தோன்றுகின்றனர்.

பெண்பாலர்களைச் சேர்த்துக் கொள்ள முடியாதே! விளையாட்டல்ல பூரணரே!

பூரணர்: விளையாட்டென்று நான் கூறவில்லையே! ஆனால் கதை மிகவும் உலர்ந்து ரசமற்றதாகப் போய்விடும்.

ஸ்ரீசர்: நம்முடைய பிரம்மசாரிகள் சங்கத்தின் மூலமாகக் கொள்கை, நீதி போதனை, செயல் இம்மூன்றிலும் சாமானிய கிருகஸ்தர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்கும்படி ஒரு சந்நியாச சம்பிரதாயத்தை உருப்படுத்த வேண்டும். இந்த சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஒரு சந்நியாசி சங்கீதம் முதலிய லலித கலைகளில் வல்லவனாக இருக்க வேண்டும். மற்றும் சிலம்பம், கத்திச் சண்டை, குதிரை சவாரி, துப்பாக்கி சுடுதல் முதலியவற்றிலும் கரை கண்டவனாக இருக்கவேண்டும்.

பூரணர்: அப்படியென்றால் மனத்தையும் உயிரையும் ஒருங்கே அபகரிக்கும் சக்தி இருக்க வேண்டும் என்று அர்த்தம். புருஷ வேஷம் பூண்ட தேவி சௌதுராணி[1] யின் கூட்டம்போல்—

ஸ்ரீசர்: நம்முடைய இந்த 'ஐடியாவை' பங்கிம் சந்திரர் ஏற்கனவேயே திருடி ஒரு நாவல் எழுதிவிட்டார். நாம் இனிமேல் அதைக் காரியாம்சத்தில் காண்பித்து நம்முடைய சொத்தாக்கிக்கொள்ள வேண்டும்.

பூரணர்: நமது சங்கத் தலைவர் என்ன சொன்னார்?

ஸ்ரீசர்: பலநாட்களாக நான் அவருடைய மனசைத் திருப்பி நம் வழிக்குக் கொண்டு வந்திருக்கிறேன். ஆயினும் அவர் அந்தத் தீப்பெட்டி தயார் செய்யும் யோசனையை இன்னும் விடவில்லை. அவர் சொல்லுவது என்னவென்றால்-சந்நியாசிகள் விவசாயம், கைத் தொழில் முதலியவற்றைக் கற்று, கிராமந்தோறும் விஜயம் செய்து மக்களுக்கு அவற்றைப் போதிக்க வேண்டும். தலைக்கு ஒரு ரூபாய் வீதம் வசூல் செய்து ஒரு பாங்கு ஆரம்பித்து பெரிய பெரிய கிராமங்களில் புதிய முறையில் நடத்தப் பெறும் கடைகளை அமைக்கவேண்டும். பாரத தேசத்தின் நான்கு திசைகளிலும் வியாபாரம் பெருகும்படி செய்ய வேண்டும்......

பூரணர்: விபினரின் அபிப்பிராயம் என்ன?

---

1. வங்கத்தின் பிரசித்தி பெற்ற நாவலாசிரியரான பங்கிம் சந்திர சட்டர்ஜி எழுதிய ஒரு நாவலின் கதாநாயகி. கணவனால் அனுதரவு செய்யப்பட்டு, பிறகு கொள்ளைக்காரியாக மாறி, இறுதியில் தன் கணவனின் மனத்தைத் திருப்பி ஒன்றுபட்டு வாழ்ந்தவள்.

விபினர்: ஸ்ரீசர் விவரித்த நவீன சந்நியாச சம்பிரதாயத்தில் ஒரு முக்கிய பாத்திரமாக நான் விளங்குவேன் என்ற நம்பிக்கை எனக்கில்லை. ஆனால் இயக்கம் உருவாகும் பொழுது நானும் சந்நியாசியாகி அதில் சேரச் சித்தமாக இருக்கிறேன்.

பூரணர்: சேர்ந்தால் செலவு அதிகம் என்பதை மறக்கவேண்டாம். வெறும் கோவணம் மாத்திரம் போதாது. கவச குண்டலங்கள், ஆபரணங்கள்......

ஸ்ரீசர்: பூரணரே! பரிகாசம் செய்யும். இன்னும் ஏதாவது வேண்டுமாயினும் செய்யும். பிரம்மசாரிகள் சங்கம் சந்நியாசிகள் சங்கமாக மாறப் போகிறது. நாம் ஒருபுறம் கடூரமான ஆத்ம தியாகம் புரிவோம். மறுபுறம் சாதாரண மனிதர்களுக்கு மிகவும் அவசியமான தேவைகளை விடமாட்டோம். ஒருபுறம் இணையிலா வீரம், மற்றொரு புறம் அன்பும் அழகும். இந்த நுண்ணிய சாதனையின்மூலம் தான் பாரத நாட்டில் புதுயுகம் தோன்றப் போகிறது.

பூரணர்: புரிகிறது ஸ்ரீசரே! ஆனால் புருஷர்களுக்கு மிகவும் அவசியமான தேவைகளுள் பெண்கள் முக்கிய ஸ்தானத்தை வகிக்கிறார்களல்லவா? ஆகவே அவர்களையும் சேர்த்துக்கொண்டால் நீர் கூறிய அன்பு, அழகு முதலிய அம்சங்கள் பூர்த்தியாகி விடுமே! இதற்கென்ன சொல்லுகிறீர்கள்?

ஸ்ரீசர்: ஸ்திரீகளிடம் ஒரு பெரிய குறை உண்டு. அவர்கள் கொடிகளைப்போல் புருஷர்களைச் சுற்றிக்கொள்கின்றனர். அவர்கள் மூலம் நாம் தளைகளில் சிக்கிக்கொள்ளாமல், அவர்களையும் பாதுகாத்து நமது சுதந்திரத்தையும் பாதுகாத்துக்கொள்ள முடிந்தால் வேறு பேச்சே இல்லை. ஒரு பணியில் நமது வாழ்வை அர்ப்பணம் செய்யவேண்டுமாகில் அத் தொண்டு நிறைவேறாமல் செய்யக்கூடிய எதிர்ப்புக்களை எல்லாம் நாம் விலக்கவேண்டும். ஒரு பெண்மணியைக் கைப் பிடிக்க முற்பட்டோமானால், நமது கைகளைப் பிணைத்துக்கொண்டது போலாகும். ஆகவே, பூரணரே உமது யோசனை நடககாது.

பூரணர்: கவலைப்படவேண்டாம், ஸ்ரீசரே! நான் என்னுடைய திருமணத்திற்கு உம்மை அழைத்துப் போவதற்காக இங்கு வரவில்லை. ஆனால் யோசித்துப்பாரும். இந்த மானிட ஜன்மம் நமக்கு மறுபடியும் கிடைக்கப் போகிறது என்பது நிச்சயமில்லை. ஆகவே நமது வாழ்க்கையில் ஏற்படும் பலவிதத் தேவைகளை நாம் பூர்த்தி செய்துகொள்ளாமல் அடக்கிவைப்பதில் என்ன பயன்?

மகம்மதியர்களின் சுவர்க்கத்தில்கூட தேவஸ்திரீகள் உள்ளனர். இந்துக்களுடைய சுவர்க்கத்தில் அப்சர ஸ்திரீகளுக்குக் குறைவில்லை. பிரம்மசாரிகள் சங்கத்தின் சுவர்க்கத்தில் மாத்திரம் சங்கத் தலைவரையும் அங்கத்தினர்களையும் தவிர வேறு ஒரு வசீகரமான பொருளும் கிடையாது.

**ஸ்ரீசர்:** பூரணரே! உம் வார்த்தையைக் கேட்டால்....

**பூரணர்:** பயப்படாதீர். ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. இந்த வெண்ணிலவும் மல்லிகையின் நறுமணமும் உங்கள் பிரம்மசாரி விரதத்தைக் காப்பாற்றுவதற்காக ஏற்பட்டவையா? நமது உள்ளத்தில் அடிக்கடி ஏற்படும் கண்ணீர்ப் பெருக்கை அவ்வப்பொழுது வெளியிட்டுவிடுவது நலம். அதை உள்ளேயே அடக்கிவைத்தோமானால் என்றோ ஒருநாள் அது பிரம்மசாரி விரதம் என்ற இரும்புக் கவசத்தைப் பிளந்து கொண்டு வெளிவந்துவிடும். இதெல்லாம் இருக்கட்டும். நாமெல்லோரும் சந்நியாசிகளாக மாறவேண்டும் என்பதுதான் தீர்மானமானால் நானும் தயார். எப்படியாகிலும் தற்பொழுது சங்கத்தை விடாமல் நடத்தினால் போதும்.

**ஸ்ரீசர்:** ஏன்? என்ன நேர்ந்துவிட்டது?

**பூரணர்:** அக்ஷயகுமாரர் நமது சபையை வேறிடத்துக்கு மாற்றுவதாகக் கூறிச் சென்றாரே, அது எனக்கு அடியோடு பிடிக்கவில்லை.

**ஸ்ரீசர்:** சந்தேகப்படுவது நாஸ்திகர்களுக்கு அடையாளம், "தீமை உண்டாகும், சங்கம் குலைந்துவிடும், மூடப்பட்டுவிடும்" என்ற எண்ணங்கள் என் மனத்தில் நுழைவதேயில்லை. "நன்மையே உண்டாகும். எது நேரினும் நல்லதே நிகழும்". பிரம்மசாரி சங்கத்தின் சிறந்த எதிர்காலத்தை நான் கண் முன்னமேயே காண்கிறேன். அக்ஷயபாபு நமது சங்கத்தை ஒரு கட்டடத்திலிருந்து இன்னொரு கட்டடத்திற்கு மாற்றினால் உடனே காரியம் கெட்டுவிடுமா? இச் சந்திலேயே ஒரு நம்பர் வீட்டிலிருந்து மற்றொன்றிற்கு மாறப் போகிறோம். இதுகூட முடியாவிட்டால் நாம் ஊர்தோறும், தேசந்தோறும் திரிந்து தொண்டாற்றுவது எப்படி? சந்தேகம், குழப்பம், கவலை முதலியவற்றை மனத்தைவிட்டு அகற்றும், பூரணரே! நம்பிக்கையும் மகிழ்ச்சியும் இல்லாவிடில் ஒரு காரியமும் நிறைவேறாது.

**விபினர்:** கொஞ்சகாலம் பொறுத்துப் பார்ப்போமே! முயற்சி நிறைவேறாவிடில் பழைய இடத்திற்கே திரும்பி வந்து

விடுவோம். நம்முடைய பழைய இருள் நிறைந்த எலி வளையைத் திடீரென்று ஒருவரும் பிடுங்கிக் கொள்ளப் போவதில்லை.

[திடீரென்று சந்திரமாதவ பாபு வரு கிறார். மூவரும் எழுந்திருக்கின்றனர்]

**சந்திரபாபு:** இதோ பார்! நான் அந்த விஷயத்தைப்பற்றி என்ன நினைத்தேன் என்றால்....

**ஸ்ரீசர்:** உட்கார்ந்து பேசுங்களேன்.

**சந்திரபாபு:** முடியாது, முடியாது. உட்கார நேரமில்லை. நான் இப்பொழுதே போகவேண்டும். சந்நியாச விரதத்தை ஏற்றுக்கொள்ள நாம் இன்று முதலே சித்தமாக வேண்டும். திடீரென்று ஏதாவது நேர்ந்தால், சுரம் முதலியவை வந்தால், என்ன வைத்தியம் செய்யவேண்டுமென்பதைக் கற்றுக் கொள்ள வேண்டும். அதற்காக ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் நமக்கு இரண்டுமணி நேரம் வைத்தியம் கற்றுத் தருவதற்கு டாக்டர் ராமரத்தின பாபுவை ஏற்பாடு செய்துவிட்டு வந்திருக்கிறேன்.

**ஸ்ரீசர்:** அதனால் மிகுந்த தாமதம் ஏற்படுமே!

**சந்திரபாபு:** தாமதம் ஏற்படும்; உண்மைதான். ஆனால் காரியம் சாமானியமானதல்லவே! இது மட்டும் போதாது. நாமெல்லோரும் சட்டமும் பயில வேண்டும். அநீதி, கொடுமை இவற்றிலிருந்து மக்களைக் காப்பாற்றுவதும் யாருக்கு எவ்வளவு தூரம் அதிகாரம் உண்டென்பதை நமது கிராம ஜனங்களுக்கு அறிவுறுத்துவதும் நமது கடமைகளாகும்.

**ஸ்ரீசர்:** சந்திரபாபு! உட்காருங்கள்.

**சந்திரபாபு:** முடியாது, ஸ்ரீசரே! எனக்கு உட்கார நேரமில்லை. அவசரமான வேலையிருக்கிறது. அப்புறம்-நாம் மற்றொரு முக்கியமான கடமையை நிறைவேற்றவேண்டும். கிராமங்களுக்கு அத்தியாவசியமான மாட்டுவண்டி, நெல் அறைக்கும் யந்திரம், தறி இவற்றைப் பற்றி ஆராய்ச்சி செய்து அவற்றைக் குறைந்த விலையில் இன்னும் சிறந்த முறையில் தயார் செய்யும் முறைகளைக் கண்டுபிடிக்க வேண்டும். கோடை விடுமுறையில் கேதார பாபுவின் தொழிற்சாலைக்குச் சென்று தினந்தோறும் ஏதாவது ஒரு சோதனையை நடத்தியே தீர வேண்டும்.

**ஸ்ரீசர்:** சந்திரபாபு வெகு நேரமாக நின்றுகொண்டிருக்கிறாரே! (ஒரு நாற்காலியைப் போடுகிறார்)

**சந்திரபாபு:** வேண்டாம், வேண்டாம். நான் இதோ சென்று கொண்டேயிருக்கிறேன். என்னுடைய அபிப்பிரா

யம் என்ன வென்றால்—கிராமாந்திரங்களில் சாமானிய மாக உபயோகிக்கப்படும் கருவிகளை அபிவிருத்தி செய் தால் கிராம மக்களின் மனத்தில் உண்டாகும் மகிழ்ச்சி யும் உற்சாகமும் பெரிய பெரிய காரியங்களைச் செய்வ தால் உண்டாகா. அவர்களுடைய மாவு அறைக்கும் யந் திரம், செக்கு முதலியவற்றில் பெரிய மாறுதல்கள் ஏற் பட்டால் அவர்கள் உள்ளம் விழிப்படையும்.

**ஸ்ரீசர்:** உட்கார்ந்து பேசுங்களேன்!

**சந்திரபாபு:** பரவாயில்லை. ஒருமுறை யோசித்துப் பாருங்கள்; நாம் இதுவரை எவ்வளவோ படித்திருக்கிறோமே! மாவு அறைக்கும் யந்திரத்தைப்பற்றி ஏதாவது தெரிந்து கொண்டோமா? பெரிய பெரிய தொழிற்சாலைகள் ஒரு ஒருபுறமிருக்கட்டும். வீட்டிற்குள்ளேயே நமது பார்வை யைச் சரியாக நாம் உபயோகிப்பதில்லை. நமதருகிலேயே இருக்கும் விஷயங்களைப்பற்றி நாம் சிந்திப்பதேயில்லை. அவை அப்படியே இருந்து விடுகின்றன. மனிதன் முன் னேறுகிறானே தவிர அவனுக்குத் தேவையான சாமான் கள் பின்தங்கி விடுகின்றன. இது பெரிய தவறு. நாம் சற்றும் முன்னேறவில்லை. ஆங்கிலேயர் நம்மைத் தோள் களின்மீது சுமந்து செல்கின்றனர்.[1] இது முன்னேற்றமா? சிறிய கிராமங்களில் வசிக்கும் ஜனங்களின் ஜீவனம் களிமண் சாலைகளின் சேற்றில் புதைந்துபோய் நகராமல் நின்றுவிட்டது. அவர்களுடைய மாட்டுவண்டிகளைத் தள்ளி முன்னேறச் செய்வதே நமது சந்நியாச சம்பிர தாயத்தின் நோக்கம். திடீரென்று என்ஜின்களை ஓட்ட விரும்புவது நிறைவேறாத விருப்பமாக மாறிவிடும். மணி என்ன?

**ஸ்ரீசர்:** எட்டரை ஆகிவிட்டது.

**சந்திரபாபு:** அப்படியானால் நான் வருகிறேன். ஒன்று மாத் திரம் மறக்கவேண்டாம். நாம் இப்பொழுது மற்ற எல்லா யோசனைகளையும் விட்டு விட்டு நான் இன்று கூறிய திட்டத்தைப் பின்பற்றினோமாகில்....

**பூரணர்:** நீங்கள் ஒரு நிமிஷம் உட்கார்ந்தீர்களானால் நாங் களும் ஓரிரண்டு வார்த்தைகள் கூறமுடியும்.

**சந்திரபாபு:** இன்று நேரமில்லை.

**பூரணர்:** அதிக நேரம் பிடிக்காது. நான் சொல்வது என்ன வென்றால்—நமது சங்கம்....

**சந்திரபாபு:** இதெல்லாம் நாளைக்கு ஆகட்டுமே!

---

1. இது இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன் எழுதப்பட்ட நாடகம்.

பூரணர்: நாளைக்குச் சங்கத்தின் பொதுக்கூட்டம் இருக்கிறது.

சந்திரபாபு: அப்படியானால் நாளைய மறுதினம். இப்பொழுது நேரமில்லை.

பூரணர்: இதோ பாரும்! அக்ஷயர் வந்து....

சந்திரபாபு: பூரணரே! என்னை மன்னிக்கவேண்டும். இன்று காலம் கடந்துவிட்டது. ஆனாலும் ஒன்று சொல்லி விடுகிறேன். பிரம்மசாரிகள் சங்கம் காலப்போக்கில் பெரியதாக வளர்ந்து போனால் அங்கத்தினர்கள் அனை வருமே சந்நியாசிகளாக மாறி ஊர் ஊராகப் போய்ப் பிரசாரம் செய்வது அசாத்தியம். ஆகவே நமக்குள் இரு வகுப்புக்களை அமைத்துக்கொள்வது அவசியம்.

பூரணர்: அசையும் பகுதி, அசையாப் பகுதி என்றுதானே?

சந்திரபாபு: அப்பெயர்களையே வேண்டுமானால் வைத்து விடுவோம். மேலும், அன்று அக்ஷயர் கூறிய ஒரு விஷயமும் எனக்குச் சரியாகவே பட்டது. அவர் கூறியது என்னவென்றால், ''பிரம்மசாரிகள் சங்கத்தின் ஆதரவின் கீழ் விவாகமானவர்கள், விவாகம் செய்துகொள்ளத் தீர்மானித்தவர்கள் இவர்களடங்கிய ஒரு தனிப் பகுதி ஏற்படுத்திக்கொள்ளலாம்'' என்பதே. விவாகமானவர்களும் தேசத்திற்கு ஒரு விதத்தில் சேவை புரிகிறார்கள். எல்லோரும் தங்களுக்கு முடிந்தவரையில் ஏதோ ஒரு நன்மை பயக்கும் காரியத்தில் ஈடுபட வேண்டும். இது பொதுக் கடமை. நமக்குள் ஒரு பிரிவினர் பிரம்மசாரி விரதம் பூண்டு ஊரூராக யாத்திரை செய்ய வேண்டும். மற்றொரு பிரிவினர் அதே விரதத்தை அநுசரித்துக் கொண்டு ஒரே இடத்தில் ஸ்திரமாக இருந்து தொண்டாற்ற வேண்டும். மூன்றாம் பிரிவினர் இல்வாழ்க்கையில் ஈடுபட்டுத் தங்களுடைய இயல்புக்கு ஏற்றவாறு ஏதாவது ஒரு பயன்படத் தக்க சேவையைப் புரிந்து தங்களுடைய கடமையை நிறைவேற்ற வேண்டும். ஊரூராகப் பிரசாரம் செய்வதில் ஈடுபடும் குழுவினர் பூகோள சாத்திரம், சர்வே எடுக்கும் முறை, பூதத்துவ சாத்திரம், தாவர நூல், மிருக சாத்திரம் முதலியவற்றைக் கற்க வேண்டும். அவர்கள் எங்குச் சென்றாலும் அங்குள்ள எல்லா விஷயங்களையும் அலசிப் பார்த்துச் சுருக்கமாக விமரிசனம் எழுதவேண்டும். அவ்விதம் செய்தால்தான் இந்தியர்கள் மூலம் இந்தியாவைப்பற்றிய உண்மைகளை ஆராய்ச்சி செய்வதற்கு அஸ்திவாரம் போட்டதுபோலாகும். ஹண்டர் முதலிய அன்னிய நாட்டு விஞ்ஞானிகளின் உதவியை நாம் நாடவேண்டியதில்லை.

பூரணர்: மன்னிக்கவேண்டும். ஒரு நிமிஷம் உட்கார்ந்தீர்களானால் இரண்டு வார்த்தைகள்....

சந்திரபாபு: இருக்கட்டும், பரவாயில்லை. நாம் எங்குச் சென்றாலும் ஆங்காங்குள்ள சரித்திர வரலாறுகளையும் பழைய ஏட்டுச் சுவடிகளையும் சேகரிப்பது நமது முக்கிய கடமைகளுள் ஒன்றாகும். கல்வெட்டுகள், செப்பேட்டில் எழுதப்பட்ட சாசனங்கள் இவற்றையெல்லாம் பரிசோதிக்கவேண்டும். இதற்காக நாம் இந்தியாவின் மறைந்து போன மொழிகளையும் லிபிகளையும் கற்கவேண்டும்.

பூரணர்: அதெல்லாம் பிறகு செய்யவேண்டிய காரியங்கள். இப்பொழுது....

சந்திரபாபு: இல்லை, இல்லை. எல்லோரும் எல்லா வித்தைகளையும் கற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் கூறவில்லை. அவரவர்களின் இயல்புக்கு ஏற்றவாறு ஒன்று, இரண்டு அல்லது மூன்று சாத்திரங்களைப் பயிலவேண்டும்.

ஸ்ரீசர்: அதனால் என்ன பயன் என்பதை....

சந்திரபாபு: மொத்தம் ஐந்து வருஷங்கள் பிடிக்கும். ஐந்து வருஷங்களுக்குள் நாமெல்லோரும் பிரயாணம் செய்யத் தயாராக இருக்கவேண்டும். ஆயுள் முழுவதும் விரதம் பூண்டவர்களுக்கு ஐந்து வருடங்கள் ஒரு பிரமாதம் அல்ல. மற்றவர்களுக்கு இந்த ஐந்து வருடங்களும் ஒரு பெரிய சோதனைபோல் இருக்கும். இதில் தேறியவர்களைப் பற்றி நாம் பிறகு கவலையே படவேண்டியதில்லை.

பூரணர்: ஆனால், சந்திரபாபு, நமது சங்கத்தை வேறிடம் மாற்றும் யோசனையைப் பற்றி....

சந்திரபாபு: இன்று வேறு ஒன்றும் பேச முடியாது. பூரணரே. எனக்கு மிக அவசரமான வேலை இருக்கிறது. என்னுடைய யோசனைகளைக் குறித்துத் தீவிரமாக ஆலோசனை செய்து பாருங்கள். ஆரம்பத்தில் அசாத்தியம்போல் தோன்றும். ஆனால் அப்படியல்ல. கொஞ்சம் சிரமமான காரியந்தான். ஆனால் பயன்தரும் காரியங்கள் அனைத்தும் சிரமமானவைதான். நமது இலட்சியத்தில் திடமான நம்பிக்கை கொண்ட ஐந்து தொண்டர்கள் கிடைத்தால் போதும். அவர்கள் புரியும் தொண்டு எதிர்காலத்தில் பாரத தேசம் முழுவதையும் வியாபித்து நிற்கும்.

ஸ்ரீசர்: ஆனால் நீங்கள் முதலில் மாட்டுவண்டிகளின் சக்கரம் போன்ற சின்னச் சின்ன சாமான்களை....

சந்திரபாபு: சரியான பேச்சு. நான் அவற்றைச் சிறிய விஷயங்கள் என்று நினைத்து அலட்சியம் செய்யவில்லை.

பெரிய விஷயங்களை அசாத்தியம் என்று எண்ணிப் பயப்படவுமில்லை.

**பூரணர்:** நமது சங்கத்தின் மீட்டிங்கைப்பற்றி....

**சந்திரபாபு:** அதெல்லாம் நாளைக்கு ஆகட்டும். வருகிறேன்.

[போகிறார்]

**விபினர்:** ஸ்ரீசா! என்ன மவுனம்? ஒரு குடிகாரனின் போதையைப் பார்த்து மற்றொரு குடிகாரன் மயக்கம்போட்டு விழுந்தானும். சந்திரபாபுவின் உற்சாகம் உன்னையும் பற்றிக்கொண்டு விட்டதோ?

**ஸ்ரீசர்:** இல்லையடா! யோசிக்கவேண்டிய விஷயங்கள் பல உள்ளன. சும்மா வாதம் செய்துகொண்டிருப்பதுதான் உற்சாகமா? எப்பொழுதாகிலும் ஒரு சமயம் மவுனமாக இருப்பதுதான் காரியவாதிகளின் அடையாளம்.

**விபினர்:** என்ன பூரணரே! ஏன் இப்படி ஓடுகிறீர்?

**பூரணர்:** சங்கத் தலைவரை வழியில் மறித்துப் பிடிக்க வேண்டும். நடந்துகொண்டேயாவது நான் கூறும் ஓரிரண்டு வார்த்தைகளைக் கேட்டாலும் கேட்பர்.

**விபினர்:** அதற்கு நேர் எதிரிடையாக நடக்கும். அவர் சொல்லவேண்டிய விஷயங்களின் பாக்கியை உம்மிடம் சொல்ல ஆரம்பித்துத் தாம் போகவேண்டிய வழியை மறந்து போய்விடுவார்.

[வனமாலி வருகிறார்]

**வனமாலி:** சௌக்கியமா? ஸ்ரீசபாபு! விபினரே க்ஷேமந்தானே? ஓகோ! பூரணரும் இருக்கிறாரோ! மிகவும் நல்லது. நான் நிரம்ப சிரமப்பட்டு அந்த குமாரடுலி பெண்கள் இருவரையும் வேறிடம் போகாமல் நிறுத்தி வைத்திருக்கிறேன்.

**ஸ்ரீசர்:** ஆனால் எங்களை உம்மால் நிறுத்தி வைக்க முடியாது. நாங்கள் ஒரு மகத்தான காரியத்தில் ஈடுபடப் போகிறோம்.

**பூரணர்:** ஸ்ரீசரே! நீங்கள் உட்காருங்கள். எனக்குக் கொஞ்சம் வெளியில் வேலையிருக்கிறது.

**விபினர்:** அப்படியானால் நீங்கள் உட்காருங்கள். நாங்கள் இருவரும் போய் அதை முடித்துக்கொண்டு வருகிறோம்.

**பூரணர்:** அப்படியானால் மூன்று பேருமாகச் சென்றால் இன்னும் சுலபமாக முடியும்.

**வனமாலி:** நீங்கள் எல்லோரும் ஏதோ முக்கிய வேலையாக இருப்பதாகத் தெரிகிறது. நான் மற்றொரு சமயம் வருகிறேன்.

## *மூன்ரும் காட்சி*

சந்திரமாதவ பாபுவின் வீடு

*[சந்திரமாதவரும் நிர்மலாவும்]*

சந்திரபாபு: *நிர்மலா!*

நிர்மலா: *ஏன் மாமா!*

சந்திரபாபு: *என் சட்டையின் காலர் பொத்தானைக் காணுமே!*

நிர்மலா: *அங்குதான் எங்கேயாவது கிடக்கும்.*

சந்திரபாபு: *(எங்கோ ஞாபகமாக) கொஞ்சம் தேடிப்பார், கண்ணு.*

நிர்மலா: *நீ எங்கே எறிந்திருக்கிருய் என்று என்ஞல் தேட முடியுமா?*

சந்திரபாபு: *(மனத்தில் ஏதோ சந்தேகம் தோன்றியவர்போல் மெதுவான குரலில்) உன்ஞல்தான் முடியும் நிர்மலா! என்னிடத்தில் இருக்கும் குறைபாடுகளை உன்னைத் தவிர வேறு யாரால் திருத்த முடியும்?*

*[இவ்வார்த்தைகள் நிர்மலாவின் இதயத்தில் சுருக்கெனத் தைக்கவும் அவளை யறியாமல் அவள் கண்களில் கண்ணீர் துளிக்க ஆரம்பித்தது. அவள் மவுனமாகப் பொத்தானைத் தேட ஆரம்பித்தாள். அவள் மறுமொழி பேசாததைக் கண்ட சந்திரபாபு அவளருகில் சென்று இரு விரல்களால் அவளுடைய முகத்தை நிமிர்த்திப் பார்த்தார்.]*

சந்திரபாபு: *(புன்சிரிப்புடன்) நிர்மலமான ஆகாயத்தில் ஓரிரண்டு மேகங்கள் காணப்படுகின்றனவே! என்ன நடந்துவிட்டது?*

நிர்மலா: *(துயரம் மிகுந்த குரலில்) இத்தனை நாட்கள் கழித்துப் பிரம்மசாரிகள் சங்கத்தினுடைய தொடர்பு எனக்கு இல்லாமல் செய்துவிடப் போகிருயே? நான் என்ன குற்றம் புரிந்தேன்?*

சந்திரபாபு: *(ஆச்சரியத்துடன்) பிரம்மசாரிகள் சங்கத்துடன் உன்னுடைய தொடர்பா? அதற்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?*

நிர்மலா: *கதவிற்குப் பின்ஞல் இருந்ததஞல் சம்பந்தம் இருக்கக் கூடாதோ? கடைசியில் அதுவும் எதற்காக அற்றுப்போக வேண்டும்?*

சந்திரபாபு: *நிர்மலா! நீ இந்தச் சங்கத்தில் சேர்ந்து வேலை*

செய்வது முடியாத காரியமாயிற்றே! அதில் வேலை செய்பவர்களுடைய சௌகரியத்தை நீ கவனித்துக் கொண்டால்....

நிர்மலா: நான் ஏன் வேலைசெய்யக் கூடாது? நான் உங்களுடைய மருமகனுகப் பிறக்காமல் மருமகளாகப் பிறந்துவிட்டதனுல் உங்களுடைய நன்மைக்காகப் பாடுபடக் கூடாதோ? அப்படியானுல் இத்தனை காலமாக என்னை ஏன் படிக்கவைத்தீர்கள்? என் உயிரையும் உள்ளத்தையும் பூர்ண வளர்ச்சி பெறும்படி செய்துவிட்டு, அவை பயன்படக் கூடிய சமயத்தில் என்னை ஒன்றும் செய்ய விடாமல் தடுக்கிறீர்களே!

சந்திரபாபு: நிர்மலா! என்றே ஒருநாள் நீ கலியாணம் செய்துகொண்டு இல்வாழ்க்கையில் ஈடுபடப் போகிறவள். பிரம்மசாரிகள் சங்கத்திற்கும் உனக்கும்....

நிர்மலா: நான் மணம் செய்துகொள்ளப் போவதில்லை.

சந்திரபாபு: வேறு என்னதான் செய்யப்போகிறுய்?

நிர்மலா: நாட்டிற்கு உழைக்க உனக்கு உதவி செய்யப் போகிறேன்.

சந்திரபாபு: நான் சந்நியாச விரதமல்லவா எடுத்துக்கொள்ளப் போகிறேன்!

நிர்மலா: நமது நாட்டில் சந்நியாசினிகள என்றுமே இருந்ததில்லையா? (சந்திரபாபு மவுனமாக நின்று விடுகிறுர்) மாமா! யாராவது ஒரு பெண் உங்கள் பிரம்பசாரி சங்கத்தின் இலட்சியங்களை மனப்பூர்வமாக ஆதரித்தாளாகில் அவளை நீங்கள் ஏன் பகிரங்கமாகச் சங்கத்தில் சேர்த்துக்கொள்ளக் கூடாது? உதாரணமாக நான் ஏன் உங்கள் சங்கத்தில் அங்கத்தினராகச் சேரக்கூடாது?

சந்திரபாபு: (இருமனப்பட்டவராக) சங்கத்தில் இருக்கும் இதர அங்கத்தினர்கள்....

நிர்மலா: உங்கள் சங்கத்தில் யார் யார் அங்கத்தினர்களோ, யார் யார் பாரத தேசத்திற்குத் தொண்டு செய்யப் போகிறுர்களோ, சந்நியாச விரதத்தைப் பின்பற்றப் போகிறுர்களோ, அவர்கள் அவ்விதமே விரதம் பூண்ட ஒரு பெண்மணியைச் சங்கோஜமின்றித் தங்கள் குழுவில் சேர்த்துக்கொள்ளக் கூடாதோ? இதனுல் அவர்கள் கிருகஸ்தர்களாக ஆகிவிடுவார்களோ என்ற பயம் இருந்தால் அவர்கள் ஒரு வேலைக்கும் பிரயோசன மற்றவர்கள்.

[சந்திரபாபு கலக்கமடைந்து தம் ஐந்து விரல்களாலும் தலையை வாரிக்கொள்பவர் போல் தடவ ஆரம்பித்தார். அப்

பொழுது திடீர் என்று அவருடைய சட்டையின் கையினுள் மறைந்திருந்த பொத்தான் கீழே விழுந்தது. நிர்மலா சிரித்துக்கொண்டே அதை எடுத்துச் சந்திரபாபுவின் சட்டைக் காலரில் பொறுத்தினாள். அவர் அதைக்கூடக் கவனியாமல் விரல்களால் தலையைத் தடவியவண்ணம் சிந்தனைக் கடலில் ஆழ்ந்துவிட்டார்.]

[நிர்மலா போகிறாள்]

[பூரணர் பிரவேசிக்கிறார்]

பூரணர்: சந்திரபாபு, 'நான் சொன்ன விஷயத்தைப்பற்றி ஆலோசித்தீரா? நம்முடைய சங்கத்தை வேறிடத்துக்கு மாற்றுவது எனக்கு அடியோடு பிடிக்கவில்லை.

சந்திரபாபு: இன்று மற்றொரு பிரச்னை கிளம்பியிருக்கிறது. அதை உங்களுடன் கலந்து யோசிக்க விரும்புகிறேன். எனக்கு ஒரு மருமகள் இருப்பது உங்களுக்கெல்லாம் தெரியுமோ என்னவோ?

பூரணர்: (ஒன்றும் அறியாதவர்போல்) உங்கள் மருமகளா!

சந்திரபாபு: ஆம். அவள் பெயர் நிர்மலா. நமது பிரம்மசாரி சங்கத்துடன் நெருங்கிய தொடர்புடையவள்.

பூரணர்: (ஆச்சரியமடைந்தவர்போல்) என்ன சொல்லுகிறீர்?

சந்திரபாபு: நமது சங்கத்தின்மீது அவளுக்கிருக்கும் பரிவும் உற்சாகமும் நமக்குச் சற்றும் குறைந்தவை யல்ல.

பூரணர்: இந்த வார்த்தையைக் கேட்ட பிறகு என் உற்சாகம் பதின்மடங்காகப் பெருகுகிறது. ஆனால் அவள் பெண்ணாகையால்....

சந்திரபாபு: அதைத்தான் நானும் யோசிக்கிறேன். ஆனால் பெண்களின் மிருதுவான உற்சாகம் புருஷர்களின் உற்சாகத்திற்கு ஒரு புதிய ஊக்கத்தை அளிக்கக்கூடும். அதை இன்று நான் அநுபவத்திலேயே உணர்ந்தேன்.

பூரணர்: (மிகுந்த உணர்ச்சியுடன்) நீங்கள் கூறுவது எனக்கு நன்றாகப் புரிகிறது, சந்திரபாபு.

சந்திரபாபு: உங்கள் அபிப்பிராயமும் அதுதானே?

பூரணர்: எந்த அபிப்பிராயம்!

சந்திரபாபு: நமது லட்சியத்தில் நம்பிக்கையுள்ள ஸ்திரீகளை நாம் சேர்த்துக்கொண்டால் நமக்கு உதவியாக இருக்குமே தவிர இடையூறு உண்டாகாது.

பூரணர்: (திரைக்குப் பின்னால் இருக்கும் உருவத்தை மனத்திற் கொண்டு, உரத்த குரலில்) இந்த விஷயத்தில் எனக்குச் சந்தேகமில்லை. பெண்களின் அன்பே புருஷர்களின்

எல்லாக் காரியங்களையும் நிறைவேற்ற வல்லது. அவர்களது உற்சாகமே நமது முன்னேற்றத்திற்குக் காரணம்.

[ஸ்ரீசரும் விபினரும் வருகிறார்கள்]

ஸ்ரீசர்: அது உண்மைதான். பூரணரே! அந்த உற்சாகம் இல்லாததால்தான் நீர் இன்று மீடிங்குக்குக் காலதாமதம் செய்து வந்தீரோ?

சந்திரபாபு: இல்லையில்லை. இன்று தாமதத்திற்குக் காரணம் என் காலர் பொத்தான் காணாமற் போனதுதான்.

ஸ்ரீசர்: உமது காலரில்தான் பொத்தான் போட்டிருக்கிறதே. மற்றொன்றினால் என்ன பிரயோசனம்? கிடைத்தாலும் போட்டுக்கொள்ள துவாரம் கிடையாதே!

சந்திரபாபு: (காலரைக் கையினால் தடவிப் பார்த்து) அடேடே! பொத்தான் இருக்கிறதா? சரி. எல்லோரும் வந்து விட்டீர்கள். நேற்று சொன்ன விஷயத்தை விவாதிக்கலாம். என்ன, பூரணரே!

பூரணர்: அது நல்ல யோசனைதான். ஆனால் இன்று நேரங் கடந்துவிட்டதே!

சந்திரபாபு: இதுதான் சரியான சமயம். நீங்களிருவரும் உட்காருங்கள். ஒரு முக்கியமான விஷயத்தை நாம் யோசித்து முடிவுக்கு வரவேண்டும். எனக்கு ஒரு மருமகள் இருக்கிறாள். பெயர் நிர்மலா. (பூரணர் திடீரென்று முகம் சிவந்துபோகும் வரையில் இருமுகிறார்) நம்முடைய இலட்சியத்தை அவள் பரிபூர்ணமாக ஆதரிக்கிறாள். (ஸ்ரீசரும் விபினரும் ஒன்றும் அறியாதவர்கள் போல் சாந்தமாகக் கேட்கின்றனர்) இவ்விஷயத்தில் அவளுக்கிருக்கும் ஊக்கம் நம்முடையதைவிடச் சற்றும் குறைந்ததில்லையென்று நான் உறுதி கூற முடியும். (ஸ்ரீசரும் விபினரும் உற்சாகமிழந்தவர்கள்போல் காணப்படவே, சந்திரபாபு சற்று ஆத்திரத்துடன் பேச ஆரம்பித்தார்.) ஸ்திரீகளுடைய பக்க பலத்தினாலேயே புருஷர்கள் பெரிய பெரிய காரியங்களைச் சாதிக்கிறார்களென்று நான் நன்கு யோசித்துப் பார்த்து முடிவுக்கு வந்திருக்கிறேன். என்ன கூறுகிறீர், பூரணரே!

பூரணர்: (களையிழந்த குரலில்) அது என்னவோ உண்மைதான்.

சந்திரபாபு: (திடீரென்று உரத்த குரலில்) நிர்மலா நமது சங்கத்தில் அங்கத்தினராகச் சேர விரும்பினால் நாம் ஏன் அவளைச் சேர்த்துக்கொள்ளக் கூடாது?

பூரணர்: என்ன சொன்னீர்கள்?

ஸ்ரீசர்: ஒரு பெண்மணி நமது சங்கத்தில் சேர விரும்புவா

ளென்று நாம் கனவிலும் கற்பனைசெய்து பார்த்ததில்லை. பார்க்கப்போனால், நமது நிபந்தனைகளில் அதற்கு இடமே யில்லை.

விபினர்: தடையுமில்லை.

ஸ்ரீசர்: தடையில்லாமல் இருக்கலாம். ஆனால் நமது இலட்சியங்களில் பெரும்பான்மையானவை பெண்கள் மூலம் நிறைவேற்ற முடியாதவை.

விபினர்: நமது சங்கத்தின் நோக்கங்கள் குறுகியனவல்ல. மகத்தான இலட்சியங்களைச் சாதிக்க வேண்டுமாயின் விசித்திரமான முறையில், விசித்திரமான சக்திகளைக் கொண்டு, விசித்திரமான முயற்சிகள் செய்யவேண்டும். தேசத்தின் நலனுக்காக ஒரு பெண்மணி பாடுபடுவது போல் உம்மால் பாடுபட முடியாது. அவ்விதமே நீர் செய்யும் சில காரியங்கள் ஒரு பெண்மணிக்கு அசாத்திய மாக இருக்கலாம். ஆகவே நமது சங்கத்தின் பரந்த நோக்கங்களை நிறைவேற்ற வேண்டுமாயின் உமது உதவி எவ்வளவு தேவையோ அவ்விதமே ஒரு பெண்மணியின் உதவியும் தேவை.

ஸ்ரீசர்: உண்மையில் பணியாற்ற முடியாதவர்கள் இலட்சியங்களைப்பற்றி மிகையாகப் பேசுவார்கள். நிஜமாகவே வேலை செய்யவேண்டுமாயின் நமது இலட்சியங்களுக்கு ஓர் எல்லை அமைத்துக்கொள்ள வேண்டும். நம்முடைய சங்கத்தின் நோக்கங்கள் நீ கூறுகிற அளவுக்கு வளர்ந்து போனது எனக்குத் தெரியாது.

விபினர்: நமது சங்கத்தின் எல்லை எவ்வளவு பெரியதென்றால் அது உம்மைச் சேர்த்துக்கொண்ட காரணத்தினால் என்னை விட்டுவிட முடியாது. நம்மிருவருக்கும் இச்சங்கத்தில் -மும் நம்மால் அதற்குப் பிரயோசனமும் இருக்கையில் அங்கத்தினரைச் சேர்த்துக்கொள்வதற்கு என்ன ஆட்சேபனை இருக்கக் கூடும்?

ஸ்ரீசர்: தாராளபுத்தி மிகவும் சிறந்த குணமே என்பதை நான் நீதி சாஸ்திரத்தில் படித்திருக்கிறேன். உன் தாராளப் புத்தியை இழக்கச் செய்வது என் உத்தேசமல்ல. அதற்கு ஒரு வரம்பு ஏற்படுத்தி அதைக் கட்டுப்படுத்துவதே எனது நோக்கம். பெண்கள் தேசசேவை புரியவேண்டு மானால் அவர்கள் ஒரு தனிச் சங்கம் அமைத்துக் கொள்ளட்டும். அதில் இடம் வேண்டுமென்று நாம் விண்ணப்பம் போடமாட்டோம். நமது சங்கம் நமக்கே இருக்கட்டும். இல்லாவிடில் இருபாலாருக்கும் தொந்தரவுதான் உண்டாகும். யோசனை செய்வது மூளையின்

வேலை. உணவை ஜீர்ணம் செய்வது வயிற்றின் தொழில். ஜீர்ணக் கருவியைத் தலையிலும் மூளையை வயிற்றிலும் மாற்றியமைக்க நாம் முயற்சி செய்யாமல் இருந்தால் போதும்.

**விபினர்:** இக்காரணத்திற்காகத் தலையைத் துணித்து ஒரு புறத்திலும் ஜீரணக் கருவியை மற்றொரு புறத்திலும் வைத்துவிட்டால் வேலை நன்றாக நடக்குமோ?

**ஸ்ரீசர்:** (களைப்படைந்தவராக) உவமையை யுக்தியுடன் கலக்கக் கூடாது. அதைத் துண்டித்து உபயோகிக்கவும் கூடாது. கொஞ்சதூரம் வரையில்தான் ஓர் உவமையை உபயோகிக்க முடியும்.

**விபினர்:** எவ்வளவு தூரம் உம்முடைய யுக்தி செல்லுகிறதோ அது வரையிலா?

ர்: (மனம் சோர்ந்து) விபினரே! எங்கள் அபிப்பிராயம் என்னவென்றால்—நம் சங்கத்தின் எல்லா நடவடிக்கைகளிலும் பெண்கள் பங்கெடுத்துக் கொண்டால் அது அவர்களுடைய பெண்மைக்குத் தீமை விளைவிக்கும்.

**சந்திரபாபு:** (ஒரு புத்தகத்தால் முகத்தை மறைத்துக்கொண்டு) மகத்தான காரியத்தில் இறங்குவதால் நஷ்டமாகும் ஒரு பொருள் பாதுகாப்பதற்குத் தகுதியற்றது.

**ஸ்ரீசர்:** இல்லை, சந்திரபாபு! பெண்மை, அழகு முதலிய விஷயங்களைப்பற்றி நான் இங்கு பேச வரவில்லை. நாம் ஒரு படையைப்போல் முன்னேற வேண்டும். பழக்கமின்மையினாலோ அல்லது இயற்கையான பலவீனத்தினாலோ நம்மைப் பின்பற்ற முடியாதவர்களை நமது சேனையில் சேர்த்துக்கொண்டால், நமது முயற்சிகள் எல்லாம் வீணாகிவிடும்.

[இச்சமயம் திடீரென்று கொஞ்சமும் சங்கோஜமின்றி நிர்மலா அறையில் நடுவில் தோன்றி அனைவரையும் வணங்கினாள். எல்லோரும் வியப்புற்றனர். கண்களில் கண்ணீர் துளித்து அவளது குரல் தழுதழுத்தது.]

**நிர்மலா:** உங்களுடைய நோக்கங்களையும் நீங்கள் தேசசேவைக்காக எவ்வளவு தூரம் செல்லத் தயாராக இருக்கிறீர்கள் என்பதையும் நான் அறியேன். ஆனால் என் மாமாவை எனக்கு நன்றாகத் தெரியும். அவர் எவ்வழியில் செல்ல விரும்புகிறாரோ, அவ்வழியில் நானும் அவரைப் பின்பற்ற விரும்பினால் நீங்கள் ஏன் தடுக்கிறீர்கள்?

[ஸ்ரீசர் வாய் திறக்கவில்லை. பூரணர் தலை குனிந்தார். விபினர் சாந்தமாக அசையாமல் இருந்தார். சந்திரபாபு சிந்தையில் ஆழ்ந்துவிட்டவர்போல் காணப் பட்டார்.]

நிர்மலா: *(பூரணரையும் ஸ்ரீசரையும் கண்ணீர் நிறைந்த தன் கண்களால் பார்த்து)* என் மாமன் என் குழந்தைப் பருவம் முதல் என்னுடைய குரு. என் ஆயுட்காலம் முழுவதும் அவர் செய்யும் நற்காரியங்களில் நானும் ஈடுபட விரும்புகிறேன். நீங்கள் ஏன் வீணுகத் தர்க்கம் செய்து நான் தகுதியற்றவள் என்று நிரூபிக்க முயலுகிறீர்கள்? என்னைப்பற்றி உங்களுக்கெல்லாம் என்ன தெரியும்?

[ஸ்ரீசர் மவுனமானுர். பூரணருக்கு உடல் முழுவதும் வியர்க்க ஆரம்பித்தது.]

நிர்மலா: உங்கள் பிரம்மசாரி சங்கத்தையோ வேறு சங்கத்தையோ நான் அறியேன். யாரிடம் கல்வி பயின்று நான் ஒரு ஸ்திரீயாக ஆனேனே அவர் தம்முடைய வாழ்வையே அர்ப்பணம் செய்து தலைமை வகிக்கும் உங்கள் சங்கத்திலிருந்து என்னை நீங்கள் பிரிக்க முடியாது. (சந்திரபாபுவைப் பார்த்து) மாமா! உங்கள் வாயினுல் நான் தகுதியற்றவள் என்று சொன்னீர்களானுல் நான் விடை பெற்றுக்கொள்கிறேன். இவர்களுக்கு என்னைப் பற்றி என்ன தெரியும்? நான் உம்மைப் பின்பற்றுமல் இருப்பதற்காக இவர்கள் ஏன் ஒன்று சேர்ந்து வாதம் புரிகின்றனர்?

ஸ்ரீசர்: *(பணிவான குரலில்)* என்னை மன்னிக்கவேண்டும். நான் உங்களைப் பற்றி வாதம் ஒன்றும் செய்யவில்லை. பொதுவாக மாதர்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன்.

நிர்மலா: மாதர்கள், புருஷர்கள் என்ற வித்தியாசத்தை முன்னிட்டு நான் ஒரு விஷயத்தையும் விவாதிக்க வரவில்லை. என் உள்ளத்தை நான் அறிவேன். யாருடைய உயர்ந்த இலட்சியங்களைப் பின்பற்ற விரும்புகிறேனே அவருடைய உள்ளத்தையும் நான் அறிவேன். நான் வேலையில் முற்படுவதற்கு இதைவிட எனக்கு வேறு ஒன்றும் தேவையில்லை.

[சந்திரபாபு தமது வலது உள்ளங்கையைப் கண்களுக் கருகில் வைத்துக்கொண்டு அதைக் கூர்ந்து ஆராய ஆரம்பித்தார். பூரணர் திடீரென்று தைரியமடைந்து ஏதோ சொல்ல ஆரம்பித்தார். ஆனுல்

வாயிலிருந்து ஒரு வார்த்தைகூட வெளி வரவில்லை.]

பூரணர்: (தமக்குள்ளேயே பன்முறை ஆட்சேபணை செய்து கொண்ட பிறகு) அம்மா! தேச சேவை என்ற சேற்றை அளைந்து உங்கள் மிருதுவான கைகளை ஏன் பாழாக்கிக் கொள்ள விரும்புகிறீர்கள்?

[இவ்வார்த்தைகள் பூரணரின் விருப்பத் திற்கு மாருன ஒரு தொனியில் வெளிவந் தன. ஏதோ ஒருபாடலைப் பாடினுற்போல விநோத உணர்ச்சி உண்டாகவும் வெட் கத்தினுல் அவரது செவிகள் சிவந்தன]

விபினர்: (இயற்கையான கம்பீரத்துடன்) தேசசேவையைச் சேற்றிற்கு ஒப்பிட்டால் அதில் அளைவது ஒரு புனிதமான காரியம் என்றே சொல்லவேண்டும்.

ஸ்ரீசர்: சங்கத்தின் பொதுக்கூட்டத்தில் ஸ்திரீகளை அங்கத் தினர்களாகச் சேர்த்துக் கொள்ளும் விஷயத்தைப் பற்றி விவாதித்து முடிவை உங்களுக்கு அறிவிக்கிருேம்.

[நிர்மலா அதற்குமேல் ஒரு கணமும் அங்கு நில்லாமல் நீரின் மீது மிதக்கும் தோணியைப் போல் நிசப்தமாக அறையி லிருந்து வெளியேற ஆரம்பித்தாள்]

சந்திரபாபு: (திடீரென்று) கண்ணு! அந்தக் காலர் பொத்தான் கிடைத்ததா?

நிர்மலா: (இலேசாகச் சிரித்துக்கொண்டே) அது உங்கள் காலரிலேயே இருக்கிறது.

சந்திரபாபு: (கழுத்தைத் தொட்டுப் பார்த்துவிட்டு) அடேடே! பொத்தான் இங்கேயே இருக்கிறதே!

[என்று கூறி மூன்று மாணவர்களையும் பார்த்துச் சிரித்தார்]

## நான்காம் காட்சி

அக்ஷய குமாரரின் மனை

[நிருபபாலாவும் நீரபாலாவும்]

நிருபபாலா: நீரு! நீ என்ன இப்பொழுதெல்லாம் கொஞ்சம் மிடுக்காகவே இருக்கிருயே!

நீரபாா: இந்த வீட்டில் இருக்கும் மிடுக்கெல்லாம் உன்னுடை

யது என்று நினைத்துக் கொண்டிருக்கிறுயோ! என்னிஷ்டம். நான் மிடுக்காக இருக்கிறேன்.

நிருபபாலா: உன் மனத்தில் இருப்பது எனக்கு நன்ருகத் தெரியும்.

நீரபாலா: நீ அவ்வளவு தூரம் ஊகித்துக் கண்டு பிடிப்பதற்கு அவசியமே யில்லை. உன் விஷயத்தையே நீ யோசித்துப் பார்க்க வேண்டிய சமயம் வந்துவிட்டது.

நிருபபாலா: (நீரபாலாவின் கழுத்தைக் கட்டிக்கொண்டு) உன் மனத்தில் இருப்பது எனக்குத் தெரியும், நீரு. "நாம் தெருவில் கிடக்கும் குப்பைக்குச் சமானமா? நம்மை வெளியில் அனுப்புவதற்கு இவ்வளவு குழப்பமா?" என்று எண்ணுகிருய்.

நீரபாலா: ஆம். அக்கா! நீயே பார். நாம் வீதியில் வீசி எறிந்து விடக் கூடிய பொருள்களா என்ன? நமது விஷயமாக இப்பொழுது நடக்கும் சண்டையும் சச்சரவும் கௌரவத்தை யளிக்கக்கூடிய நிகழ்ச்சிகளா? குமார சம்பவத்தில்[1] பார்வதி கலியாண சம்பந்தமாக ஒரு தேவதை எரிந்து சாம்பராக்கப்பட்டது என்று படித்திருக்கிறேம். நமது கலியாண விஷயம் யாராவது ஒரு கவியின் காதில் விழுந்தால் அவர் அதைப் பற்றி ஒரு காவியமே எழுதினுலும் எழுதிவிடுவார்.

நிருபபாலா: வேண்டாம். வேண்டாம். எனக்கு வெட்கமாயிருக்கிறது.

நீரபாலா: எனக்கு வெட்கம் இல்லை என்று எண்ணுகிருயா? நான் மானமில்லாதவளா என்ன? ஆனுல் என்ன செய்வது சொல். பள்ளிக்கூடத்தில் பரிசு பெறும் பொழுதெல்லாம் எனக்கு வெட்கம் மேலிட்டுவிடும். ஒருவருட காலம் கண் விழித்துப் படித்துப் பரிசு பெறுவேன். அதைக் கையில் வாங்கும் பொழுது வெட்கம் வந்துவிடும். அது என் சுபாவம்.

நிருபபாலா: சரி, நீரு. இத்தடவை கிடைக்கப் போகிற பரிசுக்காக நீ கவலைப்படுவது போல் தோன்றுகிறது.

நீரபாலா: நீ யாரைக் குறிப்பிடுகிருய்? பிரம்மசாரிகள் சங்கத்தின் இரு அங்கத்தினர்களைக் குறித்தா?

நிருபபாலா: அது என்னவோ! நீதான் புரிந்துகொள்ள வேண்டும்.

நீரபாலா: அப்படியானுல் உண்மையைச் சொல்லட்டுமா?

1. இது மகாகவி காளிதாசரால் இயற்றப்பட்ட ஒரு காவியம். முருகக் கடவுளின் அவதாரத்தை வருணிப்பது.

(நிருபபாலாவின் கழுத்தைக் கட்டிக்கொண்டு காதில் ரகசியமாக) பிரம்மசாரிகள் சங்கத்தின் இரு மெம்பர்கள் மிகவும் நெருங்கிய நண்பர்களாம். அவர்கள் நமக்கு அமைந்து விட்டால் நாம் இருவரும் பிரிந்து போகாமல் இருக்கலாம். இல்லாவிடில் யார் எங்கே போய்விடுவோமோ நிச்சயமில்லை. ஆகவே அவ்விரு தேவர்களையும் குறித்துத் தவம் செய்கிறேன். ''பிரம்மசாரிகள் சங்கத்தின் அசுவினி குமாரர்களே! இரு சகோதரிகளாகிய எங்களை ஒரு கிளையில் பூத்த இரு மலர்களைப் போல் கைப் பிடித்துக் காப்பாற்றுங்கள்'' என்று வேண்டப் போகிறேன்.

[மணமான பிறகு இருவரும் பிரிய நேரிடும் என்ற எண்ணம் தோன்றிய உடனேயே சகோதரிகள் இருவரும் ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டனர். நிருபபாலாவின் கண்களில் கண்ணீர் அடக்க முடியாமல் பெருகிற்று.]

நிருபபாலா: சரி, நீரு. சின்னக்காவைப் பிரிந்து நாம் எப்படி இருக்கப் போகிறோம்? நாம் இருவரும் போய் விட்டால் அவளுக்கு வேறு யார் இருக்கிறார்கள்?

நீரபாலா: நான் அதைப் பல முறை எண்ணிப் பார்த்தேன். நாம் இங்கிருப்பது சாத்தியமானால் வேறிடத்துக்குப் போக விரும்புவோமா? அவளுக்கோ கணவன் இல்லை. நமக்கும் இல்லாமல் போகட்டுமே. சின்னக்காவைத் தனியே விட்டு விட்டு நாம் எப்படிச் சுகமாக வாழ்வது?

[ஆண் வேஷத்தில் சைலபாலா வருகிறாள்]

நீரபாலா: (மேஜையின் மீதிருந்த தட்டிலிருந்து ஒரு பூமாலையை எடுத்துச் சைலபாலாவின் கழுத்தில் போட்டு) நாங்கள் இருவரும் சுயம்வர முறைப்படி உன்னை எங்கள் கணவனாக வரித்துவிட்டோம்.

[சைலபாலாவை நமஸ்கரிக்கிறாள்]

சைலபாலா: சரி. அடுத்த நிகழ்ச்சி என்ன?

நீரபாலா: பயப்படவேண்டாம். அக்கா, நாங்கள் உனக்கு இரு மனைவிகளாச் இருந்த போதிலும் சக்களத்திச் சண்டை போட மாட்டோம்; ஒரு வேளை போட்டாலும் நிருபபாலா தோற்றுவிடுவாள். சண்டை முடிந்துவிடும். உனக்குத் தொந்தரவு கொடுக்க மாட்டோம். உண்மையாக அக்கா நாங்கள் உன் மீது காட்டப்போகும் அன்பைப் போல் நீ வேறு யாரிடமிருந்தும் எதிர்பார்க்க முடியாது.

ஆசையால் நீ ஏன் எங்களைப் பிறர் கழுத்தில் கட்டப் பார்க்கிருய்?

[நிருபபாலாவின் இரு கண்களும் கண்ணீரால் நிறைந்து கண்ணீர் முத்து முத்தாகப் பூமியின் மீது விழ ஆரம்பித்தது.]

சைலபாலா: (தங்கையின் கண்ணீரைத் துடைத்து) சீச்சீ! இதென்ன நிருபா! உங்களுக்கு எது நன்மை என்பது தெரியுமா! என்னுடனேயே உங்கள் வாழ்நாளைக் கழித்து விடக் கூடுமாயின் நான் உங்களைப் பிறர் கையில் ஒப்புவிக்க முயலுவேன் என்று நினைக்கிறீர்களா?

[ரசிகர் வருகிருர்]

ரசிகர்: அம்மா! காட்டுமிராண்டியாகிய என்னை பிரம்மசாரிகள் சங்கத்தில் சேர்த்து விட்டாய். இன்று கூட்டம் இங்கு நடக்கப் போகிறதாம். நான் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதைக் கூறிவிடு.

நீரபாலா: மறுபடியும் பழைய விகடம்தானு? முந்தாநாள் முதல் இதை நீ விடவேவில்லையே!

ரசிகர்: எனக்கு ஒரு விகடம் தோன்றினுல் அதை நான் பெருமையுடன் கூறிக்கொள்ள வேண்டாமா? அது என் வாயில் இருந்து வெளிப்பட்டு விட்டால் அதை நான் ராஜ புத்திரர்கள் பெண் குழந்தைகளின் கழுத்தை நெரித்துக் கொல்வதைப்போல் கொன்றுவிட வேண்டுமோ? பிரம்மசாரிகள் சங்கம் நிலைத்திருக்கும் வரை நீ இம்மாதிரி விகடத்தைத் தினம் இருமுறையேனும் கேட்டாக வேண்டும்.

நீரபாலா: அப்படியானுல் அதைக் கூடிய சீக்கிரம் கழுத்தை நெரித்துவிட வேண்டியதுதான். அக்கா, இனிமேல் தயவு ஒன்றும் காட்டமுடியாது. ரசிகரின் ரசிகத் தனத்தைக் துருப்பிடிக்க விட்டுவிடக் கூடாது. இந்த பிரம்மசாரிகள் சங்கத்தைத் தாமதம் செய்யாமல் நாம் ஒழித்தால்தான் பெண்கள் உலகை வெல்லக் கூடியவர்கள் என்ற பெயரை நிலைநாட்ட முடியும். அச்சங்கத்தின்மீது எவ்விதம் படையெடுப்பது என்பதற்கு ஏதாவது ஒரு திட்டம் தயாரிக்கிருயா அக்கா?

சைலபாலா: ஒன்றும் இல்லை. யுத்த களத்திற்குச் சென்றவுடன் எந்த உபாயம் முதலில் தோன்றுகிறதோ அதைப் பின்பற்றப் போகிறேன்.

நீரபாலா: போர் முரசு ஒலிக்கவேண்டுமானுல் என்னை அழைத்துச் செல்.

[பாடுகிறாள்]

மணம் இலா நும்கழகம் கண்டுமனம் அஞ்சேன்
மலர்எனினும் மிகவலிய என்கரங்கள் கண்டீர்!

[அக்ஷயகுமாரர் வருகிறார்]

அக்ஷயகுமாரர்: இன்று இச்சபையில் கூடியிருக்கும் பெண் புலவர்களைச் சரித்திர சம்பந்தமான ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்.

சைலபாலா: பதிலளிக்க நான் தயார்.

அக்ஷயகுமாரர்: ஒரு மரத்தின் இரு கிளைகளின்மீது நின்று கொண்டு அவ்விரு கிளைகளையும் வெட்ட முயன்றவன் யார்?

நிருபபாலா: எனக்குத் தெரியும், அத்திம்பேரே! காளிதாசர்.[1]

அக்ஷயகுமாரர்: அல்ல. அவனைவிடப் பெரிய ஒரு மகானுபாவர். அவர்தான் ஸ்ரீ அக்ஷயகுமார முக்கியோபாத்தியாயர்.

நீரபாலா: இரு கிளைகள் எவை?

அக்ஷயகுமாரர்: (நீரபாலாவை இடது கையால் தன்னருகில் இழுத்து) இது ஒரு கிளை; (நிருபபாலாவை வலது கையால் தன்னருகில் இழுத்து) இது மற்றொன்று.

நீரபாலா: வெட்டுவதற்கு கோடரி இன்று வரும்போலும்.

அக்ஷயகுமாரர்: இனிமேல் வரப்போவதில்லை. வந்துவிட்டது என்றே சொல்லலாம். அதோ மாடிப் படிகளின்மீது காலடிச் சத்தம் கேட்கிறது.

[எல்லோரும் ஓடுகின்றனர். சைலபாலா ஓடும்பொழுது சிற்றப்பா ரசிகரையும் இழுத்துக்கொண்டு செல்லுகிறாள். ஓடும் பெண்களின் கைவளையல்களின் ஓசையும் மிருதுவான பாதங்களின் சப்தமும் மறைவதற்கு முன்னேயே ஸ்ரீசரும் விபினரும் நுழைகின்றனர். ஜல் ஜல் என்ற சிலம்பொலி வெகு தூரத்தில் கேட்டது.]

அக்ஷயகுமாரர்: பூரணர் வரவில்லையா?

ஸ்ரீசர்: அவரை நாங்கள் சந்திரமாதவ பாபுவின் வீட்டில் பார்த்தோம். ஆனால் திடீரென்று அவருக்கு உடம்பு சவுகரியம் இல்லாமல் போனதால் அவர் வரமுடியாமற் போயிற்று.

1. மகாகவி காளிதாஸர் சிறுவயதில் கல்வி கற்காமல் மாடு மேய்த்துக்கொண்டு நுனி மரத்தின் மீதிருந்து அடிமரத்தை வெட்டும் மூடராக இருந்தார் என்று சில வரலாறுகள் கூறுகின்றன.

அக்ஷயகுமாரர்: (அவர்கள் வந்த பாதையைப் பார்த்து) நீங்கள் உட்காருங்கள். நான் சந்திரமாதவ பாபுவின் வருகைக்காக வாயிலில் காத்திருக்கப் போகிறேன். அவருக்குக் கண்பார்வை மந்தம். எங்காகிலும் வழி தப்பிப் போனாலும் போய்விடுவார். பிரம்மசாரிகள் சங்கக் கூட்டங்களுக்கு முற்றிலும் தகுதியற்ற இடங்கள் அக்கம்பக்கத்தில் பல இருக்கின்றன.

[அக்ஷயகுமாரர் செல்கிறார். அவர் சென்ற பிறகு ஸ்ரீசர் அவ்வறையைச் சுற்றிலும் கூர்ந்து பார்க்க ஆரம்பித்தார். அறையில் இரு விளக்குகள் எரிந்தன. அவ்விரண்டிற்கும் ரோஜாப்பூ வர்ணத்தில் உறைகள் போடப்பட்டிருந்தன. விளக்குகளின் பிரகாசத்தை அவை மங்கலாக்கி அறை முழுவதும் ஒரு சிவந்த ஒளி பரவும்படி செய்தன. மேஜையின்மீது பூ வைக்கும் கிண்ணத்தில் அழகிய மலர்கள் வைக்கப்பட்டிருந்தன.]

விபினர்: (சற்றே சிரித்து) நீ எது வேண்டுமாயினும் சொல். இந்த இடம் பிரம்மசாரிகள் சங்கத்தின் நடவடிக்கைகளுக்கு அவ்வளவு தகுந்தது அல்ல.

ஸ்ரீசர்: (சிறிது அச்சத்துடன்) ஏன்?

விபினர்: இங்கிருக்கும் அலங்காரங்கள் நீ விவரிக்கும் நவீன சந்நியாசிகளுக்கேற்றவையாக இருக்கின்றன.

ஸ்ரீசர்: அப்படி ஒன்றும் அதிகமாகக் காணப்படவில்லையே!

விபினர்: ஸ்திரீகளைத் தவிர மற்றவை எல்லாம் இருக்கின்றன.

ஸ்ரீசர்: ஆமாம். அவர்கள்தான் பாக்கி.

[மற்ற நாட்களைப்போல் சம்பாஷணை வலுக்கவில்லை.]

விபினர்: சுவரில் இருக்கும் படங்களையும் மற்றும் இங்குக் காணப்படும் அநேக வஸ்துக்களையும் பார்த்தால் இவ்விடத்திற்கும் பெண்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பதுபோல் காணப்படுகிறதே!

ஸ்ரீசர்: உலகில் பெண்களின் தொடர்பு இல்லாத இடமே கிடையாது.

விபினர்: அப்படித்தான் தோன்றுகிறது. கவிகள் வருணிப்பதெல்லாம் உண்மையானால், வெண்ணிலவிலும், மலர்களிலும், கொடிகளிலும், இலைகளிலும் எங்கு காணினும் பெண்களின் தொடர்பு இருப்பதால் அபாக்கியசாலிகளாகிய புருஷர்கள் அதிலிருந்து தப்பவே முடியாது.

ஸ்ரீசர்: (சிரித்து) நமது சங்கத் தலைவராகிய சந்திரமாதவ பாபுவின் வீட்டில் பெண் வாசனையே கிடையாது என்று இதுகாறும் நினைத்திருந்தேன். அந்த மயக்கம் தீர்ந்து விட்டது. பெண்கள் உலக முழுதுமே வியாபித்திருப்ப தாகத் தோன்றுகிறது.

விபினர்: பிரம்மசாரிகள் சங்கத்தின் கூட்டங்களுக்காகவென்று ஓரிடம் ஒதுக்கி வைக்கவில்லை. மீடிங்கு போடுவதற்கு இடமே கிடையாது.

ஸ்ரீசர்: இதைப் பார்!

[மூலையிலிருந்த ஒரு சிறிய மேஜையின் மீதிருந்து சில கொண்டை ஊசிகளை எடுத்துக் காண்பித்தார்.]

விபினர்: (அவற்றில் இரண்டை எடுத்துக் கூர்ந்து பார்த்து) அடே தம்பி! பிரம்மசாரிகளுக்கு இங்கு நிறைய முட்கள் இருக்குமென்று தோன்றுகிறது.

ஸ்ரீசர்: பூக்கள் எங்கு இருக்குமோ அங்கு முட்களும் இருக்கும்.

விபினர்: அதுதான் ஆபத்து. முட்கள் மாத்திரம் இருந்தால் அங்கு யாரும் போகமாட்டார்கள்.

[ஸ்ரீசர் அங்கிருந்த ஒரு சிறிய புத்தக அலமாரியிலிருந்து சில புத்தகங்களை எடுத்துப் புரட்ட ஆரம்பித்தார். அவற்றுள் சில நாவல்களாகவும் சில இங்கிலீஷ் கவிதைத் தொகுதிகளாகவும் இருந்தன. பால்கிரேவ் என்ற ஆசிரியர் தொகுத்த ''ஆங்கிலக் கவிதைகளின் சுவர்ண பொக்கிஷம்'' என்ற நூலைப் புரட்டவும் பக்கங்களின் ஓரங்களில் ஒரு பெண்ணின் கையெழுத்தில் குறிப்புக்கள் காணப்பட்டன. இதைப் பார்த்து ஸ்ரீசர் தலையைப் பலமாக ஆட்டிப் புத்தகத்தை விபினர் கையில் கொடுத்தார். அவர் புத்தகத்தின் முதற் பக்கத்தில் எழுதப்பட்டிருந்த பெயரைப் படித்து]

விபினர்: நிருபபாலாவா! எனக்குத் தெரிந்த வரையில் இது ஒரு புருஷனின் பெயர் அல்லவே! நீ என்ன நினைக்கிறாய்?

ஸ்ரீசர்: எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. இதைப் பார்! இதுவும் ஆண் பெயராகக் காணப்படவில்லையே!

[மற்றொரு புத்தகத்தைக் காண்பித்தார்.]

விபினர்: நீரபாலா! கவிதைப் புனைவதற்குச் சரியான பெயர். ஆனால் பிரம்மசாரிகள் சங்கத்திற்கு....

ஸ்ரீசர்: மேற்படி பெயர்களைக்கொண்ட பெண்மணிகள் நமது சங்கத்தை நாடி வந்தார்களானுல் அவர்கள் உள்ளே நுழையாதபடி கதவைத் தாளிட்டுவிடக் கூடிய பலசாலி நம்முள் ஒருவனுவது இல்லை.

விபினர்: பூரணன் ஒரு பெரிய விபத்திற்கு இலக்

சாய்ந்து விட்டான். பிழைப்பதே சந்தேகம்.

ஸ்ரீசர்: நீ கூறுவது எனக்கு விளங்கவில்லை.

விபினர்: அப்படியானுல் நீ ஒன்றையும் கூர்ந்து கவனிக்க வில்லை என்றே நினைக்கிறேன்.

ஸ்ரீசா: அப்படியல்ல. இது உன்னுடைய கற்பனை.

விபினர்: இதயமே ஒரு கற்பனைப் பொருள். அதைக் கண்ட வர் யார்? உணர்ந்தவர் யார்?

ஸ்ரீசர்: அப்படியானுல் பூரணனின் நோய் வைத்திய சாஸ் திரத்திற்குக் கட்டுப்பட்டதல்ல என்கிருயா?

விபினர்: இல்லை. இந்த நோயைப்பற்றி வைத்தியக் கல்லூரி யில் ஒன்றும் கற்றுக்கொடுப்பதில்லை.

ஸ்ரீசர்: நாம் இந்த வீட்டிற்குள் நுழையும் பொழுது வாசலில் சிற்றப்பா ரசிகர் என்று அழைக்கப்படும் ரசிக சக்கர வர்த்தி காணப்பட்டார். அவரைப் பார்த்தால் நமது பிரம்மசாரிகள் சங்கத்தின் வாயிற் காப்பவன் வேலைக்குக் கூடத் தகுதியானவர் என்று எனக்குத் தோன்ற வில்லை.

விபினர்: பரமசிவனுடைய தவ வனத்திற்கு நெருப்புவைக்கும் உத்தேசத்துடன் மன்மதன் நந்திவேடம் பூண்டு வந்தது போலிருந்தது. அவர் நம்பக் கூடிய மனிதராகக் காணப் படவில்லை.

[சந்திரபாபு வருகிருர்]

சந்திரபாபு: இன்று நடந்த கடுமையான விவாதத்தின் விளை வாகப் பூரணரின் தேக நிலை சரியாக இல்லாததால் நான் அவரை அவருடைய வீட்டிற்கொண்டு போய் விட்டு வந்தேன்.

விபினர்: அவருடைய பலவீனமான நிலையைப் பார்த்தால் அவர் ஆதியில் இருந்தே ஜாக்கிரதையாக இருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

சந்திராபு: அவர் ஜாக்கிரதையுள்ளவராகக் காணப்பட வில்லையே!

[அக்ஷயகுமாரரும் ரசிகரும் வருகிருர்கள்]

அக்ஷயகுமாரர்: மன்னிக்கவேண்டும். இப்புதிய மெம்பரை உங்க ளுக்கு அறிமுகப்படுத்தி வைத்துவிட்டு நான் இங்கிருந்து அகன்று விடுகிறேன்.

ரசிகர்: (சிரித்து) என் புதுமை வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு அவ்வளவாக விளங்காது.

அக்ஷயகுமாரர்: உங்களுடைய அடக்க குணத்தினுல் அதை நீங்கள் வெளியில் காண்பிக்காமல் ஒளித்துவைத்திருக்கிறீர்கள். காலக்கிரமத்தில் வெளிப்படும். நண்பர்களே! இவர்தான் மிகவும் பொருத்தமான பெயரையுடைய ரசிக சக்கரவர்த்தி.

ரசிகர்: என் தகப்பனுர் என் ரசிகத் தனத்தை அறிந்து கொள்வதற்கு முன்பே எனக்கு ''ரசிகன்'' என்று பெயர் வைத்துவிட்டார். பிறகு தந்தையின் வார்த்தையைக் காப்பாற்றுவதற்காக நான் ரசிகத் தனத்தை விருத்தி செய்து கொண்டு வருகிறேன்.

''யத்நே க்ருதே யதி ந ஸித்யதி கோத்ர தோஷ:!'' பயன் கிடைக்காது போனுலும் முயற்சி செய்வதில் தவறு ஒன்றுமில்லையல்லவா?

[அக்ஷயகுமாரர் போகிருர். ஆண் வேஷம் பூண்ட சைலபாலா பிரவேசிக்கிருள். உள் நுழைந்து அனைவரையும் வணங்குகிருள். கண் பார்வை மங்கிய சந்திரபாபுவிற்கு அவளுடைய உருவம் தெளிவாகத் தெரியவில்லை. விபினரும் ஸ்ரீசரும் அவளைப் பார்த்துத் திரு திரு என்று விழித்தனர். சைலபாலாவைத் தொடர்ந்து இரு வேலைக்காரர்கள் கைகளில் சிற்றுண்டி நிறைந்த பாத்திரங்களை ஏந்திக்கொண்டு வந்தனர். சைலபாலா சிறிய வெள்ளித் தட்டுக்களை ஒவ்வொன்ருக எடுத்து அங்குள்ள சிறு மேஜைகளின் மீது வைக்க ஆரம்பித்தாள்.]

ரசிகர்: இவர் உங்கள் சங்கத்தில் புதிதாகச் சேர்ந்த மற்ருெரு அங்கத்தினர். இவருடைய புதுமையைப் பற்றி ஒருவிதமான வாதத்திற்கும் இடமில்லை. அவ்விஷயத்தில் இவர் எனக்கு நேர் விரோதம். இவர் தம்முடைய புத்தி சாதுரியத்தைப் பகட்டான புதுமையுடன் கலந்து வெளியிடக் கூடியவர். நீங்கள் ஏதோ கொஞ்சம் ஆச்சரியப் பட்டவர்கள் போல் காண்கிறீர்கள். அது நியாயம்தான். இவரைப் பார்த்தால் ஓர் இளைஞரைப்போல் காணப்படுகிருரல்லவா? ஆனுல் இவர் ஓர் இளைஞரல்ல என்பது மாத்திரம் நிச்சயம்.

சந்திரபாபு: இவர் பெயர் என்ன?

ரசிகர்: ஸ்ரீ அபலாகாந்த சட்டோபாத்தியாயர்.

ஸ்ரீசர்: அபலாகாந்தரா?[1]

ரசிகர்: ஆமாம். பிரம்மசாரி சங்கத்தின் கொள்கைகளுக்குப் பொருத்தமான பெயர் அல்ல வென்று நானே ஒப்புக் கொள்ளுகிறேன். இப் பெயரின் மீது எனக்குப் பிரமாத மான ஆசை ஒன்றுமில்லை. மாற்றவேண்டுமானால் விக் கிரம சிங்கன் என்றோ பீமசேனன் என்றோ அல்லது வேறு தகுந்த பெயரோ வைப்பதென்றால் இவருக்கு ஓர் ஆட் சேபனையும் கிடையாது. சாத்திரம் சொல்கிறது: 'ஸ்வ நாமா புருஷோ தன்ய:' தன் சொந்தப் பெயராலேயே மனிதன் தன்யனாகிறான் என்று. ஆனால் இந்த அபலா காந்தர் என்ற பெயரை வைத்துக்கொண்டு தான் உலகில் புகழ் பெறவேண்டும் என்ற பிடிவாதம் இவருக்கு

ஸ்ரீசர்: என்னய்யா நீர் கூறுவது? ஒருவன் உடையை மாற்று வது போல் நினைத்தபடி யெல்லாம் பெயரை மாற்றிக் கொள்ள முடியுமா?

ரசிகர்: அது உம்முடைய தனிப்பட்ட அபிப்பிராயமாக இருக் கலாம். ஸ்ரீசரே! நமது முன்னோர் பெயர்களை உடை களுடன் சேர்த்தே கணக்கிட்டு வந்தனர். உதாரண மாக, அர்ச்சுனனுக்கு அவனுடைய தந்தை இட்ட பெயர் என்ன வென்று உமக்குத் தெரியுமா? ஜனங்கள் தங்கள் இஷ்டப்படி பார்த்தன், தனஞ்சயன், ஸவ்ய ஸாசி என் றெல்லாம் அவனை அழைத்தனர். பெயரை ஒரு பெரிய விஷயமாகக் கருதவேண்டாம். நீர் இவரை அபலாகாந்தர் என்று அழைக்காவிடில் அதற்காக அவர் உம் பேரில் மான நஷ்ட தாவா போடப் போவதில்லை.

ஸ்ரீசர்: (சிரித்து) நீங்கள் இவ்வளவு தூரம் ஆறுதல் கூறுவ தால் நான் இனிக் கவலைப்படுவதில்லை. ஆனால் என் பொறுமையைச் சோதிக்கும் சந்தர்ப்பம் ஏற்படாது; நான் பெயர்களை ஒருக்காலும் மறப்பதில்லை.

ரசிகர்: நீங்கள் மறக்க மாட்டீர்கள். ஆனால் நான் மறந்து விடுவேன். அவர் எனக்குப் பேரன் ஆகவேண்டும். ஆகவே அவர் விஷயத்தில் என் நாக்குக் குழறிவிடும். ஒன்றுக் கொன்று சொல்லி விட்டாலும் நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்.

ஸ்ரீசர்: அபலாகாந்தரே! நீங்கள் இந்த ஏற்பாடெல்லாம் ஏன் செய்தீர்கள்? நமது சங்கத்தின் நிகழ்ச்சி நிரலில்

1. அபலாகாந்தர் என்றால் ஸ்திரீயின் கணவன் என்று பொருள்.

பட்சணங்கள் வழங்குவது என்ற அம்சம் காணப்படவில்லையே?

ரசிகர்: (எழுந்து) அக்குறையைப் போக்கியதற்காகச் சங்கத்தின் சார்பாக நான் அவருக்கு வந்தனம் தெரிவிக்கிறேன்.

சைலபாலா: (தட்டுக்களை வைத்துக் கொண்டே) ஸ்ரீசரே! உங்களுடைய சங்கத்தின் கொள்கைகளில் சிற்றுண்டிக்குக் கூட இடமில்லையா?

ஸ்ரீசர்: (ஆஜானுபாகுவான உருவத்தையுடைய விபினரை இழுத்து வந்து) இவ்வங்கத்தினரின் உருவத்தைப் பார்த்தீர்களானால் உங்களுக்கு அவ்விஷயத்தில் ஒருவிதச் சந்தேகமும் தோன்றாது.

விபினர்: அபலாகாந்தரே! உலகில் கிடைக்கும் சிறந்த பொருள்களைப் பற்றி அவரவர்கள் கொள்கைகளை அவரவர்களே வகுத்துக்கொள்ளவேண்டும். எழுத்தாளன் தன்னுடைய வழியைப் பின்பற்றி இலக்கிய சேவை செய்துகொண்டே செல்லவேண்டும். விமரிசனம் செய்பவர்களுடைய அபிப்பிராயத்திற்காக அவன் தன்னுடைய நடையை மாற்றிக்கொள்ளக் கூடாது. அவ்விதமே பட்சணங்களைச் சேகரித்து வழங்குவதைப் பற்றி ஒரு சங்கமும் ஒரு குறிப்பிட்ட கட்டுப்பாட்டை அநுசரிக்க முடியாது. சிற்றுண்டி கிடைத்தால் உட்கார்ந்து அதை விழுங்குவதுதான் முதல் கடமை. அது தீர்ந்து போகும்வரை மற்ற நிகழ்ச்சிகளெல்லாம் காத்திருக்க வேண்டியவையே.

ஸ்ரீசர்: உனக்கு என்ன நேர்ந்துவிட்டது, விபினு? நீ சாப்பிடும் பொழுது நான் பார்த்திருக்கிறேன். ஆனால் ஒரே மூச்சில் நீ இவ்வளவு பேசி நான் கேட்டதில்லையே.

விபினர்: என் நாக்கில் ஜலம் ஊறும் பொழுது வேகமாகப் பேசுவது என் வழக்கம். என் சரித்திரத்தை யாராவது எழுதுவதாயிருந்தால் ...

ரசிகர்: (வழுக்கைத் தலையைத் தடவிக் கொண்டே) அந்த வேலையை என்னிடம் ஒப்படைத்து விடாதீர். நான் அத்தனைக்காலம் காத்திருக்கமுடியாது.

[புதிய வீட்டின் அலங்காரங்களும் சிற்றுண்டி வினியோகமும் சந்திரமாதவபாபுவிற்குப் பிடிக்கவில்லை. அவர் உற்சாகம் குன்றியது. அடிக்கடி நிகழ்ச்சித் தாளையும் கைக்கடியாரத்தையும் மாற்றி மாற்றிப் பார்க்க ஆரம்பித்தார்.]

சைலபாலா: (சந்திரபாபுவின் எதிரில் சென்று) சங்கத்தின் அலுவல்களைச் சற்றுத் தடை செய்வதற்கு மன்னிக்க வேண்டும். சந்திரபாபு! நீங்களும் கொஞ்சம் சிற்றுண்டி....

சந்திரபாபு: இவ்விதம் சிற்றுண்டி பரிமாறுவது போன்ற நிகழ்ச்சிகள் நமது சங்கத்தின் நிகழ்ச்சிகளுக்குப் பெரிய தடைகள் என்பதற்குச் சந்தேகமே இல்லை.

ரசிகர்: நல்லது. பரிட்சை செய்து பாரும். சிற்றுண்டி வழங்குவது சங்கத்தின் காரியத்தைத் தடை செய்யும் என்றால்..

விபினர்: (மெல்லிய குரலில்) அப்படியானால் சங்கத்தை மூடி விட்டுச் சிற்றுண்டி தின்பதையே அலுவலாக வைத்துக் கொள்ள வேண்டியதுதான்.

ஸ்ரீசர்: ரசிகரே! வாரும். சாப்பிட எழுந்திருக்க மாட்டீர் போலிருக்கிறதே!

ரசிகர்: தினம் வேளை தவறாமல் கேட்டோ கேட்காமலோ உணவை எடுத்து உண்டு வருகிறேன். இன்று உங்கள் சங்கத்தில் அங்கத்தினனாக ஆன பிறகு உங்களுடைய சேர்க்கையினால் அதற்குக் கொஞ்சம் விடுமுறை கிடைக்கும் என்று பார்த்தேன். ஆனால்..

சைலபாலா: ஆனால் என்ன ரசிகரே! இன்று உமக்கு ஞாயிற்றுக்கிழமை உபவாசமோ? ஒன்றும் சாப்பிட மாட்டீரோ?

ரசிகர்: பாருமய்யா! விடுமுறை வேறு யாருக்கும் கிடையாது. இந்த ரசிகனுக்கு மாத்திரம் போலும்! ''பலம் பலம் பாஹு பலம்'' புயபலம் தான் பலம். பிறருடைய வேண்டுகோளுக்குக் காத்திருந்தால் ஒன்றும் நடக்காது.

விபினர்: (நான்கே தட்டுக்கள் வைத்திருப்பதைப் பார்த்து) அபலாகாந்தரே! நீங்கள் எங்களுடன் உட்கார்ந்து சாப்பிடமாட்டீரோ?

சைலபாலா: இல்லை. நான் பரிமாறப் போகிறேன்.

ஸ்ரீசர்: நீங்களும் உட்கார்ந்து சாப்பிடுங்கள்.

சைலபாலா: இல்லை. நானே சாப்பிடுவதை விடப் பரிமாறுவதில்தான் எனக்குத் திருப்தி அதிகம்.

ஸ்ரீசர்: ரசிகரே! இது நியாயம் தானா?

ரசிகர்: ''பின்ன ருசிர்ஹி லோக:'' உலகம் பலவிதம். அவருக்குப் பரிமாறுவதில் திருப்தி. நமக்கு உண்பதில் திருப்தி. இவ்விதம் ருசிகள் மாறுபாடாக இருப்பதே அனைவருக்கும் நன்மை விளைவிக்கும்.

[எல்லோரும் உண்கின்றனர்]

சைலபாலா: சந்திரபாபு! அந்த பட்சணத்தை முதலில் சாப்பிடாதீர்கள். உருளைக் கிழங்குக்கறி இதோ இருக்கிறது.

என்ன தேடுகிறீர்கள்; தண்ணீரா? இதோ டம்ளரில் ீர்.

[சந்திரபாபு தம்முடை தட்டில் இருந்த மாம்பழத்தைச் சரியாக நறுக்க முடியா மல் விழிப்பதைப் பார்த்த சைலபாலா உடனே ஓடிச் சென்று அதைக் கத்தியால் அரிந்து கொடுத்தாள். மற்ற சாமான் களையும் நகர்த்திக் கொடுத்து உதவி புரிந்தாள்]

**சந்திரபாபு:** ஸ்ரீசரே! பெண்களை அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொள்ளும் விஷயத்தைப் பற்றி நீங்கள் ஆலோசித்தீர்களோ?

**ஸ்ரீசர்** யோசித்துப் பார்த்ததில் அதற்கு ஆட்சேபனை ஒன்றும் இல்லை என்றே தோன்றுகிறது. சமூகம் ஒரு வேளை ஆட்சேபிக்குமோ என்றுதான் நான் சந்தேகப்படுகிறேன்.

**விபினர்:** சமூகத்தை நாம் சில சந்தர்ப்பங்சளில் குழந்தைகளைப் போல் கருதுவது உசிதம். குழந்தைகளின் ஆட்சேபங்களை நாம் பொருட்படுத்தினால் அவர்களுடைய முன்னேற்றம் தடைபெறும். இந்த உண்மை சமூகத்திற்கும் பொருந்தும்.

**ஸ்ரீசர்:** நமது நாட்டில் அநேக சபைகள், சங்கங்கள் இவற்றின் நடவடிக்கைகள் வெற்றி பெறாமல் புகைந்து போவதற்கு முக்கிய காரணம் அவை பெண்களை அங்கத்தினர்களாகக் சேர்த்துக் கொள்ளாததே என்பது என் அபிப்பிராயம். ரசிகரே! நீர் என்ன சொல்கிறீர்?

**ரசிகர்:** உண்மையாகப் பெண்களுடன் எனக்கு அதிகத் தொடர்பு இல்லாதிருப்பினும் ஒன்று மாத்திரம் எனக்கு நன்கு தெரியும். அவர்கள் உதவி புரிவார்கள்; இல்லாவிடில் தொந்தரவு கொடுப்பார்கள். ஆக்கல்; இல்லாவிடில் அழித்தல். ஆகையால் அவர்களால் நன்மை ஏற்படினும், ஏற்படாது போயினும் அவர்களைச் சங்கத்தில் சேர்த்துக்கொண்டு அவர்களால் தீமை நேராமல் பார்த்துக் கொள்ளவேண்டும். நீங்களே யோசித்துப் பாருங்கள். பிரம்மசாரிகள் சங்கத்தில் ஸ்திரீகளைச் சேர்த்துக் கொண்டால் இந்த சங்கத்தை ஒழிக்கவேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு உண்டாகாது அல்லவா? ஆனால் இப்பொழுது இருக்கும் நிலைமையில்....

**சைலபாலா:** பிரம்மசாரிகள் சங்கத்தின் மீது பெண்களுக்குத் துவேஷம் என்ற செய்தி ரசிகருக்கு எா கிடைத்ததோ!

ரசிகர்: ஆபத்து வருகிற செய்தி கிடைக்காவிட்டால் அதற்காக நாம் ஜாக்கிரதையாக இருக்கக்கூடாதா? ஒரு கண் குருடான மானின்மீது அதன் குருட்டுக் கண்ணின் பக்கத்திலிருந்தே அம்பு பாய்ந்ததாம். நமது சங்கத்தினர் பெண்கள் விஷயத்தில் குருடர்கள். ஆதலால் பெண்களிடம் இருந்தே கடைசியில் ஆபத்தை அடையப் போகிறார்கள்.

ஸ்ரீசர்: (விபினரிடம் ரகசியமாக) ஒற்றைக் கண் மான் ஒன்று இன்று அம்புக்கு இரையாகிவிட்டது. நமது அங்கத்தினர்களுள் ஒருவர் புழுதியில் விழுந்து புரளுகிறார்.

சந்திரபாபு: புருஷர்களை மாத்திரம் வைத்துக்கொண்டு சமூகத்தை முன்னேறச் செய்யவேண்டும் என்று விரும்புவது ஒரு காலினால் நடக்க முயல்வது போலாகும். ஆகையால் சிறிதுதூரம் சென்றபிறகே அவர்களை விலக்க வேண்டும். பெரிய பெரிய முயற்சிகளிலெல்லாம் பெண்களை அருகில் நெருங்க வொட்டாததால்தான் நமது தேசத்தொண்டுகள் பலவற்றில் உயிரே இருப்பதில்லை. நமது உள்ளம், நமது பணிகள், தமது ஆசாபாசங்கள் இவை வெளியில் ஒருவிதமாகவும் வீட்டிற்குள் ஒருவிதமாகவும் இயங்குகின்றன. ஆகையால்தான் நாம் வெளியில் வாக்களிப்பதை யெல்லாம் வீட்டிற்குள் வந்தவுடன் மறந்து விடுகிறோம். இதோ பாரும்! அபலா காந்தரே! நீர் வயசில் சிறியவர். நான் கூறுவதை எல்லாம் நன்கு மனத்தில் பதிய வைத்துக்கொள்ளும். பெண்களை மாத்திரம் ஒரு பொழுதும் இகழாதீர். பெண்களை நாம் தாழ்த்திவைத்தோமாகில் அவர்கள் நம்மையும் சேர்த்துக் கீழே இழுப்பார்கள். அவர்களுடைய பளுவினால் நாம் முன்னேற்றப்பாதையில் நடப்பது அசாத்தியமாகிவிடும். இரண்டு அடி எடுத்து வைக்குமுன் களைத்துப் போய் வீட்டிற்குத் திரும்பி வந்து மூலையில் உட்காரவேண்டியதுதான். அவர்களை நாம் உயர்ந்த ஸ்தானத்தில் வைத்தோமாகில் நமது இலட்சியத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்துக் கொண்டது போலாகும். நமது நாட்டில் வெட்கம் என்பது வெளியே காட்டப்படுகிறது. வீட்டிற்குள் அது காணப்படுவதில்லை. ஆகையால் நமது பெருமை யெல்லாம் வெளியில் காட்டப்பெறும் வீண் டம்பமாக முடிகிறது.

சைலபாலா: உங்களுடைய இந்த மகத்தான உபதேசம் வீண் போகாமல் இருக்குமாறும் நான் உம்முடைய இலட்சி

யத்தை நிறைவேற்ற உதவி செய்யுமாறும் ஆசீர்வாதம் புரியுங்கள்.

**சந்திரபாபு:** என்னுடைய மருமகளாகிய நிர்மலாவை பிரம்ம சாரிகள் சங்கத்தில் அங்கத்தினராக்குவதற்கு உங்களுக்கு ஆட்சேபம் ஒன்றும் இல்லையே?

**ரசிகர்:** எங்களுக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை. இலக்கணம் தான் குறுக்கே நிற்கிறது. ''பிரம்மசாரிகள்'' சங்கத்திற்குள் யாராவது பெண் உருவத்துடன் பிரவேசித்தால் போபதேவரின்[1] சாபத்திற்கு இலக்காக நேரிடும்.

**சைலபாலா:** போபதேவரின் சாபம் தற்காலத்தில் பலிக்காது.

**ரசிகர்:** சரி. முடிவில் பெண் அங்கத்தினர்கள் ஆண் வேடம் பூண்டு பெயரையும் மாற்றிக்கொண்டு நம் சங்கத்தில் வந்து சேர்ந்துவிட்டால் ஒன்றுக்கொன்று சரியாகிவிடும்.

**ஸ்ரீசர்:** அவ்விதம் நிகழ்ந்தால் கடைசியில் ஆண் யார், பெண் யார் என்ற பெரிய சந்தேகம் ஏற்பட்டு விடும்.

**விபினர்:** சந்தேகத்திலிருந்துதான் விளக்கம் தோன்ற வேண்டும்.

**ரசிகர்:** எதுவாயினும் ஒன்று நிச்சயம். என்னுடைய பேத்தி என்று யாரையும் நீங்கள் சந்தேகிக்க வேண்டாம்.

**ஸ்ரீசர்:** ஆனால் அபலாகாந்தரைக் குறித்து மாத்திரம் சிறிது சந்தேகம் இருந்தே தீரும்.

[சைலபாலா பக்கத்தில் இருக்கும் ஒரு மேஜையின் மீதிருந்த ஒரு சிற்றுண்டித் தட்டை எடுக்கச் சென்றாள்.]

**சந்திரபாபு:** பாரும் ரசிகரே! ஒரு மொழியின் சரித்திரத்தை ஆராய்ந்தோமாகில் நீண்டகால வழக்கத்தினால் சில வார்த்தைகளின் மூலப்பொருள் சிதைந்துபோய் அவற்றிற்கு முற்றிலும் மாறான அர்த்தம் ஏற்பட்டு விடுகிறது. பெண்களைச் சேர்த்துக்கொள்வதால், ''பிரம்மசாரி சங்கம்'' என்ற வார்த்தையின் பொருளில் மாறுதல் ஏற்பட்டால் அதனால் என்ன நஷ்டம்?

**ரசிகர்:** நஷ்டம் ஒன்றுமில்லை. நான் மாறுதல்களை எதிர்ப்பவன் அல்லன். பெயரில் மாறுதலோ, அல்லது உருவத்தில் மாறுதலோ எதையும் நான் எதிர்க்காமல் ஒப்புக்கொள்வதால்தான் இந்த வயசிலும் நான் புதுமையுடன்

1. இவர் ஓர் இலக்கண ஆசிரியர். இவர் இயற்றிய இலக்கண நூல் 'முக்தபோதம்'. இலக்கணத்தில் ஆண்பால், பெண்பால் இரண்டும் தனித்தனியே நிற்பதை ரசிகர் குறிப்பிடுகிறார்.

[சிற்றுண்டி தீர்ந்தது. பெண் அங்கத்தினர்களைச் சேர்த்துக்கொள்வதைப்பற்றி ஒருவரும் ஆட்சேபம் செய்யவில்லை.]

ரசிகர்: நமது பொதுக்கூட்டத்தின் காரியம் இனிது நிறைவேறிற்று என்றே நம்புகிறேன்.

ஸ்ரீசர்: ஒன்றும் நிறைவேறவில்லை; மற்ற நாட்களில் வாய்க்கு மாத்திரம் வேலை இருக்கும்; இன்று வலது கையும் சிறிது துணை புரிந்தது.

விபினர்: அதனால் நமது உட்புறத்திற்கு மிகவும் திருப்தி ஏற்பட்டது. ஆகையால் மீடிங்கை இத்துடன் முடித்துக் கொள்வோம். இதற்குமேல் மூளை வேலை செய்யாது. நேரமும் ஆகிவிட்டது.

[எல்லோரும் செல்கின்றனர்]

# மூன்றும் அங்கம்

## முதற் காட்சி

அக்ஷயகுமாரரின் வீடு

[அக்ஷயகுமாரர், நீரபாலா, நிருபபாலா]

நீரபாலா: [பாடுகிருள்]

செல்ல விரும்புவோர் செலினும் செல்லேல்
செந்தே னே!நீ செல்லேல் செல்லேல்!
என்றன் நன்முகில் எழுப்பும் நல்லிசை
சென்றிடு முன்னே செல்லேல் நீயே!
கார்இருள் படர்ந்தது நள்ளிர விதனில்
கடிமனைக் கதவம் அடைத்தது காணுய்!
அடவியின் எல்லையில் அலைத்தே வீசும்
காற்றும் நந்தம் சோம்பலைப் போக்கும்
ஆகையால்,
செல்ல விரும்புவோர் செலினும் செல்லேல்
செந்தேனே! நீ ! செல்லேல் செல்லேல்!

அக்ஷயகுமாரர்: என்ன நடந்தது சொல். என் வீடு இதுவரையில் வேலைக்காரர்கள் துடைப்பதற்கு உபயோகிக்கும் துணியின் வீச்சினுல் பளபளவென்று விளங்கிற்று. இப்பொழுது இந்த வீட்டில் சகோதரிகளாகிய உங்கள் புடவைத் தலைப்பினுல் காற்று அலைத்து வீசுகிறது.

நீரபாலா: அக்கா ஊரில் இல்லை. நீங்கள் தனியாகக் கிடக்கிறீர்களே என்று ஏதோ ஓரிரண்டு தடவை வந்தால் 'ஏன் வந்தாய்' என்று மிரட்டுகிறீர்களே!

அக்ஷயகுமாரர்: தயை நிறைந்த கள்ளியே! சூனியமான என் இதயத்தைத் திருடுவதற்காகப் பாழான இவ்வீட்டுக்குள் நுழைந்தாயோ?

[பாடுகிருர்]

கருணை நிறைந்த நெஞ்சக் கள்ளி!
கருத்தாய் என்னே கருணை கொண்டாய்?

பரிவோ டென்றன் பாழ்உளம் கவர்ந்தே
பாசம் மாயத் தனைசெய் வாயே!

நீரபாலா: நான் அத்தகைய மூடக்கள்ளி அல்ல. இப்பொழுது உங்கள் உள்ளம் எங்கிருக்கிறது என்று தெரிந்தால் நான் அதைத் திருட வருவேன்.

அக்ஷயகுமாரர்: நீயே சொல்! இந்த அபாக்கியசாலியின் இதயம் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்று?

நிருபபாலா: எனக்குத் தெரியும், அத்திம்பேரே! அது 475 மைல்களுக்கு அப்பால் இருக்கிறது.

நீரபாலா: சின்னக்கா என்னை முந்திக் கொண்டாள். அக்கா! நீ அத்திம்பேரின் இதயத்தின் பின்னே சென்று மைல் மைலாக அளந்து கொண்டே போனுயோ?

நிருபபாலா: இல்லையடி! புரபாலா அக்கா காசிக்குச் சென்றபொழுது ரெயில்வே டைம் டேபிளைப் (கால அட்டவணை) பார்த்து தூரத்தைக் கண்டுபிடித்துக்கொண்டேன்.

அக்ஷயகுமாரர்: (பாடுகிருர்)

நாளமெங்கும் குருதியோடி நாற்புறங்கள் சூழுதே
நாடியோடும் நெஞ்சவேகம் நானுங்கூற வாகுமோ
வானையொத்த வேல்விழியாள் வாடியோடிப் பின்னரே
வளைத்துநெஞ்சம் கவரவோடும் வாகுகாணீர் மாந்தரே
தோளைமேவி மேற்புறத்தில் துவளும்பூங் குழல்களே
தொடர்ந்துபட படவெனத் துகிலினோடே ஆடுதே
கானைநெஞ்சம் கவருகின்ற மாயமானைப் போலவே
கடிதினேடும் கன்னியிவள் களிநடையும் காண்பிரே!

நீரபாலா: புலவர் பெருமானே! போதும்! போதும்! உமது கவிதையில் தற்காலத்துக் கவிகளின் நடை ஆங்காங்கு காணப்படுவதன் காரணம் என்ன!

அக்ஷயகுமாரர்: அதற்குக் காரணம் நானும் ஒரு தற்காலத்துக் கவி என்பது தான். உன் அத்திம்பேர் கிருத்திவாஸ ஓஜாவின்[1] இரட்டைச் சகோதரர் என்று உன் எண்ணமோ? பூகோள சாத்திரம் படித்து மைல் கணக்குப் போட்டு விடுகிருய். சரித்திரப் பாடம் மறந்து போய் விடுகிறது. ஆகையால் உன்னைப் போன்ற ஒரு படித்த மைத்துனி இருந்து எனக்கு என்ன பயன்? முற்றிலும் தற்காலத்தவனுகிய ஒரு புதுமைக் கவியைப் பழங் காலத்துப் புலவன் என்று எண்ணி மயங்குகிருயே!

1. கிருத்திவாஸ ஓஜா என்னும் வங்கக் கவி பதினைந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர். இவர் வங்காளியில் எழுதிய இராமாயணம் பிரசித்திபெற்றது.

நீரபாலா: அத்திம்பேரே! பரமசிவன் கலியாணப் பந்தலில் பிரவேசித்த பொழுது அவருடைய மைத்துனிகள் அவரைப் பார்த்துப் பிரமித்துப் போனார்களாம். ஆனால் பார்வதியின் கண்களுக்கு அவர் வேறு விதமாகக் காட்சியளித்தார். புரபாலா அக்கா உங்களை ஒரு தற்காலத்து மனிதனாகக் கருதியிருக்கிறாள் என்று உமது எண்ணமோ?[1]

அக்ஷயகுமாரர்: போடி அசடே! பரமசிவனுக்கு மைத்துனிகள் இருந்திருந்தால் அவருடைய தவத்தைக் குலைப்பதற்காக மன்மதன் சென்றிருக்கவேண்டிய அவசியமே இருந்திராதே! என்னுடன் சிவனை ஒப்பிடுவதா?

நிருபபாலா: போகட்டும், அத்திம்பேரே! இவ்வளவு நேரமாக இங்கு உட்கார்ந்து என்ன செய்துகொண்டிருந்தீர்கள்?

அக்ஷயகுமாரர்: உங்கள் வீட்டுப் பால் கணக்கு எழுதிக்கொண்டிருந்தேன்.

நீரபாலா: (மேஜையின் மீதிருந்த பாதி எழுதப்பட்ட ஒரு கடிதத்தை எடுத்து) இதுதான் பால் கணக்கா? கணக்கின் நடுவில் பாலும் வெண்ணெயும் அதிகமாகக் காணப்படுகிறதே!

அக்ஷயகுமாரர்: (கெடுபிடியாக) இந்தா! அதை வைத்துக் கொண்டு ரகளை பண்ணாதே. இப்படிக் கொடு அதை.

நிருபபாலா: நீரு! அத்திம்பேரை உபத்திரவம் செய்யாதே. கடிதத்தைத் திருப்பிக் கொடுத்துவிடு; மைத்துனிகளுக்கு அதில் இடமில்லை. ஆனால் அத்திம்பேரே! நீங்கள் கடிதத்தில் அக்காவை என்னவென்று அழைத்திருக்கிறீர்கள்?

அக்ஷயகுமாரர்: தினம் ஒரு புது விதமாக அழைப்பேன்.

நிருபபாலா: இன்றையக் கடிதத்தில் என்னவென்று அழைத்திருக்கிறீர்கள்?

அக்ஷயகுமாரர்: கேட்கிறாயா! சஞ்சல சகித சித்த சகோர சௌர சஞ்சு சும்பித சாரு சந்த்ரிக ருசி ருசிர சிர சந்த்ரமா! (நிலையற்ற, பயந்த, உள்ளத்தையுடைய சகோரப் பறவையின் அலகினால் முத்திடப் பட்ட அழகிய வெண்ணிலவே! ருசிக்கினிய அமர நிலவொளியே!)

---

1. பரமசிவன் பார்வதியை மணம் புரிய வந்த பொழுது பார்வதியின் தோழிமார்கள் அவர் யானைத் தோலை அணிந்திருப்பதையும், சாம்பலைப் பூசி யிருப்பதையும் பிச்சை ஓட்டைக் கையில் ஏந்தி யிருப்பதையும் பற்றிப் பரிகசித்துப் பார்வதி தேவியைக் கேலி செய்ததாகச் சில கவிகள் வர்ணித்துள்ளார்கள்.

நீரபாலா: சமத்கார சாடு சாதுர்யம்! (புத்திசாலித்தனம் நிறைந்த அழகிய சாதுரியம்)

அக்ஷயகுமாரர்: சாதுரியமுமில்லை, ஒன்றுமில்லை. இதெல்லாம் வெறும் உருப்போட்ட வாக்கியங்கள்.

நிருபாலா: (வியப்புடன்) அத்திம்பேரே! நீங்கள் தினமும் இவ்வளவு நீண்ட பெயர்களைக் கவனம் செய்தா அக்காவை அழைக்கிறீர்கள்! அதனால்தான் நீங்கள் அக்காவுக்குக் கடிதம் எழுத வெகுநேரம் பிடிக்கிறது.

அக்ஷயகுமாரர்: இதனால்தான் நிருபபாலாவினிடம் என் ஜம்பம் பலிப்பதில்லை. பகவான் எனக்கு அப்போதைக்கப் போது ஆசுகவி இயற்றும் சக்தியை அளித்திருக்கிறார். ஆயினும் அதை உபயோகிக்கவிட மாட்டோம் என்கிறீர்களே? அத்திம்பேர் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையையும் வேத வாக்கியமாக நம்பவேண்டும் என்று மனு சாத்திரத்தில் எழுதியிருக்கிறதோ?

நீரபாலா: கோபம் வேண்டாம். அத்திம்பேரே! சாந்தமாக இரும். சின்னக்காவின் பேச்சை விட்டுவிடுங்கள். நான் உங்களுடைய வார்த்தையின் பாதியைக் காலணாவின் நாலில் ஒரு பங்கிற்குக்கூட நம்பவில்லை. இது உமக்குத் திருப்திதானே?

நிருபபாலா: நல்லது அத்திம்பேரே! உண்மையைச் சொல்லுங்கள். அக்காவின் மீது நீங்கள் இதுவரை எத்தனைக் கவிகள் இயற்றியிருக்கிறீர்கள்?

அக்ஷயகுமாரர்: முன்னொரு முறை உன் அக்கா என்மீது மிகவும் கோபித்துக்கொண்டாள். உடனே அவளைத் துதித்து ஒரு கவிதை இயற்றிப் பாடிக் காண்பித்தேன்.

நிருபபாலா: பிறகு?

அக்ஷயகுமாரர்: அப்புறம் பார்த்தால்...அது நேர்மாறான பயனைக் கொடுத்தது. காற்று வீசியதால் சிறு நெருப்பு பெருந்தீயாக மூண்டது போலாயிற்று. அதிலிருந்து துதிப் பாடல்கள் இயற்றுவதை அடியோடு நிறுத்திவிட்டேன்.

நிருபபாலா: நிறுத்திவிட்டுப் பால் கணக்கு எழுதுகிறீர்களாக்கும்! அக்கா மீது நீங்கள் இயற்றிய பாடலை ஒருமுறை பாடிக் காண்பியுங்கள்! கேட்கிறோம்.

அக்ஷயகுமாரர்: பயமாயிருக்கிறது. கடைசியில் என்னுடைய மேலதிகாரிகளுக்கு ரிபோர்ட் எழுதிவிடுவாய்.

நிருபபாலா: இல்லை. எங்கள் அக்காவிடம்கூடச் சொல்ல மாட்டோம்.

அக்ஷயகுமாரர்: அப்படியானால் கேளுங்கள்:

[பாடுகிறார்]

அகமெனுங் கோயிலில் உளமுடன் எழுந்தருள்
அழகியே! ஆடு கின்ற
அந்துகிற் போலவே ஆடுபூங் கொம்பே
அரிய மின்கொடி! ஊடலில்
முகமெனும் வெண்மதி சிவப்புறு சுந்தரி!
முகிழ்த்திடு நகையின் மாயம்
மூடிய அதரம் கோடிடக் கோலம்
கொள்ளும் வதனீ நாணம்
புகமலர் மேனி எழில்நலங் குழையும்
பொன்மான் விழி! மின் இளையோய்!
மயல்செய் மதுர வாணீ! வளியால்
மகிழ்நவ மல்லிகை கொய்வோய்!
நகைசெய் முத்தம் நல்கா தேநனி
நாடிக் கரக்கும் வஞ்சீ
நவையிற் செந்தேன் நாறுங் கனக
நன் கமலத் துறை வோளே!

அவ்வளவுதான். ஸ்ரீமதிகள் இருவரும் இனிப் புறப் படலாம்.

நீரபாலா: ஏன் இப்படி அவமானம் செய்கிறீர்கள்? அக்காவிடம் குட்டு வாங்கிவிட்டு எங்கள் மீது சீறி விழுகிறீர்களோ?

அக்ஷயகுமாரர்: இதேதடா வம்பு! இவர்களுக்கு அச்சம், மடம், நாணம் முதலிய குணங்கள் ஒன்றுமே கிடையாது போலிருக்கிறதே. ஏ அடங்காப்பிடாரிகளே! இப்பொழுது இங்கு அன்னியர்கள் வரப்போகிறார்கள்.

நீரபாலா: அப்படி யென்றால் அக்காவிற்கு எழுதும் கடிதத்தை நீங்கள் முடிக்க விரும்புகிறீர்கள் என்றுதானே அர்த்தம்? நாங்கள் இங்கேயே இருக்கிறோம். நீங்கள் கடிதத்தை முடிக்கவேண்டாம். உங்கள் பேனாவின் வாயிலிருந்து நாங்கள் வார்த்தைகளை வாங்க முடியாதென்று நினைக் கிறீர்களா?

அக்ஷயகுமாரர்: நீங்கள் அருகில் இருந்தால் என் மனம் கேயே தங்கிவிடும். தூரத்தில் உள்ள உன் அக்கா கும் இடம் வரையில் போய்ச் சேராது. விளையாட்டல்ல. இங்கிருந்து ஓடிவிடுங்கள். இப்பொழுதே சிலர் வரப் போகிறார்கள். அதோ அந்த ஒரு கதவுதான் திறந்திருக் கிறது. பிறகு ஓடுவதற்கு வழி கிடைக்காது?

நிருபபாலா: இந்த மாலை வேளையில் உங்களை நாடி யார் வரப் போகிறார்கள்?

அக்ஷயகுமாரர்: நீ யாரைப் பற்றிக் கனவு காண்கிருயோ அவர்களல்ல, பெண்ணே. அவர்களல்ல.

நீரபாலா: யாரைப் பற்றிக் கனவு காண்கிருேமோ அவர்கள் சமயத்தில் வரமாட்டார்கள். அக்கா காசிக்குப் போன பிறகு இதை நீங்களே நன்ருகப் புரிந்துகொண்டிருப்பீர்கள். மேலும் ஒரு பெரிய தேவதையைக் குறித்துக் கனவு கண்டால், சில்லரை தேவதைகள் வந்து உபத்திரவம் செய்யும்.

[பாடுகிருள்]

சிந்தையில் எழுந்திடு செல்வமே - இன்பச்
சோகச் சுழலிடை ஆடுவாய்
வந்தெங்கும் மகிழம்பூ மொட்டிடும்-நல்ல
வசந்த காலமும் வந்ததே
தாவிப் படர்கொடி வீட்டினுள் - மதி
தண்ணொளி வீசிச் சிரிக்குமே
ஓவுதல் இன்றிவிண் மீனெலாம் - மிக
உன்னையும் தேடி அலுத்தன:
கள்ளமிலா என்றன் உள்ளத்தே - நல்ல
காட்சிகள் ஒவ்வொன்ருய்க் கூட்டியே
நள்ளிர வில்வருங் கனவுபோல் - உடன்
நங்கை மறைந்துநீ போனதேன்?

அக்ஷயகுமாரர்: எங்கிருந்து பிடித்தாய் இப்பாட்டை?

நீரபாலா: உங்களுடைய கடிதத்தில் இருந்துதான்!

அக்ஷயகுமாரர்: கடைசியில் அதை என் மார்பிலேயே பாய்ச்சி விட்டாயே! சரி பாட்டை முடித்துவிடு.

நீரபாலா: (பாடுகிருள்)

கஞ்ச மலர்விழியில் கண்ணீர் - மிகக்
கலங்கி மல்கநீ செய்தே
நெஞ்சை வருத்துவ தேனோ - இதன்
நேர்மையும் என்னென்று காணேன்
மாலை மணத்தை உணர்குவென் - ஏனோ
மாலையைக் கண்டில கண்களே
காலடி கேட்குது நெஞ்சமே - ஆயின்
காதலன் போந்தது கண்டிலேன்
மாலையும் சென்றது அந்தோ - நறு
மாமலர் வாடிய திங்கே
சீலத் தலைவன் இல்லாமையால் - என்
சீர்உலகும் பாழ் ஆயதே.

திரைக்குப்பின் இருந்து குரல்: அபலா காந்தர் இருக்கிருரா?

[ஸ்ரீசர் திடீரென்று பிரவேசிக்கிறார். "மன்னிக்க வேண்டும்" என்று கூறிப் புறப்பட முயற்சிக்கிறார். நிருபபாலாவும் நீரபாலாவும் வேகமாக ஓடி மறைகின்றனர்]

அக்ஷயகுமாரர்: வாருங்கள், ஸ்ரீசரே, வாருங்கள்.

ஸ்ரீசர்: (சற்று வெட்கத்துடன்) மன்னிக்க வேண்டும்.

அக்ஷயகுமாரர்: சரி மன்னித்து விடுகிறேன். ஆனால் நீர் புரிந்த குற்றம் என்ன? அதை முதலில் கூறும்.

ஸ்ரீசர்: முன்பின் சொல்லாமல் நான் திடீரென்று—

அக்ஷயகுமாரர்: நீங்கள் வருவதற்கு முன் முனிசிபாலிடியிடமிருந்து அநுமதி பெற்றுவர வேண்டிய அவசியம் இல்லை. ஸ்ரீசரே! ஆகவே நீர் திடீரென்று வந்ததில் தப்பு ஒன்றுமில்லை.

ஸ்ரீசர்: நீங்கள் எது சொன்னாலும் நான் சமயம் அறியாமல் உத்தரவில்லாமல் நுழைந்தது தவறுதான்.

அக்ஷயகுமாரர்: அதைத்தான் சொன்னேன். நீர் எப்பொழுது வந்தாலும் அதுவே நல்ல தருணம். உள்ளே காலடி எடுத்து வைத்துவிட்டால் அநுமதி கிடைத்தது போலவே தான். ஸ்ரீசரே! உமக்கு பிரம்மதேவன் எங்கு வேண்டுமானாலும் செல்வதற்கு ஒரு "பாஸ்போர்ட்" (அநுமதிச் சீட்டு) கொடுத்திருக்கிறான். ஒரு நிமிஷம் உட்காரும். இதோ அபலாகாந்தரை அனுப்புகிறேன். (தனக்குள்) இப்பொழுது தப்பித்துக் கொண்டு போகாவிடில் கடிதத்தை ஒரு பொழுதும் முடிக்க முடியாது.

[போகிறார்]

ஸ்ரீசர்: கண்களுக்கு எதிரிலேயே ஒரு ஜோடி மாயப் பொன் மான்கள் ஓடி மறைந்தன! ஏ நிராயுதபாணியான வேட்டைக்காரனே! உனக்குச் சற்றும் வலிமை இல்லை. உரை கல்லின் மீது பொன்னின் கோடுகள் விழுவது போல அவர்களுடைய மருண்ட கண்கள் என் பார்வைக்கு எதிரில் தங்கக் கோடுகளை வரைந்து கொண்டே சென்று விட்டன.

[ரசிகர் வருகிறார்]

ஸ்ரீசர்: சாயங்கால வேளையில் வந்து உங்களுக்குத் தொந்தரவு கொடுக்கிறேன், ரசிகரே!

ரசிகர்: "பிக்ஷு கக்ஷே விநிக்ஷிப்த:
கிமிக்ஷுர் நீரஸோ பவேத்?"

பிச்சைக்காரன் கையில் இருப்பதால் கரும்பு ரசமற்றதாகப் போய்விடுமோ? உங்களைக் காண்பது தொந்தரவு

என்று நினைக்குமாறு நான் என்ன அத்தகைய அபாக்கிய சாலியா?

ஸ்ரீசர்: அபலாகாந்தர் வீட்டில்தானே இருக்கிறார்?

ரசிகர்: இருக்கிறார். 'இதோ வருகிறேன்' என்றார்.

ஸ்ரீசர்: இல்லையில்லை, ஏதாவது வேலையாக இருந்தால் அவரைத் தொந்தரவு செய்யவேண்டாம். நான் ஒரு சோம்பேறி. என்னைப் போல் இருப்பவர்களைத் தேடிக் கொண்டு திரிகிறேன்.

ரசிகர்: உலகத்தில் சிறந்த மனிதர்கள் அனைவரும் சோம்பேறிகளே. என்னைக் கேட்டீர்களானால், வேலையற்றவர்களே சுகபுருஷர்கள். இவ்விரு வகுப்பினரும் சேருவது பொன்னும் மணியும் சேரும் சேர்க்கை போல. சோம்பேறிகள் சேருவதற்காகவே மாலை வேளை சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. யோகிகளுக்காக விடியற்காலை. நோயாளிகளுக்காக இரவு. உத்தியோகம் செய்பவர்களுக்காகப் பகல் பத்துமணி முதல் நான்கு மணிவரை; பிரம்மசாரிகள் சங்கத்தின் கூட்டங்களுக்காக மாலை வேளை. இவ்வாறு பிரம்மதேவன் பொழுதைச் சிருஷ்டி செய்திருக்கிறார். என்ன சொல்லுகிறீர், ஸ்ரீசரே!

ஸ்ரீசர்: நீர் சொல்லுவதை ஒருவிதத்தில் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். ஆனால் பிரம்மசாரிகள் சங்கம் ஏற்படுவதற்கு வெகு காலம் முன்பே மாலை வேளை சிருஷ்டியாகி விட்டது. அது நமது சங்கத் தலைவரான சந்திரபாபுவின் உத்தரவுகளைப் பொருட்படுத்துவதில்லை.

ரசிகர்: அது பொருட்படுத்தும் சந்திரனின் வழியே வேறு; உங்களிடம் வெளிப்படையாகச் சொல்கிறேன். ஸ்ரீசரே, சிரிக்கவேண்டாம். எங்களுடைய மாடியில்லா வீட்டில் ஒரு ஜன்னலின் வழியாக எப்பொழுதோ ஒருமுறை நிலவொளி உள்ளே வரும். நிர்மலமான ஆகாயத்தில் இருந்து வீசும் அவ் வெண்ணிலவின் ரேகை என் மார்பின் மீது விழும் பொழுது யாரோ ஒருவருடைய அழைப்பு என்னை வந்தடைந்ததாகவே தோன்றும். வெண்ணிறங் கொண்ட ஓர் அன்னப் பறவை விரகதாபத்தால் வாடும் ஒரு மடந்தையிடமிருந்து வந்து, பிரிவாற்றாமையினால் துன்புற்ற என் காதருகில் ரகசியமாக,

அலிந்தே காளிந்தீ கமல ஸுரபௌ குஞ்ஜ வஸதேர்
வஸந்தீம் வாஸந்தீ நவபரிமலோத்கார சிகுராம்!
த்வதுத் ஸங்கே லீநாம் மதமுகுலி தாக்ஷீம் புநரிமாம்
கதாஹம் ஸேவிஷ்யே கிஸலய கலாப வ்யஜநிநீம்

ஸ்ரீசர்: பலே! பலே! ரசிகரே! வெகு ரசமான சுலோகம்;

ஆனால் அதன் அர்த்தத்தை நீர்தான் சொல்லவேண்டும். விருத்தத்தின் அழகினால் பொருளின் வாசனை சற்று வீசுகிறது என்றாலும் எதுகை மோனைகள் எல்லாம் சேர்ந்து அதை அநுபவிக்க முடியாமல் செய்து விடு

ரசிகர்: அப்படியானால் அதை உமக்காக மொழிபெயர்க்கிறேன். அக்கம் பக்கத்திலுள்ள பத்திரிகாசிரியர்கள் யாருக்காவது இது தெரிந்து போனால் அபகரித்துக் கொண்டு போக முயற்சிப்பார்கள். அதற்காகவே அதை நான் ஒளித்து வைத்திருக்கிறேன். கேளும், ஸ்ரீசரே,

தண்டார் புனலால் தரணிக் கணிசெய்
தனிச்சீர் யமுனைக் கரைசேர் காவில்
வண்டார் கமலம் கமழ்கொடி மனையில்
வந்துன் மடியில் பையச் சயனம்
கொண்டே அணிசேர் குளிர்மல் லிகையால்
குழலின் நாறும் கொடியாள் தளிரின்
செண்டே வீசும் மயல்விழி மாதைக்
கண்டே மகிழ்வது என்றோ யானே!

ஸ்ரீசர்: பேஷ், பேஷ். ரசிகரே! உம்மிடம் இவ்வளவு சரக்கு இருப்பது எனக்கு இதுவரை தெரியாது.

ரசிகர்: எப்படித் தெரியும்? கவிதைத் தெய்வம் தன்னுடைய தாமரைக் காட்டிலிருந்து எப்பொழுதோ ஒருமுறை இந்த வழுக்கைத் தலையின் மீது காற்று வாங்க வருகிறாள். அதற்குச் சந்தேகமே இல்லை. (வழுக்கைத் தலையைத் தடவிக் கொண்டே) என் தலையைப் போன்ற திறந்த இடம் வேறு எங்கு அவளுக்குக் கிடைக்கப் போகிறது?

ஸ்ரீசர்: ஆஹா, ரசிகரே! யமுனைக் கரையில் அக்குளிர்ந்த முற்றத்தையுடைய கொடி வீட்டில் என் மனம் லயித்து விட்டது. அத்தகைய இடம் கடனில் முழுகிப் போய் ஏலத்திற்கு வருவதாகப், ''பயனியர்'' தினசரியில் விளம்பரம் வந்தால் உடனே அதை வாங்கிப் போட்டு விடுகிறேன்.

ரசிகர்: என்ன பிரயோஜனம், ஸ்ரீசரே! வெறும் கொடி வீட்டை மாத்திரம் வைத்துக்கொண்டு என்ன செய்வீர்? சுலோகத்தில் கூறப்படும் ''செண்டு வீசும் மயல் விழிக்'' காதலியை நினைத்துப்பாரும். அவளையும் ஏலத்தில் விலைக்கு வாங்கிவிட முடியுமா?

ஸ்ரீசர்: இதோ கிடக்கிறதே இது யாருடைய கைக்குட்டை?

ரசிகர்: எங்கே காண்பியுங்கள்? ஆஹா? அதேதான்! கிடைக்

காத பொருள் உமது கையில் கிடைத்துவிட்டதே. ஆஹா! என்ன வாசனை! ஸ்ரீசரே! யாப்பிலக்கண விதிகளை மீறினாலும் நான் சொன்ன சுலோகத்தின் ஒரு வரியை மாற்றியாகவேண்டும். ''வாஸந்தி நவ பரிமலோத்கார ருமாலாம்''[1] புதுமணத்தை உடைய கைக்குட்டையை உடையவள் என்று. அன்பரே, இக்கைக்குட்டையையே நமது பிரம்மசாரிகள் சங்கத்தின் கொடியாக வைத்துக் கொண்டால் என்ன? பார்த்தீர்களா! கைக்குட்டையின் மூலையில் ஒரு சிறிய 'ந' எழுத்து காணப்படுகிறது.

ஸ்ரீசர்: என்ன பெயராக இருக்கும் என்று சொல்லும் பார்ப்போம். நளினி? அல்ல. அது மிகச் சாதாரணமான பெயர். நீலாம்புஜா? சே, மிகவும் பயங்கரமான பெயர். நீஹாரிகா? மிகவும் நீண்ட பெயர். உமது மனத்திற்கு என்ன தோன்றுகிறது, ரசிகரே?

ரசிகர்: பெயர் மனத்திற்குத் தோன்றவில்லை. ஸ்ரீசரே! ஆனால் பாவம் தெரிகிறது. அகராதியில் எத்தனை 'ந' இருக்கின்றனவோ அவற்றை எல்லாம் சேகரித்து ஒரு 'நகார' மாலையாகக் கட்டி நீலோத்பல மலர்களைப் போன்ற கண்களையுடைய ஓர் அழகியின் கழுத்தில் போட்டுவிடவேண்டுமென்று ஆசை உண்டாகிறது.

'நிர்மல நவநீ நிந்தித நவீந'

ஸ்ரீசரே, வரியை முடித்துவிடுமே!

ஸ்ரீசர்: நவமல்லிகா!

ரசிகர்: பேஷ்! பேஷ்! பேஷ்! ''நிர்மல நவநீ நிந்தித நவீந நவமல்லிகா.'' கீத கோவிந்தம்[2] தோற்றது. 'ந' எழுத்தில் ஆரம்பிக்கும் அநேக வார்த்தைகள் ஒன்றோடொன்று போட்டி போட்டுக் கொண்டு என் மூளையில் கிளைக்கின்றன. அவற்றை வரிசையாகக் கூற இயலவில்லை.

நிப்ருத நிகுஞ்ஜ நிலய
நிபுண நூபுர நிக்கண
நிபிட நீரத நிர்முக்த''

அக்ஷயர் இருந்தால் நாம் யோசிக்கவேண்டிய அவசியமே இருக்காது. ஆசிரியரைப் பார்த்தவுடன் பிள்ளைகள்

---

1. வங்காளி மொழியில் ருமால் என்றால் கைக்குட்டை என்று பொருள்.

2. இது ஜயதேவ கவி இயற்றிய வெகு லலிதமான ஒரு காவியம். அஷ்டபதி என்று அழைக்கப்படும் இதிலுள்ள பாடல்களின் சந்தம், எதுகை, மோனை முதலிய யாப்பணிகள் வடமொழியில் மிகப் பிரசித்தி பெற்றவை.

எப்படித் தங்கள் தங்கள் இடத்தில் போய் பெஞ்சுகளின் மீது உட்கார்ந்து விடுவார்களோ, அவ்விதமே அக்ஷய ரைக் கண்டவுடன் இந்த வார்த்தைகள் ஓடிவந்து வரிசை யாக நிற்கும். ஸ்ரீசரே! இக்கிழவனை ஏமாற்றிவிட்டுக் கைக்குட்டையை மெதுவாக ஜேபியில் போட்டுக் கொண்டு விடாதீர்!

ஸ்ரீசர்: கண்டுபிடித்தவருக்கே ஒரு பொருளின்மீது முதல் உரிமை.

ரசிகர்: எனக்கு அந்தக் கைக்குட்டையினுல் ஒரு காரியம் ஆக வேண்டி இருக்கிறது.ஸ்ரீசரே! அயல் மனிதர்களேயில்லாத என் வீட்டில் இருக்கும் ஒரே ஜன்னல் வழியாக நிலவு உள் நுழையும் என்று முன்னமேயே சொல்லியிருக்கிறே னல்லவா? எனக்கு ஒரு கவிதை நினைவுக்கு வருகிறது.

வீதீஷு வீதீஷு விலாஸிநீநாம்
முகானி ஸம்வீக்ஷ்ய சுசிஸ்மிதாநி
ஜாலேஷு ஜாலேஷு கரம் ப்ரஸார்ய
லாவண்ய பிக்ஷாமடதீவ சந்த்ர:

மங்கையர் பங்கய வதனம் பூக்கும்
மாண்மிகு முறுவல் மதியுங் கண்டே
செங்கை நிலவொளி சாளரம் போக்கிச்
சீர்அழகு இரக்கும் சிறப்பைக் காணுய்.

அபாக்கியசாலியாகிய ஒரு யாசகன் என்னுடைய ஜன் னல் அருகில் வந்தால் நான் எதைக் கொடுத்து அனுப்பு வது, சொல்லும்? கவிதைகளுள் சுவை மிகுந்த பாகங் கள் சில நினைவிற்கு வந்தால் அவற்றைப் பாடுவேன். ஆனுல் வெறும் வார்த்தைகளைப் பேசி அனுப்ப முடி யுமோ? அந்தத் துர்ப்பாக்கிய சமயத்தில் இக்கைக் குட்டை மிகவும் உதவி புரியும். அழகின் பல அம்சங்கள் அதற்குள் அடங்கியிருக்கின்றன, ஸ்ரீசரே!

ஸ்ரீசர்: அவ்வழகை நீங்கள் எப்பொழுதாவது கண்டதுண்டோ, ரசிகரே?

ரசிகர்: கண்டது உண்டு. இல்லாவிடில் ஒரு கைக்குட்டைக்காக இவ்வளவு சண்டை போடுவேனே? மேலும் அந்த 'ந' என்னும் எழுத்து என் மூளையில் ஒரு வண்டைப்போல் ரீங்காரம் செய்கிறதல்லவா? அவ்வெழுத்துக்குப் பின்னுல் தாமரைப் பொய்கையில் விளையாடும் ஒரு பெண் தெய் வம் இல்லை என்று நினைக்கிறீரா?

ஸ்ரீசர்: ஓய் ரசிகரே! உமது மூளையே ஒரு தேன் அடை. அதில் இருந்து கவிதையாகிய மது பெருகிறது. அம்மதுவைப் பரு கிப் பருகி நான் வண்டைப்போல் மயங்குகிறேன் போம்.

[பெருமூச்சு விடுகிறார்]

[ஆண் வேஷத்துடன் சைலபாலா பிரவேசிக்கிறாள்]

சைலபாலா: நான் மிகவும் நேரங்கழித்து வந்ததற்கு மன்னிக்க வேண்டும் ஸ்ரீசரே!

ஸ்ரீசர்: அபலா காந்தரே! நான் வந்து உங்கள் மாலைப் பொழுதை வீணுக்குவதற்காக என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்.

சைலபாலா: தினமும் இவ்விதமே வந்து என் மாலைப்பொழுதை வீணுக்குவதாக வாக்களித்தால் உங்களை மன்னிப்பேன். இல்லாவிடில் மாட்டேன்.

ஸ்ரீசர்: எனக்குச் சம்மதம்தான். ஆனால் அப்புறம் நீங்கள் பச்சாதாபப்பட்டால் இந்தப் பிரதிக்ஞையை நினைவு படுத்திக் கொள்ளவேண்டும்.

சைலபாலா: என்னைப்பற்றிக் கவலையில்லை. பிறகு உங்களுக்குப் பச்சாத்தாபம் உண்டானால் நமது ஒப்பந்தத்தில் இருந்து உங்களை விடுவித்து விடுகிறேன்.

ஸ்ரீசர்: அந்த நிலைமை ஏற்படுவதற்கு நீங்கள் முடிவில்லாமல் காத்திருக்க நேரிடும்.

சைலபாலா: ரசிகரே! நீங்கள் ஏன் ஸ்ரீசரின் சட்டைப் பையின் பக்கமாகக் கையை அடிக்கடி நீட்டுகிறீர்? கிழ வயசில் பாக்கெட் திருடும் தொழிலை ஆரம்பிக்கிறீரோ?

ரசிகர்: இல்லை, இல்லை, அத்தொழில் உம் வயதிற்குத் தான் பொருந்தும். ஒரு கைக்குட்டைக்காக எனக்கும் ஸ்ரீசருக்கும் விவாதம் நடந்து வருகிறது. நீர்தான் அதைத் தீர்த்து வைக்கவேண்டும்.

சைலபாலா: அது என்ன விவாதம்?

ரசிகர்: காதல் வியாபாரத்தில் பெரிய அளவில் கொடுக்கல் வாங்கல் செய்ய என்னிடம் மூலதனம் கிடையாது. நான் ஒரு சில்லரை வியாபாரி. கைக்குட்டைகள், கூந்தல் கட்டும் ரிப்பன், கிழிக்கப்பட்ட கடிதத்துண்டில் எழுதப் பட்ட சில வார்த்தைகள் இவற்றை எல்லாம் சேகரிப் பதில்தான் எனக்கு இன்பம். ஸ்ரீசருக்கு இந்த விஷயத் தில் இருக்கும் மூலதனத்தைக் கொண்டு அவர் கடைத் தெருவையே மொத்த விலைக்கு வாங்கிவிடக்கூடும். கைக் குட்டை எதற்கு? ஒரு நீலப்புடைவையின் பாதியையே அவர் பெற்றுவிடக்கூடும்.[1] நம்மைப் போன்றவர்கள்

1. அவர் மணம் செய்து கொள்ளக்கூடும் என்று பொருள். வங்காளத்தில் விவாகத்தின்பொழுது கலியாணப் பெண்ணின் புடவையின் ஒரு பாதியை மடித்துப் போட்டு அதில் கணவனை உட்காரச் செய்வது வழக்கம்.

ஒரு ரிப்பனைக் கழுத்தில் சுற்றிக்கொண்டு இறக்க விரும்பினுல், அவர் கணுக்கால்வரை புரளும் கூந்தலின் நறுமணம் வீசும் அடர்த்தியில் புகுந்து மறைந்து போகக்கூடும். அவர் ஏன் சிறு பொருள்களை யாசிக்க முயலவேண்டும்?

ஸ்ரீசர்: அபலா காந்த பாபு! நீங்கள் பொது மனிதர். கைக்குட்டை இப்பொழுது உங்கள் கையில் இருக்கட்டும். இரு கட்சியினரின் வாக்குவாதங்களைக் கேட்ட பிறகு, முடிவில் அது யாருக்குச் சேர வேண்டியதோ அவரிடமே கொடுத்துவிடுங்கள்.

சைலபாலா: (கைக்குட்டையைப் பையில் அடைத்துக் கொண்டு) நீங்கள் என்னைப் பொது மனிதன் என்று நினைத்தீர்கள் போலும். ஆனுல் இக்கைக்குட்டையின் ஒரு மூலையில் 'ந' என்ற எழுத்துச் சிவப்பு நூலினுல் நெய்யப்பட்டிருப்பதைக் காண்கிறேன். என் இதயத்தின் ஒரு மூலையை நீங்கள் தேடிப்பார்த்தால் அங்கு அதே எழுத்து ரத்தத்தினுல் எழுதப்பட்டிருப்பதைக் காண்பீர்கள். நான் இந்தக் கைக்குட்டையை உங்கள் ஒருவரிடமும் கொடுக்கமாட்டேன்.

ஸ்ரீசர்: ரசிகரே! இதென்ன விபரீதம்! இந்த 'ந' எழுத்து மிகவும் பயங்கரமான எழுத்துப்போல் இருக்கிறதே!

ரசிகர்: மேல்நாட்டுச் சாத்திரப்படி நியாயத்திற்கும் கண் இல்லை. காதலுக்கும் கண் இல்லை. இப்பொழுது இரண்டிற்கும் சண்டை ஏற்பட்டால் எது அதிகக் குருடோ அதுவே வெற்றி பெறட்டும்.

சைலபாலா: ஸ்ரீசரே? இக்கைக்குட்டையின் சொந்தக்காரரை நீர் பார்த்ததில்லை. வீணுக மனத்தில் கற்பனை செய்து கொண்டு ஏன் சண்டை போடுகிறீர்.

ஸ்ரீசர்: பார்த்ததில்லை என்று யார் சொன்னுர்கள்?

சைலபாலா: பார்த்தீர்கள் என்று வைத்துக் கொண்டாலும் யாரைப் பார்த்தீர்கள்? இந்த வீட்டில் இரு 'ந' இருக்கிறுர்கள்.

ஸ்ரீசர்: இருவரையும் பார்த்துவிட்டேன். கைக்குட்டை யாருடையதாகவாவது இருந்தாலும் நான் என் உரிமையை இழக்கத் தயாராக இல்லை.

ரசிகர்: ஸ்ரீசரே! இக்கிழவனின் வார்த்தையைக் கேளும்! இதயமாகிற வானத்தில் இரு சந்திரர்களை உதிக்கச் செய்ய வேண்டாம். ''ஏகச் சந்த்ரஸ் தமோ ஹந்தி''. இருளை நீக்க ஒரு சந்திரன் போதும்.

[வேலைக்காரன் வருகிறுன்]

வேலைக்காரன்: (ஸ்ரீசரை நோக்கி சந்திரபாபுவிடமிருந்து

ஒரு கடிதத்துடன் ஒருவன் உங்களை வீட்டில் தேடி விட்டுக் கடைசியில் இங்கு வந்திருக்கிறான்.

ஸ்ரீசர்: (கடிதத்தைப் படித்து) சிறிது நேரம் காத்திருங்கள். சந்திரமாதவ பாபுவின் வீடு பக்கத்தில்தான் இருக்கிறது. சட்டென்று அவரைப் பார்த்துவிட்டுத் திரும்பி விடுகிறேன்.

சைலபாலா: ஒரேயடியாக மறந்துவிட மாட்டீர்களே!

ஸ்ரீசர்: இல்லை, அக்கைக்குட்டைதான் அடமானம். அதை விடுவித்துக்கொள்ளாமல் போவதில்லை.

[போகிறார்]

ரசிகர்: அம்மா, சைலா! பிரம்மசாரிகள் சங்கத்தின் அங்கத்தினர்கள் எவ்வளவு தூரம் உறுதியுள்ள பிரம்மசாரிகள் என்று கண்டு பிடித்து விட்டேன். இவர்களுடைய விரதத்தைக் குலைக்க மேனகை, ரம்பை, மன்மதன், வஸந்தன்[1] ஒருவரும் தேவை இல்லை. கிழவனாகிய இந்த ரசிகனே போதும்.

சைலபாலா: அது எனக்கும் நன்றாக விளங்குகிறது.

ரசிகர்: இதன் உண்மை என்ன தெரியுமா? தார்ஜீலிங்கில்[2] வசிப்பவர்கள் மலேரியா நோய் உள்ள பிரதேசத்தில் காலடிவைத்த வுடனேயே அந்த நோயால் பீடிக்கப் படுவார்கள். இவர்கள் இத்தனை நாட்களாகச் சந்திர பாபுவின் வீட்டில் நோய் அணுகாத சூழ்நிலையில் இருந்து வந்தார்கள். இந்த வீட்டில் அந்தத் தொத்து வியாதிக் கிருமிகள் நிரம்பி இருக்கின்றன அல்லவா? இங்குள்ள கைக்குட்டை, புத்தகங்கள், நாற்காலி, மேஜை முதலியவற்றைத் தொட்டவுடன் தொத்து வியாதி பற்றிக்கொண்டு விட்டது. ஸ்ரீசரும் அந்த நோய்க்கு ஆளாகிவிட்டார்.

சைபாலா: சிற்றப்பா! இக்கிருமி உனக்குப் பழகிப்போய் விட்டதா?

ரசிகர்: என் பேச்சை எடுக்காதே! என் கல்லீரல், குடல் முதலியவற்றுக்கு நேரவேண்டிய ஆபத்தெல்லாம் நேர்ந்தாகிவிட்டது.[3]

[நீரபாலா வ(

1. மன்மதனுடைய இணைபிரியாத் தோழன்.

2. இது இமயமலைத் தொடருக்கு அருகில் உள்ள ஒரு மலை வாசஸ்தலம்.

3. மலேரியா சுரத்தால் பீடிக்கப்பட்டவனுடைய கல்லீரல், குடல் முதலியவை பாதிக்கப்படும்.

நீரபாலா: *அக்கா! நாங்கள் பக்கத்து அறையிலேயேதான் இருந்தோம்.*

ரசிகர்: *வலைஞன் மீனுக்காக வலையை வீசி இங்கும் அங்கும் இழுக்கிருன். பருந்து திடீரென்று பாய்வதற்குக் காத்துக்கொண் டிருக்கிறது.*

நீரபாலா: *சின்னக்காவின் கைக்குட்டையை எடுத்து வைத்துக் கொண்டு ஸ்ரீசர் என்ன பாடு படுத்திவிட்டார்! சின்னக் காவிற்கு வெட்கத்திஞல் முகம் சிவந்து விட்டது. நான் ஒரு முட்டாள். மறந்துபோய்க் கூட ஒன்றையும் கீழே எறிவதில்லை. ஒரு டஜன் கைக்குட்டைகளைக் கொண்டு வந்து வீடு முழுவதிலும் எங்கு பார்த்தாலும் எறிந்து வைக்கிறேன்.*

சைலபாலா: *கையில் என்ன காகிதம் நீரு!*

நீரபாலா: *எனக்குப் பிடித்த பாட்டுக்களை எல்லாம் எழுதி வைத்திருக்கும் நோட்டு.*

ரசிகர்: *அப்படியா? உனக்கு எவ்விதமான வேதாந்தப் பாடல்கள் பிடிக்குமோ அவற்றிற்கு ஒரு மாதிரி கொடுக்க முடியுமா?*

நீரபாலா: *[பாடுகிருள்]*

சென்றது பகலே சென்றிடப் படகை
அக்கரை நின்றே அழைத்திட வில்லையே
சென்றது போக நின்றதை யோர்ந்து
முன்வருங் கணக்கை முடித்திடு வாயே

ரசிகர்: *இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். அப்புறம் போவ தற்குப் படகோட்டியை இதோ அழைக்கிறேன். யார் கொடுக்கவேண்டும், யார் வாங்கவேண்டும் என்பதை எல்லாம் கணக்குத் தீர்க்கும்பொழுது பார்த்துக்கொள்.*

நீரபாலா: *[பாடுகிருள்]*

காரிருள் கீறிக் கதிர்வர வில்லை
ஓருரை யாயினும் கூறுதல் செய்யாய்!
தீங்குழ லோசை தீயெனக் கொளுவ
ஏங்கித் துயரால் எதிர்வழி காண
மயங்குறு நெஞ்சம் அழுங்குதல் கண்டாய்!
நள்ளிர விதனில் வான்வெளி நோக்கி
நின்றிடு நினைவை நெஞ்சே அறியும்
என்மனத் துயரம் உன்னைஎன் வாயில்
முன்வரச் செயுமெனும் விழைவும் வீணே!

திரைக்குப்பின் குரல்: *அபலா காந்தர் இருக்கிருரா?*

*[விபினர் அறைக்குள் நுழைந்து வெட் கப்பட்டவர் போல் நின்று விடுகிறார்.*

நீரபாலா ஒன்றும் தோன்ருதவளாக நின்று பிறகு வேகமாக ஓடி மறைந்து விடுகிருள்.]

சைலபாலா: வாருங்கள் விபினரே!

விபினர்: உண்மையாகவே வரச் சொல்கிறீர்களா? நான் வருவதால் உங்களுக்கு நஷ்டம் ஒன்றும் இல்லையே?

ரசிகர்: முதலில் நஷ்டம் உண்டாஞல்தான் பிறகு லாபம் வரும். விபினரே, இது வியாபாரத்தின் ரகசியம். நஷ்டமாகும் பொருள் பிறகு இரு மடங்காகத் திரும்பி வரும். என்ன சொல்கிறீர், அபலாகாந்தரே!

சைலபாலா: ரசிகரின் ரசிகத்தன்மை நாளுக்கு நாள் இறுகி வருகிறது.

ரசிகர்: வெல்லப்பாகு இறுகிக் கற்கண்டாவதுபோல. என்ன விபினரே! ஆழ்ந்த சிந்தனையில் இருப்பதுபோல் காணப்படுகிறீரே!

விபினர்: நீங்கள் ஒன்றும் தப்பாக நினைத்துக்கொள்ளாதபடி என்ன சாக்குச் சொல்லி இங்கிருந்து தப்பித்துக்கொள்ளலாம் என்று யோசிக்கிறேன்.

சைலபாலா: ஒருவேளை நட்பு குறுக்கே நிற்கிறதோ?

விபினர்: அதஞல்தான் சாக்குச் சொல்ல அவசியம் ஏற்படவில்லை.

சைலபாலா: அப்படியாஞல் அந்த முயற்சியை நிறுத்திவிட்டுச் சவுகரியமாக உட்காருங்கள்.

ரசிகர்: முகத்தில் மகிழ்ச்சியை வரவழைத்துக் கொள்ளுங்கள் விபினரே! எங்கள் பேரில் பொருமை கொள்ளாதீர்; நான் கிழவன். இளைஞர்கள் என்மீது பொருமை கொள்வது தகாது. மேலும் சுந்தர வடிவத்தையுடைய அபலாகாந்த பாபுவை யாராவது பெண்கள் பார்த்தால் அவர் ஒரு புருஷர் என்றே எண்ணமாட்டார்கள். உங்களைக் கண்டவுடன் யாராவது ஓர் அழகிய பெண் பயந்த மான்குட்டியைப்போல் ஓடி மறைந்தாள் என்ருள் அவள் உங்களை ஒரு புருஷராக மதித்து மரியாதை செய்தாள் என்று எண்ணி சமாதானம் செய்து கொள்ளும். அபாக்கியசாலியாகிய ரசிகனே! உன்னைக் கண்டு பருவமங்கை ஒருத்தியும் ஓடமாட்டேன் என்கிருளே?

விபினர்: அபலா காந்தரே! ரசிகர் உங்களையும் அவர் கோஷ்டியில் சேர்த்து விடுகிருரே! அது எப்படி?

சைலபாலா: எனக்கு என்ன தெரியும், விபினரே! எனக்கு அபலா காந்தர் என்று வைக்கப்பட்டிருக்கும் பெயரே

சரியல்ல. என்னை இதுவரை ஒரு அபலையும் (பெண்ணும்) காந்தராக (கணவனாக) வரிக்கவில்லை.

விபினர்: நிராசைப் படவேண்டாம். அதற்கு இன்னும் நிறையக் காலம் இருக்கிறது.

சைலபாலா: அத்தகைய ஆசையோ, நோக்கமோ இருந்திருந்தால் நான் இந்த பிரம்மசாரிகள் சங்கத்தில் சேர்ந்திருக்கவே மாட்டேன்.

விபினர்: (தமக்குள்) இவனுடைய உள்ளத்தில் ஏதோ ஒரு கவலை இருப்பதுபோல் தோன்றுகிறது. இல்லாவிடில் இச்சிறு பிராயத்தில் இளமை வடியும் முகத்தில் சோகம் ததும்புவதற்குக் காரணம் இல்லை. இது என்ன புத்தகம்? பாட்டுக்கள் எழுதியுள்ள நோட்டு. பெயரும் காணப்படுகிறது. (படிக்கிறார்) நீரபாலா தேவி.

சைலபாலா: என்ன படிக்கிறீர்கள்?

விபினர்: எனக்கு அறிமுகம் இல்லாத ஒரு பெண்ணிற்குத் தவறு இழைத்து விட்டேன். அவளை நான் நேரில் சந்தித்து மன்னிப்புக் கேட்டுக்கொள்வதற்குச் சந்தர்ப்பம் கிடைக்குமோ? அல்லது அவளுடைய கைகளால் சிட்சை விதிக்கப்படும் நல்வாய்ப்புக் கிட்டுமோ தெரியாது. ஒன்று மாத்திரம் சொல்வேன். இக்கையெழுத்து முத்துப்போலவும் இதிலுள்ள பாட்டுக்கள் மாணிக்கங்களாகவும் இருக்கின்றன. ஆசையினால் நான் இதை ஒருவேளை திருடிக்கொண்டு போனால் கடவுள்தான் என்னை மன்னிக்கவேண்டும்.

சைலபாலா: கடவுள் மன்னித்தாலும் நான் மன்னிக்கமாட்டேன் விபினரே. அந்த நோட்டின்மீது எனக்கு ஏற்கனவேயே ஆசை உண்டாகிவிட்டது.

ரசிகர்: ஓகோ! நான் மாத்திரம் ஆசை, பாசம் முதலியவற்றை எல்லாம் துறந்த முனிவர்போலும். அடடா! கையெழுத்துப்போல் அருமையான பொருள் உண்டோ? உள்ளத்தில் இருக்கும் உணர்ச்சி உருவெடுத்து விரல்களின் வழியாக வெளியே வருவதே கையெழுத்து. எழுத்துக்களை ஒரு வினாடி நாம் மறந்தோமாயின் அவற்றிற்குப் பின் உள்ள இதயம் நமது கண்முன் வந்து நிற்கும். அபலா காந்தரே! இந்த நோட்டை விடாதீர்! நீரபாலாதேவி என்பவர் இரவு பகலாகப் பொழியும் ஓர் இன்ப அருவியாக இருக்கக்கூடும். அதை நீர் பிடித்து வைக்க முடியாது. அவ்வின்ப ஊற்றின் ஒரு சிறிதாவது இந்த நோட்டிலிருந்து கிடைக்கும். இது விலையற்ற பொக்கிஷம்; விபினரே! நீர் நீரபாலாவைப் பார்த்தது

கிடையாது. இந்த நோட்டை வைத்துக்கொண்டு என்ன செய்வீர்?

விபினர்: உங்களுக்குத்தான் அவளை நேரிலேயே தெரியுமே! நோட்டினுல் என்ன பிரயோஜனம்? இந்த நோட்டின் மூலம் நான் அவளுடைய அறிமுகம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தால் அதை நீங்கள் ஏன் தடுக்கிறீர்கள்?

[ஸ்ரீசர் வருகிருர்]

ஸ்ரீசர்: இதோ பாருங்கள், அன்ெருரு நாள் நான் இங்கு ஒரு புத்தகத்தில் நீரபாலா, நிருபபாலா என்ற பெயர் களைப் பார்த்தேனே? (திடீரென்று விபினரைப் பார்த்து) ஹல்லோ! என்ன எதிர்பாராத சந்திப்பு!

விபினர்: இதே கேள்வியை நான் உன்னைத் திருப்பிக் கேட்க விரும்புகிறேன்.

ஸ்ரீசர்: நாம் விவாதித்த சந்நியாசி சம்பிரதாயத்தைப்பற்றி அபலாகாந்தருடன் சர்ச்சை செய்ய நான் இங்கு வந்தேன். இவருடைய தோற்றம், குரல், முகத்தின் அமைப்பு இவையெல்லாம் நான் விவரித்த நவீன சந்நியா சிக்குப் பொருத்தமானவை. இவர் தம் நெற்றியில் பிறைச் சந்திரனைப்போல் சந்தனப் பொட்டிட்டு, கழுத்தில் மாலையணிந்து, கையில் ஒரு வீணையையும் தாங்கி அதிகாலையில் ஒரு கிராமத்திற்குள் நுழைந்தா ராகில் எந்த கிருகஸ்தனின் மனதுதான் உருகாமல் போகும்?

ரசிகர்: மனங்களை உருகச் செய்வதற்கு என்ன அவசரம் என்று எனக்குப் புரியவில்லை.

ஸ்ரீசர்: பிரம்மசாரிகள் சங்கம் மனங்களை உருகச்செய்யும் ஒரு சங்கம்.

ரசிகர்: ஓகோ! அப்படியானுல் எங்களால் அதற்கு என்ன பிரயோசனம்?

ஸ்ரீசர்: உம்மிடம் இருக்கும் வெப்பத்தைக் கொண்டு நீர் வடதுருவத்திற்குப் போய் அங்குள்ள பனிக்கட்டி மலைகளை உருக்கி வெள்ளமெனப் பெருகச்செய்து திரும்பி விடலாம். விபினு! எழுந்திரு, போகலாம்.

விபினர்: போவோம். இரவு நான் சிறிது படிக்கவேண்டும்.

ரசிகர்: (தனிமையில்) படித்தான பிறகு அதை யோசிக்கலாம்.

சைலபாலா: (ஸ்ரீசரிடம் தனியாக) என்ன இங்கும் அங்கும் பார்க்கிறீர்கள்? ஏதாவது காணுமற் போய்விட்டதா?

ஸ்ரீசர்: (தாழ்ந்த குரலில்) இன்று வேண்டாம். மற்ெருரு நாள் வந்து தேடிப்பார்க்கிறேன்.

[ஸ்ரீசரும் விபினரும் போகிருர்கள்]

நீர பாலா: (வேகமாக ஓடிவந்து) இது என்ன கொள்ளை, அக்கா! என் பாட்டு நோட்டை எடுத்துக்கொண்டு போய்விட்டாரே! எனக்கு மிகவும் ஆத்திரம் வருகிறது.

ரசிகர்: ஆத்திரத்திற்கு அகராதியில் பல அர்த்தங்கள் உள்ளன.

நீரபாலா: சரி, பண்டிதரே! உமது அகராதியை வெளியே எடுக்கவேண்டாம். என் நோட்டைத் திரும்ப வரவழையுங்கள், போதும்.

ரசிகர்: போலீசாரிடம் ரிப்போர்ட் செய். திருடனைப் பிடிப்பது என் வேலையல்ல.

நீரபாலா: அக்கா! நீ எப்படி என் நோட்டை அவர் எடுத்துப் போகும்படி விட்டாய்?

சைலபாலா: அவ்வளவு விலையற்ற பொருளை நீ ஏன் இங்கு எறிந்துவிட்டுப் போனாய்?

நீரபாலா: நான் வேண்டுமென்று அதை இங்கு வைத்துவிட்டுச் சென்றேன்?

ரசிகர்: ஜனங்கள் அவ்விதம்தான் சந்தேகப்படுகிறார்கள்.

நீரபாலா: சிற்றப்பா! உமது விகடம் எனக்கு அடியோடு பிடிக்கவில்லை.

ரசிகர்: அப்படியானால் அது வருந்தத்தக்க விஷயம்.

[நீரபாலா கோபத்துடன் வெளியேறுகிறாள். நிருபபாலா வெட்கத்துடன் உள் நுழைகிறாள்.]

ரசிகர்: என்ன நிருபா! இழந்த பொருளைத் தேட வந்தாயோ?

நிருபபாலா: நான் ஒன்றையும் இழக்கவில்லை.

ரசிகர்: இது மிக நல்ல செய்தி சைலா! கைக்குட்டையின் சொந்தக்காரர் யார் என்று தெரியாததனால் அதைக் கண்டெடுத்தவரிடமே ஒப்படைத்து விடுவோம். (சைலபாலாவிடமிருந்து கைக்குட்டையை வாங்கி) இது யாருடையது அம்மா?

நிருபபாலா: என்னுடையதல்ல.

[என்று ஓட ஆரம்பித்தாள்]

ரசிகர்: (பிடித்து நிறுத்தி) இழக்கப்பட்ட பொருளின்மீது உரிமை பாராட்டக் கூடாதோ?

நிருபபாலா: விடுங்கள் சிற்றப்பா! எனக்கு வேலையிருக்கிறது.

## இரண்டாம் காட்சி

### கல்கத்தாவில் ஒரு வீதி[1]

*[ஸ்ரீசரும் விபினரும்]*

ஸ்ரீசர்: *விபின! தைமாதக் கடைசியில் வசந்த காலத்தின் ஆரம்பமாகிய இன்று தென்றல் வீசுகிறது. வெண்ணிலவோ வெகு அழகு. இன்று திறந்த வெளியில் படுத்துறங்காமல் வீட்டிற்குள் அடைபட்டுப் படித்தோமாகில் தேவதைகள் கூட நம்மைச் சாபமிடுவார்கள்.*

விபினர்: *அதைச் சகித்து விடலாம்; ஆனல் உடல் நலம் கெட்டுவிட்டால்—*

ஸ்ரீசர்: *இதோ பார்! இதற்கு எல்லாம்தான் உனக்கும் எனக்கும் சண்டை வந்துவிடுகிறது; உனக்குத் தென்றல் மிகவும் இஷ்டம் என்று எனக்குத் தெரியும். ஆனல் பிறகு உன்னை யாராவது கவி என்று பரிகாசம் செய்வார்களே என்று பயந்து நீ தென்றலை அடியோடு விலக்கி விடுகிறுய். இவ்வளவுதான உன் தைரியம்? நான் இன்று உன்னிடம் வெளிப்படையாகக் கூறுகிறேன். எனக்கு மலர்கள் மீது விருப்பம் உண்டு. நிலவு மிகவும் பிடிக்கும்.*

விபினர்: *அப்புறம்?*

ஸ்ரீசர்: *அப்புறம் என்ன? எவை எவை யெல்லாம் இனிய பொருள்களோ அவையெல்லாம் எனக்கு விருப்பமானவை.*

விபினர்: *பிரம்மதேவன் உன்னை ஓர் ஆச்சரியமான வார்ப்பில் வார்த்துப் படைத்திருக்கிறர்;*

ஸ்ரீசர்: *உன் படைப்பு அதைவிட விசித்திரமானது. உனக்குச் சில பொருள்கள் பிடிக்கின்றன. ஆனல் நீ பேசுவது வேறு விதம்—என் படுக்கை அறையின் கடிகாரத்தைப் போல; மணியைச் சரியாகக் காட்டும்; ஆனல் தப்பாக அடிக்கும்.*

விபினர்: *அது போகட்டும். உனக்கு எல்லா இன்பப் பொருள்களும் அவ்விதமே தோன்றினல் ஏதோ பெரிய ஆபத்துத்தான் வரப்போகிறது;*

ஸ்ரீசர்: *வரப்போவது ஆபத்து என்று எனக்குத் தோன்ற*

---

1. இது கல்கத்தா சர்வகலாசாலையின் செனேட் கட்டிடத்தருகில் உள்ள கோல்திகி என்றழைக்கப்படும் குளக்கரையில் உள்ள வீதி.

விபினர்: அதுதான் கேட்டிற்கு அறிகுறி. வலி மறைந்து போனால் பிறகு சிகிச்சை செய்வது கஷ்டம். நான் வெளிப்படையாகக் கூறுகிறேன். பெண்களுக்கு இயற்கையாகவே ஒரு வசீகர சக்தி உண்டு. பிரம்மசாரிகள் சங்கத்தினர் அதை விலக்க வேண்டுமானால் அவர்களிடமிருந்து தொலைவில் நிற்க வேண்டும்.

ஸ்ரீசர்: தவறு, தவறு. முற்றிலும் தவறு. நாம் தொலைவில் நின்றால் அவர்கள் நிற்கப்போகிறார்களா? உலகம் தொடர்ந்து நடப்பதற்காக ஏராளமான பெண்களைப் பிரம்மதேவன் படைத்தே தீரவேண்டி யிருக்கிறது. அவர்களை நாம் ஒதுக்கிவிட்டுச் செல்வது அசாத்தியம். ஆகவே பிரம்மசாரி விரதத்தை அநுஷ்டிக்க வேண்டுமாயின் பெண்களையும் சிறிது சிறிது சேர்த்துக்கொண்டு தான் செல்லவேண்டும். பெண்களை அங்கத்தினர்களாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தோம் அல்லவா? அதை நாம் எப்பொழுது அமுலுக்குக் கொண்டு வருகிறோமோ அன்று முதல்தான் நமது சங்கம் நிலைபெற்று நிற்கப்போகிறது. ஆனால் ஒரு பெண் அங்கத்தினரை மாத்திரம் சேர்த்துக் கொண்டால் போதாது. பலரைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். மூடிய வீட்டில் ஒரு ஜன்னலை மாத்திரம் திறந்து வைத்தால் குளிர் காற்றடித்தவுடன் ஜலதோஷம் பிடித்து விடும். எல்லா ஜன்னல்களையும் திறந்து வைத்துவிட்டால் ஆபத்தில்லை.

விபினர்: மூடிய வீடு, திறந்த ஜன்னல், இவை ஒன்றும் எனக்குப் புரியவில்லை. ஜலதோஷம் பிடிக்கும் இயல்புடைவர்களுக்கு அது பிடித்தால் யாராலும் குணமாக்க முடியாது.

ஸ்ரீசர்: உன் இயல்பு என்ன சொல்கிறது ஓய்?

விபினர்: அது வாயை விட்டுச் சொல்வதாக இருந்தால் உன் இயல்பையே அது பின்பற்றுகிறது என்பது தெரியவரும். பிரம்மசாரிகள் சங்கத்தின் கொள்கைகளை அவை இரண்டும் ஒழுங்காகப் பின்பற்றிச் செல்கின்றன என்று நாம் பெருமையுடன் கூறமுடியாது.

ஸ்ரீசர்: இது உன்னுடைய மற்றொரு தவறு. பிரம்மசாரி விரதத்தின் மீது நாற்பத்தொன்பது காற்றுகள் வீசட்டும்[1] ஒன்றும் பயமில்லை. இதை வலுவில் கட்டுப்படுத்தி வைக்காதே. நம்மைப்போல் கடினமான ஒரு விர

1. இது ஒரு வங்க மரபு. 'எத்தகைய ஆபத்துக்கள் வந்தாலும் வரட்டும்' என்பது பொருள்.

தத்தை மேற்கொண்டவர்களின் இதயத்தை அடக்கி வைக்க முடியுமா? அதை அசுவமேத யாகத்தின் குதிரையைப்போல் எதேச்சையாக விட்டுவிடு. அதைப் பிடித்துக் கட்டுபவர்களுடன் நாம் போரிடுவோம்.

விபினர்: யாரங்கே? பூரணரா? பாவம் அவருக்கு இச்சந்தை விட்டு வெளியே போவதற்கு அவகாசம் கிடைப்பதில்லை. இந்த வீர புருஷரின் அசுவமேத யாகக் குதிரை மிகவும் நொண்டி. அவரை உள்ளே கூப்பிடலாமா?

ஸ்ரீசர்: கூப்பிடு. ஆனால் அவர் நம்மைத் தேடிக்கொண்டு திரிவதாகத் தோன்றவில்லையே?

விபினர்: பூரணரே! என்ன செய்தி?

[பூரணர் வருகிறார்]

பூரணர்: மிகவும் பழைய செய்தியே. நேற்றைக்கு முந்திய தினம் என்ன செய்தியோ அதேதான் இன்றும்.

ஸ்ரீசர்: நேற்றைக்கு முந்தியநாள் குளிர்காற்று அடித்தது. இன்று சிறிது வசந்த காலத் தென்றல் வீசுகிறது. இம்மாதிரி ஓரிரண்டு புதிய செய்திகள் உண்டல்லவா?

பூரணர்: தென்றலைப் பற்றிய செய்திகளுக்கெல்லாம் பிரம்மசாரிகள் சங்கத்தின் செய்தித்தாளில் இடமில்லை. பரமசிவன் தவம்செய்த இடத்தில் ஒருநாள் அகாலத்தில் வசந்த காலத்தின் தென்றல் வீசியதன் காரணமாகக் காளிதாசனின் 'குமாரசம்பவ' காவியம் இயற்றப் பட்டது. இங்கு அவ்விதம் தென்றல் வீசினால் 'குமார அசம்பவ' காவியத்தில் தான் முடியும்.[1]

விபினர்: போனால் போகிறது, பூரணரே! காளிதாசன் எழுதிய காவியத்தில் பரமசிவனால் எரிக்கப்பட்ட காம வேளுக்கு நமது காவியத்தில் புத்துயிர் அளித்துவிட்டால் போகிறது.

பூரணர்: அல்ல. இக்காவியத்தில் பிரம்மசாரிகள் சங்கமே எரிந்துபோகும். எரிந்துபோன மன்மதன் உயிர் பெற்றெழுந்து நம்மை எரித்து விடுவான். நான் விளையாடவில்லை, ஸ்ரீசரே! நமது பிரம்மசாரிகள் சங்கம் ஓர் அரக்குமாளிகை. தீப்பற்றிக் கொண்டால் அப்புறம்

---

1. பரமசிவனின் தவத்தை மன்மதனும் வசந்தனும் குலைக்க, அக்கடவுள் பார்வதியின் மீது மோகித்து அவளைக் கைப்பிடித்ததன் மூலம் சுப்பிரமணியர் அவதரித்தார் என்பது காளிதாசன் இயற்றிய காவியத்தின் கதை. குமார என்றால் முருகன் என்றும் பிரம்மசாரி என்றும் பொருள். பிரம்மசாரிகள் சங்கத்தின் மீது தென்றல் வீசினால் பிரம்மசாரி விரதம் ஒழிந்துபோகும் என்று சிலேடையாகப் பூரணர் குறிப்பிடுகிறார்.

வழியே இல்லை. ஆகையால் விவாக மானவர்கள் சங்கம் ஒன்றை நிறுவிவிடும். அப்புறம் பெண்களிடமிருந்து ஆபத்து அணுகாது. சூளையில் வெந்த செங்கற்களைக் கொண்டு வீடுகட்டி விட்டால் பிறகு நெருப்புப்பயம் இராதல்லவா?

ஸ்ரீசர்: அநேகர் விவாகம் செய்துகொண்டு விவாகம் என்பதையே பாழாக்கி விட்டனர். அதற்காகவே பிரம்மசாரிகள் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. என் உடலில் உயிர் நிற்கும் வரை சங்கத்திற்குள் பிரம்மதேவனை[1] நுழைய விடமாட்டேன்.

விபினர்: மன்மதனை?

ஸ்ரீசர்: அவன் வந்தால் வரட்டும், ஒருமுறை அவனுடன் நெருங்கிய உறவு ஏற்பட்டுவிட்டால் அப்புறம் பயமில்லை.

பூரணர்: இதென்ன பேச்சு ஸ்ரீசரே!

ஸ்ரீசர்: என்ன தவறு? அவனைத் தேடிப் பிடிக்கப் போகிறேன். ஒருமுறை நீண்ட பெருமூச்செறிந்து காதல் கீதத்தைப் பாடுவேன். பிறகு சிறிது காலம் மணிக்கட்டின் வழியாகப் பொற்காப்புகள் நழுவிவிடும் நிலையை[2] அடைவேன். இறுதியில் சாத்திர விதிப்படி சந்நியாசியாகிவிடுவேன். எனக்குப் பிடித்த கவி ஒருவர் பாடியிருக்கிறார்:

அன்பே உன்றன் அருட்பெரும் சுடரால்
நன்றே இரவும் நீங்கிடு முன்னர்
நன்மைகள் தந்தருள் நல்வாழ் வொளியை
இன்றே சுடரால் ஏற்றுக இனிதே!
நல்விளக் கேந்தி நங்கை எதிர்வழி
வல்லே வருகுவை கொல்லோ என்றே
அல்லல் இருளில் ஆழ்ந்திடு நெஞ்சம்
நல்லொளி ஏற்றி நகுவிப் பாயே.

---

1. வங்காளி மொழியில் 'பிரஜாபதி' என்ற வார்த்தைக்குப் பிரம்மதேவன், வண்ணத்திப் பூச்சி என்ற இரு அர்த்தங்கள் உண்டு. இவ்வார்த்தை கலியாணத்தைக் குறிக்கப் பொதுவாக உபயோகிக்கப் படுகிறது. வங்க தேசத்தில் கலியாண அழைப்பிதழ்களின் மீது வண்ணத்திப் பூச்சியின் படத்தை அச்சிடுவது வழக்கம்.

2. இது மகாகவி காளிதாசர் இயற்றிய 'மேகசந்தேசம்' என்னும் காவியத்தில் வரும் ஒரு செய்யுளின் அடி. இக்காவியத்தின் கதாநாயகனான ஒரு யக்ஷன், குபேரனுடைய சாபத்தினால் ஒரு வருஷ காலம் தன் மனைவியைப் பிரிந்து ராம கிரியில் வசிக்கையில் பிரிவாற்றாமையினால் உடல் இளைத்துத்தான் அணிந்திருந்த பொற்காப்புகள் நழுவி விழும் நிலையை அடைந்தான். இதைக் காளிதாசர், ''கநக வலய ப்ரம்ச ரிக்த ப்ரகோஷ்ட:'' என்று வ[illegible] திருக்கிறார்.

பூரணர்: ஓய் ஸ்ரீசரே! உமது கவி அழகாகவேதான் பாடியிருக்கிறார்:

அன்பே உன்றன் அருட்பெரும் சுடரால்
நன்றே இரவும் நீங்கிடு முன்னர்
நன்மைகள் தந்தருள் நல்வாழ் வொளியை
இன்றே சுடரால் ஏற்றுக இனிதே!

வீடு தயாராக இருந்தது. தட்டில் மலர் மாலைகள் வைக்கப்பட்டிருந்தன. மஞ்சத்தின் மீது மலர்ப்படுக்கை. வாழ்க்கையின் விளக்கு மாத்திரம் ஏற்றப்படவில்லை. மாலை இரவாகி, இரவு கழிந்து கொண்டேயிருந்தது. ஆகா! வெகு அழகிய கவிதை. எந்தப் புத்தகத்தில் இருக்கிறது இக்கவிதை?

ஸ்ரீசர்: புத்தகத்தின் பெயர் 'ஆவாஹனம்' (அழைப்பு).

பூரணர்: பெயரும் பொருத்தமாகவே அமைந்துள்ளது,

[பாடுகிறார்]

அன்பே உன்றன் அருட்பெரும் சுடரால்
நன்றே இரவும் நீங்கிடு முன்னர்
நன்மைகள் தந்தருள் நல்வாழ் வொளியை
இன்றே சுடரால் ஏற்றுக இனிதே.

[பெருமூச்சு விடுகிறார்]

நீங்கள் யாருடைய வீட்டிற்குச் சென்றுகொண்டிருக்கிறீர்கள்?

ஸ்ரீசர்: எங்குப் போகிறோம் என்பதே மறந்து போய்விட்டது.

பூரணர்: இரவின் அழகு வழியை மறக்கச் செய்யக் கூடியதாகவே இருக்கிறது. என்ன சொல்கிறீர், விபினரே!

ஸ்ரீசர்: விபினர் தம்முடைய எண்ணங்களை மனத்திற்குள்ளேயே அடக்கி வைத்திருக்கிறார். உலோபி தனக்கு மிகவும் ஆசையுள்ள பொருள்களைப் பூமிக்கு அடியில் புதைத்து வைப்பது போல இருக்கிறது.

விபினர்: தகாத இடத்தில் அவசியம் இல்லாமல் கவிதையை நான் வீணாக்கமாட்டேன். தக்க இடத்தைத் தேடிக் கொண்டிருக்கிறேன். ஒருவன் இறக்கவேண்டுமாயின் ஒரேயடியாகக் கங்கையின் கரையை அடைந்து உயிர் துறப்பது மேல்.

பூரணர்: அது சாத்திர சம்மதமான விஷயம் தான். விபினர் தம்முடைய கவன சக்தியைக் கடைசி காலத்திற்காகச் சேர்த்துவைக்கிறார். நாமெல்லோரும் ஏதாவது பேசினால் அவர் மௌனமாயிருக்கிறார். பிறர் அவருடன் பேசும் மொழிகள் தேன் கலந்ததாக இருக்கவேண்டுமென்று நான் ஆசீர்வாதம் செய்கிறேன்.

ஸ்ரீசர்: அத்துடன் சிறிது காரமும் கலந்திருக்கட்டும்.

விபினர்: வெறும் வார்த்தைகளைப் பொழிந்தால் மாத்திரம் போதாது.

பூரணர்: நடுவில் நிறுத்தும் இடங்களும் தேன் கலந்ததாகவே இருக்கவேண்டும்.

ஸ்ரீசர்: என்றையதினம் உறக்கம் வரவில்லையோ—

பூரணர்: இரவு கழியவில்லையோ—

விபினர்: பூர்ண சந்திரன் பிரகாசிக்கிறனே—

பூரணர்: காடு வசந்த காலத்து மலர்களால் மலர்ச்சியடைந்து-

ஸ்ரீசர்: அபாக்கிய சாலியாகிய ஸ்ரீசன் கொடி வீட்டிற்கு அருகில் வந்து எட்டிப் பார்க்கவும்—

பூரணர்: பலே ஸ்ரீசரே! உமது கவிதைப் புத்தகத்தில் இருந்து இன்னொரு பாடலை எடுத்துப் படியும் - முதல் பாட்டே வெகு நன்றாயிருந்தது.

அன்பே உன்றன் அருட்பெரும் சுடரால்
நன்றே இரவும் நீங்கிடு முன்னர்
நன்மைகள் தந்தருள் நல்வாழ் வொளியை
இன்றே சுடரால் ஏற்றுக இனிதே.

ஆகா! ஒரு வாழ்வாகிற விளக்கின் சுடரை மற்றொரு விளக்கின் முகத்தருகில் கொண்டு போனாலே போதுமே! வேறென்ன வேண்டும்? அழகிய இரு விரல்களால் விளக்கைச் சிறிது சாய்த்தால் ஒரு கணத்தில் எல்லாம் ஒளி மயமாகிவிடும்.

[மனத்திற்குள் பாடுகிறார்]

அன்பே உன்றன் அருட்பெரும் சுடரால்
நன்றே இரவும் நீங்கிடு முன்னர்
நன்மைகள் தந்தருள் நல்வாழ் வொளியை
இன்றே சுடரால் ஏற்றுக இனிதே.

ஸ்ரீசர்: பூரணரே, எங்கு கிளம்புகிறீர்?

பூரணர்: சந்திரபாபுவின் வீட்டில் ஒரு புத்தகத்தை மறந்து போய் வைத்துவிட்டேன். அதைத் தேடிவரப் போகிறேன்.

விபினர்: தேடினால் அகப்பட்டுவிடுமோ? சந்திரபாபுவின் வீட்டில் சாமான்கள் இறைந்து கிடைக்கும். அங்கு ஏதாவது காணமல் போய்விட்டால் மீண்டும் கிடைக்காது.

[பூரணர் செல்கிறார்]

ஸ்ரீசர்: (பெருமூச்செறிந்து) விபினு! பூரணன் சரியான நிலையில் தானே இருக்கிறான்?

விபினர்: அவன் உள்ளடக்கி வைத்துக்கொண் டிருக்கும் உணர்ச்சியின் பெருக்கினால் அவன் தலை சோடா பாட்டி

வின் மூடியைப்போல் 'டப்' என்று வெடித்து மேலே கிளம்பாமல் இருந்தால் போதும்.

ஸ்ரீசர்: போனாலும் போகட்டுமே. தலையை அது இருக்குமிடத்திலேயே எஃகுக் கம்பியைப் போட்டுக் கட்டி வைக்க முடியுமா? கம்பி அறுபடட்டும். தலை பறக்கட்டும்.

[பாடுகிறார்]

செல்நெறி உன்னிச் சேர்வழிப் போக்க !
சிறிதே நீயும் பிறழ்தல் உண்டே
மல்கும் கண்ணீர் மாமழை தன்னால்
மாணுறு பார்வை மடியச் செய்வாய்
எல்லைத் தடத்திலென் உள்ளம் இழந்த
எழில்பூங் காவில் முள்மரப் பாங்கர்
பல்மலர் செந்நிறக் குவைகாண் கானல்
படைத்துப் போக்கும் பரிசும் பாராய்.

விபினர்: சிறிது காலமாக நீ அளவுமீறிக் கவிதைகளைப் படிக்க ஆரம்பித்திருக்கிறாய். கூடிய சீக்கிரம் ஏதோ ஓர் ஆபத்தில் அகப்பட்டுக் கொள்ளப்போகிறாய்.

ஸ்ரீசர்: வேண்டுமென்றே ஆபத்தில் சிக்கிக்கொள்பவர்களைப் பற்றி நீ கவலைப்படாதே. ஆபத்தில் இருந்து தப்ப முயல்பவர்கள் திடீரென்று அதில் அகப்பட்டுக் கொண்டால் தான் பேராபத்து.

வாருங்கள், வாருங்கள் ரசிகரே! எங்கே இரவு வேளையில் வீதியில் புறப்பட்டீர்?

[ரசிகர் வருகிறார்]

ரசிகர்: எனக்குப் பகலானாலும் ஒன்றுதான். இரவானாலும் ஒன்றுதான்.

வரமஸௌ திவஸோ ந புனர்நிசா
நநு நிசைவ வரம் ந புனர்தினம்
உபய மேத துபைத் வதவா க்ஷயம்
ப்ரிய ஜநேந நயத்ர ஸமாகம:

ஸ்ரீசர்: இதன் அர்த்தம்?

ரசிகர்: இதன் பொருள்

பகலே நன்றெனில் பாழிருள் விரும்பேன்
பையிருள் நன்றெனில் பகலை வெறுப்பேன்
பகலும் கங்குலும் ஒன்றே என்றன்
பைந்தொடிக் காதலி பாரினில் இன்றேல்

இதுவரை எத்தனையோ பகல்களும் இரவுகளும் வந்து போய்க் கொண்டே இருக்கின்றன. அவள் இன்னும் வந்து சேரவில்லை. ஆகவே நீங்கள் பகல் என்றாலும் இரவு என்றாலும் எனக்கு ஒரு வித்தியாசமும் இல்லை.

ஸ்ரீசர்: காதலி திடீரென்று இப்பொழுதே வந்துவிட்டால்?

ரசிகர்: வந்தால் என்னைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டாள். உங்கள் இருவரில் ஒருவர் மீதே அவள் பார்வைவிழும்.

ஸ்ரீசர்: அப்படியானால் அந்த நிமிஷம் முதல் அவளை ரசிகத் தன்மை யற்றவள் என்றே தீர்மானிக்க வேண்டும்.

ரசிகர்: அடுத்த நிமிஷமே ஆனந்தக் கடலில் மூழ்கிவிடுவீர்கள். நான் பொறாமைப்படவில்லை ஸ்ரீசரே! என் வாழ்க்கையில் அவள் இடம் பெற வெகு தாமதம் ஆகிவிட்டபடியால் அவளை உமக்கு அர்ப்பணம் செய்துவிடுகிறேன். பெண்ணே! நீ மாலையைக் கையில் ஏந்தி வருவாயாக. இன்று வசந்த ருதுவின் பௌர்ணமி. உன் நாயகனைச் சந்திக்க வருக.

மந்தம் நிதேஹி சரணௌ பரிதேஹி நீலம்
வாஸ: பிதேஹி வலயாவலி மஞ்சலேன
மா ஜல்ப ஸாஹஸினி சாரத சந்த்ர காந்த
தந்தாம்சவஸ்தவ தமாம்ஸி ஸமாபயந்தி

மெல்லநடை கொண்டுவா மானே—நீல
மெல்லிய நற் சேலைதனை அணிந்து வாராய்
எல்வளைமுந் தானைதனில் மறைத்தே நீயும்
எவருடனும் பேசிடாது வருகுவாயே
ஆற்றல்மிகு நெஞ்சமுடை நங்காய்! - உன்றன்
அழகொளிரும் வெண்ணிலவுப் பற்கள் - வன்மைக்
கூற்றமெனும் இவ்விருட்டைப் பிளக்கும் - என்னைக்
கொள்ள இனி மெல்லநனி வருக நீயே!

ஸ்ரீசர்: ரசிகரே! உமது பை எப்பொழுதும் நிறைந்திருக்கிறது. இம்மாதிரி எத்தனைக் கவிதைகளை மொழிபெயர்த்து வைத்திருக்கிறீர்?

ரசிகர்: ஏராளமாக உண்டு. லக்ஷ்மிதான் அணுகவில்லை. சரசுவதியை வைத்துக்கொண்டு காலம் தள்ளுகிறேன்.

ஸ்ரீசர்: விபினு! ரசிகர் விவரித்த காதல்-சந்திப்பு விஷயத்தைச் சிறிது கவனித்தல் நலம்.

விபினர்: அதைப்பற்றி நமது சங்கத்திலேயே ஒரு தீர்மானத்தை நிறைவேற்றிவிடலாமே!

ஸ்ரீசர்: சில விஷயங்களில் ஐடியா வெகு நன்றாக இருக்கும். அதை அமுலுக்குக் கொண்டு வருவதுதான் கஷ்டம். காதலனைச் சந்திக்கக் காதலி வருகிறாள் என்று வைத்துக் கொள். அதற்கு இந்தப் படல்டங்கா சந்து தகுந்த இடமா? அதற்குத் தகுந்த இடம் இவ்வுலகிலேயே இல்லை. கற்பனைக் காதலி நீலப்பட்டாடை உடுத்து வரும்

பொழுது அவளுடைய மாலையில் இருந்து முத்துக்கள் கீழே உதிர்ந்த போதிலும் அவள் பொருட்படுத்தமாட்டாள். என்ன சொல்கிறீர் ரசிகரே!

ரசிகர்: காதல் சந்திப்பு விஷயம் மனத்தில் கற்பனை செய்து பார்ப்பதற்குத்தான் அழகு. குதிரை வண்டிகள் ஓடும் தெருக்கள் அதற்குத் தக்க இடம் அல்ல ஸ்ரீசரே! இத்தகைய வசந்த காலத்து வெண்ணிலவில் ஒரு மடந்தையின் துயரம் நிறைந்த உள்ளம் ஒரு ஜன்னல் வழியாக உமது வீட்டிற்குள் நுழையவேண்டும் என்று ஆசீர்வாதம் செய்கிறேன்.

ஸ்ரீசர்: உமது ஆசீர்வாதம் பலிக்கட்டும், ரசிகரே! இன்று வீசும் தென்றலில் அதன் அறிகுறிகளைக் காண்கிறேன். கதைகளில் வரும் திருடர்கள் எப்படி முன்னாலேயே அறிவித்துவிட்டுத் திருட வருகிறார்களோ, அவ்விதமே என்னுடைய கற்பனைக் காதலி எங்களுடைய சந்திப்பைப் பற்றிச் செய்தி அனுப்பியிருக்கிறாள்.

விபினர்: அப்படியானால் உன் வீட்டு வராந்தாவைச் சித்தம் செய்து நீயும் தயாராக இரு.

ஸ்ரீசர்: அந்த வராந்தாவில் நான் ஒரு சோபாவில் அமர்ந்திருப்பேன். மற்றொன்று காலியாக இருக்கும்.

விபினர்: நான் வந்து அதில் உட்கார்ந்து விடுவேன்.

ஸ்ரீசர்: 'மத்வபாவே குடம் தத்யாத்' தேன் இல்லை என்றால் வெல்லத்தையாவது கொடுக்கவேண்டும். காதலி வரவில்லையானால் நீயாவது கிடைப்பாய்.

விபினர்: தேன் மொழியாள் வந்து விட்டால் என்பாடு 'லகுடம் தத்யாத்[1]' என்று ஆகிவிடும்.

ரசிகர்: (தனிமையாக) ஸ்ரீசரே! உமது வராந்தாவிற்கு அடையாளமாக ஒரு கொடி பறக்கவிடுவதை யோசித்துப் பாரும்.

ஸ்ரீசர்: அக்கைக்குட்டை கிடைக்குமா என்று முயற்சி செய்து பார்க்கிறேன்.

ரசிகர்: முயற்சி செய்வதில் குற்றம் ஒன்றும் இல்லை.

ஸ்ரீசர்: விபினா! நீ ரசிகருடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிரு. நான் இதோ ஒரு நிமிஷத்தில் வந்து விடுகிறேன்.

[போகிறார்]

விபினர்: ரசிகரே! கோபிக்க மாட்டீர்களே.

ரசிகர்: நீர் பயப்படவேண்டாம். நான் உம்மை ஒன்றும் செய்யமாட்டேன். நான் கிழவன்.

1. 'பிரம்பு உபயோகிக்கப்படும்' என்று பொருள்.

விபினர்: ஓரிரண்டு கேள்விகள் கேட்க விரும்புகிறேன்! நீங்கள் தப்பாக நினைத்துக் கொள்ளக்கூடாது.

ரசிகர்: என் வயசைக் குறித்துக் கேள்வி ஒன்றும் இல்லையே?

விபினர்: இல்லை.

ரசிகர்: அப்படியானால் கேளும். சரியான விடைகள் கிடைக்கும்.

விபினர்: ஒரு பெண்ணை அன்று பார்த்தோமே அவள்-

ரசிகர்: நினைக்கத் தகுந்த பெண்தான், விபினரே! சங்கோசம் வேண்டாம்! அவளைப் பற்றி அடிக்கடி உமது மனம் நினைப்பது இயற்கையே. நானும் அவளைப்பற்றியேதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்.

விபினர்: அபலா காந்தரைப் பற்றி—

ரசிகர்: அவரைப் பற்றிக் கவலையே வேண்டாம்.

விபினர்: அவருடைய உத்தேசம்—

ரசிகர்: அதுதான் சந்தேகம். அவர் நிருபபாலா, நீரபாலா இருவருள் யாரைக் காதலிக்கிறார் என்று தெரியவில்லை. அவர் மனது அவ்விருவருக்கிடையே ஊசலாடுகிறது.

விபினர்: ஆனால் அவ்விருவருள் யார் அவரை—

ரசிகர்: அவர் அவ்விருவருள் ஒருத்தியையும் விவாகம் செய்து கொள்ள முடியாது. அது சாத்தியமா யிருந்தால் கவலையே இல்லையே!

விபினர்: அதனால் தானே அபலா காந்தர்—

ரசிகர்: மிகவும் கவலைப்படுகிறார்.

விபினர்: ஸ்ரீமதி நீரபாலாவிற்குச் சங்கீதத்தில் மிகவும் விருப்பம் போலும்?

ரசிகர்: மிகவும் விருப்பம்தான். அதற்கு ருசு உமது சட்டைப் பையிலேயே இருக்கிறதே.

விபினர்: (சட்டைப் பையிலிருந்து பாட்டு நோட்டை எடுத்து) நான் இதை எடுத்துக்கொண்டு வந்தது பெரிய தவறென்றே—

ரசிகர்: அதை நீங்கள் எடுத்துக்கொண்டு வரவில்லையானால் நாங்கள் யாராவது கொண்டு வந்திருப்போம்.

விபினர்: நீங்கள் எடுத்து வந்திருந்தால் அவர்கள் மன்னித்து விடுவார்கள். ஆனால் நான் செய்தது பெரிய தவறு. இப்பொழுதே திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்.

ரசிகர்: திருப்பிக் கொடுத்துவிட்டாலும் தவறு தவறுதானே.

விபினர்: ஆகையால்—

ரசிகர்: அவ்வளவு தூரம் சென்ற பின் இன்னும் சிறிது தூரம் சென்றால் பரவாயில்லை. எடுத்தது தவறு என்றால் வைத்துக் கொண்டது கொஞ்சம் பெரிய தவறு. அவ்வளவு தான்.

விபினர்: அந்த நோட்டைப் பற்றி அவர்கள் உம்மிடம் ஏதாவது சொன்னார்களா?
ரசிகர்: கூறியதை விடக் கூறாமல் விட்டது அதிகம்.
விபினர்: அப்படி யென்றால்?
ரசிகர் வெட்கத்தினால் முகம் சிவந்தது.
விபினர்: என் முகமல்லவா சிவந்தது?
ரசிகர்: உம்முடைய வெட்கத்தினால் அவர்களுடைய முகமும் சிவந்தது-அருணனுடைய வெட்கத்தினால் உஷையின் முகம்[1] சிவந்தது போல.
விபினர்: ரசிகரே! என்னைப் பைத்தியமாகச் செய்து விடாதீர்!
ரசிகர்: ஒன்றுமில்லை. உம்மை என் கோஷ்டிக்குள் இழுக்கிறேன். பயப்படாதீர்.
விபினர்: (நோட்டை மறுபடியும் சட்டைப்பையில் போட்டுக் கொண்டு) ஆங்கிலத்தில் ஒரு பழமொழி இருக்கிறது. 'குற்றம் புரிவது மனிதனின் இயல்பு. மன்னிப்பது தெய்வத்தின் இயல்பு.'
ரசிகர்: அப்படியானால் நீங்கள் மனித இயல்பையே பின்பற்றுங்கள்.
விபினர்: தெய்வத்தின் இயல்பை இந்த நோட்டின் சொந்தக்காரர் பின்பற்றட்டும்.

[ஸ்ரீசர் வருகிறார்]

ஸ்ரீசர்: அபலாகாந்தரை எங்கு தேடியும் காண முடியவில்லை.
விபினர்: நீ இரவோடு இரவாக அவரைப் பிடித்துச் சந்நியாசியாக்கி விடுவாய் போல் இருக்கிறதே!
ஸ்ரீசர்: அக்ஷயரைப் பார்த்து விடைபெற்று வந்தேன்.
விபினர்: அடேடே! அவரிடம் ஒன்று சொல்ல மறந்து விட்டேன். இதோ ஒரு நிமிஷத்தில் வந்துவிடுகிறேன்.
ரசிகர்: (தனக்குள்) வேறு எதையாவது எடுத்துக்கொண்டு வரப் போகிறார் போலும்! மனித இயல்பின் உரிமையை முழுவதும் உபயோகித்துக் கொள்கிறார் இவர்.

[விபினர் செல்கிறார்]

ஸ்ரீசர்: ரசிகரே! ஒரு காரியமாக உங்களைக் கலந்து யோசனை கேட்க விரும்புகிறேன்.
ரசிகர்: அவ்வளவு புத்தி இல்லாமற் போனாலும் யோசனை கூறக் கூடிய வயசு என்னவோ எனக்கு உண்டு.
ஸ்ரீசர்: அன்று அவ்வீட்டில் இரு பெண்களைப் பார்த்தோமே! அவர்கள் மிக அழகாக இருந்தனர் என்றே எனக்குத் தோன்றிற்று.

---

1. அருணன் சூரியனின் தேரோட்டி. சூரியனுக்கு முன் உதிப்பவன். உஷை என்றால் அதிகாலை என்று பொருள்.

ரசிகர்: நீர் கூறுவது முற்றிலும் உண்மை. வேறு சிலரும் அவ் விதமே சொன்னார்கள்.

ஸ்ரீசர்: அவர்கள் விஷயமாக உங்களிடம் அடிக்கடி நான் பிரஸ்தாபித்தால்—

ரசிகர்: எனக்கு மிகவும் திருப்தியாக இருக்கும். உமக்கு மகிழ்ச்சி ஏற்படும். அவர்களுக்கு நஷ்டம் ஒன்றும் இல்லை.

ஸ்ரீசர்: ஒன்றுமில்லை. வெட்டுக்கிளி நட்சத்திரங்களைப் பார்த்துப் பிதற்றினால்—

ரசிகர்: நட்சத்திரங்களுக்கு அதனால் தூக்கம் கெட்டு விடாது.

ஸ்ரீசர்: வெட்டுக்கிளி உறக்கத்தை இழந்தாலும் இழக்கலாம். அதனால் நமக்கு என்ன?

ரசிகர்: இன்றைய நிலைமை அப்படித்தான் காணப்படுகிறது.

ஸ்ரீசர்: நான் எடுத்து வந்த கைக்குட்டை யாருடையதோ அவர்களின் பெயர்—

ரசிகர்: நிருபபாலா

ஸ்ரீசர்: அவ்விருவருள் நிருபபாலா யார்?

ரசிகர்: நீரே யோசித்துச் சொல்லுமே பார்ப்போம்!

ஸ்ரீசர்: சிவப்பு நிறப் பட்டுப்புடவை அணிந்திருந்த பெண் தானே?

ரசிகர்: உம், சொல்லிக் கொண்டே செல்லுங்கள்.

ஸ்ரீசர்: அவள் வெட்கத்தினால் ஓட வாரம்பித்தாள். ஒரு கணம் பயந்த மானைப்போல் சட்டென்று நின்றாள். அப்பொழுது அவளது கூந்தல் முன்புறம் சரிந்து கண்களை மறைத்தது. முந்தானையில் முடிந்திருந்த சாவிக் கொத்தை இடது கையில் எடுத்துக் கொண்டு வாயு வேகத்தில் சென்று மறைந்தாள். அவளுடைய கருங்குழல் என் கண்களின் முன்னே ஒரு கருமுகிலைப்போல் அசைந்து நாட்டிய மாடிச் சென்று மறைந்தது.

ரசிகர்: பலே! அது நிருபபாலா தான். சந்தேகமே இல்லை. வெட்கிய இரு பாதங்கள், சங்கோசமுற்ற இரு கைகள், பயந்த பார்வை, சுருண்ட குழல் இவற்றின் இடையே துடிக்கும் உள்ளத்தை நீர் கண்டிருக்கமாட்டீர். அது மலரினுள் மறைந்திருக்கும் தேனைப் போல் இனியது. பனியைப் போல் மென்மையானது.

ஸ்ரீசர்: ரசிகரே! உம்மிடம் நிறைந்திருக்கும் கவிதை ரசத்தின் ஊற்றுப் பெருகும் இடத்தை இன்று கண்டு பிடித்து விட்டேன்.

ரசிகர்: இதோ மறுபடியும் கேளும்.

கவீந்த்ராணும் சேத: கமல வநமாலா தபருசிம்[1]
பஜந்தே யேஸந்த: கதிசிதருணமேவ பவதீம்
விரிஞ்சி ப்ரேயஸ்யாஸ் தருணதர ச்ருங்கார லஹரீம்
கபீராபிர் வாக்பிர் விதததி ஸபா ரஞ்ஜன மயீம்

செந்தா மரைமா மலரைக் கதிரோன்
செவ்விய தாய் மகிழ்விப் பதுபோல
நந்தா ஞானக் கடல்மாக் கவிகள்
நெஞ்சம் குளிர்செய் தாயே! உன்னைச்
சிந்தை சிறிதே துதிப்போ ரேனும்
செஞ்சொல் நாமகள் மகிழும் வண்ணம்
வந்தே பிறந்து வான்புகழ் நல்கும்
இன்பக் கடலும் பெருகும் உலகே.

நான் அத்தகைய தேவியின் அறிமுகத்தைப் பெற்றிருக்கிறேன்.

ஸ்ரீசர்: எனக்கும் அந்த அறிமுகம் சிறிது கிடைத்திருக்கிறது. அது காரணமாக எனக்கும் தற்பொழுது கவிதை சற்றுத் தாராளமாகவே வருகிறது.

[அக்ஷயகுமாரர் வருகிறார்]

அக்ஷயகுமாரர்: (தமக்குள்) இவ்விரு இளைஞர்களையும் சந்தித்த பிறகு எனக்கு வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை—ஒருவன் என் வீட்டிற்குச் சென்று திருடனைப் போல் எதையோ தேட ஆரம்பித்தான். விஷயம் என்னவென்று கேட்டதற்குச் சரியான விடை கிடைக்கவில்லை. சிறிது நேரத்திற்கெல்லாம் மற்றொருவன் சென்று வீட்டிலிருக்கும் புத்தகங்களை எல்லாம் புரட்டிப் பார்க்க ஆரம்பித்தான். தொலைவில் இருந்து பார்த்து ஓடி வந்துவிட்டேன். சாந்தமாக உட்கார்ந்து ஒரு கடிதத்தை முடிக்க முடியவில்லை ... ஆகா! என்ன ஆனந்தமான நிலா!

ஸ்ரீசர்: அடேடே! அக்ஷயகுமாரரா?

அக்ஷயகுமாரர்: அவரே தான். ஒருவன் வீட்டில் புகுந்து கொள்ளையடிக்கிறான். மற்றொருவன் பாதையில் செல்லவிடாமல் மறிக்கிறான். (தன் மனைவியை நினைத்து) அடி பெண்ணே! உன் நினைவு என் மனத்தில் வராதிருக்கச் செய்ய ஒரு மேனகையோ, ஊர்வசியோ, ரம்பையோ

1. இது பராசக்தியாகிய அன்னையைக் குறித்து ஆதி சங்கரர் இயற்றிய சௌந்தர்ய லஹரி என்னும் தோத்திர நூலில் உள்ள ஒரு சுலோகம்.

வந்திருந்தால் நான் வருத்தப்பட மாட்டேன். காலத்தில் இந்திரனுக்கும்[1] கிழப்பருவம் வந்து அவன் ரசிகத் தன்மையை இழந்துவிட்டான் போலும்.

[விபினர் பிரவேசிக்கிறார்.]

விபினர்: அக்ஷயபாபுவா? உங்களைத்தான் தேடிக்கொண்டிருக்கிறேன்.

அக்ஷயகுமாரர்: என்ன துர்ப்பாக்கியம் உமக்கு? இத்தகைய ஓரிரவில் என்னைத் தேடிக்கொண்டு திரியவேண்டிய நிலைமை உமக்கு ஏன் ஏற்பட்டது?

In such a night as this,
When the sweet wind did gently kiss the trees
And they did make no noise, in such a night
Troilus methinks mounted the Trojan walls
And sighed his soul toward the Grecian tents,
Where Cressida lay that night.[2]

ஸ்ரீசர்: In such a night (இத்தகைய இரவில்) நீங்கள் எதற்கு வெளியே புறப்பட்டீர்கள் அக்ஷயபாபு?

ரசிகர்: அபஸரதி ந சக்ஷுஷோ ம்ருகாக்ஷீ
ரஜநிரியம் ச ந யாதி நைதி நித்ரா

கண்களை மான்விழி விட்டகல வில்லை
கங்குலும் வல்விரைந்து கழிவ தில்லை
எண்ணச் சுழலிடையே நெஞ்சம் பட்டு
ஏனோ துயில் கொள்ளேன் நானும் இன்றே

அக்ஷயபாபுவின் நிலைமை எனக்குத் தெரியும் ஐயா!

அக்ஷயகுமாரர்: நீர் யாரையா?

ரசிகர்: நான் ரசிக சந்திரன். இருபுறமும் இரு இளைஞர்களை அடுத்து இளமையாகிற கடலில் உதித்தெழுந்தவன்.

1. முனிவர்களின் தவத்தைக் குலைக்க மேனகை முதலிய தேவலோகத்து அழகிகளை இந்திரன் அனுப்பினான் என்று புராணங்கள் கூறும்.

2. இது ஆங்கில மகாகவி ஷேக்ஸ்பியர் இயற்றிய 'Troilus and Cressida' என்ற நாடகத்தில் வரும் பகுதி. 'இனிய தென்றல் ஓசையின்றி மரங்களைத் தழுவி முத்தமிட்டுச் செல்லும் அவ்விரவில் ட்ராயிலஸ், ட்ராய் நகரத்தின் சுவர்களைப் பற்றி ஏறி கிரெஸ்ஸிடா படுத்துறங்கும் கிரேக்கக் கூடாரத்தை நோக்கித் தன் ஆவி துடிக்கப் பெருமூச்செறிந்தான்' என்பது இதன் பொருள்.

அக்ஷயகுமாரர்: இவ்வயதில் இளமையை உம்மால் தாங்க முடியாது ஓய்!

ரசிகர்: இளமையை எவ்வயதில் தாங்க முடியுமோ நான் அறியேன். அது ஒரு தாங்க முடியாத நிலைமை. ஸ்ரீசரே! உமக்கு என்ன தோன்றுகிறது?

ஸ்ரீசர்: அதை நான் இன்னும் பூர்ணமாக அறிந்துகொள்ள வில்லை.

ரசிகர்: என்னைப்போல் முதிர்ந்த வயதை எதிர் பார்க்கிறீரோ? அக்ஷயகுமாரரே! உமது மனம் எங்கோ லயித்திருப்பது போல் இருக்கிறதே!

அக்ஷயகுமாரர்: அது எங்கு லயித்திருந்தாலும் உம்மிடம் இல்லை என்பது நிச்சயம். விபினரே! நீர் என்னைத் தேடினேன் என்று கூறினீரே தவிர முக்கிய அலுவல் ஒன்றும் இல்லை என்றே தோன்றுகிறது. எனக்கு ஓர் அவசர வேலை இருக்கிறது. நான் வருகிறேன்.

[செல்கிறார்]

ரசிகர்: மனைவியைப் பிரிந்தவன் கடிதம் எழுதப் போய்விட்டான்.

ஸ்ரீசா: அக்ஷயபாபு நல்ல மனிதர், ரசிகரே! இவருடைய மனைவிதானே மூத்த அக்காள். அவள் பெயர் என்ன?

ரசிகர்: புரபாலா.

விபினர்: (அருகில் வந்து) என்ன பெயர் சொன்னீர்கள்?

ரசிகர்: புரபாலா.

விபினர்: எல்லோருக்கும் மூத்தவள் அவள்தானே!

ரசிகர்: ஆம்.

விபினர்: கடைசித் தங்கையின் பெயர்?

ரசிகர்: நீரபாலா.

ஸ்ரீசர்: நிருபபாலா என்பது யார்?

ரசிகர்: நீரபாலாவிற்கு மூத்தவள்.

ஸ்ரீசர்: அப்படியானால் நிருபபாலா மூத்தவள்.

விபினர்: நீரபாலா இளையவள்.

ஸ்ரீசர்: புரபாலாவின் தங்கை நிருபபாலா.

விபினர்: அவள் தங்கை நீரபாலா.

ரசிகர்: (தமக்குள்) சரி, பெயர்களை ஜபம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். பனி அதிகரிக்கிறது. இங்கிருந்து தப்ப முயற்சிக்கவேண்டும்.

[வனமாலி வருகிறார்]

வனமாலி: அடடா! நீங்களா இங்கே? நான் உங்கள் வீட்டிற்குச் சென்றிருந்தேன்.

ஸ்ரீசர்: இத்தடவை நீங்கள் இங்கேயே இருங்கள். நாங்கள் வீட்டிற்குச் செல்கிறோம்.

வனமாலி: நீங்கள் எப்பொழுதும் ஏதாவது வேலையாகவே இருக்கிறீர்கள்.
விபினர்: அதிலும் உங்களைப் பார்த்தால் வேலை அதிக விடும்.
வனமாலி: ஐந்து நிமிஷம் நின்றீர்களானல்—
ஸ்ரீசர்: ரசிகரே! குளிர் அதிகரிக்கிறதுபோல் ?
ரசிகர்: உங்களுக்கு இப்பொழுதுதான் தெரிந்தது. எனக்கு வெகு நேரமாகவே நடுக்குகிறது.
வனமாலி: வாருங்கள்; வீட்டிற்குப் போவோம்.
ஸ்ரீசர்: இன்றிரவு நீர் என் வீட்டிற்குள் நுழைந்தீர்களோ—
வனமாலி: சரி, சரி. ஏதோ வேலையாக இருக்கிறீர்கள். மற்ருெரு சமயம் பார்ப்போம்.

# நான்காம் அங்கம்

## முதல் காட்சி

அக்ஷயகுமாரரின்

[ரசிகரும் சைலபாலாவும்]

ரசிகர்: அம்மா சைலபாலா!

சைலபாலா: என்ன சிற்றப்பா.

ரசிகர்: நான் என்ன வேலை செய்யவேண்டியிருக்கிறது பார். பரமசிவனின் தவத்தைக் குலைக்க மன்மதன் சென்றான். நான் கிழவன்—

சைலபாலா: நீ தாத்தாதான். ஆனால் இளைஞர்கள் இருவரும் பரமசிவன்கள் அல்லரே!

ரசிகர்: அல்லர். அதை நான் கூர்ந்து கவனித்து விட்டேன். அதனால்தான் பயமின்றி முன் வந்தேன். ஆனால் அவர்களுடன் நடுத்தெருவில் பனியில் நின்றுகொண்டு பாதி ராத்திரி வரையில் காதல் பேச்சுப் பேசுவதற்கு வேண்டிய உற்சாகம் எனக்கு இல்லை.

சைலபாலா: அவர்களிடமிருந்து சிறிது உற்சாகம் கடன் பெற்றுக்கொள்வதுதானே?

ரசிகர்: உயிருள்ள மரத்தின் மீது சூரியனின் வெப்பம் விழுந்தால் அது மலர்ந்து கிளைக்கும். அதே வெப்பம் காய்ந்தமரத்தின் மீது விழுந்தால் அது உலர்ந்து போய்விடும். இளமையின் முறுக்குக் கிழவனுக்குப் பயன் படாது, சைலா!

சைலபாலா: உன்னைப் பார்த்தால் உலர்ந்து போகிறவரைப் போல் இல்லையே.

ரசிகர்: என் இதயத்தைக் கேட்டால் தெரியும்.

சைலபாலா: உனக்கு அந்த வயதெல்லாம் கடந்து விட்டது. இளமையின் தாபம் உன்னை என்ன செய்யும்?

ரசிகர்: ''சுஷ்கேந்தநே வஹ்நிருபைதி வ்ருத்திம்'' காய்ந்த விறகு கொழுந்து விட்டெரியும். இளமையின் வெப்பம் கிழவனைப் பற்றிக்கொண்டால் காட்டுத் தீயைப்போலத்

தான். அதனால்தான் 'வ்ருத்தஸ்ய தருணீ பார்யா.' கிழவனுக்கு இளம் மனைவி ஆபத்திற்கு அடையாளம் என்பர் பெரியோர்.

[நீரபாலா வருகிறாள்]

ரசிகர்: வரம் தரும் தேவியே வருக! நீ எனக்கு வரமளிக்கப் போகிறாயோ என்னவோ? நான் உனக்கு ஒரு வரனை அளிக்கத் துடித்துக்கொண் டிருக்கிறேன். நீ பூஜை செய்யும் சிவன் உனக்கு ஒன்றும் செய்வதில்லை. நான் உனக்காகச் செத்துச் சுண்ணும்பாகிறேன். எனக்கு ஒன்றும் கிடைப்பதில்லை.

நீரபாலா: சிவனுக்கு வெறும் மலர்கள். உனக்குக் கனி. நான் உன்னையே மாலையிட்டு விடுகிறேன், சிற்றப்பா!

ரசிகர்: மண்ணினால் செய்யப்பட்ட விக்ரகத்திற்கு நைவேத்யம் செய்த பொருள் அப்படியே திரும்பி வந்துவிடும். அவ்விதமே நானும் உன் மாலையைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன். ஆனால் நீ மாலைக்குப் பதிலாக ஒரு கம்பளி மப்ளர் நெய்து கொடுத்தாயானால் இக்கிழவனுக்கு மிகவும் உபயோகப்படும்.

நீரபாலா: அப்படியே செய்கிறேன். மேலும் உன் திருவடிகளுக்குக் கம்பளிப் பூட்சும் தைத்து வைத்திருக்கிறேன்.

ரசிகர்: இதுதான் நன்றியறிவு. ஆனால் நீரு, எனக்கு மப்ளர் மாத்திரம் போதும். பூட்ஸிற்குத் தகுந்த மனிதர்கள் வருவார்கள். அவர்களுக்காக அதை வைத்திரு.

நீரபாலா: சரி, உன் அதிகப் பிரசங்கமும் உன்னுடனேயே இருக்கட்டும்.

ரசிகர்: பார்த்தாயா, சைலா! இப்பொழுதெல்லாம் நீருவிற்கு அடிக்கடி வெட்கம் உண்டாகிறது. நல்ல அறிகுறி அல்ல.

சைலபாலா: நீரு, என்ன காரியம் செய்தாய்? மீண்டும் இந்த அறைக்கு ஏன் வந்தாய்? இன்று இந்த சங்கத்தின் மீடிங் நடைபெறப் போகிறது. யாராவது திடீரென்று வந்தால் ஆபத்து.

ரசிகர்: அந்த ஆபத்தை ஒருமுறை ருசி கண்டதால்தான் மீண்டும் அதை நாடித் திரிகிறாள்!

நீரபாலா: சிற்றப்பா! நீ இவ்வாறு இம்சை செய்தால் மப்ளர் போட்டுத் தரமாட்டேன். பார், அக்கா! நீயும் இப்படிச் சிரித்தாயானால் இவருடைய குறும்பு அதிகரிக்கும்.

ரசிகர்: சைலா! இவளுக்கு இப்பொழுது விளையாட்டுக்கூட பிடிக்கவில்லை. மனம் அவ்வளவு மாறிவிட்டது. நீரு! பெண்களுக்கு ஒரு நிலைமையில் குயில் கூவுவதுகூடக் காதிற்கு ஏற்காது என்று சாத்திரம் சொல்கிறது. நீயும்

அந்த நிலைமையில் இருப்பதால் என் விகடம்கூட உனக்குப் பிடிக்கவில்லை.

நீரபாலா: அதனால்தான் உன் கழுத்தில் மப்ளரை இறுகக்கட்டி விடுகிறேன். பிறகு நீ கூவுவது குறையும்.

சைலபாலா: போதும் சண்டை. மீடிங் ஆரம்பிக்கப்போகிறது.

[நீரபாலாவும் சைலபாலாவும் செல்கின்றனர். பூரணர் வருகிறார்.]

ரசிகர்: வாருங்கள்.

பூரணர்: இன்னும் ஒருவரும் வரவில்லையா?

ரசிகர்: இக்கிழவனை மாத்திரம் பார்த்துவிட்டு நிராசையாகி விட்டீர் போலும்! எல்லோரும் வருவார்கள், பூரணரே!

பூரணர்: நான் ஏன் நிராசையாக வேண்டும்?

ரசிகர்: அதை எப்படிச் சொல்வது? உமது கண்களில் இருந்து அவை தேடும் ஆசாமி நான் அல்லன் என்பது தெளிவாகிறது.

பூரணர்: கண்களின் பாஷையை நீர் எப்பொழுது கற்றுக் கொண்டீர்?

ரசிகர்: என்னை யாரும் இதுவரை கண்ணெடுத்துப் பார்த்ததில்லை. ஆகவே நான் பிறருடைய கண்களின் பார்வையை எப்பொழுதும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தவன். உம்மைப்போல் அதிர்ஷ்டமுடையவனாக இருந்தால் கண்களின் பாஷைக்குப் பதிலாக அவற்றின் பார்வை எனக்குக் கிடைத்திருக்கும். கண்களைப் போலவே ஆச்சரியமான படைப்பு உலகிலேயே கிடையாது. சரீரத்தில் மனம் எங்கிருக்கிறதென்றால் அது கண்களுக்கு மேலே தான்.

பூரணர்: (உற்சாகத்துடன்) சரியான வார்த்தை. ஒருவருடைய சரீரத்தில் எல்லையற்ற வானவெளிக்கோ பரந்த கடலுக்கோ ஓர் உதாரணம் சொல்லவேண்டுமாயின் கண்களையே ஒப்பிடவேண்டி யிருக்கிறது.

ரசிகர்: 'நிஸ்ஸீம சோபா ஸௌபாக்யம் நதாங்க்யா நயநத்வயம் அன்யோன்யா லோக நாநந்த விரஹாதிவ சஞ்சலம்.' புரிகிறதா பூரணரே!

பூரணர்: இல்லை. ஆனால் புரிந்து கொள்ள ஆசையாயிருக்

ரசிகர்:

மெல்லியபூங் கொடியைப் போல்
மெல்லப் பயிலும் மென் நடையாள்
எல்லைகாட்டிக் கூறவொணா
எழிலார் கண்கட் கிணையுண்டோ?
அல்லும்பகலும் அருகிருந்தும்
அன்பொடு தம்மில் காணாமை

வல்லேவாடி அசைகின்ற
வருந்தும் பிரிவாற் ருமையதே.

பூரணர்: இல்லே ரசிகரே! இது சரியல்ல, இது வெறும் கற்பனை. கண்கள் ஒன்றையொன்று காண விரும்புவதில்லை.

ரசிகர்: வேறு இரண்டு கண்களைக் காண விரும்பும் என்றுதானே கூறுகிறீர்? கடைசி இரண்டு வரிகளை மாற்றி விடுவோம்.

அல்லும் பகலும் அருகிருக்க
அன்பன் விழியொடு கூடுதலால்
எல்லையிலாமல் மகிழ்ந்தாடும்
இம்மலர் விழிகள் காண்பீரே.

பூரணர்: வெகு அழகு, ரசிகரே!

அல்லும் பகலும் அருகிருக்க
அன்பன் விழியொடு கூடுதலால்
எல்லையிலாமல் மகிழ்ந்தாடும்
இம்மலர் விழிகள் காண்பீரே.

ஆகவே கூட்டிலடைப்பட்ட பறவைபோல் இங்கு மங்கும் தாவிக்கொண்டு அன்பனின் கண்களைப் பார்த்துக் கொண்டு பறந்துபோக முடியாமல் வருந்தும்.

ரசிகர்: அப்பார்வை எத்தகையது என்று கவி வருணிக்கிறார் கேளும்.

ஹத்வா லோசன விசிகைர்
கத்வா கதிசித் பதாநி பத்மாக்ஷி
ஜீவதி யுவா நவா கிம்
பூயோ பூயோ விலோகயதி.

செங்கமலச் செவ்விழியாள்
சீரிய கூரிய விழிக்கணையைப்
பங்கமிலாக் காளையுளம்
பாய்ச்சி வீழ்த்திச் சென்றதுடன்
அங்கவனை நனி ஏறிட்டு
அவன் மாய்ந் தானே இலையோவென்று
இங்கும் அங்கும் நடையாடும்
இக் கொடுமைதனை எங்குரைப்பேன்?

பூரணர்: ரசிகரே! இவ்வாறு ஒருத்தி திரும்பிப் பார்ப்பதைக் கவிதையில்தான் காணமுடியும்.

ரசிகர்: கவிதையில் அவ்விதம் திரும்பிப் பார்ப்பதில் ஒன்றும் தீங்கில்லை. வாழ்க்கையும் அவ்விதமே. சந்தத்துடன் அமைந்துவிட்டால் அதையும் திரும்பத் திரும்பப் பார்க்கத் தோன்றும், பூரணரே! இங்கு மனம் திரும்பிப் பார்க்கிறது. கண்கள் திரும்புவதில்லை.

பூரணர்: (பெருமூச்சுடன்) நல்ல இடமல்ல இது ரசிகரே! ஆனால் நீர் முன் சொன்ன கவிதை நன்றாயிருந்தது.

அல்லும் பகலும் அருகிருக்க
அன்பன் விழியொடு கூடுதலால்
எல்லை யிலாமல் மகிழ்ந்தாடும்
இம்மலர் விழிகள் காண்பீரே.

ரசிகர்: ஆகா, பூரணரே! கண்களைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டால் முடிப்பதற்கு மனம் வருவதில்லை.

லோசனே ஹரிண கர்வ மோசனே
மா விதூஷய நதாங்கி கஜ்ஜலை:
ஸாயக: ஸபதி ஜீவ ஹாரக:
கிம் புனர்ஹி கரலேந லேபித:

மானைப் பழிக்கும் நின்மா விழி தன்னில்
மாதரசி! மையிட் டெழுதாதே - என்
ஊனுயிர் போக்கிடுங் கூர்கணையில் நஞ்சு
உண்மையாய் உரைப்பன் மிகையே கண்டாய்

பூரணர்: நிறுத்தும். யாரோ வருகிறார்கள்.

[சந்திரபாபுவும் நிர்மலாவும் வருகிறார்கள்]

சந்திரபாபு: அதுயார், அக்ஷயபாபுவா?

ரசிகர்: நானும் அக்ஷயகுமாரரும் தோற்றத்தில் ஒத்திருப்பதாகக் கேள்விப்பட்டால் அவருக்கும் அவருடைய சுற்றத்தார்களுக்கும் வெகுகோபம் உண்டாகும். நான் ரசிகன்.

சந்திரபாபு: மன்னிக்க வேண்டும், ரசிகரே! திடீரென்று ஆள் மாறாட்டமாகி விட்டது.

ரசிகர்: நான் மன்னிக்கவேண்டிய அவசியமே யில்லை. என்னை அக்ஷயகுமாரர் என்று நீங்கள் எண்ணியதற்கு ஒரு ஆட்சேபமும் கிடையாது. அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுங்கள். நானும் பூரணரும் இதுவரை விஞ்ஞானத்தைப் பற்றிச் சர்ச்சை செய்து கொண்டிருந்தோம், சந்திரபாபு!

சந்திரபாபு: நமது பிரம்மசாரிகள் சங்கத்தில் மாதமொருமுறை விஞ்ஞான ஆராய்ச்சி நடத்தவேண்டுமென்று வெகு நாளாக எண்ணி இருந்தேன். பூரணரே! இன்று எந்த விஷயத்தைக் குறித்துச் சர்ச்சை நடந்தது?

பூரணர்: அப்படி ஒன்றும் விசேஷமாக இல்லை, சார்.

ரசிகர்: கண் பார்வையைக் குறித்துச் சிறிது ஆராய்ச்சி நடத்தினோம்.

சந்திரபாபு: அப்படியா? கண் பார்வையின் தத்துவம் ஒரு பெரிய ரகசியம்.

ரசிகர்: முற்றிலும்உண்மை. பூரணரும் அப்படிதான்நினைக்கிறார்.

சந்திரபாபு: எல்லா வஸ்துக்களின் நிழல்கள் நமது விழிகளுக்குள் தலைகீழாக விழுகின்றன. அவற்றை எவ்விதம் நேர் செய்து பார்க்கவேண்டும் என்பதைப் பற்றித் தற்போது வழங்கும் ஒரு அபிப்பிராயமும் திருப்திகரமாக இல்லை.

ரசிகர்: திருப்திகரமாக எப்படி இருக்கும்? ஒருவன் நேராகப் பார்க்கிறானா கோணலாகப் பார்க்கிறானா என்பதை அநுசரித்து அவனுடைய தலை திரும்பி விடுகிறது. மிகவும் சிக்கலான பிரச்னை.

சந்திரபாபு: ரசிகரே! உமக்கு நிர்மலாவைந் தெரியாதென்று நினைக்கிறேன். இவள் தான் நமது சங்கத்தின் முதலாவது பெண் மெம்பர்.

ரசிகர்: (நமஸ்காரம் செய்து) அப்படியானால் இவர் நமது சங்கத்திற்கு இலட்சுமி போன்றவர். சந்திரபாபு! உமது தயவால் நமது சங்கத்தில் புத்தி, கல்வி முதலிய வற்றுக்குக் குறைவில்லை. இவர் நமக்குத் திருவை அளிக்க வந்திருக்கிறார்.

சந்திரபாபு: திருவை மாத்திரம் அல்ல. சக்தியையும் கூட.

ரசிகர்: இரண்டும் ஒன்றுதான். சக்தி எப்பொழுது திருவின் (ஸ்ரீ) உருவத்தில் தோன்றுகிறாளோ அப்பொழுது தான் அவளுடைய சக்தி எல்லையற்றதாக ஆகிறது. என்ன சொல்கிறீர் பூரணரே!

[புருஷ வேஷத்துடன் சைலபாலா வருகிறாள்]

சைலபாலா: மன்னிக்கவேண்டும் சந்திரபாபு! நான் தாமதமாக வந்திருக்கிறேனோ?

சந்திரபாபு: (கைக்கடியாரத்தைப் பார்த்து) இன்னும் நேரமாகவில்லை, அபலாகாந்தரே! இன்று என் மருமகள் நிர்மலா நமது சங்கத்தில் மெம்பராகச் சேர்ந்துவிட்டாள்.

சைலபாலா: (நிர்மலாவின் சமீபத்தில் உட்கார்ந்து) இதோ பாருங்கள். புருஷர்கள் சுய நலப் புலிகள். பெண்களைத் தங்களுடைய உபயோகத்திற்காகவே கட்டுப்படுத்தி வைக்க விரும்புவர். சந்திரபாபு உங்களை எங்கள் சங்கத்திற்கு அளித்ததிலிருந்து அவருடைய தியாக புத்தி வெளியாயிற்று.

நிர்மலா: என் மாமாவிற்குத் தேசத்தின் பணியும் வீட்டின் பணியும் ஒன்றுதான். என்றால் உங்கள் சங்கத்திற்கு ஏதாவது பயன் ஏற்பட்டால் அதை அவருடைய சேவையாகவே கருதவேண்டும்.

சைலபாலா: சந்திரபாபுவின் குணாதிசயங்களைப் பற்றி இவ்வளவு தூரம் அறிந்து கொள்வதற்கு நீங்கள் கொடுத்து வைத்திருக்கவேண்டும்.

நிர்மலா: அவை எனக்குத் தெரியாதென்றால் வேறு யாருக்கும் தெரியாது!

சைலபாலா: உறவினர்கள் சில சமயம் உறவினர்களையே அறிந்து கொள்வதில்லை. உறவு சிற்சில சமயங்களில் சிறியதைப் பெரியதாக்கிக் காட்டும். பெரியதைச் சிறிய தாக்கிவிடும். சந்திரபாபுவின் உண்மையான பெருமையை நீங்கள் அறிந்துகொண்டது உங்களுடைய அறிவைக் காட்டுகிறது.

நிர்மலா: என் மாமனின் குணத்தை உள்ளபடி அறிந்து கொள் வது சுலபம். அவர் கள்ளம் கபடமற்றவர்.

சைலபாலா: அது காரணம் பற்றியே அவரைச் சரியாக அறிந்துகொள்வது கடினம். துரியோதனன் படிகச் சுவரைச் சுவர் என்று அறிய முடியாமற் போனான்.[1] கள்ளம் கபடமற்ற சுபாவத்தை எல்லோரும் புரிந்து கொண்டு விடுகிறார்களா? அதைச் சிலர் பரிகாசம் கூடச் செய்கிறார்கள். ஆடம்பரமே ஜனங்களை வசீகரிக்கிறது.

நிர்மலா: நீங்கள் கூறுவது முற்றிலும் உண்மை. வெளி மனிதர்கள் சிலருக்கு என் மாமாவைப் பற்றி ஒன்றுமே தெரியாது. இன்று நீங்கள் அவரைப் பற்றிக் கூறுவதைக் கேட்க எவ்வளவு இன்பமாக இருக்கிறது தெரியுமா?

சைலபாலா: மாமாவிடம் உங்களுக்குள்ள பக்தி எனக்கு மிகவும் மகிழ்ச்சியைத் தருகிறது.

சந்திரபாபு: (இருவரிடமும் வந்து அபலா காந்தரே! உம்மிடம் நான் கொடுத்த புத்தகத்தைப் படித்தீரோ!

சைலபாலா: படித்தேன். அதில் இருக்கும் விஷயங்களைப் பற்றிக் குறிப்புக்கள் எடுத்து உங்களிடம் காட்டுவதற் காகத் தயாராக வைத்திருக்கிறேன்.

சந்திரபாபு: எனக்கு மிகவும் உபயோகமாயிருக்கும். நிரம்ப சந்தோஷம், அபலா காந்தரே! பூரணர் இதற்காக அப்புத்தகத்தை எடுத்துக்கொண்டு போயிருந்தார். ஆனால் உடல் நலம் சரியாக இல்லை என்று கூறி அவர் ஒன்றும் செய்யவில்லை. குறிப்புக்கள் உங்களிடம் இருக் கின்றனவா?

சைலபாலா: இதோ கொண்டு வருகிறேன். (செல்கிறாள்)

ரசிகர்: (ரகசியமாக) பூரணரே! ஏன் ஒரு மாதிரியாக இருக் கிறீர்? உடம்பு சரியாக இல்லையோ?

---

1. பஞ்சபாண்டவர்கள் கட்டிய படிக மாளிகையைப் பார்க்கத் துரியோதனன் வந்தபொழுது பளிங்காலான சுவரைச் சுவர் என்று தெரியாமல் அதில் முட்டிக் கொண்டான் என்பது பாரதக்கதை.

பூரணர்: ஒன்றுமில்லை ரசிகரே! இப்பொழுது சென்றாரே அவர் தான் அபலாகாந்தரா?

ரசிகர்; ஆமாம்.

பூரணர்: எனக்கென்னவோ அவருடைய நடத்தை அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

ரசிகர்: சிறுபிள்ளையல்லவா? அதனால்—

பூரணர்: பெண்களிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை முதலில் அவர் கற்றுக் கொள்ளவேண்டும்.

ரசிகர்: நானும் அதைக் கவனித்தேன். பெண்களிடம் புருஷர்கள் நடந்து கொள்வது போல் அவன் நடந்து கொள்ளவில்லை! மேலே போய் விழுகிறான். சிறுவயதுப்பிள்ளை—

பூரணர்: நானும் ஒரு கிழவனல்ல ஒய்! ஆனாலும்—

ரசிகர்: கவனித்தேன். நீர் தொலைவிலேயே தான் இருந்தீர். ஆனால் நிர்மலா அதைப்பற்றி எப்படி நினைத்தாளோ தெரியாது. ஒரு வேளை உமக்கு அவளைப் பிடிக்கவில்லை என்று நினைத்தாலும் நினைத்திருக்கக் கூடும்.

பூரணர்: நான் என்ன செய்வேன் சொல்லும்? என்ன சாக்கை முன்னிட்டு நான் அவளிடம் சென்று பேசமுடியும் என்று எனக்குத் தோன்றவில்லையே.

ரசிகர்: இதை நீங்கள் எண்ணிப்பார்த்தீர்களானால் அதற்கு முடிவே யில்லை. யோசிக்காமல் அருகில் சென்றால் வார்த்தைகள் தானாகவே வந்துவிடும்.

பூரணர்: இல்லை, ரசிகரே! எனக்கு ஒரு வார்த்தை கூட வெளி வராது. என்னவென்று ஆரம்பிப்பது? நீர் தான் சொல்லுமே!

ரசிகர்: பிரளயம் ஏற்பட்டு விடக்கூடிய வார்த்தைகள் ஒன்றையும் பேசவேண்டாம் ஓய்! முதன்முதலாக "இன்று திடீரென்று வெயில் ஏறி விட்டது" என்று தொடங்குமே?

பூரணர்: "ஆமாம், உஷ்ணம் அதிகம் தான்" என்று அவள் சொல்லி விட்டால் அப்புறம் என்ன பேசுவது?

[விபினரும் ஸ்ரீசரும் வருகிறார்கள்]

ஸ்ரீசர்: (சந்திரபாபுவையும் நிர்மலாவையும் நமஸ்கரித்து, நிர்மலாவை நோக்கி) உங்கள் உற்சாகம் கடியாரத்தை விட வேகமாகச் செல்கிறது. பாரும்! மணி இன்னும் ஆறரை கூட ஆகவில்லை.

நிர்மலா: உங்கள் சங்கத்தில் மெம்பரான பிறகு இன்று என் முதல் நாள். அதற்காகவே சற்று முன் கூட்டியே வந்து விட்டேன். சங்கோசம் நீங்கச் சிறிது காலம் பிடிக்கும்.

விபினர்: சிறிதும் சங்கோசப் படவேண்டாம் என்று முதலிலேயே உங்களைக் கேட்டுக் கொள்ளுகிறோம். இன்றுமுதல்

எங்கள் பணுவை நீங்களே ஏற்றுக் கொள்ளவேண்டும். 'திரு' வில்லாத புருஷ அங்கத்தினர்களைக் கருணை கூர்ந்து நோக்கி, சபையின் நடவடிக்கைகளைத் திறமையுடன் நடத்துங்கள்.

ரசிகர்: (ரகசியமாக) பூரணரே! நீரும் சென்று ஏதாவது பேசும்.

பூரணர்: என்ன பேசுவது?

நிர்மலா: அவ்வளவு திறமை எனக்கு இல்லை.

ஸ்ரீசர்: நாங்கள் பிற்போக்குடையவர்கள் என்று ஒரு வேளை நினைத்துவிட்டீர்களோ?

விபினர்: இரும்பை விடக் கடினமான பொருள் வேறு கிடையாது. நெருப்பின் உதவியால் அதை உருக்கிப் பயன் படுத்துகிறோம். எங்களைப் போன்ற கடினமான பொருள்களை அசையச் செய்ய உங்களைப் போன்ற ஒரு ஒளிப் பொருள் மிகவும் அவசியம்.

ரசிகர்: (ரகசியமாக) கேட்டீரா பூரணரே!

பூரணர்: நான் என்ன பேசுவது சொல்லும்.

ரசிகர்: 'அசையச் செய்யவும் நெருப்பு வேண்டும் உருகச் செய்யவும் அது வேண்டும்' என்று கூறும்.

விபினர்: என்ன பூரணரே! ரசிகருடன் அறிமுகம் ஆகிவிட்டது போல் காண்கிறதே!

பூரணர் ஆமாம்.

விபினர்: உமது உடல்நிலை இன்று சரியாகத்தானே இருக்கிறது?

பூரணர்: ஆமாம்.

விபினர்: வந்து வெகு நேரமாகிறதோ?

பூரணர்: இல்லை.

விபினர்: இப்பொழுது குளிரானது பந்தயக் குதிரையைப் போல் வேகமாக ஓடி மாதத்தின் நடுவில் சட்டென்று நின்று விட்டது போலிருக்கிறதே!

பூரணர்: ஆமாம்.

ஸ்ரீசர்: ஓய் பூரணரே! போன வாரம் உடம்பு உமக்குச் சௌகரியமாக இல்லையே! இப்பொழுது சரியாகி விட்டது போல் காண்கிறதே!

பூரணர்: ஆமாம்.

ஸ்ரீசர்: இது வரையில் பிரம்மசாரிகள் சங்கத்தில் இருந்து வந்த குறை என்னவென்பது இன்று கூட்டத்திற்குள் நுழைந்தவுடன்தான் எனக்குத் தெரிந்தது. பொன் மயமான மகுடத்தின் இடையே ஒரு மாணிக்கம் அமைய வேண்டியிருந்தது. அது இன்று பொருந்தி விட்டது. என்ன பூரணரே!

பூரணர்: உம்மைப் போல் கவன சக்தி எனக்குக் கிடையாது. அடுக்குப் பேச்சுப் பேசவும் தெரியாது. அதிலும் பெண்கள் விஷயத்தில்.

ஸ்ரீசர்: உம்முடைய குறைக்காக நான் பெரிதும் வருந்துகிறேன். காலப் போக்கில் அபிவிருத்தி அடைவீர் என்று நம்புகிறேன்.

விபினர்: (ரசிகரிடம் தனியாக) இவ்விரு வீரர்களும் யுத்தம் புரியட்டும். உம்மிடம் ஓரிரண்டு வார்த்தைகள் பேச வேண்டும். அந்த நோட்டைப்பற்றி அப்புறம் ஏதாவது பிரஸ்தாபம் ஏற்பட்டதா?

ரசிகர்: 'தவறு செய்வது மானிட இயல்பு. மன்னிப்பது தெய்வத்தின் இயல்பு' என்று பேச்சுக்கிடையே சொல்லி வைத்தேன்—

விபினர்: அவர்கள் என்ன சொன்னார்கள்?

ரசிகர்: ' ஒன்றும் கூறுமல் மின்னலைப்போல் மறைந்துவிட்டாள்.

விபினர்: மறைந்து விட்டார்களா?

ரசிகர்: ஆம். ஆனால் மின்னலோடு போயிற்று. இடி விழவில்லை.

விபினர்: இடியோசை?

ரசிகர்: அதுவும் கிடையாது.

விபினர்: பிறகு?

ரசிகர்: ஓரிடத்திலோ மற்றோரிடத்திலோ ஒருவேளை கொஞ்சம் மழை பெய்யும் என்று நினைக்கிறேன்.

விபினர்: இதன் அர்த்தம்?

ரசிகர்: எனக்கே தெரியாது. அர்த்தமும் இருக்கலாம். அனர்த்தமும் இருக்கலாம்.

விபினர்: ரசிகரே! நீர் கூறுவது ஒன்றும் புரியவில்லையே!

ஸ்ரீசர்: எப்படிப் புரியும்? அது ஒரு புரியாத விஷயம்.

ரசிகர்: (அருகில் வந்து) எது புரியாத விஷயம்?

ஸ்ரீசர்: இந்த மழை - மின்னல் - இடி விஷயம் தான்.

ரசிகர்: ஏ விபினு! இதை விடப் புரியாத ஒரு விஷயத்தைக் கேட்க வேண்டுமானால் பூரணரிடம் கேட்கலாம்.

விபினர்: புரியாத விஷயங்கள் எனக்கு அவ்வளவாக ருசிப்ப

ஸ்ரீசர்: சண்டை போடுவதை விடச் சமாதானம் செய்வது சிரமமான காரியம். அதில் நீ நிபுணன். உனக்கொரு விண்ணப்பம். பூரணனைச் சிறிது சமாதானப் படுத்தி அழைத்து வா. நான் அதற்குள் ரசிகருடன் அந்த மழை, இடி, மின்னல் விஷயத்தைக் குறித்துச் சற்றே அளவளாவுகிறேன்.

[விபினர் செல்கிறார்]

ரசிகரே! அன்று ஒருவருடைய பெயர் நிருபபாலா என்று சொன்னீர்களே—அவர்—அவர்—அவர்—அவரைப் பற்றிச் சிறிது விவரமாகக் கூறும். அன்று நான் நான் அவரைப் பார்த்தது ஒரு கணமே எனினும் அவருடைய முகத்தில் தோன்றிய அன்புப் பார்வையை நான் மறக்கவே முடியவில்லை!

ரசிகர்: விவரமாகக் கூறினால் உமது உற்சாகம் இன்னும் அதிகரிக்கும். இத்தகைய குதூகலம் 'ஹவிஷா க்ருஷ்ண வர்த்மேவ பூய ஏவாபி வர்ததே' (அவி சொரிவதால் அக்கினி மூள்வது போல் இன்னும் மூண்டுவிடும்) அதை நான் இதுவரையில் அடக்கி வைத்திருக்கிறேன். ஆயினும் அந்த மென்மை பொருந்திய உள்ளத்தின் அன்புப் பெருக்கு என்னிடம் 'க்ஷணே க்ஷணே தந்நவ தாமுபைதி' (கணந்தோறும் புதுமையை அடைகிறது)

ஸ்ரீசர்: நல்லது. அவர்-இல்லை, நான்-அதே நிருபபாலாவின் விவரங்களைத்தான் கேட்கிறேன்.

ரசிகர்: அது எனக்கு நன்றாகப் புரிகிறது.

ஸ்ரீசர்: என்ன கேட்பதென்றே எனக்குத் தோன்றவில்லை. அவரைப்பற்றி நீர்தான் ஏதாவது சொல்லுமே. அவர் நேற்று என்ன செய்தார்? இன்று காலை என்ன செய்தார்? வெகு சாமானிய நிகழ்ச்சிகளா யிருந்தாலும் சொல்லும். நான் கேட்கிறேன்.

ரசிகர்: (ஸ்ரீசருடைய கையைப் பிடித்துக்கொண்டு) மிகவும் சந்தோஷம் ஸ்ரீசபாபு! நீர் உண்மையிலேயே நல்லெண்ணம் உடையவர். அவளை நீர் கண்டது ஒரு கணமே எனினும் அவளிடமிருக்கும் சிறப்பை அறிந்துகொண்டு விட்டீர். அவள் என்னை அழைத்து, 'ரசிகரே! அந்த மண்ணெண்ணெய் விளக்கின் திரியைச் சிறிது தூண்டிவிடும்' என்று சொன்னால் ஆதி கவியாகிய வால்மீகியின் காதில் அனுஷ்டுப் சந்தம்[1] விழுந்ததுபோல் அது எனக்கு இன்பத்தை விளைவிக்கும். இதைக் கேட்டால் நீர் ஒருவேளை சிரித்தாலும் சிரிப்பீர். அன்றொரு நாள் நான் உள் நுழைந்த பொழுது நிருபபாலா ஊசியில் நூலைக் கோத்துக்கொண் டிருந்தாள்.

1. வடமொழியில் ஆதி கவி எனக் கருதப்படும் வால்மீகி முனிவர் வனத்தில் ஒரு சமயம் ஒரு வேடன் பறவையொன்றை அம்பெய்து கொன்றதைப் பார்த்து உள்ளம் உருகவும் அப்பொழுது அவருடைய நாவிலிருந்து "மாநிஷாத" என்ற சுலோகம் அனுஷ்டுப் சந்தத்தில் வெளிப்பட்டதென்றும் அதைக் கேட்டு அவரே வியப்புற்றனர் என்றும் வரலாறு.

மடியின்மீது ஒரு தலையணை உறை கிடந்தது. அதைப் பார்த்ததும் எனக்கு மட்டற்ற ஆச்சரியம் உண்டாயிற்று. எத்தனையோ முறை தையற்காரர்களின் கடை வாசல் வழியாகச் சென்றிருக்கிறேன். ஒரு தடவையேனும் தலையை நிமிர்த்திப் பார்த்தது இல்லை—

ஸ்ரீசா: வீட்டு வேலைகள் அனைத்தையும் அவர் தாமே செய்வார் போலும்!

[சைலபாலா வருகிறாள்]

சைலபாலா: ரசிகருடன் என்ன ஆராய்ச்சி நடந்துகொண்டிருக்கிறது?

ரசிகர்: ஒன்றுமில்லை, அபலா காந்தரே! வெகு சாதாரண விஷயம்.

சந்திரபாபு: மீடிங்கிற்கு நேரம் வந்துவிட்டது. இனித் தாமதம் செய்யக் கூடாது. பூரணரே! விவசாயக் கல்லூரி சம்பந்தமாக நீர் கூற விரும்பிய விஷயத்தைப் பற்றிப் பேசும்.

பூரணர்: (எழுந்து நின்று கடிகாரத்தின் சங்கிலியைத் தடவிக் கொண்டே) இன்று..இன்று.... (இருமுகிறார்)

ரசிகர்: (அவர் அருகில்போய் மெதுவாக) இன்று இந்தச் சபை—

பூரணர்: இன்று இந்தச் சபை—

ரசிகர்: ஒரு புதிய அழகையும் கௌரவத்தையும் பெற்றுள்ளது.

பூரணர்: ஒரு புதிய அழகையும் கௌரவத்தையும் பெற்றுள்ளது.

ரசிகர்: முதலில் அதற்காக என் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பூரணர்: முதலில் அதற்காக என் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ரசிகர்: (மெதுவாக) மேலே பேசும் பூரணரே!

பூரணர்: என் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ரசிகர்: பயமென்ன? பேசிக்கொண்டே செல்லுங்கள்.

பூரணர்: ஒரு புதிய அழகையும் கௌரவத்தையும் (இருமுகிறார்) ஒரு புதிய அழகையும் (இருமுகிறார்) என் பாராட்டுதலை—

ரசிகர்: (எழுந்து) தலைவரவர்களே! ஒரு விண்ணப்பம். இன்று பூரணர் எல்லாச் சபையோரின் முன்னிலையில் தோன்றியிருக்கிறார். அவருக்கு உடம்பு சுகமில்லை. அதனால்தான் உற்சாகத்துடன் அவரால் பேச முடியவில்லை. இன்று நமது சங்கத்தில் முதன் முதலாக அருணோதயம் ஆகியிருக்கிறது. அதைப் பார்ப்பதற்குட்

பறவை தன்னுடைய கூட்டைவிட்டு வெளிக் கிளம்பியது. ஆனால் அதற்கு உடல்நிலை சரியில்லாததால் குரல் சக்தி யற்றுப் போய்விட்டது. ஆகவே அதற்கு இன்று ஓய்வு அளித்துவிட வேண்டும். அதிகாலையில் உதித்த அருண னின் ஒளியைத் துதிபாட எழுந்து பிறகு குரலற்றுப் போன இந்த பக்தனின் சார்பில் நான் உங்களை மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன். பூரணபாபு! அநேக மாய் இன்றைய கூட்டம் இத்துடன் முடிவடையக் கூடும். நீர் இருக்கும் நிலையில் உம்மை மீண்டும் பேசச் சொல்வது தகாது. தலைவரே! மன்னிக்கவேண்டும். இன்று நமது சங்கத்திற்கு விஜயம் செய்து தம்முடைய ஒளியால் அதைப் பயன்பெறச் செய்த புது அங்கத் தினரும் நம்மை மன்னிப்பாராக. மன்னிப்பது அவ ருடைய பெண் குலத்திற்கே இயற்கையாக அமைந்த குணம்.

சந்திரபாபு: சிறிது காலமாகவே பூரணரின் தேகநிலை சரி யில்லை. ஆகவே அவருக்கு நாம் தொந்தரவு கொடுக்கக் கூடாது. மேலும் அபலா காந்தர் கஷ்டப்பட்டு உழைத்து நமது அலுவல்களில் பலவற்றைப் பூர்த்தி செய்திருக்கிறார். இதுவரையில் நமது நாட்டு விவசாய சம்பந்தமாக அரசாங்கத்தார் பிரசுரித்துள்ள ரிப் போர்ட்டுகள் அனைத்தையும் அவரிடம் கொடுத்திருக் கிறேன். அவர் அவற்றைப் படித்து நிலத்திற்கு எருப் போடும் விஷயங்களைச் சேகரித்து வைத்திருக்கிறார். அவற்றைத் தழுவி அவர் சாதாரணமாக மக்கள் பேசும் வங்காளி பாஷையில் ஒரு நூலை எழுதுவதற்கு ஏற்பாடு செய்துகொண் டிருக்கிறார். இவர் இவ்வளவு உற்சாகத் துடனும் திறமையுடனும் நமது சங்கத்தின் காரியங்களை நிர்வகித்து வருவதற்காக அவருக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட் டிருக்கிறோம்.

மேனாட்டு மாணவர்களின் திட்டங்களைச் சேகரிக்கும் பொறுப்பை விபினர் ஏற்றுக்கொண் டிருக்கிறார். பொது மக்களின் நன்கொடைகளின் மூலம் லண்டன் மாநகரில் எத்தகைய நன்மை பயக்கும் காரியங்கள் செய்யப்பட்டு வருகின்றன என்பதை நமது ஸ்ரீசர் நன்கு ஆராய்ந்து ஒரு நூல் எழுதி வருகிறார். அது இன்னும் முற்றுப் பெறவில்லை என்று நினைக்கிறேன். நானும் ஒரு சோதனை நடத்தி வருகிறேன். நமது நாட்டில் செய்யப் படும் மாட்டு வண்டிகளில் ஒரு பெரிய குறை இருப்பது உங்கள் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். வண்டியின்

பின்புறத்தில் பாரம் அதிகமாகி விட்டால் முன்புறம் ஆகாயத்தில் கிளம்பி மாட்டின் கழுத்துக் கயிற்றை இறுக்கி விடுகிறது. ஏதாவது ஒரு காரணத்தினுல் மாடு கீழே விழுந்துவிட்டால் வண்டியும் அதன்மீது ஏற்றியிருக்கும் சாமான்கள் அனைத்தும் மாட்டின்மீது சரிந்து விடுகின்றன. இத்தகைய விபத்துக்களைத் தடுப்பதற்கு ஓர் உபாயம் கண்டு பிடிக்கும் முயற்சியில் நான் ஈடுபட்டிருக்கிறேன். வெற்றி பெறுவேன் என்ற நம்பிக்கை எனக்குண்டு. மாடுகளிடம் அன்பு காட்டுவதுபற்றி நாம் தினம் பேசிக்கொண் டிருக்கிறோம். ஆனுல் நமது கண் முன்னமேயே அவைகளுக்கு நேரும் நூற்றுக் கணக்கான அனுவசியக் கஷ்டங்களைப் பார்த்துக்கொண்டு வாளா விருக்கிறோம். இந்த வாய் வேதாந்தத்தைப் போன்ற வெட்கந் தரும் விஷயம் உலகில் மற்றொன்றில்லை. நமது சங்கம் இது சம்பந்தமாக ஏதாவது செய்தால் வாயில்லாப் பிராணிகளின் துயரம் சற்றுக் குறையும். நான் இரவு வேளைகளில் வண்டிப் பேட்டைக்குச் சென்று மாடுகளை அன்புடன் நடத்தும் விஷயமாகச் சர்ச்சை செய்து வருகிறேன். மாடுகளைக் கொடுமையாக நடத்துவது நன்மையுமல்ல, நியாயமுமல்ல என்பதை ஹிந்துக்களான வண்டிக்காரர்களுக்கு வற்புறுத்துவது கஷ்டம் என்று எனக்குத் தோன்றவில்லை. இது சம்பந்தமாக நான் அவர்களிடையே ஒரு பஞ்சாயத்து அமைக்க முயற்சி செய்து வருகிறேன்.

ஸ்ரீமதி நிர்மலா தேவி விபத்துக்களில் முதல் உதவி (First Aid) புரிதல், ரோக சிகிச்சை செய்தல் இவற்றைக் கற்றுக்கொள்ள டாக்டர் ராமரத்தின பாபுவிடம் பயிற்சிபெற்று வருகிறுள். மேலும் வீடு வீடாகச்சென்று பெண்மணிகளுக்கு வைத்தியப் பயிற்சி அளித்தும் வருகிறுள். இவ்விதமாக ஒவ்வொரு அங்கத்தினரும் புரிந்து வரும் தனிப்பட்ட சேவையினுல் நமது சிறுபிரம்மசாரிகள் சங்கம் காலப்போக்கில் தேசத்திற்குமகத்தான தொண்டு புரியப்போகிறது என்பதில் சந்தேகம் கிடையாது.

ஸ்ரீசர்: விபினு! என் வேலையை நான் இன்னும் ஆரம்பிக்கவேயில்லை.

விபினர்: என் நிலைமையும் அதுதான்.

ஸ்ரீசர்: ஆனுல் செய்தே தீரவேண்டும்.

விபினர்: நானும் செய்தே தீரவேண்டும்.

ஸ்ரீசர்: சிறிது காலம் மற்ற விஷயங்களைக் குறித்துச் சிந்தனை செய்யாமல் இருந்தால்தான் ஏதாவது முடியும்.

விபினர்: எனக்கும் அதுவே தோன்றுகிறது.

ஸ்ரீசர்: அபலா காந்தர் அதிருஷ்டசாலி. தம் வேலையைச் சீக்கிரமாக முடித்து விடுகிறார். எப்படி என்று புரிய வில்லை.

விபினர்: அதுதான் பெரிய ஆச்சரியம். அவர் மனம் வேறு ஒன்றையும் பற்றிச் சிந்திப்பதில்லை என்று தோன்று கிறது.

ஸ்ரீசர்: வா! அவரிடம் சென்று கேட்போம். (சைலபாலா விடம் வருகின்றனர்)

பூரணர்: ரசிகரே! உமக்கு என் நன்றியை எப்படித் தெரி வித்துக் கொள்வதென்று தெரியவில்லை.

ரசிகர்: அதெல்லாம் இருக்கட்டும். நான் புரிந்துகொண் டேன். ஆனால் எல்லோரும் என்னைப்போல் இருக்க மாட்டார்கள். ஜாடை தெரியாது. வெளிப்படையாகச் சொல்லியே தீரவேண்டும்.

பூரணர்: நீர் என் உள்ளத்தை அப்படியே அறிந்துகொண்டு விட்டீர், ரசிகரே! நீர் கிடைத்தது என் பேரதிர்ஷ்டம். என் விஷயத்தைக் கூற எனக்கே நா எழவில்லை. உம் முடைய யோசனைகள் என்ன?

ரசிகர்: முதலில் நீர் அவளிடம் போய் ஏதாவது ஒரு சம்பா ஷணையை ஆரம்பிக்க வேண்டும்.

பூரணர்: ஐயா! அதோ பாரும்! அபலா காந்தர் மறுபடியும் அவளருகில் போய் உட்கார்ந்து விட்டாரே!

ரசிகர்: இருக்கட்டும்! அவளை நான்கு புறமும் சுற்றி அவர் வளைத்துக் கொள்ளவில்லையே! வியூகத்தை உடைப்பது போல் அபலா காந்தரைப் பிளந்துகொண்டு செல்ல வேண்டியதில்லையே! நீரும் போய் ஒருபுறம் நில்லும், பூரணரே!

பூரணர்: சரி, பார்க்கிறேன்.

சைலபாலா: (நிர்மலாவை நோக்கி) என்னை இவ்வளவு புகழ வேண்டாம். நிர்மலா தேவி, என்னைவிட நீங்கள் புரியும் சேவை மிகச் சிறந்தது. ஆனால் பூரணருக்காக நான் வருந்துகிறேன். நீங்கள் இன்று சங்கத்திற்கு வரப் போகிறீர்கள் என்று அவர் மிக உற்சாகத்துடன் வந் திருந்தார். அதை விவரிக்க முடியாமல் போனதுபற்றி அவர் மனமுடைந்து உட்கார்ந்து விட்டார். நீங்கள் அவரைச் சற்று—

நிர்மலா: சங்கத்தின் இதர மெம்பர்களிடம் நீங்கள் நடந்து கொள்வதைவிட மிகவும் அதிகமான அன்புடன் என் னிடம் நடந்துகொள்வது எனக்கு நாணத்தை உண்

விக்கிறது. என்னை ஒரு சாதாரண அங்கத்தினராகவே நீங்கள் கருதவேண்டும். பெண்ணென்று கருதித் தனிப் பட்ட முறையில் நடத்தவேண்டாம்.

சைலபாலா: நீங்கள் பெண்ணாகப் பிறந்த அதிர்ஷ்டத்தை எங்கள் சங்கம் என்றும் மறக்கமுடியாது. நீங்கள் எங்களுடன் சேர்ந்து ஆற்றும் தொண்டைவிடப் பன் மடங்கு சேவை தனிப்பட்ட முறையில் புரியக் கூடும். கயிற்றின் மூலம் படகை இழுத்துச் செல்பவர்கள் படகி லிருந்து சற்றுத் தூரத்தில்தான் இருக்கவேண்டும். சந்திர பாபு எங்கள் படகின் சுக்கானைச் செலுத்துபவர். ஆகையால் அவர் எங்களைவிடச் சற்று உயர்ந்த ஸ்தானத்தில் இருக்கிறார். நீங்கள்தான் கயிற்றின் மூலம் படகை இழுக்கவேண்டும். ஆகவே நீங்கள் தனித்திருக்க வேண்டும். நாங்கள் எல்லோரும் அடித் தட்டில் உட்காருபவர்களே.

நிர்மலா: குணத்திலும் நடத்தையிலும் நீங்கள் மற்ற அங்கத் தினர்களை விடத் தனிப்பட்டவராகக் காணப்படுகிறீர். உங்களை நான் பார்த்த முதல் நாளே நீங்கள்தான் இச் சங்கத்தில் எனக்கு அரும் துணைவர் என்பது எனக்குத் தெரிந்துவிட்டது.

சைலபாலா: அது என் அதிர்ஷ்டம். அடாடா! பூரணரே! அருகில் வாரும். உம்மைப் பற்றித்தான் பேசிக்கொண் டிருந்தோம். உட்காரும்.

ஸ்ரீசர்: அபலா காந்தரே! சற்று இங்கு வரமுடியுமா? சில விஷயங்கள் பேசவேண்டும். (தனிமையில்) சங்கத்தின் பழைய அங்கத்தினர்கள் மூவருக்கும் நீங்களும் நிர்மலா வும் இன்று ஒரு பாடம் கற்பித்து விட்டீர்கள். அது நல்லதாயிற்று. பழமைக்குப் புத்துயிர் அளிப்பதே புதுமையின் பிரயோஜனம்.

சைலபாலா: ஆனால் இன்று புதிய ஈரவிறகைப் பற்றவைப் பதற்குப் பழைய உலர்ந்த விறகு தேவையாயிருக்கிறது.

ஸ்ரீசர்: சரி. அதைப்பற்றிப் பிறகு யோசிக்கலாம். ஆனால் அக்கைக்குட்டை? அதைத் திருடிவிட்டு நான் என் எதிர் காலத்தையே பாழாக்கிக் கொண்டேன். அக்கைக் குட்டையையும் இழக்க முடியாது. (சட்டைப்பையி லிருந்து ஒரு கைக்குட்டையை எடுத்து) இதோ நான் ஒரு டஜன் பட்டுக் கைக்குட்டைகள் கொண்டுவந்திருக் கிறேன். இவற்றை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். அக் கைக்குட்டையின் மதிப்பிற்கு இவை சமான மானவை அல்ல. அதன் மதிப்பிற்குரிய விலை கொடுக்க

வேண்டுமாயின் சீனுவையும் ஜப்பானையும் சூறையிட வேண்டியதுதான்.

சைலபாலா: ஐயா! உமது சூழ்ச்சியைக் கண்டுபிடிக்கக் கூடிய புத்தியைக் கடவுள் எனக்குக் கொடுத்திருக்கிறார். ஒரு டஜன் கைக்குட்டைகளை நீர் எனக்காக அளிக்க வரவில்லை. யாருடைய கைக்குட்டையைத் திருடினீரோ அவரை உத்தேசித்து என்னிடம்—

ஸ்ரீசர்: அபலா காந்தரே! கடவுள் உமக்குப் புத்தியை ஏராளமாக அளித்திருக்கிறார். சந்தேகமே இல்லை. ஆனால் கருணை என்பது சற்றுக் குறைவாகவே இருக்கிறது. இந்த அபாக்கியசாலியாகிய என்னிடம் அந்தக் கைக்குட்டையைத் திருப்பிக் கொடுத்து விட்டீரானால் உம்மிடம் இருக்கும் அக்குறையும் அகன்று விடும்.

சைலபாலா: சரி. கருணையை வரவழைத்துக் கொள்கிறேன். ஆனால் நீங்கள் சங்கத்திற்காக எழுதப் போகும் புத்தகத்தை முடித்துத் தரவேண்டும்.

ஸ்ரீசர்: நிச்சயமாகத் தருகிறேன். கைக்குட்டை திரும்பி வந்த பிறகுதான் காரியத்தில் மனம் ஓடும். அப்பொழுது வேறு பொருளைத் தேடித் திரியாமல் உண்மையை நாடி உழைப்பேன்.

[அறையின் மற்றொரு புறத்தில்]

விபினர்: புரிந்ததா ரசிகரே! அந்த நோட்டில் காணப்படும் பாட்டுக்களைப் பொறுக்கி எடுத்தவரின் திறமையை எப்படிப் புகழ்வது? அவற்றைக் கவனம் செய்தவர்களுக்குப் புலமை மாத்திரம் இருந்திருக்கலாம். தேர்ந்தெடுத்தவர்களுக்குக் கவிதைச் சுவையுடன் ஓர் அழகு உணர்ச்சியும் இருக்கிறதென்பது நிச்சயம்.

ரசிகர்: தேர்ந்தெடுத்தவரின் திறமையைச் சரியாகவே புரிந்து கொண்டிருக்கிறீர். கொடியில் மலர்கள் தாமாகவே மலரும். மாலை தொடுப்பவர்களிடம் தான் திறமையும் ருசியும் வேண்டும்.

விபினர்: உங்களுக்கு இப்பாட்டு நினைவிருக்கிறதா?

காணாத கடல் மீது சென்ற என் ஓடம்
கல்லொன்று மோதிக் கவிழப்போ யாண்டோர்
மாணார்நல் ஓடத்து மகிழ்ந்தா டும் போது
மடுவில்லா வோரிடத்து மூழ்கியது மீண்டே

பொதியலர் மல்கும் பூங்கா நாடிப்
போக்கில் நதியிற் போகுங் காலை

அதிசயத் தென்றல் அலர்பாய் தழுவ
ஆனந்த நிர்மல வான்வெளி கண்டு
சுதி செயும் இன்பச் சிந்தையிற் சுக்கான்
சூழ்புறம் இருக்கச் சுறுக்கென வாங்கோர்
விதி செயு மாயம் எதுவென அறியேன்
விரைந்தே படகும் மூழ்கிய தென்னே!

ரசிகர்: படகு கவிழட்டுமே! என்ன சொல்கிறீர்?

விபினர்: கவிழட்டும். ஆனுல் கவிழ்ந்த இடத்தை மாத்திரம் அடையாளம் வைத்துக்கொள்ளவேண்டும். சரி! ரசிகரே! இப்பாட்டை ஏன் அவர் தம் நோட்டில் எழுதி வைத்தார்?

ரசிகர்: 'பெண்களின் மனத்தைப் பிரமனும் அறியான்' என்று ஒரு பழமொழி இருக்கிறது. இந்த எளிய ரசிகனுக்கு அது எப்படித் தெரியும்?

ஸ்ரீசர்: (அருகில் வந்து) விபினரே, சந்திரபாபுவிடம் ஒருமுறை சென்றுவாரும். உண்மையில் நாம் நம் கடமையைச் செய்யத் தவறிவிட்டோம். எதாவது ஒரு விஷயத்தைப் அவரை யோசனை கேட்டால் சிறிது திருப்தி அடைவர்.

விபினர்: சரி. (செல்கிருர்)

ஸ்ரீசர்: ரசிகரே! அத்தலையணை உறை விஷயம் கூறினீரே, அவர் வீட்டுவேலை எல்லாம் தாமே செய்வர் போலும்.

ரசிகர்: ஒரு வேலை விடாமல் செய்வார்.

ஸ்ரீசர்: அன்று நீர் சென்றபோது அவர் மடிமீது தலையணை உறை கிடந்தது. அவர்—

ரசிகர்: தலையைக் குனிந்து கொண்டு ஊசியில் நூலைக் கோத்துக் கொண்டிருந்தாள்.

ஸ்ரீசர்: நூலைக் கோத்துக் கொண்டிருந்தாள். ஏற்கனவேயே ஸ்நானம் செய்தாகிவிட்டது போலும்.

ரசிகர்: இல்லை. அப்பொழுது மணி மூன்றிருக்கும்.

ஸ்ரீசர்: மணி மூன்று. கட்டிலின் மீது உட்கார்ந்து—

ரசிகர்: இல்லை. வராந்தாவில் பாயை விரித்து அதன் பேரில்—

ஸ்ரீசர்: வராந்தாவில் பாயை விரித்து அதன் பேரில் அமர்ந்து ஊசியில் நூலைக்—

ரசிகர்: கோத்துக் கொண்டிருந்தாள். (தமக்குள்) இனி இதைப் பொறுக்க முடியாது.

ஸ்ரீசர்: இப்பொழுது நான் அதை ஒரு சித்திரம் போல் காண முடிகிறது. கால்களை மடக்கிக் கொண்டு, தலையைக் குனிந்து கொண்டு, அவிழ்த்து விடப்பட்ட கூந்தல் முகத்தை மறைக்க, நடுப்பகலின் ஒளி—

**விபினர்:** (அருகில் சென்று) நீ எழுதப் போகும் புத்தகத்தைப் பற்றி உன்னுடன் சந்திரபாபு பேச வேண்டுமாம்.

[ஸ்ரீசர் செல்கிறார்]

**ரசிகர்:** (தமக்குள்) இன்னும் எவ்வளவுதான் பிதற்றுவது?

[வீட்டின் மற்றொரிடத்தில்]

**நிர்மலா:** (பூரணரிடம்) உங்களுக்கு இன்று உடம்பு சரியில்லை என்று அறிகிறேன்.

**பூரணர்:** இல்லை. சரியாகவே இருக்கிறது. ஆமாம். ஏதோ சிறிது அசௌக்கியம். (இருமுகிறார்) உங்கள் உடம்பு சௌவுக்கியம்தானே?

**நிர்மலா:** சௌவுக்கியம்தான்.

**பூரணர்:** நீங்கள் - இல்லை - நான் உங்களைக் கேட்க விரும்புகிறேன்-நீங்கள்-வந்து-நீங்கள்-மில்டன் கவி இயற்றிய 'அரியோபாஜிடிகா' என்ற நூலை—எங்களுக்கு எம். ஏ. வகுப்புக்குப் பாடமாக வைக்கப்பட்டிருக்கிறதே—படித்திருக்கிறீர்களா?

**நிர்மலா:** நான் படித்ததில்லை.

**பூரணர்:** படித்ததில்லையா? (பிரமித்துப் போகிறார்.) வந்து-இன்று என்ன வெயில் பார்த்தீர்களா? நான் ரசிகருடன் -ரசிகருடன்-ஒரு வார்த்தை பேசிவிட்டு வருகிறேன்.

[செல்கிறார்]

[வீட்டின் மறுபுறம்]

**விபினர்:** ரசிகரே! அவர் அப்பாட்டை ஏதோ ஒரு முக்கிய காரணத்திற்காக எழுதி வைத்திருக்கிறார் என்று சொல்கிறீரா!

**ரசிகர்:** இருக்கலாம்- ஏது! என்னை மிஞ்சி விட்டீரே! இது எனக்குத் தோன்றவில்லையே!

**விபினர்:** காணாத கடல் மீது சென்ற என் ஓடம்
கல்லொன்று மோதிக் கவிழப்போ யாண்டோர்
மாணார் நல் ஓடத்து மகிழ்ந்தாடும் போது
மடுவில்லா வோரிடத்து மூழ்கியது மீண்டே

ரசிகரே! இக்கவிதையில் படகு என்று எது குறிப்பிடப்படுகிறது?

**ரசிகர்:** இதயம்தான். சந்தேகமேயில்லை. ஆனால் அந்தக் கடல், பாறை இதெல்லாம் எதைக் குறிக்கின்றன என்பது யோசிக்கத்தகுந்த விஷயம்.

**பூரணர்:** (அருகில் வந்து) விபினரே! மன்னிக்கவேண்டும். ரசிகருடன் எனக்கு ஒரு அவசரவேலை இருக்கிறது.

விபினர்: சரி, நான் வருகிறேன். (செல்கிறார்)
பூரணர்: என்னைப் போன்ற முட்டாள் உலகிலேயே கிடையாது.
ரசிகர்: உங்களைவிடப் பெரிய முட்டாள்களான பலர் தங்களைப் புத்திசாலிகள் என்று நினைத்துக் கொண்டிருக்கின்றனர்; உதாரணம்-நான்.
பூரணர்: தனியாக ஓரிடம் கிடைத்தால் உம்முடன் பேசுவதற்கு அநேக விஷயங்கள் உள்ளன. மீட்டிங் முடிந்த பிறகு இன்றிரவு சிறிது அவகாசம் கிடைக்குமா?
ரசிகர்: பேஷாகக் கிடைக்கும்.
பூரணர்: குளக்கரை வீதியில் அழகான நிலவு வரும்.
ரசிகர்: (தமக்குள்) என்ன கர்மம் இது?
ஸ்ரீசர்: (அருகில் வந்து) பூரணர் உங்களுடன் பேசியாயிற்று என்றே நினைக்கிறேன். இன்றிரவு எனக்குச் சிறிது அவகாசங் கிடைக்குமோ?
ரசிகர்: 'கிடைக்கலாம்.
ஸ்ரீசர்: அப்படியானால் நேற்றிரவைப் போல் கழிப்போம். வீட்டில் சந்திப்பதை விடத் தெருவில் கூடுவது எவ்வளவு சிறந்தது என்பதை நேற்றுப் பார்த்தீர்கள் அல்லவா?
ரசிகர்: கூடுவோம். (தமக்குள்) ஜலதோஷம் வந்து கூடும். இருமல் வந்து கூடும். தொண்டை தயிரைப் போல் கட்டிவிடும்.

[ஸ்ரீசர் செல்கிறார்]

பூரணர்: ரசிகரே, நீங்களாக இருந்தால் என்ன பேசி சம்பாஷணையை ஆரம்பித்திருப்பீர்கள்?
ரசிகர்: 'அன்று உங்கள் வீட்டு மாடி மீதிருந்து பலூன் பறந்ததே, பார்த்தீர்களா?' என்று கேட்டிருப்பேன்.
பூரணர்: 'ஆம்' என்று சொல்லி விட்டால்—
ரசிகர்: 'பறக்கும் குணத்தை மனத்திற்கு அளித்து விட்டுக் கடவுள் மனிதனின் உடலில் சிறகு வைக்காமல் விட்டு விட்டார். உடலைக் கட்டுப்படுத்தி விட்டு மனத்தின் ஆவலை அதிகரிக்கச் செய்துவிடுகிறார்' என்று நான் கூறுவேன்.
பூரணர்: புரிகிறது. கற்பனை வெகு ஜோர். இதிலிருந்து இன்னும் அநேக வார்த்தைகள் கற்பனை செய்யலாம்.
விபினர்: (அருகில் வந்து) பூரணருடன் பேசிக்கொண்டிருக்கிறீர்களா? சரி. நான் ஒரு விஷயம் சொன்னேனே, அதை இன்றிரவு ஆராய்வோம்.
ரசிகர்: அதுதான் நல்லது.
விபினர்: நிலவில் நாம் தெருவில் இங்குமங்கும் நடந்து கொண்டு சுகமாக—

ரசிகர்: வெகு சுகமாக இருக்கும். (தமக்குள்) கஷ்டம் பிறகு தெரியும்.

[வீட்டில் மற்ருேரிடத்தில்]

சைலபாலா: (நிர்மலாவை நோக்கி) நீங்கள் விரும்பினுல் நானும் அவ்விஷயத்தைக் குறித்து ஆலோசிக்கிறேன். வைத்தியத் தொழில் எனக்கும் சிறிது தெரியும். என்னுடைய உதவியினுல் உங்களுக்கு ஏதாவது பயன் உண்டு என்ருல் நான் உதவி செய்ய எப்பொழுதும் தயார்.

பூரணர்: (அருகில் வந்து) அன்று பலூன் பறந்த பொழுது நீங்கள் மாடிமீதிருந்து அதைப் பார்த்தீர்கள் அல்லவா!

நிர்மலா: பலூஞு?

பூரணர்: ஆம், அந்தப் பலூன் தான். (எல்லோரும் விழிக்கின்றனர்) நீங்கள் பார்த்ததாக ரசிகர் சொன்ஞரே! மன்னிக்கவேண்டும். உங்கள் சம்பாஷணையைக் கலைத்து விட்டேன். நான் ஓர் அதிர்ஷ்டமற்றவன்.

# ஐந்தாம் அங்கம்

## *முதல் காட்சி*

அக்ஷயகுமாரரின் மனை

*[அக்ஷயகுமாரரும் புரபாலாவும்]*

அக்ஷயகுமாரர்: தேவி! அபயம் அளித்தால் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்.

புரபாலா: என்ன கேள்வியோ?

அக்ஷயகுமாரர்: தங்கள் திருமேனி சிறிதுகூட இளைத்திருப்ப தாகத் தோன்றவில்லையே!

புரபாலா: திருமேனி இளைப்பதற்காகவா நான் காசியாத்திரை சென்றேன்?

அக்ஷயகுமாரர்: அப்படியானால் பிரிவாற்றுமை என்பது மகாகவி காளிதாசனுடன் உடன்கட்டை ஏறி இறந்து விட்டதோ?

புரபாலா: அதற்கு ருசு நீங்கள்தான் இருக்கிறீர்களே! உங்கள் திருமேனிக்கும் ஒன்றும் பேராபத்து ஏற்பட்டதாகத் தெரியவில்லையே?

அக்ஷயகுமாரர்: ஏற்படுமாறு விட்டார்களா? உன்னுடைய மூன்று தங்கைகளும் சேர்ந்து இரவு பகலாக என் உடலை இளைக்காத வண்ணம் பார்த்துக் கொண்டனர். பிரிவு என்றால் என்னவென்று தெரிவதற்கு அவகாசம் அளிக்க வில்லையே.

*[பாடுகிறார்]*

ஆற்றாமையினால் ஆருயிரை அடியேன் போக்க வெண்ணுங்கால்
போற்றி யணைத்துப் பூங்கையால் புரத்தல் செய்தீர் யாரோநீர்
ஏற்றுவார் கரையில் இலரென்றே ஏங்கிப் புலம்பி மாழ்குங்கால்
தேற்றியு மென்னைப் பொற்றோணி ஏற்றிக் காத்தவர் யாரோநீர்!

காசி நகரத்தில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் பரமசிவனைக் கண்டு அஞ்சி மன்மதன் உன்னருகி லேயே வரவில்லை போலும்!

புரபாலா: இருக்கலாம். ஆனால் கல்கத்தாவில்[1] அவனுடைய நடவடிக்கைகள் மும்முரமாக இருப்பதாகத் தெரிகிறதே!

அக்ஷயகுமாரர்: ஆம்! பிரிட்டிஷ் அரசாங்கத்தை அவன் மதிப்பதில்லை.

[நிருபபாலாவும் நீரபாலாவும் பிரவேசிக்கின்றனர்]

நீரபாலா: அக்கா!

அக்ஷயகுமாரர்: நன்றியற்றவளே! இப்பொழுது உன் அக்காவைத் தவிர வேறு யாரும் உனக்கு இல்லை போலும்! அவள் கணவனின் பிரிவாற்றாமையால் சுடப்பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகப் பத்தரை மாற்றுத் தங்கத்தின் பளபளப்பை அடைந்த பொழுது உங்களை ஆறுதல் கூறிப் பாதுகாத்தது யார்?

நீரபாலா: கேட்டாயா அக்கா! இவ்வளவும் பொய். நீ இல்லாத பொழுது இவர் எங்களை ஒரு நாளாவது கூப்பிட்டு உன்னைப் பற்றிக் கேட்டதில்லை. கடிதம் எழுதுவார். இல்லாவிடில் இருகால்களையும் தூக்கி மேஜைமீது வைத்துக்கொண்டு புத்தகம் படிப்பார். நீ வந்துவிட்டாய் அல்லவா? இனிமேல் சங்கீதம் விகடம் எல்லாம் நடக்கும்.

நிருபபாலா: அக்கா! நீயும் இதுவரை எங்களுக்கு ஒரு கடிதம் கூட எழுதவில்லையே.

புரபாலா: எனக்கு நேரம் எது நிருபா? அம்மாவுடன் இரவு பகலாக ஏதாவது வேலை இருந்து கொண்டே இருந்தது.

அக்ஷயகுமாரர் 'இரவு பகலாக என் கணவனை நினைத்துக் கொண்டிருந்தேன்' என்று சொன்னால் உலகம் பழிக்குமோ?

நீரபாலா: அப்படிச் சொன்னால் உமது டம்பம் இன்னும் அதிகரித்துவிடும். அத்திம்பேரே, நீங்கள் அடுத்த அறைக்குப் போய் விடுங்கள். அக்கா இத்தனை நாட்கள் கழித்து வந்திருக்கிறாள்; நாங்கள் அவளுடன் பேசவேண்டும்.

அக்ஷயகுமாரர்: இதயமற்றவளே! பிரிவாற்றாமையால் வருந்தும் உன் அக்காவை மறுபடியும் என்னிடம் இருந்து பிரிக்க முயலுகிறாயே! உன் அத்திம்பேர் என்னும் கருமேகம் சந்திப்பு என்னும் அடைமழையின் மூலம் அவருடைய பத்தினியின் உள்ளம் என்னும் கொடி வீட்டில் மகிழ்ச்சி என்னும் செந்தளிரைத் தோற்றுவித்து அன்பு என்னும் மழையுடன் மின்னல் என்னும்—

நீரபாலா: ஓயாத பேச்சு என்னும் தவளைச் சத்தம்—

[சைலபாலா வருகிறாள்]

1. இக்கதை நிகழும் இடம்

அக்ஷயகுமாரர்: வருக! வருக! பெரியவள், இடையவள், கடையவள் என்ற மூன்று மைத்துனிகளும்—

நீரபாலா: இல்லாவிடில் உமக்குத் தகுந்த சிட்சை கிடைக்காது.

சைலபாலா: (நிருபபாலாவையும் நீருவையும் நோக்கி) சற்று அப்புறம் செல்லுங்கள். அத்திம்பேருடன் ஒரு வார்த்தை பேசவேண்டும்.

அக்ஷயகுமாரர்: என்ன பேசப் போகிருள் என்று உனக்குத் தெரியுமே, நீரு! ஹரிகதை அல்ல.

நீரபாலா: சரி செல்கிறோம். உங்கள் உளரலாவது நிற்கும்.

[நிருபபாலாவும் நீரபாலாவும் செல்கின்றனர்]

சைலபாலா: அக்கா! நிருபாவிற்கும் நீருவிற்கும் அம்மா இரண்டு வரன்கள் ஏற்பாடு செய்திருக்கிருளாமே, உண்மை தானு?

புரபாலா: ஆமாம்! ஏற்பாடு பரவாயில்லை. பையன்கள் இருவரும் திருப்திகரமானவர்கள் என்றே சொல்லவேண்டும்; அவர்களுக்குப் பெண்களைப் பிடித்து விட்டால் எல்லாம் முடித்துவிடலாம்.

சைலபாலா: பிடிக்கா விட்டால்?

புரபாலா: அவர்களுக்கு அதிர்ஷ்டமில்லை என்றுதான் கூற வேண்டும்.

அக்ஷயகுமாரர்: அப்படி முடிந்துவிட்டால் என் மைத்துனிகளின் அதிர்ஷ்டம் நல்லதென்றே சொல்வேன்.

சைலபாலா: நமது பெண்களுக்குப் பையன்களைப் பிடிக்கவில்லையானல்?

அக்ஷயகுமாரர்: நமது பெண்களின் பகுத்தறிவைப் பாராட்ட வேண்டும்.

புரபாலா: பையன்களை ஏன் பிடிக்காது? நீங்கள் எல்லை மீறிச் செல்கிறீர்கள். சுயம்வரம் நடத்தும் காலம் மாறிவிட்டது. பெண்களுக்கு வரன்களைப் பிடிக்கவேண்டிய அவசியம் இல்லை. கலியாணமான பிறகு கணவனிடம் தானுகவே அன்பு ஏற்பட்டுவிடும்.

அக்ஷயகுமாரர்: அவ்விதம் இல்லையாகில் உன் அத்திம்பேரின் கதி என்னவாகியிருக்கும், சைலா!

[ஜகத்தாரிணி வருகிருள்]

ஜகத்தாரிணி: மாப்பிள்ளை! அந்த வரன்கள் இருவரையும் அழைத்துவர யாரையாவது அனுப்பவேண்டும். அவர்களுக்கு இந்த வீட்டு விலாசம் தெரியாது.

அக்ஷயகுமாரர்: ரசிகரை அனுப்பிவிட்டால் போகிறது.

ஜகத்தாரிணி: வேறு வினை வேண்டியதில்லை. உன் ரசிகரின் மூளையை நீதான் மெச்சிக் கொள்ளவேண்டும். அவரை

அனுப்பினுல் வேறு யாராவது இருவரை அழைத்துக் கொண்டு வந்து விடுவார்.

புரபாலா: நீ கவலைப் படாதே அம்மா! பையன்களை அழைத்து வர நான் ஏற்பாடு செய்கிறேன்.

ஜகத்தாரிணி: புரபாலா! நீ இவ்விஷயத்தைச் சற்றுக் கவனித் தால்தான் நல்லது. இக்காலத்துப் பிள்ளைகளுடன் எப்படி நடந்துகொள்வது என்பது எனக்குத் தெரியாது.

அக்ஷயகுமாரர்: (தனியாக) புரபாலாவிற்குக் கைராசி அதிகம். தனக்கு என்னைப்போல் ஒரு கணவனைத் தேடிக்கொண்ட பிறகு அவளுடைய மதிப்பு உயர்ந்துவிட்டது. இக் காலத்து இளைஞர்களை எவ்வாறு வசம் செய்வது என்கிற கலை—

புரபாலா: (தனியாக) நீங்கள் தற்காலத்து மனிதர் என்று உங்கள் எண்ணமோ?

ஜகத்தாரிணி: புரபாலா! நீங்கள் இருவரும் சேர்ந்து விஷயத்தை ஆலோசியுங்கள். அடுத்த வீட்டு அம்மாள் வந்திருக்கிருள். அவளை அனுப்பிவிட்டு வருகிறேன்.

சைலபாலா: அம்மா! சிறிது யோசனை செய்துபார். பையன் கள் இருவரையும் நீங்கள் யாரும் இன்னும் பார்க்க வில்லை. திடீரென்று—

ஜகத்தாரிணி: யோசனை செய்து செய்து என் ஆயுள் முழுவதும் கழிந்துவிட்டது. இனிமேல் என்னுல் ஒன்றும் யோசிக்க முடியாது.

அக்ஷயகுமாரர்: தக்க சமயத்தில் யோசனை செய்தே தீர வேண்டும். இப்பொழுது ஆகவேண்டிய வேலையைக் கவனிப்போம்.

ஜகத்தாரிணி: நீயே சொல், மாப்பிள்ளை! சைலாவிற்கு நீதான் விளக்கிச் சொல்லவேண்டும்.

புரபாலா: அனுவசியமாக நீ ஏன் அலட்டிக்கொள்கிருய்? அம்மா தீர்மானம் செய்துவிட்டாளானுல் அதை யாரும் மாற்ற முடியாது. விதியில் எனக்கு நம்பிக்கையுண்டு. யாருடன் யாருக்கு முடிச்சுப் போட்டிருக்கிறதோ, ஆயிரம் யோசனைகள் செய்தாலும் அதுதான் நடக்கும்.

அக்ஷயகுமாரர்: மிகவும் சரி. இல்லாவிட்டால் யாருடன் முடிச்சுப்போட்டு இருக்கிறதோ அவர்களைவிட்டு மற் ருெருவருடன் சம்பந்தம் ஏற்பட்டு விடும்.

புரபாலா: உங்களுடைய விளக்கம் ஒருவருககும் புரியாது.

அக்ஷயகுமாரர்: அதனுல்தான் நான் ஒரு முட்டாளாகக் கருதப் படுகிறேன்.

புரபாலா: நீங்கள் சென்று ஸ்நானம் செய்துவிட்டு வாருங்கள்.

வனமாலி: அப்பெண்கள் இருவரையும் இன்னும் அநேக நாட்கள் அப்படியே வைத்திருக்க முடியாது; நிறைய வரன்கள் வந்து கேட்கிறார்கள்.

விபினர்: மிக்க சந்தோஷம். மணம் செய்து கொடுத்துவிடும், கொடுத்துவிடும்.

வனமாலி: ஆனால் உங்களுக்கே தகுந்த பெண்கள் என்று—

விபினர்: இதோ பாரும், வனமாலி பாபு! என்னை உங்களுக்கு அதிகமாகத் தெரியாது. தெரிந்தால் என்னுடைய தகுதியைப்பற்றி உங்களுக்குப் பெரிய சந்தேகம் ஏற்பட்டு விடும்.

வனமாலி: அப்படியானால் நான் வருகிறேன். நீங்கள் வேலையாயிருக்கிறீர்கள். மற்றொரு சமயம் பார்க்கலாம்.

விபினர்: (தம்பூரை மீண்டும் கையிலெடுத்து) ஸரிக, ரிகம, கமபா.

[ஸ்ரீசர் வருகிறார்]

ஸ்ரீசர்: இதென்ன விபினா! என்ன கூத்து! குஸ்தி போடுவதை விட்டுவிட்டுச் சங்கீதப் பயிற்சியை ஆரம்பித்து விட்டாயா? இவர் குருதாசர் அல்லவா?

விபினர்: வாத்தியாரே, இன்று உமக்கு விடுமுறை. என்ன செய்வேன் சொல், ஸ்ரீசா! சங்கீதம் கற்கவில்லை என்றால் உனது நவீன சந்நியாசிக் கூட்டத்தில் இடம் கிடைக்காது. குருதாசரைக் குருவாகப் பாவித்து நவீன சந்நியாச விரதத்திற்குத் தீட்சை பெற்றுக்கொள்ளப் போகிறேன்.

ஸ்ரீசர்: அது என்ன தீட்சை?

விபினர்: கலைகள் பலவும் கற்றால்தான் தியாகம் செய்வது எளிதாகும். மேகம் நீரினால் நிறைந்திருக்கும் பொழுது தான் மழை பொழிகிறது.

ஸ்ரீசர்: உன் வேதாந்தம் ஒரு புறம் இருக்கட்டும். நமது சங்கத்திற்காக நீ எழுதவேண்டிய புத்தகத்தை முடித்து விட்டாயா?

விபினர்: இல்லை. அதை இன்னும் தொடவே இல்லை. உன் ரிப்போர்ட்டை நீ முடித்துவிட்டாயா?

ஸ்ரீசர்: நானும் இன்னும் அதில் கைவைக்கவில்லை. (சிறிது நேரம் பேசாமல் இருந்து) விபினா! மிகவும் அநியாயம்! நமது இலட்சியத்திலிருந்து நாம் விலகிக்கொண்டே போகிறோம்.

விபினர்: அநேக இலட்சியங்கள் வளர்ச்சி பெறும்பொழுது, தவளைக் குஞ்சின் வாலைப்போன்ற சில அம்சங்கள் மறைந்து விடுகின்றன. வாலும் வளர்!

சென்று, தவளையும் மெலிந்துகொண்டே போனால் என்ன லாபம்? ஒரு சமயத்தில் ஒரு இலட்சியத்தைப் பின்பற்றுகிறோம் என்று அதை நிறைவேற்றுவதற்காக உயிர் நீப்பதன் அர்த்தம் எனக்கு விளங்கவில்லை.

ஸ்ரீசர்: நீ கூறுவது புரிகிறது. சில இலட்சியங்களுக்காகத் தியாகம் செய்வது புகழைத் தரும். மரம் பழுக்காமல் செழிப்பான கிளைகளோடு வளர்வதுபோல் சக்தியை வீணாக்கினால் பயன்பெறும் காலம் விலகிப்போகும். நான் ஒரு தவறு செய்துவிட்டேன், விபினு! ஒரு பெரிய காரியத்தைச் சாதிக்கத் தியாகம் செய்யவேண்டும். உலகிலுள்ள பல இன்பங்களைத் தியாகம் செய்யாமல், நான்கு புறங்களில் இருந்தும் அணுகும் ஆசைகளைத் தடுக்காமல், நாம் ஒருபொழுதும் மனத்தை ஒரு மகத்தான காரியத்தில் ஈடுபடச் செய்ய முடியாது. இன்று முதல் சங்கீதம் முதலிய விஷயங்களில் ஈடுபடாமல் உண்மையான தொண்டை மேற்கொள்ளப் போகிறேன்.

விபினர்: உன் உறுதியை மெச்சுகிறேன். ஆனால் புல்லெல்லாம் நெல் அல்ல. அவை காய்ந்துபோனால் அப்படியே அழிந்துவிடுமே தவிர தானியம் கிடைக்காது. நாம் மேற்கொண்டிருக்கும் விரதம் நமது முயற்சியினால் ஒரு பயனையும் அளிக்கப்போவதில்லை என்று சில நாட்களாக எனக்குத் தோன்றி வருகிறது. ஆகையால் நாம் பின் பற்றக் கூடிய வேறொரு லட்சியத்தைத் தேர்ந்தெடுப்பது நலம்.

ஸ்ரீசர்: இது பயன் அற்ற பேச்சு, விபினு! உன் தம்புராவை எறிந்துவிடு.

விபினர்: எறிந்து விடுகிறேன். அதனால் உலகத்திற்கு நஷ்டம் ஒன்றுமில்லை.

ஸ்ரீசர்: நமது சங்கத்தை மீண்டும் சந்திரபாபுவின் வீட்டிற்கு மாற்றவேண்டும்.

விபினர்: சிறந்த யோசனை.

ஸ்ரீசர்: நாம் இருவரும் சேர்ந்து ரசிகரைக் கொஞ்சம் அடக்க வேண்டும்.

விபினர்: அதற்குள் நம் இருவரிடம் இருக்கும் அடக்கத்தை அவர் கெடுத்துவிடாமல் இருந்தால் போதும்.

குருதாசர்: நீங்கள் அடக்கத்தைக் குறித்து ஏதோ பேசிக் கொண்டிருப்பதால் எனக்கு இங்கு ஒன்றும் வேலை யில்லையே?

விபினர்: உமது வேலை அதிகரிக்கும். வெயில் அதிகரிக்கும் பொழுது தண்ணீரின் தேவை அதிகரிக்கும். கிங்க

துரதிர்ஷ்ட நிலைமையில் நீங்களும் என்னைக் கைவிட்டு விடாதீர்கள். காலையும் மாலையும் தவருமல் வர வேண்டும். ஏதாவது பாட்டிற்கு மெட்டு அமைத்தீர் களாஞல் இன்று மாலை வந்து அதைப் பாடிக் காண்பியும்.

குருதாசர்: அப்படியே செய்கிறேன். (செல்கிருர்)

[வேலைக்காரன் வருகிருன்]

வேலைக்காரன்: ஒரு பெரியவர் வந்திருக்கிருர்.

விபினர்: கிழவரா? மறுபடியும் வனமாலி தொந்தரவு கொடுக்க வந்துவிட்டார் போலும்!

ஸ்ரீசர்: வனமாலியா? சில நிமிஷங்களுக்கு முன் என்னைப் பார்க்க வந்து, பார்த்துவிட்டுச் சென்ருரே?

விபினர்: ஏய்! அக்கிழவரை அனுப்பிவிடு.

ஸ்ரீசர்: நீ அனுப்பிவிட்டாயாஞல் அவர் மீண்டும் வந்து என்மீது விழுவார். அவர் உள்ளே வரட்டும். நாம் இருவரும் சேர்ந்து விடைகொடுத்து அனுப்பிவிடுவோம். (வேலைக்காரனை நோக்கி) அவரை வரச்சொல்.

[ரசிகர் வருகிருர்]

விபினர்: இதென்ன! வருவது வனமாலி அல்ல, ரசிகர்.

ரசிகர்: அடியேன்தான்! நீங்கள் மனிதர்களை அடையாளம் கண்டுபிடிக்கும் விதம் வெகு ஆச்சரியமானது. நான் வனமாலியல்ல.

தீர ஸமீரே யமுநா தீரே
வஸதி வநே வநமாலி

தென்றல் வீசும் யமுஞ நதிக்கரையில் காட்டில் வசிக் கிருர் வனமாலி.

ஸ்ரீசர்: ரசிகரே! நீர் உம் கவிதையை இனிமேல் நிறுத்திக் கொள்ளலாம். நாங்கள் இனிமேல் சிருங்கார விஷயங் களில் ஈடுபடப்போவதில்லை.

ரசிகர்: அப்பா! நான் பிழைத்தேன்.

ஸ்ரீசர்: இன்றுமுதல் நாங்கள் மற்றெல்லா நினைவுகளையும் விட்டுவிட்டு முழுமனத்துடன் பிரம்மசாரிகள் சங்கத்தின் அலுவல்களில் ஈடுபடப் போகிறோம்.

ரசிகர்: என்னுடைய விருப்பமும் அதுதான்.

ஸ்ரீசர்: வனமாலி என்ற வயதான மனிதர் குமாரடுலி நீல மாதவ சௌதூரி என்பவரின் இரு பெண்களை எங்களுக்கு மணம் செய்விக்கும் விஷயத்தைப்பற்றிப் பேசுவதற்கு வந்திருந்தார். நாங்கள் இருவரும் அவருடன் சரியாகப் பேசாமல் அவரை அனுப்பிவிட்டோம். இவ்விதம் பலர் வந்து தொந்தரவு செய்கிருர்கள்.

ரசிகர்: நீங்கள் செய்தது சரியான காரியம். வனமாலி

இரண்டு அல்லது அதற்கு அதிகமான பெண்களின் விவாக சம்பந்தமாகப் பேசுவதற்கு என்னிடம் வந்தால் வெறுங்கையோடு திரும்பவேண்டியதுதான்.

விபினர்: ரசிகரே! சிறிது சிற்றுண்டி சாப்பிட்ட பிறகே நீர் போகவேண்டும்.

ரசிகர்: வேண்டாம். இன்று விட்டுவிடுங்கள். உங்களிடம் ஓரிரண்டு முக்கிய விஷயங்களைப் பற்றிப் பேச வந்தேன். உங்களுடைய கடுமையான தீர்மானத்தைப் பார்த்தபின் அஞ்சி நின்றுவிட்டேன்.

விபினர்: (ஆவலுடன்) சேச்சே! அதற்காக நீங்கள் கூற வந்ததைக் கூறுமல் செல்ல வேண்டாம்.

ஸ்ரீசர்: தீர்மானம் நீங்கள் நினைக்கிற அளவு கடுமையல்ல. என்ன விஷயம் பேச வந்தீர்?

விபினர்: அவர் என்னுடன்தான் ஓரிரண்டு வார்த்தைகள் பேசவேண்டுமென்று அன்றே கூறினுரே.

ரசிகர்: பரவாயில்லை. பிறகு பார்த்துக்கொள்வோம்.

ஸ்ரீசர்: இன்றிரவு குளக்கரை வீதியில் பேசலாமென்று—

ரசிகர்: இல்லை, ஸ்ரீசரே! மன்னிக்கவேண்டும்.

ஸ்ரீசர்: விபினு! நீ சற்று அந்த அறைக்குள் செல். ரசிகர் ஒரு வேளை உன் எதிரில்—

ரசிகர்: அதெல்லாம் அவசியம் இல்லை.

விபினர்: ரசிகரே! நாம் மூன்றுவது மாடிக்குப் போய் விடுவோம். ஸ்ரீசர் இங்கேயே காத்துக்கொண் டிருப்பார்.

ரசிகர்: நீங்கள் உட்காருங்கள். நான் வருகிறேன்.

விபினர்: ஏதாவது சாப்பிட்டுவிட்டே செல்லவேண்டும்.

ஸ்ரீசர்: உங்களை நாங்கள் விடமாட்டோம்.

ரசிகர்: அப்படியானுல் வந்த விஷயத்தைச் சொல்லி விடுகிறேன். நிருபபாலா, நீரபாலா இவர்களைப்பற்றி முன்பே உங்களிடம் கூறியிருக்கிறேன்.

ஸ்ரீசர்: அந்த நிருபபாலாவைப் பற்றி—

விபினர்: நீரபாலாவைப் பற்றிய செய்தி—

ரசிகர்: அவர்கள் இருவரையும் பற்றி ஒரு கவலைக்கு இடமான செய்தி கிடைத்திருக்கிறது.

இருவரும்: அவர்களுடைய உடல்நிலை பற்றி அல்லவே!

ரசிகர்: அதைவிட மோசமான செய்தி. அவர்களுடைய விவாகத்தைப்பற்றி.

ஸ்ரீசர்: என்ன இப்படிப் பேசுகிறீர்கள்? அவர்களுடைய விவாகத்தைப் பற்றி இதுவரையில் நான் ஒன்றுமே கேட்கவில்லையே?

ரசிகர்: உண்மைதான். ஆனால் அவர்களின் தாயார் திடீரென்று காசியிலிருந்து இரு சோளக்கொல்லை பொம்மைகளைப் பிடித்து வந்து அவர்களுடன் தன் பெண்களின் விவாகத்திற்கு ஏற்பாடு செய்கிறாள்.

விபினர்: இது ஒருபொழுதும் முடியாது ரசிகரே!

ரசிகர்: மிஸ்டர்! உலகில் எது கெடுதலோ அதுதான் சுலபமாக நடக்கும். பூச்செடிகளைவிடக் காட்டுச் செடிகளே அதிகமாக முளைக்கின்றன.

விபினர்: காட்டுச் செடிகளை வெட்டி எறிந்துவிட வேண்டும்.

ஸ்ரீசர்: பூச்செடிகளை நடவேண்டும்.

ரசிகர்: உண்மைதான். ஆனால் இதெல்லாம் செய்வது யார்?

ஸ்ரீசர்: நாங்கள் செய்கிறோம். என்ன விபின!

விபினர்: நிச்சயமாக.

ரசிகர்: என்ன செய்யப்போகிறீர்கள்?

விபினர்: நீங்கள் விரும்பினால் அந்த வரன்கள் இருவரையும் வழியில் மறித்து—

ரசிகர்: புரிகிறது. இதை எண்ணி என் உடல் சிலிர்க்கிறது. ஆனால் பிரமனின் படைப்பில் சோளக்கொல்லைப் பொம்மைகள் கணக்கற்றவை. இரண்டு சென்றால் உடனே பத்து வரும்.

விபினர்: இவர்கள் இரண்டு பேரையும் ஏதாவது சூழ்ச்சி செய்து சிறிது காலம் நிறுத்தி வைத்தால் யோசிப்பதற்கு நேரம் கிடைக்கும்.

ரசிகர்: யோசிக்கும் காலம் குறைந்துகொண்டே வருகிறது. இந்த வெள்ளிக்கிழமை அவர்கள் பெண்பார்க்க வருகிறார்கள்.

விபினர்: வருகிற வெள்ளிக்கிழமை யன்றா?

ஸ்ரீசர்: அதாவது நாளை மறுநாள்.

ரசிகர்: அதுவேதான். வெள்ளிக்கிழமையை நீங்கள் வழியில் மறித்து நிறுத்த முடியாது.

ஸ்ரீசர்: சரி, எனக்கு ஒரு 'பிளான்' மூளையில் உதயமாகிறது.

ரசிகர்: என்ன திட்டமோ?

ஸ்ரீசர்: அவ்விரு வரன்களையும் அந்த வீட்டில் யாருக்காவது தெரியுமா?

ரசிகர்: தெரியாது.

ஸ்ரீசர்: அவர்களுக்கு அந்த வீடு தெரியுமா?

ரசிகர்: அதுவும் தெரியாது.

ஸ்ரீசர்: ஆகவே அன்று விபினன் அவ்வரன்களை எப்படியாவது தடுத்து நிறுத்தி வைத்தால் நான் அவர்களில் ஒருவனைப் போல் சென்று நிருபபாலாவை—

விபினர்: தம்பி! நான் ஒரு புத்திசாலி அல்ல என்று உனக்குத் தெரியும். நீ ஏதாவது உபாயம் செய்து அவ்விரு பையன்களையும் எங்காவது நிறுத்தி வை. நான் சென்று நீரபாலாவை—

ரசிகர்: மிகவும் சரி. ஆனால் மரியாதைக்காகப் பன்மையை உபயோகிக்கும் இடம் இது அல்லவே! அவர்கள் இரு பையன்களை எதிர்பார்த்துக்கொண் டிருப்பார்கள் உங்களுள் ஒருவரை இருவர் என்று நம்பச் செய்வது மிகவும் கஷ்டமாக இருக்கும்.

ஸ்ரீசர்: ஆமாம் ஓய்!

விபினர்: அதை அடியோடு மறந்துவிட்டோம்!

ஸ்ரீசர்: ஆகையால் நாம் இருவரும் சேர்ந்தே போகவேண்டும். ஆனால்—

ரசிகர்: அவர்கள் இருவரையும் தவறான வீதிக்கு அனுப்ப நான் இருக்கிறேன். நீங்கள்—

விபினர்: எங்களைப்பற்றிக் கவலைப்படவேண்டாம்.

ஸ்ரீசர்: நாங்கள் எதற்கும் சித்தமாக இருக்கிறோம்.

ரசிகர்: உங்கள் குணம் மிகவும் உயர்ந்தது. இவ்வளவு தியாகம் செய்ய முன் வந்தது—

ஸ்ரீசர்: அழகுதான்! இதில் தியாகம் ஒன்றும் இல்லை, ரசிகரே!

விபினர்: இது எங்கள் பாக்கியம்.

ரசிகர்: ஆனாலும் நாம் வீசும் வலையில் நாமே சிக்கிக்கொள்ளுவோமோ என்ற சந்தேகம் உண்டாகலாம்.

ஸ்ரீசர்: ஒரு சந்தேகமும் கிடையாது.

விபினர்: எங்களுக்கு எது நேர்ந்தாலும் நாங்கள் வருந்த மாட்டோம்.

ரசிகர்: அது உங்கள் உதார குணத்தைக் காட்டுகிறது. ஆனால் உங்களுக்கு ஒன்றும் நேராமல் பார்த்துக் கொள்வது என் கடமை. ஒன்று மாத்திரம் வாக்களிக்கிறேன். இந்த வெள்ளிக்கிழமையை நாம் எப்படியாகிலும் சமாளித்துவிட்டால் பிறகு நான் உங்களுக்கு ஒருவிதத் தொந்தரவும் கொடுக்கமாட்டேன்.

ஸ்ரீசர்: நீங்கள் எங்களுக்குத் தொந்தரவு கொடுப்பதாக நினைப்பது எங்களுக்கு வருத்தத்தை உண்டுபண்ணுகிறது ரசிகரே!

ரசிகர்: அப்படியானால் தொந்தரவு கொடுக்கிறேன்.

விபினர்: நாங்கள் சுயநலம் கொண்டவர்கள் என்று நினைத்து விட்டீர்களா?

ரசிகர்: மன்னிக்கவேண்டும். நான் நினைத்தது தவறு.

ஸ்ரீசர்: ரசிகரே, திடீரென்று பெண்களுக்கு நல்ல வரன்கள் கிடைப்பது துர்லபம்.

ரசிகர்: அதனால்தான் வெகு நாட்களாகக் காத்திருந்து கடைசியில் இந்த ஆபத்து நேர்ந்தது. விவாகம் என்பதே உங்களுக்குப் பிடிக்காத பேச்சாக இருப்பதால் தான் இதுவரையில்—

விபினர்: அதற்காக நீங்கள் ஒன்றும் சங்கோசப் பட வேண்டாம்.

ஸ்ரீசர்: நீங்கள் வேறு யாரிடமும் செல்லாமல் எங்களிடம் வந்ததற்காக எங்கள் மனமார்ந்த வந்தனம்.

ரசிகர்: நான் உங்களுக்கு வந்தனம் தெரிவித்துக்கொள்ளப் போவதில்லை. அந்த இரண்டு பெண்களின் நன்றியை நீங்கள் ஆயுள் முழுவதும் பெறப்போகிறீர்கள்.

விபினர்: அடே பையா, பங்காவை வேகமாக இழு.

ஸ்ரீசர்: ரசிகருக்காகச் சிற்றுண்டி கொண்டுவரச் சொன்னோமே? அவன் எங்கே சென்றான்?

விபினர்: அவன் வரும் வரையில், ஒரு டம்ளர் ஐஸ் வாட்டர் சாப்பிடுங்கள்.

ஸ்ரீசர்: தண்ணீர் எதற்கு? லெமலனேட் வரவழைத்துக் கொடு. (பையிலிருந்து ஒரு தகரப் பெட்டியை எடுத்து) ரசிகரே! தாம்பூலம் எடுத்துக்கொள்ளுங்கள்!

விபினர்: அங்கு காற்று வீசுகிறதா? அந்த மெத்தை மீது சாய்ந்து கொள்ளும் ரசிகரே!

ஸ்ரீசர்: ரசிகரே! நிருபபாலா மிகவும் வருத்தப்படுகிறாள் அல்லவா?

விபினா: நீரபாலாவும் மிகவும் மனமுடைந்து—

ரசிகர்: அதை என்னவென்று சொல்வது?

ஸ்ரீசர்: நிருபபாலா கண்ணீர் விட்டு அழுகிறாள் அல்லவா?

விபினர்: நீரபாலா தம்முடைய தாயாரிடம் இந்த விஷயத்தைப்பற்றிக் கண்டிப்பாக—

ரசிகர்: (தமக்குள்) மறுபடியும் ஆரம்பித்து விட்டார்களே! எனக்கு லெமனேடும் வேண்டாம். ஒன்றும் வேண்டாம். (வெளிப்படையாக) மன்னிக்கவேண்டும். நான் இப்பொழுதே செல்லவேண்டும்.

ஸ்ரீசர்: என்ன அவசரம்?

விபினர் முக்கியமான வேலையோ?

ரசிகர் ஆமாம். அந்த இரு பையன்களிடமும் தவறான விலாசம் கொடுத்துவிட்டு வரவேண்டும்.

ஸ்ரீசர்: மிகவும் முக்கியம். உடனே செல்லுங்கள்.

விபினர்: தாமதம் செய்யாதீர்கள். ரசிகரே!

## மூன்றும் காட்சி

### சந்திரபாபுவின் வீடு

[நிர்மலா ஜன்னல் அருகில் உட்கார்ந்திருக்கிருள். சந்திரபாபு வருகிருர்]

**சந்திரபாபு:** (தமக்குள்) நிர்மலா, பாவம், மிகவும் கடினமான விரதத்தை மேற்கொண்டிருக்கிருள். எத்தனைக் காலம் நீடிக்குமோ பார்க்கலாம். மிகுந்த கவலையோடு இருக்கிருள். பெண்கள் தங்கள் மனத்தில் பெரிய பளுவைத் தாங்குவது மிகவும் கடினம் (உரக்க) நிர்மலா!

**நிர்மலா:** (சட்டென்று) என்ன மாமா!

**சந்திரபாபு:** நீ எழுத வேண்டிய ரிப்போர்ட்டைக் குறித்துக் கவலைப்படுகிருய் போலிருக்கிறது. கவலையைவிட்டு இரண்டு நாட்களுக்கு ஓய்வு எடுத்துக்கொண்டாயாளுல் எல்லாம் சரியாகிவிடும்.

**நிர்மலா:** (வெட்கத்துடன்) இல்லை மாமா! நான் அதை முன்னமேயே எழுதி முடித்திருக்க வேண்டும். இப்பொழுது சில நாட்களாக உஷ்ணம் அதிகமாக இருக்கிறது. வேலையில் மனம் செல்லவில்லை. இன்று எப்படியாவது உட்கார்ந்து—

**சந்திரபாபு:** வேண்டாம் வேண்டாம். ஒன்றும் அவசரம் இல்லை. வீட்டில் உனக்குத் துணை ஒருவரும் இல்லை. நீ ஒருத்தியே தனியாக எல்லா வேலைகளையும் பார்த்துக் கொள்வதால் களைத்து விடுகிருய். யாராவது ஓர் இரண்டு பேர்களைத் துணைக்கு வைத்துக் கொண்டால்—

**நிர்மலா:** அபலாகாந்தர் எனக்குத் துணை புரிவதாகக் கூறினுர். நோயாளிகளைக் கவனித்துக் கொள்ளுவது பற்றி ஒரு ஆங்கிலப் புத்தகத்தை அவரிடம் கொடுத்திருக்கிறேன். அதிலிருந்து ஒரு பகுதியை அவர் மொழிபெயர்த்து இன்று படித்துக் காட்டுவதாகக் கூறினுர். அநேகமாக இப்பொழுது வந்தாலும் வருவார்.

**சந்திரபாபு:** அவர் ஒரு புத்திசாலியான இளைஞர்.

**நிர்மலா:** மிக நல்லவர்; கெட்டிக்காரர்.

**சந்திரபாபு:** அவரிடத்தில் என்ன ஊக்கம்! என்ன உழைப்பு!

**நிர்மலா:** எத்தனை பணிவு!

**சந்திரபாபு:** ஒரு நல்ல காரியமென்ருல் அவருக்கு ஏற்படும் உற்சாகம் ஆச்சரியமானது.

**நிர்மலா:** அத்துடன், அவரைப் பார்த்தவுடனேயே அவருடைய இனிய சுபாவமும் கபடமற்ற உள்ளமும் நமக்குத் தெரிந்து போகின்றன.

சந்திரபாபு: இவ்வளவு குறுகிய காலத்திற்குள் ஒருவரிடம் எனக்கு இத்தகைய ஆழ்ந்த நட்பு ஏற்படுமென்று நான் கனவிலும் கருதவில்லை. அவரை என் அருகிலேயே வைத்துக்கொண்டால் சகல விதமான எழுத்து வேலைக்கும் மற்ற அலுவல்களுக்கும் மிகவும் ஒத்தாசையாக இருப்பார் என்று நினைக்கிறேன்.

சைலபாலா: அதனால் எனக்கும் பெரிய உதவி கிடைக்கும். அநேக வேலைகளை முடித்துவிடுவேன். அவரிடம் இதைப் பிரஸ்தாவித்துப் பாருங்கள். அதோ பியூன் வருகிறான். அவர் ரிபோர்ட்டை அனுப்பியிருக்கிறார் போலும்! ராம்தீன்! அது என்ன, கடிதமா? என்னிடம் கொடு.

[பியூன் வந்து கடிதத்தைச் சந்திரபாபுவிடம் கொடுக்கிறான்]

மாமா! அந்த ரிபோர்ட்டை அவர் எனக்கு அனுப்பியிருக்கிறார். அதை என்னிடம் கொடுங்கள்!

சந்திரபாபு: இல்லை, கண்ணு. இது எனக்கு வந்த கடிதம்.

நிர்மலா: அபலாகாந்தர் உங்களுக்குக் கடிதம் எழுதியிருக்கிறாரா? என்ன எழுதி இருக்கிறார்?

சந்திரபாபு: இல்லை. இது பூரணரின் கடிதம்.

நிர்மலா: பூரணரின் கடிதமா? அப்படியானால் சரி.

சந்திரபாபு: நிர்மலா! பூரணர் எழுதுவதைப் பார். 'குருதேவரே! உம்முடைய ஒழுக்கமும் மனவுறுதியும் அசாதாரணமானவை. ஆகவே உங்களைப் போன்ற திடசித்தமுடைய ஒருவரே மற்றவர்களின் குறைபாடுகளைத் தாராள மனத்துடன் நோக்கக் கூடியவர் என்ற தைரியத்துடன் இக் கடிதத்தை எழுதத் துணிந்தேன்.'

நிர்மலா: இது என்ன பிரசங்கம்! பூரணர் ஒருவேளை பிரம்மசாரிகள் சங்கத்திலிருந்து விலகிவிட்டார் போலும். அதற்கே இந்த முன்னுரை. கவனித்துப் பார்த்தால் தற்சமயம் பூரணர் சங்கத்தின் காரியங்களுள் ஒன்றையேனும் செய்ய முன்வருவதில்லை.

சந்திரபாபு: (மேலும் படிக்கிறார்) 'ஐயா! நீங்கள் ஓர் உயர்ந்த லட்சியத்தை எங்களுக்கு அளித்தீர்கள். அதை நாங்கள் தலையால் தாங்கி ஒரு கணமேனும் அலட்சியம் செய்யாமல் பின்பற்றி வந்தோம். ஆனால் அப்போதைக் கப்போது அதற்கு வேண்டிய உறுதி குறைந்து வருவதை உணர்கிறோம். ஆகவே உங்கள் திருவடியை அணுகிப் பணிவுடன் நாங்கள் செய்யும் விண்ணப்பம் என்னவென்றால்—'

நிர்மலா: பெரிய பொறுப்புக்களை ஏற்றுக்கொண்ட ஒவ்வொரு

மனிதனும் ஏதோ ஒரு சமயத்தில் தன் உறுதி குலைவதை உணர்வது சகஜம். களைத்த மனம் சிலசமயம் குழம்பி விடும். இது இயற்கையே.

சந்திரபாபு: '..சங்கத்தில் இருந்து வீடு திரும்பிக் கடமையைச் செய்ய ஆரம்பிக்கும் பொழுது மனம் கொம்பற்ற கொடியைப்போல் பற்றுக்கோடு இல்லாமல், கீழே விழுவதற்குச் சித்தமாக இருப்பது போலத் தோன்று கிறது.' நிர்மலா, நாமும் இதையே தான் சற்றுமுன் சொன்னோம்.

நிர்மலா: அவர் எழுதியிருப்பதெல்லாம் உண்மை. அண்டை யில் மனிதர்களே இல்லாமல் பிரதிக்ஞையை மாத்திரம் வைத்துக்கொண்டு உற்சாகத்துடன் உழைப்பது மிகவும் கஷ்டம்.

சந்திரபாபு: 'என்னுடைய தைரியத்துக்கு என்னை மன்னிக்க வும். நான் ஆழ்ந்த யோசனை செய்தபிறகே இந்த முடி விற்கு வந்தேன். பிரம்மசாரி விரதம் சாதாரண மக்க ளுக்கு ஏற்றதல்ல. அது உறுதியை அளிப்பதில்லை. அதைக் குலைத்துவிடுகிறது. ஆண்களும் பெண்களும் ஒருவருக்கொருவர் வலது கை போன்றவர்கள். அவர்கள் ஒன்று சேர்ந்தால்தான் உலகின் காரியங்கள் அனைத்தும் பயன் அளிக்கும் முறையில் நடக்கும்.'

நிர்மலா, இதைக் கேட்டாயா? (நிர்மலா மௌனமாக இருக்கிறாள்) அக்ஷயர் அன்றொரு நாள் இதே வார்த்தை களைக் கூறி என்னுடன் வாதம் செய்தார். அதற்கு என்னால் சமாதானம் கூற முடியவில்லை.

நிர்மலா: ஆம். ஏனென்றால் அவர் கூறியது பெரும்பாலும் உண்மையே.

சந்திரபாபு: '..ஆகவே கிருகஸ்தர்களைச் சந்நியாச மார்க்கத்தில் திருப்பாமல் அவர்களை இல் வாழ்க்கையையே உயர்ந்த முறையில் கைப்பிடிக்கச் செய்வதே சிறந்த கடமை என்பது எங்கள் அபிப்பிராயம்.'

நிர்மலா: நன்றாகவே எழுதியிருக்கிறார்.

சந்திரபாபு: நானும் சில நாட்களாக நமது அங்கத்தினர்கள் பிரம்மசாரி விரதத்தை அனுஷ்டிக்கவேண்டும் என்ற நிபந்தனையை எடுத்துவிடலாமா என்று யோசித்து வருகிறேன்.

நிர்மலா: எடுத்துவிட்டால் தீங்கு ஒன்றுமில்லை என்று நினைக் கிறேன், மாமா. மற்றவர்கள் ஒருவேளை ஆட்சேபிப்பார் களோ? அபலாகாந்தர், ஸ்ரீசர்—

சந்திரபாபு: அவர்கள் ஆட்சேபிக்கக் காரணமேயில்லை.

நிர்மலா: இருந்தாலும் அபலாகாந்தரை ஒரு வார்த்தை கேட்டுவிடுவது நலம்.

சந்திரபாபு: எல்லோருடைய அபிப்பிராயத்தையும் தெரிந்து கொள்வோம். (கடிதத்தைப் படிக்கிறார்.) '..இதுவரையில் எழுதியவற்றைச் சுலபமாக எழுதி விட்டேன். இனிமேல் கூறப்போவதை எழுத என் பேனா ஓடவில்லை.'

நிர்மலா: மாமா! பூரணர் ஒரு வேளை இரகசியமாக ஏதாவது எழுதி இருக்கிறாரோ என்னவோ? நீங்கள் உரக்கப் படிக்கிறீர்களே?

சந்திரபாபு: நீ கூறுவது உண்மையே. (மனத்திற்குள் படித்து விட்டு) என்ன ஆச்சரியம்! நான் இதுகாறும் இதை அறியாமற் போனேனே! இன்றுவரை நான் ஒன்றையும் புரிந்து கொள்ளவில்லை. நிர்மலா! பூரணர் என்றாவது உன்னிடம் ஒரு விதமாக—

நிர்மலா: ஆம். அடிக்கடி அவர் என்னிடம் நடந்துகொண்டது முட்டாள்தனமாக இருந்தது.

சந்திரபாபு: இல்லை. அவர் சிறந்த புத்திசாலி. வெளிப்படையாகச் சொல்கிறேன். அவர் கலியாண விஷயத்தைப் பற்றி இதில் எழுதியிருக்கிறார்.

நிர்மலா: நீங்கள் அவருடைய கார்டியன் அல்லவே? உங்களுக்கு ஏன் எழுத வேண்டும்?

சந்திரபாபு: நான் உன்னுடைய கார்டியன் அல்லவா? இதைப் படித்துப் பார்.

நிர்மலா: (கடிதத்தைப் படித்துவிட்டு முகம் சிவந்து) இது ஒருகாலும் முடியாது.

சந்திரபாபு: நான் அவருக்கு என்ன விடை அனுப்புவது?

நிர்மலா: இது ஒருகாலும் முடியாது என்றுதான்.

சந்திரபாபு: ஏனம்மா நிர்மலா, நமது சங்கத்தில் பிரம்மசாரி விரத நிபந்தனையை ரத்து செய்து விட்டால் நான் ஆட்சேபிக்கமாட்டேன் என்று சற்றுமுன் கூறினாயே?

நிர்மலா: அதற்காக யாரோ ஒருவர் விவாகத்தைப் பற்றி எழுதினால் அவருடன்—

சந்திரபாபு: பூரணரை 'யாரோ ஒருவர்' என்று கூறலாமா! அத்தகைய நல்ல வரன்—

நிர்மலா: மாமா! உங்களுக்கு இந்த விஷயமெல்லாம் ஒன்றும் தெரியாது. உங்களுக்குப் புரிய வைக்கவும் முடியாது. எனக்கு வேலையிருக்கிறது. (போக முயற்சிக்கிறாள்) மாமா! உங்கள் சட்டைப் பையில் ஏதோ வைத்திருக்கிறீர்களே!

சந்திரபாபு: (திடுக்கிட்டு) ஆம்! ஆம்! மறந்தே போய் விட்

டேன். காலையில் பியூன் உன் பெயரில் வந்த ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்து விட்டுச் சென்ருன்.

நிர்மலா: (அவசரமாக அதை வாங்கி) அநியாயம்! அபலா காந்தரின் கடிதம் காலையிலேயே வந்தும் என்னிடம் நீங்கள் கொடுக்கவில்லை. அவர் மறந்து போய் விட்ட தாக நான் நினைத்தது இன்னும் பெரிய தவறு.

சந்திரபாபு: தவறுதான் நிர்மலா. ஆனல் இதைவிடப் பெரிய தவறுகளை நான் தினமும் இழைத்துக்கொண்டு வந்த போதிலும் நீ மன்னித்து என்னிடம் அன்பு செலுத்து கிருய்.

நிர்மலா: பரவாயில்லை. மாமா! நானும் அபலாகாந்தரைப் பற்றி மனத்தில் எத்தனையோ முறை தவருக எண்ணிய துண்டு. அது யார்? ரசிகர் அல்லவா வருகிருர்? வாருங்கள். வாருங்கள். மாமா இதோ இருக்கிருர்.

[ரசிகர் வருகிருர்]

சந்திரபாபு: ரசிகர் இப்போது வந்தது மிகவும் நல்லதாயிற்று.

ரசிகர்: நான் வருவது அவ்வளவு நன்மை என்ருல் அது உங்களுக்குச் சுலபமாகவே கிடைத்துவிடும். நான் வேண்டும் என்ருலும் வருவேன்; வேண்டாம் என்ருலும் வருவேன்.

சந்திரபாபு: நம்முடைய சங்க விதிகளிலிருந்து பிரம்மசாரி விரத நிபந்தனையை எடுத்து விடலாமென்று யோசிக் கிறேன். உங்கள் அபிப்பிராயம் என்ன?

ரசிகர்: இந்த நிபந்தனையை வைத்திருந்தாலும் எடுத்தாலும் எனக்கு இரண்டும் ஒன்றுதான். ஆகவே நான் இந்த விஷயத்தில் நடுநிலையில் இருந்து தீர்ப்புக் கூறமுடியும். இந்த நிபந்தனையை எடுத்து விடுவதே நலம். இல்லா விடில் அது ஒருநாள் தானுகவே மறைந்துவிடும். எங்கள் பேட்டையின் குடிகாரனுகிய ராம்ஹரி தெருவின் நடுவில் வந்து எல்லோரையும் அழைத்து 'பேட்டை வாசிகளே! நான் இங்குதான் விழப் போகிறேன்' என்று கூறினன். கூருமற் போனுலும் அவன் அங்குதான் விழுந்திருப்பான். ஆனல் அவன் முன் கூட்டியே சொன்னது நலமாயிற்று.

சந்திரபாபு: நன்ருகச் சொன்னீர்கள், ரசிகரே! பலவந்தமாக வரும் விஷயத்தைப் பலங்கொண்டு எதிர்க்காமல் அதை உள்ளே வரவிடுவது புத்திசாலித்தனம். வருகிற ஞாயிற்றுக்கிழமை இத்தீர்மானத்தை அங்கத்தினர்கள் எல்லோருடைய முன்னிலையில் பிரேரேபிக்க விரும்பு கிறேன்.

ரசிகர்: அதற்குமுன், வெள்ளிக்கிழமை மாலை நீங்கள் என்

வீட்டிற்கு வந்தீர்களானல் நான் எல்லோருக்கும் செய்தி அனுப்பிவிடுகிறேன்.

சந்திரபாபு: சரி, ரசிகரே! உங்களுக்கு இப்பொழுது நேரமிருந்தால் நமது நாட்டின் கால் நடைகளை அபிவிருத்தி செய்யும் பிரச்னையைப் பற்றி—

ரசிகர்: கேட்பதற்கு மிக ஆசையாக இருக்கிறது. ஆனல் நேரமோ—

நிர்மலா: வேண்டாம், ரசிகரே! நீங்கள் அதோ அந்த அறைக்குப் போங்கள். உங்களுடன் சில வார்த்தைகள் பேச வேண்டும். மாமா! உங்கள் எழுத்துவேலையை முடியுங்கள். நாங்கள் இருந்தால் தடை ஏற்படும்.

ரசிகர்: நான் வருகிறேன்.

நிர்மலா: (போய்க்கொண்டே) அபலாகாந்தர் நான் கேட்டிருந்த அதே ரிப்போர்ட்டை அனுப்பினர். என்னுடைய வேண்டுகோளை நினைவு வைத்துக்கொண்டு அனுப்பியதற்கு என்னுடைய வந்தனத்தை அவரிடம் நீங்கள் தெரிவித்து விடுங்கள்.

ரசிகர்: உங்கள் வேண்டுகோளை நிறைவேற்றியது அவருடைய பாக்கியம்.

## நான்காம் காட்சி

அக்ஷயகுமாரரின்

[ஜகத்தாரிணி, புரபாலா, அக்ஷயர்]

ஜகத்தாரிணி: மாப்பிள்ளை! இதோ பார்! நான் இப்பெண்களை வைத்துக்கொண்டு என்ன செய்வது? நிருபபாலா உட்கார்ந்து அழுதவண்ணமாகவே இருக்கிருள். நீரபாலா கோபமே உருவெடுத்தாற்போல உட்கார்ந்து இருக்கிருள். எது கூறினுலும் கேட்கமாட்டோம் என்கிருர்கள். பெரிய மனிதர் வீட்டுப்பிள்ளைகள் இன்று பெண் பார்க்க வருகிருர்கள். நான் என்ன சமாதானம் சொல்லி அவர்களைத் திருப்பி அனுப்புவது? நீதான் அவர்களைப் படிக்க வைத்து துரைசானிகளாக்கி விட்டாய். நீயே அவர்களுக்குப் புத்தி சொல்.

புரபாலா: நிஜமாக, நானே அவர்களது பிடிவாதத்தைப் பார்த்து மலைத்துப் போனேன். அவர்கள் மனத்தில்—

அக்ஷயகுமாரர்: என்னைத் தவிர வேறு யாரையும் பிடிக்கவில்லை.

உன் தங்கைகள் அல்லவா? ருசியும் உன்னைப் போலவே.

புரபாலா: விளையாடுவதற்கு இதுதான் சமயமா? நீங்கள் சென்று அவர்களைச் சமாதானம் செய்யுங்கள். வேறு யார் சொன்னாலும் அவர்கள் கேட்கமாட்டார்கள்.

அக்ஷயகுமாரர்: என்னிடம் அவ்வளவு பயமா? அத்திம்பேரை விரும்பும் மைத்துனிகள் போலும். சரி. என்னிடம் அனுப்பு அவர்களை. பார்க்கிறேன்.

[ஜகத்தாரிணியும் புரபாலாவும் செல்கின்றனர். நிருபபாலாவும் நீரபாலாவும் வருகின்றனர்]

நீரபாலா: முடியாது, அத்திம்பேரே! இது ஒருகாலும் முடியாது.

நிருபபாலா: அத்திம்பேரே! உங்கள் காலில் விழுகிறோம். எங்களைக் கண்ட பேர்கள் முன்னிலையில் வரச்செய்து அவமானம் செய்யாதீர்கள்.

அக்ஷயகுமாரர்: தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட ஒருவன் 'என்னை வெகு உயரத்தில் தொங்க விடாதீர்கள். எனக்குத் தலைசுற்றும்' என்று சொன்னானும். உங்கள் பேச்சும் அப்படித்தான் இருக்கிறது! கலியாணம் செய்து கொள்ளப் போகிற பெண்கள் பிறர் முன் வரமாட்டேன் என்று சொன்னால் எப்படி முடியும்?

நீரபாலா: நாங்கள் கலியாணம் செய்துகொள்ளப் போகிறோம் என்று யார் சொன்னார்கள்?

அக்ஷயகுமாரர்: ஆகா! உடல் சிலிர்க்கிறது எனக்கு! ஆனால் மனம் பலவீனமானது. விதி வலியது. ஒருவேளை உங்கள் பிரதிக்ஞை பங்கமாகி விட்டால்—

நீரபாலா: ஒருபொழுதும் பங்கமாகாது.

அக்ஷயகுமாரர்: ஆகாது என்றால் பயப்படாமல் வா! அவ்விரு இளைஞர்களையும் ஒரு பார்வை பார்த்துச் சுட்டெரித்து அனுப்பிவிடு. அவர்கள் வீடு திரும்பிய பிறகு மெதுவாக வெந்து சாம்பராகட்டும்.

நீரபாலா: அகாரணமாக உயிர்க் கொலை செய்ய நான் விரும்பவில்லை.

அக்ஷயகுமாரர்: உயிர்களின் மீது என்ன தயவு உனக்கு! ஆனால் இந்தச் சாதாரண விஷயத்திற்கு நீ வீட்டை இரண்டு செய்வானேன்? உங்களுடைய தாயாரும் அக்காவும் விரும்பியபடி இரு இளைஞர்கள் இப்பொழுது வருவார்கள். நீங்கள் ஒரு நிமிஷம் வந்து நின்றுவிட்டு ஓடிவிடுங்கள். பிறகு நான் இருக்கிறேன். உங்கள் இஷ்டத்திற்கு விரோதமாக ஒன்றும் நடக்க விடமாட்டேன்.

நீரபாலா: நிச்சயந்தானே!

அக்ஷயகுமாரர்: முற்றிலும் நிச்சயம்.

[புரபாலா வருகிருள்]

புரபாலா: நீங்கள் சென்று உடை மாற்றி வாருங்களடி.

நீரபாலா: மாற்றமாட்டோம்.

புரபாலா: பெண் பார்க்க வருபவர்களின் எதிரில் இந்த வேஷத்துடனு வரப்போகிருய்? வெட்கமாக இல்லை!

நீரபாலா: வெட்கமா? அழகாக டிரெஸ் பண்ணிக்கொண்டு வந்தால் இன்னும் அதிக வெட்கமாக இருக்குமே!

அக்ஷயகுமாரர்: பார்வதி தவக்கோலத்துடனேயே பரம சிவனின் மனத்தை அபகரித்தாள். சகுந்தலை துஷ்யந்தனின் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட பொழுது அவள் அணிந்திருந்தது ஒரு மரவுரியே. அதுவும் இறுகிப் போன மரவுரி என்று காளிதாசர் சொல்கிருர். அவைகளை உன் தங்கைகள் படித்துப் புத்திசாலிகளாகி விட்ட படியால் டிரெஸ் செய்துகொள்ள மறுக்கிருர்கள்.

புரபாலா: அதெல்லாம் கிருத யுகத்துக் கதை. இக்காலத்துத் துஷ்யந்த மகாராஜர்களை வசப்படுத்த வேண்டுமானல் கொஞ்சம் 'மேக் அப்' மிகவும் அவசியம்.

அக்ஷயகுமாரர்: உதாரணம்?

புரபாலா: நீங்கள்தான். நீங்கள் என்னைப் பார்க்கவந்த பொழுது அம்மா என்னை எப்படி அலங்கரித்து நிறுத்தியிருந்தாள்?

அக்ஷயகுமாரர்: அந்த அலங்காரம் உன்னுடைய உண்மையான அழகை மறைத்து விட்டது என்று அப்பொழுது நான் எண்ணியதுண்டு.

புரபாலா: போதும் நிறுத்துங்கள். நீரு! வா, போகலாம்.

நீரபாலா: வேண்டாம், அக்கா.

புரபாலா: உடை மாற்றவில்லையானல் கூந்தலையாவது வாரி முடித்துக்கொள்.

அக்ஷயகுமாரர்: [பாடுகிருர்]

மாமலர் சூடுதல் இலையெனினும்
  மாணுறக் கருங்குழல் கட்டுக நீ
மாவிழி மையிடல் இலையெனினும்
  மனமெனுங் கதவைத் தட்டுக நீ
பூவெனும் துகில்நுனித் தீப்பொறியைப்
  போவார் வழிமேல் சிந்துக நீ
மேவுங் கருணை இல்லெனினும்
  மௌன மதாகச் செயல் புரிவாய்.

புரபாலா: இதுதான் பாடுவதற்குச் சமயமா? நான் என்ன

செய்வேன்? அவர்கள் வரும் சமயமாகி விட்டது. இன்னும் சமையல்கூட ஆகவில்லை.

[புரபாலா, நீரபாலா, நிருபபாலா மூவரும் செல்கின்றனர்]

[ரசிகர் வருகிறார்]

அக்ஷயகுமாரர்: பீஷ்மாசாரியாரே! பாரத யுத்தத்திற்கு எல்லோரும் சித்தமாக இருக்கிறார்களா?

ரசிகர்: எல்லோரும் தயார். வீர புருஷர்கள் இருவரும்கூட வந்துவிட்டனர்.

அக்ஷயகுமாரர்: இரு கூரிய கணைகளும் உடை மாற்றிக்கொள்ள உள்ளே சென்றிருக்கின்றன. நீங்கள்தான் சேனைத்தலைவர். நான் சிறிது நேரம் மறைந்திருக்க விரும்புகிறேன்.

ரசிகர்: நானும் முதலில் சற்று மறைவாகவே இருக்கிறேன்.

[ரசிகரும் அக்ஷயகுமாரரும் செல்கின்றனர்]

[ஸ்ரீசரும் விபினரும் வருகின்றனர்]

ஸ்ரீசர்: விபினு! இப்பொழுதெல்லாம் நீ சங்கீதத்தின்மீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அதைத் தாக்குகிறாயே! ஏதாவது லாபம் உண்டோ?

விபினர்: ஒன்றுமில்லை. சங்கீத வித்தை என்ற கோட்டையின் வாயிலை ஏழு ஸ்வரங்கள் இரவு பகலாகக் காத்து வருகின்றன. நான் நுழைவதற்கே வழி இல்லை. உனக்குத் திடீரென்று இந்த நினைவு ஏன் வந்தது?

ஸ்ரீசர்: சில நாட்களாக எனக்குக் கவிதைகளை இசையுடன் பாடவேண்டும் என்ற ஆசை உண்டாகிறது. அன்று ஒரு புத்தகத்தில் படித்தேன்.

அலைபாய் கடலின் கரைமணலை
அளைந்தே நாளைப் போக்கினை நீ!
நிலையா மாய விளையாட்டை
நிறுத்திக் கரும்புனல் பாய்ந்திடுக
தொலையா ழமிலா உவரிதனைத்
தொட்டுக் கடைந்த அமுதத்தை
நிலவார் முறுவல் முன்கூட்டி
நெடுமனை நீயும் புகுந்திடுவாய்.

விபினர்: பாட்டு பரவாயில்லை. கவி நன்றாகவே அதை அமைத்திருக்கிறான். அதற்கு அப்புறம் ஒன்றும் இல்லையா? ஆரம்பித்ததை முடித்துவிடு.

ஸ்ரீசர்: சிந்தையிற் கொண்டது ஏதோ அந்தச்
சீரிய நல்வழி இருப்பவர்யார்?
நொந்திடச் செய்திடு மாமலர்த் தென்றல்
நோவினை என்னென் றுரைப்பேன்யான்

அந்தமார் தண்மலர்க் காவினைத்தேடி
அன்புடன் எல்லை சென்றுடன்மீள
வந்திடு வோமென் அன்புடையீரே
வாரீரோ நீர் வாரீரே!

விபினர்: பேஷ்! பேஷ்! ஆனால், ஸ்ரீசா, அந்தப் புத்தக அலமாரியில் நீ என்ன தேடுகிறாய்?

ஸ்ரீசர்: அன்றைய தினம் ஒரு புத்தகத்தில் இரு பெயர்கள் எழுதப்பட்டிருந்தனவே! அதைத் தேடுகிறேன்.

விபினர்: அதெல்லாம் இன்று வேண்டாம், தம்பீ.

ஸ்ரீசர்: எதெல்லாம்?

விபினர்: அவர்களுடைய பேச்சை எடுக்கவேண்டாம்.

ஸ்ரீசர்: என்ன ஆச்சரியம்! அவர்களுடைய பேச்சை எடுத்து நான் இன்று—

விபினர்: கோபிக்காதே! என் விஷயத்தை நான் கூறினேன். நான் இந்த வீட்டில் அவர்களைக் குறித்து ரசிகருடன் பலமுறை எவ்வளவு வேடிக்கையாகப் பேசினேனோ அதை இன்று மனத்தினால் நினைக்கக்கூட முடியாது. புரிகிறதா?

ஸ்ரீசர்: புரியாமல் என்ன? நான் சும்மா ஒரு புத்தகத்தைப் பிரித்துப் பார்க்க ஆரம்பித்தேனே தவிர யாரையும் குறித்து ஒரு வார்த்தையும் சொல்லவில்லையே!

விபினர்: இன்று அதுவும் வேண்டாம். அவர்கள் இன்று நம் எதிரில் வரப்போகிறார்கள். அதற்குத் தகுந்தவாறு நடந்துகொள்ள வேண்டும்.

ஸ்ரீசர்: நான் உன்னுடன்—

விபினர்: தர்க்கம் செய்யாதே. நான் தோல்வியை ஒப்புக் கொள்கிறேன். புத்தகத்தைத் திருப்பி வைத்துவிடு.

[ரசிகர் வருகிறார்]

ரசிகர்: இதென்ன நீங்கள் வந்து தனியாக உட்கார்ந்திருக்கிறீர்களே! வேறு விதமாக எண்ணாதீர்கள்—

ஸ்ரீசர்: பரவாயில்லை. இந்த வீடே எங்களை அன்புடன் வரவேற்றது.

ரசிகர்: உங்களுக்கு மிகவும் சிரமம் கொடுத்துவிட்டேன்.

ஸ்ரீசர்: சிரமம் ஒன்றுமில்லை. ஒருவரின் கஷ்டத்தைத் தீர்ப்பதற்காகச் சிரமத்தை மேற்கொள்வது இன்பமே.

ரசிகர்: சில நிமிஷங்களில் இக்காரியம் முடிந்துவிடும். பிறகு நீங்கள் இஷ்டப்படி செய்யலாம். இது உண்மையான நிகழ்ச்சியாக இருந்தால் அல்லவா நீங்கள் பயப்பட வேண்டும்? கலியாணம் என்பது சர்க்கரைப் பொங்கலுடன் ஆரம்பிக்கப்படுகிறதே தவிர இல்வாழ்க்கை கடைசிவரை இனிமையாக இருக்கும் என்று சொல்

வதற்கு இல்லை. அது இருக்கட்டும், இன்று நீங்கள் ஏன் வாடிய முகங்களுடன் உட்கார்ந்திருக்கிறீர்கள்? உங்களுக்கு ஒரு பயமும் இல்லை. நீங்கள் காட்டில் இருக்கும் பறவைகள் போல. இரண்டு பட்சணங்களைச் சாப்பிட்டு விட்டுப் பறந்தோடி விடலாம். உங்களை யாரும் பிடித்து வைக்கப்போவதில்லை. 'நாத்ர வ்யாதசரா: பதந்தி பரிதோ நைவாத்ர தாவாநல:' இங்கு வேடனின் கணைகள் விழமாட்டா. காட்டுத்தீயும் கிடையாது. வெப்பம் மிகுந்தால் இளநீர் வரவழைத்துத் தருகிறேன்.

**ஸ்ரீசர்:** எங்களுக்குத் துக்கம் ஒன்றுமில்லை. ஆனால் எங்களால் ஏதாவது பிரயோசனம் உண்டா என்று எண்ணிப் பார்க்கிறோம். எதிர்காலத்தைப் பற்றிய சந்தேகங்கள் சிலவும் தலையெடுக்கின்றன.

**ரசிகர்:** அழகுதான். உங்கள் உதவியால் நீங்கள் இரு பெண்களை நன்றி என்ற பாசத்தினால் பிணைக்கப் போகிறீர்கள். நீங்கள் மாத்திரம் ஒன்றினாலும் கட்டப் படாமல் இருக்கப்போகிறீர்கள்.

**ஜகத்தாரிணி:** (வீட்டிற்குள் மெல்லிய குரலில்) என்ன நிருபா இது! நீ குழந்தையா என்ன? சீக்கிரம் கண்களைத் துடைத்துக்கொண்டு அந்த அறைக்குச் செல். என் கண் அல்லவா நீ! அழுது அழுது கண் சிவந்துபோனால் பார்ப்பதற்கு எப்படி இருக்கும்? நீரா! நீயும் செல். உங்களுடன் வாதாட இனி என்னால் முடியாதம்மா! பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகள் எவ்வளவு நேரம் உட்கார்ந்திருப்பார்கள்? என்ன நினைப்பார்கள்?

**ஸ்ரீசர்:** அதைக் கேட்டீரா, ரசிகரே! சகிக்க முடியவில்லை. இதைவிட ராஜபுத்திரர்களைப்போல் பெண்களைக் கொன்றுவிடுவது மேல்.

**விபினர்:** ரசிகரே! இவர்களை இந்த நிலையிலிருந்து காப்பாற்ற நீங்கள் எது சொன்னாலும் நாங்கள் கேட்கத்தயார்.

**ரசிகர்:** ஒன்றுமில்லை. உங்களுக்கு மீண்டும் சிரமம் கொடுக்க மாட்டேன். இன்று மாத்திரம் இதைச் சமாளித்து விட்டீர்களானால் போதும். அப்புறம் இதைப்பற்றி நீங்கள் நினைக்கவே வேண்டாம்.

**ஸ்ரீசர்:** நினைக்கவே வேண்டாமா? ரசிகரே! நாங்கள் என்ன கற்களா? இன்றுமுதல்தான் நாங்கள் இப் பெண்களைக் குறித்து அதிகமாக நினைக்கவேண்டி வரும்.

**விபினர்:** இவ்வளவு நடந்த பிறகு நாங்கள் இவர்கள் விஷயத்தில் உதாசீனமாக இருந்தால் அது தகாத காரியம்.

ஸ்ரீசர்: இன்றுமுதல் இவர்களைப்பற்றிச் சிந்திப்பது எங்களுக்கு கௌரவத்தையே அளிக்கும்.

ரசிகர்: பிறகு உங்கள் இஷ்டம். ஆனால் சிந்திப்பதைத் தவிர வேறு ஒரு தொந்தரவும் இராதென்று நினைக்கி

ஸ்ரீசர்: நாங்களே இஷ்டப்படும் பொழுது நீங்கள் ஏன் தடுக்கிறீர்கள்?

விபினர்: இவர்கள் சம்பந்தமாக நாங்கள் எடுத்துக்கொள்ளும் சிரமமே எங்களுக்குக் கைம் மாறாகும்.

ஸ்ரீசர்: இரண்டு தினங்களாக நீங்கள் 'உங்களைத் தொந்தரவு செய்யமாட்டேன்' என்று பலமுறை கூறி ஆறுதல் சொல்வது எங்களுக்கு வருத்தத்தை உண்டு பண்ணுகிறது.

ரசிகர்: என்னை மன்னியுங்கள். நான் இனிமேல் இத்தகைய விவேகம் இல்லாத காரியம் செய்யமாட்டேன்.

ஸ்ரீசர்: நீர் எங்களை இன்னும் அறிந்துகொள்ள வில்லையா?

ரசிகர்: அறிந்துகொண்டேன். அதைப்பற்றிக் கவலையே வேண்டாம்.

[நிருபபாலாவும் நீரபாலாவும் அச்சத்துடன் பிரவேசிக்கின்றனர்]

ஸ்ரீசர்: (நமஸ்காரம் செய்து) ரசிகரே! எங்களை மன்னிக்கும்படி நீங்கள் இவர்களிடம் சொல்லுங்கள்.

விபினர்: எங்கள் மூலமாக இவர்களுக்குப் பயமோ, வெட்கமோ ஏற்பட்டால் அதற்காக நாங்கள் வருந்துகிறோம். இவர்கள் எங்களை மன்னிக்காவிடில்—

ரசிகர்: அழகுதான்! இவர்கள் உங்களை மன்னிப்பதாவது? சிறு பெண்கள்; பாவம்! மதிப்பிற்குரிய விருந்தாளிகளுடன் எப்படிப் பேசுவது என்றுகூடத் தெரியாமல் தலைகுனிந்து நிற்கிறார்கள். நீங்கள் இப்படிப் பேசினால் அவர்களுடைய வெட்கம் அதிகரிக்கும். நிருபா, நீரு! உங்கள் கண்களில் கண்ணீர் இன்னும் மறையவில்லை. எனினும் இவர்களிடம் உங்களுக்கு வெறுப்பு ஒன்றும் இல்லை என்ற விஷயத்தை நான் இவர்களிடம் கூறலாமா?

[நிருபபாலாவும் நீரபாலாவும் வெட்கத்தினால் வாய் திறவாதிருக்கின்றனர்]

சரி. தனியாக விசாரிப்பது நலம். (தனிமையாக) இவர்களிடம் என்ன சொல்வது, சொல்லுங்கள். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் சென்றுவிடுங்கள் என்று சொல்லட்டுமா?

நீரபாலா; (ரகசியமாக) சிற்றப்பா! நீங்கள் பிதற்றுவது சரி

யல்ல. நாங்கள் அவ்வாறு சொன்னோம்? வந்திருப்பது இவர்கள் என்று எங்களுக்கு எப்படித் தெரியும்?

ரசிகர்: (ஸ்ரீசரையும் விபினரையும் நோக்கி) இவர்கள் கூறுவது:

விதியில் பிரமன் எழுதிய தெதுவோ
வேருய் இன்ப முடிவே பெற்ருேம்;
கொதிசெய் கதிர்வர வஞ்சுங் காலே
அளிசெய் வெண்மதி அலர்ந்தது கண்டோம்.

இதற்குமேல் கூறவேண்டியது ஏதாவது உண்டோ?

நீரபாலா: (ரகசியமாக) சிற்றப்பா! நீ கூறியதெல்லாம் பொய். நாங்கள் உங்களிடம் எப்பொழுது இப்படிக் கூறினோம்?

ரசிகர்: (ஸ்ரீசர் விபினர், இவர்களிடம்) இவர்களுடைய மனதிலிருப்பதை நான் முழுவதும் விவரிக்கவில்லை என்று இவர்கள் என்னைக் கண்டிக்கிறார்கள். 'சந்திரனின் கிரணங்கள்' என்று கூறினால் மாத்திரம் போதாது. இன்னும் விவரமாக—

நீரபாலா: (இரகசியமாக சிற்றப்பா! நீங்கள் இப்படியெல்லாம் பேசினால் நாங்கள் உள்ளே போய் விடுவோம்.

ரசிகர்: (வடமொழியில்) ஸகி! ந யுக்தம் அக்ருத ஸத்காரம் அதிதி விசேஷம் உஜ்ஜித்வா ஸ்வச்சந்ததோ கமனம்[1] (ஸ்ரீசரையும் விபினரையும் நோக்கி) இவர்களுடைய உள்ளத்தில் இருப்பதை நான் உங்களிடம் வெளிப்படையாகச் சொன்னால் இவர்கள் இவ்வறையைவிட்டு வெளியே போய்விடுவோமென்று பயமுறுத்துகிறார்கள்.

[நிருபபாலாவும் நீரபாலாவும் போக முயலுகின்றனர்]

ஸ்ரீசர்: ரசிகர் செய்த பிழைக்காக நீங்கள் எங்களுக்குத் தண்டனை விதிப்பது ஏன்? நாங்கள் ஒரு குற்றமும் புரியவில்லை!

[நிருபபாலாவும் நீரபாலாவும், செல்லவும் மனமில்லாமல் இருக்கவும் வெட்கப் பட்டுக் கொண்டு நிற்கிறார்கள்.]

---

1. மகாகவி காளிதாசர் இயற்றிய 'அபிக்ஞான சாகுந்தல' நாடகத்தின் முதல் அங்கத்தில் சகுந்தலையின் தோழியாகிய அனஸூயை சகுந்தலையினிடம் கூறும் வாக்கியம். இதன் பொருள், 'தோழி, மதிப்பிற்குரிய விருந்தினரை உபசரிக்காமல் இஷ்டப்படி செல்வது உசிதமல்ல.' ரசிகர் எப்பொழுதும் வேடிக்கையாகப் பேசுபவராதலால் இங்கு வடமொழியில் பேசி விகடம் செய்கிறார்.

**விபினர்:** (நீரபாலாவை நோக்கி) ஏற்கனவேயே நாங்கள் புரிந்த குற்றம் ஏதேனும் இருப்பின் அதற்கும் இப்பொழுதே மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

**ரசிகர்:** (இரகசியமாக) பாவம்; மன்னிக்கும்படி கேட்டுக் கொள்ளும் இந்த வாய்ப்புக்காக விபினர் நெடுநாளாகக் காத்திருக்கிறார்.

**நீரபாலா:** (இரகசியமாக) நான் மன்னிக்கும்படி இவர் என்ன பிழை செய்தார்!

**ரசிகர்:** (விபினரிடம்) நீங்கள் புரிந்த தவறு மிகவும் அழகிய தவறு. ஆதலால் அதைப் பிழை என்றே சொல்வதற்கில்லை என்று நீரபாலா சொல்லுகிறாள். அந்த நோட்டை நான் திருடத் துணிந்திருந்தால் அது குற்றமாகும். சட்டத்தின் விசேஷப் பகுதியில் இவ்வாறு எழுதப் பட்டிருக்கிறது.

**விபினர்:** ' பொறுமைப்படாதீர்! ரசிகரே! உமக்கு எப்பொழுதும் குற்றம் புரிவதற்கும் அதற்குத் தக்க தண்டனையை அனுபவிப்பதற்கும் வாய்ப்புக் கிடைக்கும். எங்களுக்கு அத்தகைய வாய்ப்பு ஒருமுறைதான் கிடைத்தது. ஆயினும் நாங்கள் குற்றவாளிகள் என்று கருதப்படவுமில்லை. மன்னிப்புப் பெறும் பாக்கியத்தையும் பெறவில்லை. நாங்கள் அதற்கு யோக்கியதை அற்றவர்களா?

**ரசிகர்:** ஒரேயடியாக நிராசையாகிவிட வேண்டாம். தண்டனை கால தாமதம் கழித்து வந்தாலும் நிச்சயம் வந்தே தீரும்.

[வேலைக்காரன் வருகிறான்]

**வேலைக்காரன்:** சிற்றுண்டி தயாராகி விட்டது.

[நிருபபாலாவும் நீரபாலாவும் செல்கின்றனர்]

**ஸ்ரீசர்:** ரசிகரே! நாங்கள் பஞ்சத்தினால் அடிபட்ட தேசத்தில் இருந்து வருகிறோமா என்ன? சிற்றுண்டிக்கு ஏன் இவ்வளவு அவசரம்?

**ரசிகர்:** 'மதுரேண ஸமாபயேத்' என்று சாத்திரம் சொல்லுகிறது. இனிப்புடன் முடிக்கவேண்டும்.

**ஸ்ரீசர்:** (பெருமூச்செறிந்து) ஆனால் முடிவு இனிமையாக இராதே ஓய்! (விபினரிடம் இரகசியமாக) விபின! இவர்களை ஏமாற்றி விட்டு நாம் போகக்கூடாது.

**விபினர்:** (இரகசியமாக) அப்படிச் சென்றால் நாம் அயோக்கியர்களாவோம்.

**ஸ்ரீசர்:** (இரகசியமாக) இப்பொழுது நாம் என்ன செய்வது?

**விபினர்:** (இரகசியமாக) இனிமேல் தான் யோசிக்கவேண்டும்.

**ரசிகர்:** நீங்கள் பயந்துவிட்டதுபோல் தோன்றுகிறது ஒரு

சந்தேகமும் வேண்டாம், கடைசியில் எது நேர்ந்தாலும் பார்த்துக்கொள்ள நான் இருக்கிறேன். (ஸ்ரீசரும் விபின ரும் உண்ணுகிருர்கள்)

[வீட்டின் மற்ருெருபுறம்: ஜகத்தாரிணி யும் அக்ஷயகுமாரரும்]

**ஜகத்தாரிணி:** மாப்பிள்ளே! எப்படிப்பட்ட சிறந்த வரன்கள் பார்த்தாயா?

**அக்ஷயகுமாரர்:** மாமி! நீங்கள் பொறுக்கிய புள்ளிகள் நன்ரு யில்லாமல் இருப்பார்களா?

**ஜகத்தாரிணி:** நமது பெண்களேப் பார்த்தாயா? அழுகை யெல்லாம் எங்கேயோ ஓடி மறைந்து விட்டதே!

**அக்ஷயகுமாரர்:** அழுதது அவர்களுடைய பிழையா? மாமி! நீங்கள் சென்று வரன்கள் இருவரையும் பார்த்து ஆசீர் வாதம் செய்யுங்கள்.

**ஜகத்தாரிணி:** நான் சென்ருல் நன்ருயிருக்குமா? அவர்களுக்குப் பெண்களேப் பிடித்துவிட்டதா?

**அக்ஷயகுமாரர்:** நன்கு பிடித்துவிட்டது. நீங்கள் இப்பொழுது சென்று ஆசீர்வாதம் செய்துவிட்டு வந்தால் சட்புட் டென்று கலியாணத்தை நிச்சயித்து விடலாம்.

**ஜகத்தாரிணி:** சரி, நீ எப்படிச் சொல்லுகிருயோ, அப்படியே! அவர்கள் எனக்குப் பிள்ளேகளேப் போல. எனக்கென்ன வெட்கம்?

[புரபாலா வருகிருள்]

**ஜகத்தாரிணி:** வேறு என்ன சொல்வது புரபாலா! தங்கமான இரு வரன்கள்!

**புரபாலா:** எனக்கும் தெரியும். நீரா, நிருபா இவர்களுடைய அதிர்ஷ்டத்திற்குத் திருப்தியில்லாத பையன்கள் வரு வார்களா?

**அக்ஷயகுமாரர்:** அவர்களுடைய மூத்த சகோதரியின் அதிர்ஷ் டத்தின் வாடையே அது!

**புரபாலா:** போதும், நிறுத்துங்கள். நீங்கள் சென்று அவர் களுடன் ஏதாவது பேசுங்களேன். சைலபாலா எங்கே?

**அக்ஷயகுமாரர்:** அவள் சந்தோஷம் தாங்காமல் கதவை மூடிக் கொண்டு பூஜை செய்கிருள். (ஸ்ரீசர், விபினர் ஆகியவர் களிடம் வந்து) நிலேமை எப்படி இருக்கிறது? ரசிகரே! சிற்றுண்டியைத் தாராளமாக வழங்குகிறீரே! என்னே மறந்துவிட்டீர் போலும்!

**ரசிகர்:** இவர்கள் எனக்குப் புதிய நண்பர்கள். இலேயில் எதைப் போட்டாலும் அத்துடன் திருப்தியடைவர். நீ பழைய

நண்பன். உன் சிநேகத்தை நான் புதிதாக்கி உன்னைத் திருப்தி செய்வது என்றால் முடியாத காரியம்.

அக்ஷயகுமாரர்: ஆனால் இன்று இந்தச் சிற்றுண்டியைச் சாப்பிடவும் இக்குடும்பத்தின் பருகப்படாத தேனைக் கொள்ளை கொள்ளவும் பெயர் தெரியாத இரு இளைஞர்கள் தோன்றப் போகிறார்கள் என்று கேள்விப்பட்டேனே! அவர்களுடைய சிற்றுண்டியில் இவர்களுக்குப் பங்கு ஏதேனும் உண்டோ? ரசிகரே! நீர் ஏதாவது ஆள் மாறாட்டம் செய்து விட்டீரோ?

ரசிகர்: மாறாட்டத்திற்கு நான் பெயர் போனவன். இந்த ரசிகன் எங்கு கைவைக்கிறானோ அங்கு மாறாட்டம் நிகழும் என்று உன் மாமிக்கு நன்கு தெரியும்.

அக்ஷயகுமாரர்: என்ன பிதற்றுகிறீர், ரசிகரே! என்ன செய்து விட்டீர்? அவ்விரு பையன்களையும் எங்கு அனுப்பி விட்டீர்?

ரசிகர்: மறந்துபோய் அவர்களுக்குத் தவறான விலாசத்தைக் கொடுத்து விட்டேன்.

அக்ஷயகுமாரர்: என்ன அநியாயம்? அவர்கள் கதி என்ன வாகும்?

ரசிகர்: ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. அவர்கள் இதே நேரத்தில் குமாரடூலி நீல மாதவ சௌதூரியின் வீட்டில் சிற்றுண்டியை ஒழித்துக் கொண்டிருக்கிறார்கள். வனமாலி பட்டாசாரியர் அவர்களுக்கு ஏற்ற உபசாரங்களைச் செய்துகொண்டிருக்கிறார்.

அக்ஷயகுமாரர்: அதைப் புரிந்துகொண்டேன். இனிப்புப் பண்டங்களை எல்லோருடைய இலைகளிலும் பரிமாறியாகி விட்டது. ஆனால் ரசிகரே! உமது சிற்றுண்டி கொஞ்சம் கசந்தாலும் கசந்துவிடும்.

ஸ்ரீசரே! விபினரே! தவறாக எண்ணிக் கொள்ள வேண்டாம். இவ்விஷயம் ஒரு குடும்ப ரகசியம்.

ஸ்ரீசர்: கள்ளம் கபடமற்ற ரசிகர் அந்த ரகசியத்தை ஏற்கனவேயே கூறிவிட்டார். எங்களை ஏமாற்றி இங்கு அழைத்து வரவில்லை.

விபினர்: சிற்றுண்டித் தட்டை நாங்கள் அநுமதி யில்லாமல் ஒழிக்கவில்லை. அதை ருசுப்படுத்த நான் தயார்.

அக்ஷயகுமாரர்: அப்படியானால், விபினரே, பிரம்மசாரிகள் சங்கத்தை நீங்கள் வேண்டுமென்றே நிராதரவாக விட்டு விட்டு வந்திருக்கவேண்டும்.

ரசிகர்: இல்லையில்லை. நீ நினைப்பது தவறு.

அக்ஷயகுமாரர்: மறுபடியும் தவறா? இன்று எல்லோருமே தவறு செய்யும் தினம் போலும்!

[பாடுகிறார்]

பிழைபிழை இன்றே பிழைமயம் எங்கும்
கொடியும் பிழையே வளியும் பிழையே
மலர்மலர் எங்கும் மலர்மயம் ஆகுக
மலிபிழைக் கடலில் மகிழ்வலை ஓங்குக
எழுமகிழ் திரைகள் எழுந் தெதிர் நின்றே
ஏற்றுயர் கரையொடு கூடுக வேள!

**ரசிகர்:** அடேடே! பெரியம்மா வருகிறாளே!

**அக்ஷயகுமாரர்:** வந்துதானே திரவேண்டும். அவளும் குமார டூலி விலாசத்துக்குப் போய் விடுவாள் என்று நினைத் தீரோ?

[ஜகத்தாரிணி வருகிறாள். ஸ்ரீசரும் விபினரும் எழுந்து சாஷ்டாங்கமாக நமஸ் கரிக்கிறார்கள். இருவருக்கும் இரு பவுன் களைக் கொடுத்து ஜகத்தாரிணி ஆசீர் வாதம் செய்கிறாள். பிறகு அக்ஷயரிடம் இரகசியமாக ஏதோ சொல்கிறாள்.]

**அக்ஷயகுமாரர்:** நீங்கள் இருவரும் இன்று சரியாகவே சாப்பிட வில்லை. சிற்றுண்டி அப்படியே தட்டுக்களில் மிகுந்து விட்டது என்று பெரியம்மா சொல்கிறாள்.

**ஸ்ரீசர்:** நாங்கள் ஒவ்வொரு பட்சணத்தையும் இரண்டு தடவை கேட்டு வாங்கிச் சாப்பிட்டோம்.

**விபினர்:** தட்டுக்களில் மிகுந்து போனது மூன்றும் தடவையாக இடப்பட்டது.

**ஸ்ரீசர்:** அதையும் நாங்கள் சாப்பிட்டிருந்தோமானால் எங்க ளால் எழுந்திருக்க முடியாது.

**ஜகத்தாரிணி:** (தனிமையில்) மாப்பிள்ளை, அவர்களுடன் பேசிக்கொண்டிரு. நான் வருகிறேன்.

**ரசிகர்:** இது பெரிய அநியாயம்.

**அக்ஷயகுமாரர்:** எது அநியாயம்?

**ரசிகர்:** சிற்றுண்டி முடிந்தவுடன் போகலாம் என்று வாக் களித்து நான் அவர்களை அழைத்துக்கொண்டு வந்திருக் கிறேன்..ஆனால்—

**ஸ்ரீசர்:** இதில் 'ஆனால்' எதற்கு ரசிகரே! உங்களுக்கு ஏன் இவ்வளவு கலக்கம்?

**ரசிகர்:** உங்களிடம் நான் வாக்களித்தது—

**விபினர்:** அது சரியே. எங்களுக்கு இப்பொழுது பேராபத்து ஒன்றும் நேர்ந்துவிடவில்லையே!

**ஸ்ரீசர்:** பெரியம்மா செய்துவிட்டுச் சென்ற ஆசீர்வாதத்துக்கு நாங்கள் தகுந்தவர்கள் அல்லவென்று—

ரசிகர்: அந்தச் சந்தேகம் ஒருபொழுதும் இல்லை. ஸ்ரீசரே! உதவி செய்யவந்த உங்களுடைய நல்ல குணத்தை நாங்கள் உபயோகப் படுத்திக்கொண்டு—

ஸ்ரீசர்: ரசிகரே! நீங்கள் எங்களுக்கு இழைப்பது அநீதி.

ரசிகர்: இல்லை. நான் செய்தது தவறு. நான் இப்பொழுதே குமாரடூலிக்குச் சென்று வனமாலியிடமிருந்து அவ்விரு இளைஞர்களையும் மீட்டு அழைத்து வந்து விடுகிறேன்.

ஸ்ரீசர்: உங்களுக்கு நாங்கள் என்ன அபராதம் செய்தோம் ரசிகரே!

ரசிகர்: அபராதம் செய்ததாக யார் சொன்னார்கள்? நீங்கள் பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளைகள். பிரம்மசாரி விரதத்தை மேற்கொண்டவர்கள். என்னுடைய வேண்டுகோளுக்கு இணங்கிப் பிறருக்கு உபகாரம் செய்ய வந்து கடைசியில்—

விபினர்: கடைசியில் எங்களுக்கே நாங்கள் ஒரு சிறிய உபகாரம் செய்துகொள்ள நினைத்தால் நீங்கள் பொறுக்க மாட்டீர்கள் போல் இருக்கிறதே. இத்தகைய நல்லெண்ணம் கொண்ட நண்பரா நீங்கள்?

ஸ்ரீசர்: நாங்கள் இதை எங்களுடைய பேரதிர்ஷ்டம் என்று நினைக்கிறோம். அதை நாங்கள் பெறமுடியாமற் செய்ய நீங்கள் ஏன் முயற்சி செய்தீர்கள்?

ரசிகர்: கடைசியில் என்னைக் குறை கூறுகிறீர்கள்.

விபினர்: இச்சுபகாரியத்தில் நீங்கள் உதவி புரியவில்லை என்றால் நான் கண்டிப்பாய் உங்களைக் குறைகூறப் போகிறேன்.

ரசிகர்: நான் இப்பொழுதே மற்றொருமுறை எச்சரிக்கை செய்கிறேன்.

கதம் தத் காம்பீர்யம் தடமபி சிதம் ஜாலிக சதை:
ஸகே ஹம்ஸோத்திஷ்ட! த்வரித மமுதோ கச்ச ஸரஸ:

பூம்புனல் நதியும் தூர்ந்திடப் பரதர்
நூற்றுவர் தம்வலை சூழவே நின்றார்
ஏமம் உனக்கிலை அன்பார் அன்னம்!
ஏகுக பூமலர்ப் பொய்கைத் தடமே!

ஸ்ரீசர்: ஒருபொழுதும் இல்லை. நீங்கள் எத்தனை சம்ஸ்கிருத சுலோகங்களை எடுத்து வீசினாலும் இவ்விரு அன்னப் பறவைகளும் இங்கிருந்து நகரப் போவதில்லை.

ரசிகர்: இடம் கெட்டது. நகரத் தருணம் இல்லை. நான் அசையாமல் உட்கார்ந்திருக்கப் போகிறேன். அந்தோ!

அயி குரங்கி தபோவன விப்ரமாத்
உபகதாஸி கிராத புரீ மிமாம்

பிணையே! உன்றன் பேதமை என்னே?
கணையே பயிலும் கானவர் தம்மில்
இணையில் தவத்தோர் இருக்கை என்றே
அணைந்தாய் அறியாய் வருமா துயரே!

[வேலைக்காரன் வருகிறான்]

வேலைக்காரன்: சந்திரபாபு வந்திருக்கிறார்.

அக்ஷயகுமாரர்: இங்கே அழைத்து வா!

[வேலைக்காரன் செல்கிறான்]

ரசிகர்: திருடர்கள் இருவரையும் ஒரேடியாகப் போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் ஒப்படைத்து விடுவோம்.

[சந்திரபாபு வருகிறார்]

சந்திரபாபு: ஓகோ, நீங்களா? பூரணர் கூட வந்திருக்கிறார் போல் இருக்கிறது.

அக்ஷயகுமாரர்: நான் பூரணர் அல்லன். அக்ஷயகுமாரன்.

சந்திரபாபு: அக்ஷயகுமாரரா-மிகவும் நல்லது. உங்களையும் தான் பார்க்கவேண்டும் என்று இருந்தேன்.

அக்ஷயகுமாரர்: என்னைப்போல் வேண்டாத மனிதனுக்கும் ஒரு தேவை ஏற்படுகிறது. நான் என்ன செய்ய வேண்டும்?

சந்திரபாபு: நான் யோசித்துப் பார்த்ததில் எங்களுடைய பிரம்மசாரிகள் சங்க நிபந்தனைகளிலிருந்து விவாகம் செய்துகொள்ளக் கூடாது என்ற விரத நிபந்தனையை நீக்கிவிட்டுச் சபையின் நோக்கங்களைக் குறுகிய அளவிற்குள் அடக்கி விடுவதே மேல் என்று தோன்றியது. இதை ஸ்ரீசருக்கும் விபினருக்கும் மனத்தில் பதியுமாறு சொல்லிவிட வேண்டும்.

அக்ஷயகுமாரர்: மிகவும் சிரமமான காரியம். என்னால் முடியுமா என்பது சந்தேகம்.

சந்திரபாபு: ஓர் இலட்சியத்தைச் சிறந்ததென்று நாம் பின்பற்றினால் பிற்காலத்தில் தேவையானால் அதை விட்டு விடும் உரிமையை நாம் இழக்கக்கூடாது. இலட்சியத்தைக் காட்டிலும் விவேகம் உயர்ந்தது. ஸ்ரீசரே! விபினரே!

ஸ்ரீசர்: எங்களுக்கு அதிகமாக வற்புறுத்த வேண்டியதில்லை—

சந்திரபாபு: ஏன்?....நீங்கள் நியாயமாகப் பேசினால்கூடக் கேட்கமாட்டீர்களா?

விபினர்: நாங்கள் உங்களுடைய இலட்சியத்தில்—

சந்திரபாபு: இலட்சியத்தில் நாம் மயங்கியிருந்தோம். உண்மை தான். ஆனால் இப்பொழுதும் அதையே பின்பற்றி—

ரசிகர்: இதோ பூரணர் வருகிறார். வாருங்கள், வாருங்கள்.

[பூரணர் வருகிறார்]

சந்திரபாபு: பூரணரே! நீங்கள் பிரேரேபித்தபடி நமது சங்கத்தின் நிபந்தனைகளிலிருந்து பிரம்மசாரி விரதத்தை நீக்குவதுபற்றி விவாதிக்க நாம் இப்பொழுது இங்கு கூடியிருக்கிறோம். ஆனால் ஸ்ரீசரும் விபினரும் இவ்விஷயத்தில் தீவிரமான கொள்கையுடையவர்களாக இருக்கிறார்கள். இப்பொழுது நாம் அவர்களுக்கு விளங்குமாறு—

ரசிகர்: சொல்வதற்கு நான் எவ்வளவோ முயன்று பார்த்தேன்.

சந்திரபாபு: உம்மைப்போல் நாவன்மை படைத்தவருக்கே அது பயன் அளிக்கவில்லை என்றால்—

ரசிகர்: நானடைந்த பயன்—'பலேந பரிசீயதே' பயனைக் கொண்டுதான் அறிய வேண்டும்.

சந்திரபாபு: நீங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை.

அக்ஷயகுமாரர்: ஓய், ரசிகரே! சந்திரபாபுவினிடம் எல்லா விஷயத்தையும் ஒளிக்காமல் கூறிவிடுவது மேல். நான் இரு' சாட்சிகளை இப்பொழுதே கொண்டுவந்து நிறுத்தப் போகிறேன்.

ஸ்ரீசர்: பூரணரே! சவுக்கியம்தானே!

பூரணர்: ஆம்.

விபினர்: கொஞ்சம் முகவாட்டத்துடன் இருக்கிறீரே!

பூரணர்: அதெல்லாம் ஒன்றுமில்லை.

ஸ்ரீசர்: உங்களுடைய சோதனை நெருங்குகிறது போலிருக்கிறது.

பூரணர்: ஆம்.

[நிருபபாலா நீரபாலா ஆகிய இருவரையும் இழுத்துக்கொண்டு அக்ஷயர் வருகிறார்.]

அக்ஷயகுமாரர்: (இரு பெண்களையும் பார்த்து) இவர்தான் சந்திரபாபு. உங்களுக்குக் குருவே போன்றவர். இவரை நமஸ்கரியுங்கள்.

[நிருபபாலாவும் நீரபாலாவும் நமஸ்கரிக்கின்றனர்]

சந்திரபாபு! உங்கள் சங்கத்தின் புதிய நிபந்தனையைப் பின்பற்றி இவ்விரு அங்கத்தினர்களும் சேர்ந்திருக்கிறார்கள்.

சந்திரபாபு: நிரம்ப சந்தோஷம். இவர்கள் யார்?

அக்ஷயகுமாரர்: இவர்கள் என்னுடன் நெருங்கிய தொடர்புடையவர்கள். என்னுடைய மைத்துனிகள். ஸ்ரீசருடனும் விபினருடனும் இவர்களுடைய திருமணம் சுபலக்கினத்தில் நடக்க இருக்கிறது. இவர்களைப் பார்த்தீர்களானால் ரசிகர் இவ்விரு இளைஞர்களின் மனங்களை மாற்றியது வெறும் பேச்சு வன்மையால் மாத்திரம் அல்ல என்பது விளங்கும்.

சந்திரபாபு: இதைக் கேட்க எனக்கு மிகச் சந்தோஷம்.

பூரணர்: ஸ்ரீசரே! நிரம்ப சந்தோஷம். விபினரே! நீர் மிகவும் அதிர்ஷ்டசாலி. அபலாகாந்தர் கடைசியில் ஏமாற்றப் படவில்லை என்று நினைக்கிறேன். அவருக்கும் ஒரு—

[நிர்மலா வருகிறாள்]

சந்திரபாபு: நிர்மலா! ஸ்ரீசருடனும் விபினருடனும் இவர்களுடைய விவாகம் நிச்சயமாகி யிருப்பதைக் கேட்க நீ சந்தோஷப்படுவாய். ஆகையால் பிரம்மசாரி விரத நிபந்தனையை நீக்கும் பிரேரேபணையை நாம் இன்று விவாதிக்க வேண்டியதில்லை.

நிர்மலா: அபலாகாந்தருடைய அபிப்பிராயத்தை நாம் தெரிந்துகொள்ள வில்லையே? அவரை இங்கு காணோமே?

சந்திரபாபு: ஓகோ! நான் அதை மறந்தே போய்விட்டேன். அவர் ஏன் இன்று இங்கே வரவில்லை?

ரசிகர்: கவலைப் படவேண்டாம். அவர் மாறியிருப்பதைப் பார்த்தால் நீங்கள் எல்லோரும் திகைத்துப்போய் விடுவீர்கள்.

அக்ஷயகுமாரர்: சந்திரபாபு! எங்களையும் சங்கத்தில் சேர்த்துக் கொள்ளுங்கள். சங்கம் வரவர ருசிகரமான இடமாக ஆகி வருகிறது. எங்களை இனிமேல் நீங்கள் சேர்த்துக் கொள்ளாமல் இருக்க முடியாது.

சந்திரபாபு: நீங்கள் கிடைப்பது எங்கள் அதிர்ஷ்டம்.

அக்ஷயகுமாரர்: என்னுடன் இன்னொரு அங்கத்தினரும் சேரப் போகிறார். இன்றைய கூட்டத்திற்கு அவரை வருமாறு செய்ய என்றால் ஒரு விதத்திலும் முடியவில்லை. இப்பொழுதும் அவர் வருவதற்குத் தயங்குகிறார். காலஞ்சென்ற பிரம்மசாரிகள் சங்கத்தின் இறுதிச் சடங்குகளை முடித்துவிட்டு அவர் நம்முன் தோன்றுவார். இப்பொழுது எஞ்சியிருக்கும் ஒரு மெம்பரும் வந்துவிட்டால் சபை பூர்த்தியாகிவிடும்.

[சைலபாலா ஆண் உடையைக் களைந்து விட்டு வருகிறாள்]

சைலபாலா: (சந்திரபாபுவை நமஸ்கரித்து) என்னை மன்னிக்க வேண்டும்.

ஸ்ரீசர்: இது யார்? அபலாகாந்த பாபு—

அக்ஷயகுமாரர்: ஆம், நீங்கள் உங்கள் கொள்கையை மாற்றிவிட்டீர்கள். இவர் உடையை மாற்றிக்கொண்டு விட்டார்.

ரசிகர்: சைலபாலா (மலைமகள்) ஆகிய பார்வதி இதுகாறும் வேடனுடைய உருவத்தை மேற்கொண் டிருந்தாள். இப்பொழுது தவக்கோலத்துடன் விளங்குகிறாள்.

சந்திரபாபு: நிர்மலா! எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!

நிர்மலா: அநியாயம்! சுத்த அக்கிரமம். அபலாகாந்தரே!

அக்ஷயகுமாரர்: அநியாயம் என்று நிர்மலா சொல்வது உண்மைதான். ஆனால் இது பிரம்மதேவன் செய்த அநியாயம். இவள் அபலாகாந்தராக மாறுவதற்குத் தக்க காரணம் இருந்தது. ஆனால் கடவுள் இவளை விதவை சைலபாலா ஆக்கி என்ன பயனைக் கண்டார் என்பதுதான் விளங்கவில்லை.

சைலபாலா: (நிர்மலாவை நோக்கி) நான் செய்தது தவறே. நிர்மலா! இந்த அபராதத்தை நான் எப்படிப் போக்கிக் கொள்வேன்? காலப்போக்கில்தான் அது மறையக்கூடும்.

பூரணர்: (நிர்மலாவின் அருகில் வந்து) இந்தச் சமயத்தில் நானும் உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன். சந்திரபாபுவிற்கு எழுதிய கடிதத்தில் அநியாயமாக நான் என் இறுமாப்பையே காட்டிக்கொண்டேன். என்னைப் போன்ற தகுதியற்ற—

சந்திரபாபு: அநியாயம் ஒன்றும் இல்லை. பூரணரே! உங்களுடைய தகுதியை நிர்மலா அறிந்துகொள்ளவில்லையானல், அது அவளுடைய அறிவீனத்தையே காட்டும். (நிர்மலா தலைகுனிந்து ஒன்றும் பேசாமல் வெளியேறுகிருள்.)

ரசிகர்: (பூரணரிடம் தனிமையில்) கவலைப்படாதீர், பூரணரே! உமது மனு அங்கீகரிக்கப்பட்டுவிட்டது. பிரம்மதேவனின் கோர்ட்டில் டிக்ரி ஆகிவிட்டது. நாளை காலையே நீர் சென்று ஜப்தி செய்யலாம்.

ஸ்ரீசர்: (சைலபாலாவை நோக்கி) எல்லோரையும் நன்ருக ஏமாற்றினீர்கள், அம்மா)

விபினர்: சம்பந்தம் ஏற்படுவதற்கு முன்னமேயே சம்பந்தி விளையாட்டை ஆரம்பித்துவிட்டீரே!

சைலபாலா: பிறகு தப்பித்துக் கொள்வர் போலும்!

விபினர்: தப்பித்துக்கொள்வதாக உத்தேசமில்லை.

ரசிகர்: இத்துடன் நமது நாடகம் முடிந்தது. வாழ்த்துரை கூற வேண்டியது ஒன்றுதான் பாக்கி.

ஸர்வஸ் தரது துர்காணி ஸர்வோ பத்ராணி பச்யது!
ஸர்வ: காமா நவாப் நோது ஸர்வ: ஸர்வத்ர நந்தது!!

இன்னல் யாவரும் வெல்லுக! என்றும்
இன்பம் எங்கும் தங்குக! பாரில்
வேண்டிய வேண்டினர் எய்துக! யாண்டும்
மாண்நலஞ் சுரக்க! மாநில மீதே.

# அநுபந்தம்

'ஜீவபலி,' 'பிரம்மசாரிகள் சங்கம்' ஆகிய இரு நாடகங்களில் கவியரசர் டாகுர் அமைத்துள்ள வங்காளிப் பாடல்கள் தமிழ் லிபியில் அடுத்த பக்கங்களில் கொடுக்கப்பெற்றுள்ளன.

# ஜீவபலி

முதல் அங்கம்

மூன்றும் காட்சி

**இனி எனது தனிவழியே**

*ஆமி ஏக்லா சலேச்சி ஏ பபே*
*ஆமாய் பதேர் ஸந்தான் கே கபே*

**இனி எனது தனிவழியே**

*ஆமி ஏக்லா சலேச்சி ஏ பபே*
*ஆமாய் பதேர் ஸந்தான் கே கபே*
*பய் நேயி பய் நேயி ஜாவோ ஆபன் மனேஇ*
*ஜேமன் ஏக்லா மதுப் தேயே ஜாய்*
*கேபல் பூலேர் ஸௌரபே*

ஐந்தாம் காட்சி

**அன்னையின் ஊழித்தாண்டவமே**

*உலங்கிநி நாசே ரணரங்கே*
*ஆம்ரா ந்ருத்ய காரி ஸங்கே*
*தச திக் ஆந்தார் கரே மாதில திக்வஸநா*
*ஜ்வலே வஹ்நிசிகா ராஙா ரஸநா*
*தேகே மரிபாரே தாயிச்சே பதங்கே*
*காலோ கேஷ் உடில ஆகாசே*
*ரவி ஸோம லுகாலோ தராஷே*
*ராஙா ரக்ததாரா ஜரே காலோ அங்கே*
*த்ரிபுவன காம்பே புருபங்கே.*

இரண்டாம் அங்கம்

இரண்டாம் காட்சி

**ஊர் நிறைந்த மாந்தரே**

*ஓகோ புரபாஸீ*
*ஆமி த்வாரே தாண்டாயே ஆச்சி உபபாஸீ*
*ஹேரிதேச்சி ஸுகமேலா கரே கரே கத கேலா*

*சுனிதேச்சி ஸாராபேலா ஸுமதுர் பாம்சி*
*சாஹி நா அனேக் தன் ரப நா அதிக் க்ஷண்*
*ஜேகா ஹதே ஆஷியாச்சி ஷேகா ஜாப பாஸி*
*தொமரா ஆனந்தே ரபே நப நப உத்ஸபே*
*கிச்சு ம்லான் நாஹி ஹபே க்ருஹபரா ஹாஸி*

**என்னை யார் அழைத்திடுவர்**

*ஆமாரே கே நிபி பாயி ஸம்பிதே சாயி ஆப்நாரே*
*ஆமார் ஏயி மன் கலியே காஜ் புலியே*
*ஸங்கே தொதேர் நியே ஜாரே*
*தோரா கோன் ரூபேர் ஹாடே*
*சலேச்சீஸ் பபேர் பாடே*
*பிச்சியே ஆச்சி ஆமி ஆபன் பாரே*
*தோதேர் ஐ ஹாஸிகுசி திபா நிசி*
*தேகே மன் கேமன் கரே*
*ஆமார் ஏயி பாதா டுட்டே நியே ஜா லூடேபுடே*
*படே தாக் மனேர் போஜா கரேர் த்வாரே*
*ஜேமன் ஐ ஏக் நிமேஷே பன்யா ஏஷே*
*பாஸியே நே ஜாய் பாராபாரே*
*ஏத ஜே ஆநாகோநா கே ஆச்சே ஜாநா ஷோநா*
*கே ஆச்சே நாம் தரே மோர் டாக்தே பாரே*
*ஜதி ஷே பாரேக் ஏஷே தாண்டாய் ஹேஷே*
*சின்தே பாரி தேகே தாரே*

மூன்றும் அங்கம்

முதற் காட்சி

**கண மினித் தரியோம் அன்னையே**

*தாக்தே ஆர் தோ பாரலி நே மா பாரலி கயி?*
*கோலேர் ஸந்தாநேரே சாடலி கயி?*
*தோஷீ ஆச்சி அனேக் தோஷே சிலிபஷே க்ஷணிக் ரோஷே*
*முக் தோ பிராலி சேஷே அபய் சரண் காடலி கயி?*

## பிரம்மசாரிகள் சங்கம்

முதல் அங்கம்

முதற் காட்சி

**உன்னுடை உள்ளம்**

*கீ ஜானி கீ பேபேச்ச மனே*
*கூலே பலோ லலனே*
*கீ கொதா ஹாய் பேஷே ஜாய்*
*ஐ சல் சல் நயனே*

**என் மனம் நின்னே**

*பாச்சே சேயே பஸே ஆமார் மன்*
*ஆமி தாயி பயே பயே தாகி*
*பாச்சே சோகே சோகே படே பாந்தா*
*ஆமி தாயி தோ தூலிநே ஆங்கி*

**அருகினில் நின்றிடும்**

*படோ தாகி காச்சா காச்சி*
*தாயி பயே பயே ஆச்சி*
*நயன் பசன் கொதாய் கொகன் பாஜிலே*
*பாஞ்சி நா பாஞ்சி*

**அவன் அமுதமொழி**

*நா பலே ஜாய் பாச்சே ஷே*
*ஆங்கி மோர் கூம் நா ஜானே*
*காச்சே தார் ரயி தபுஒ*
*கதா ஜே ரய் பரானே*

**எவ்வழிப் போக்கன் தன்வழி**

*ஜே பதிக் பதேர் பூலே*
*ஏல மோர் ப்ராணேர் கூலே*
*பாச்சே தார் பூல் பேஙே ஜாய்*
*சலே ஜாய் கோன் உஜானே*
*ஆங்கி மோர் கூம் நா ஜானே*

**தாளை உடைத்து**

*ஏல ஜேயி ஏல ஆமார் ஆகல் டுட்டே*
*கோலா த்வார் தியே ஆபார் ஜாபே சூட்டே*
*கேயாலேர் ஹாஒயா லேகே ஜே கேபா உடே ஜேகே*
*ஷே கி ஆர்ஷேயி அபேலாய் மினதிர் பாதா மானே*
*மோர் கூம் நா ஜானே*

**இல்லை இல்லை**

நா நா கோ நா
கரோ நா பாபநா
ஜதி பா நிசி ஜாய் ஜாபோ நா ஜாபோ நா
ஜகனி சலே ஜாயி
ஆஷிபோ பலே ஜாயி
ஆலோ சாயார் பதே கரி ஆனுகோநா
தோலாதே தோல் மன் மிலநே பிரஹே
பாரே பாரேயி ஜானி துமி தோ சிர ஹே
க்ஷணிக் ஆடாலே
பாரேக் தாண்டாலே
மரி பயே பயே பாபோ கி பாபோ நா

**தனியரசி நீயிருக்க**

தேக்போ கே தோர் காச்சே ஆஷே
துயி ரபி ஏகேச்வரீ ஏக்லா ஆமி ரயிபோ பாஷே

**உலகாளும் ஒரு வேந்தாய்**

துமி ஆமாய் கர்பே மஸ்த லோக்
தேபே லிகே ராஜார் டிகே ப்ரஸன்ன ஒயி சொக்

**அடைக்கலம் எனக்கே**

அபய் தாஒ தோ பலிஆமார் with கீ—
ஏக்டி சடாக் ஸோடார் ஜலே பாகி தின் போயா விஸ்கி

**பருப்பும் சோறும்**

கத கால் ரபே பலோ பாரத் ரே
ஷுதூ டால் பாத் ஜல் பத்ய கரே

**அற்புதமான நம் நாட்டினில்**

தேசே அன்ன ஜலேர் ஹல கோர் அனடன்
தரோ விஸ்கி ஸோடா ஆர் முர்கி மடன்

**சென்றிடுவீர் நும் சிகையுடனே**

ஜாஒ டாகுர் சைதன் சுட்கி நியா
ஏஷோ தாடி நாடி கலிமத்தி மியா

**உனைக்காக்க மிகுவலியும்**

ஆமி கேபல் பூல் ஜோகாபோ
தோமார் துடி ராஙா ஹாதே
புத்தி ஆமார் கேலே நாகோ
பாரைாா பா மந்த்ரணதே

**அழியா மதியே**

சிர புராநோ சாந்த்
சிர திபஸ் ஏமநி தேகோ ஆமார் ஏயி ஷாத்
புராநோ ஹாஸி புராநோ ஸுதா
மிடாய் மம புராநோ குதா
நூதன் கோநோ சகோர் ஜேன பாய் நா பரஸாத்

**எழிலார் பெண்கள்**

போடா மனே ஷுதூ போடா முககாநி ஜாகே ரே
ஏத ஆச்சே லோக் தபூ போடா சொகே
ஆர் கேஹ நாஹி லாகே ரே

**அனைத்தையும் மறந்தது**

ஸகலி பூலேச்சே போலா மன்
போலேநி போலேநி ஷுதூ ஓயி சந்த்ரானன்

**விண்ணிடைப் பறந்து நீ**

ஸ்வர்கே தோமார் நியே ஜாபே உடியே
பிச்சே பிச்சே ஆமி சல்போ கூடியே
இச்சா ஹபே டிகிர் டகா தரே
விஷ்ணு தூதேர் மாதாடா திஇ குடியே

**என்னுயிர் காப்பவர்**

கார் ஹாதே ஜே தரா தேப ப்ராண்
(தாயி) பாப்தே பேலா அபஸான்
டான் திகேதே தாகாயி ஜகன்
பாயேர் லாகி காந்தே ரே மன்
பாயேர் வாகி பிர்லே தகன்
தக்கினேதே படே டான்

**பிரிந்து நீ கங்குலே**

பிரஹ யாமிநீ கேமனே ஜாபிபே
பிச்சேத தாபே ஜகன் தாபிபே,
ஏபாஷ் ஓபாஷ் பிச்சானு மாபிபே
மகர கேதநே கேபலி சாபிபே

**புகைவண்டி எனும் சகடம்**

பாஷ்பீய சகடே சடி நாரீ சூடாமணி
புரபாலா சலி ஜபே கேலா காசீதாமே
விகாலே. கஹ ஹே தேபீ அம்ருதபாஷிணீ
கோன் பராங்கநே பரி பரமால்யதானே
ஜாபிலா பிச்சேத் மாஷ் ச்யாலீ த்ரயீ சாலீ
ஸ்ரீ அக்ஷய்!

**முற்றிலும் நல்ல கனி**

*துமி ஜான ஆமார் காச்சே பல் கேன நா பலே*
*ஜேமனி பூல்டி பூடே ஓடே ஆனி சரணதலே*

**வெற்றி யாத்திரை**

*ஜய ஜாத்ராய் ஜாஓ கோ ஓடோ ஓடோ ஜயரதே தப*
*மோரா ஜய்மாலா கேந்தே ஆஷா சேயே பஷே ரப*
*ஆஞ்சல் பிச்சாயே ராகி பத தூலா திப டாகி*
*பிரே ஏலே ஹே விஜயீ ஹ்ருதயே பரியா லப*

**அழுகணீர் துயராலே**

*ஆனியோ ஹாஸிர் ரேகா ஸஜல் ஆங்கிர் கோணே*
*நப பஸந்த சோபா ஏஜு ஏ சூன்யபனே*
*ஸோஞர் ப்ரதீப் ஜாலோ ஆந்தார் கரேர் ஆலோ*
*பராஓ ராதேர் பாலே சாந்தேர் திலக் நபோ*

இரண்டாம் அங்கம்

முதற் காட்சி

**அக்கரை சேர்பவர் அனைவரும்**

*ஓகோ தோரா கே ஜாபி பாரே*
*ஆமி தரீ நியே பஸே ஆச்சி நதீ கிநாரே*
*ஓபாரேதே உபபனே கத கேலா கத ஜநே*
*ஏபாரேதே தூ தூ மரு பாரி பிநா ரே*
*ஏயிபேலா பேலா ஆச்சே ஆய் கே ஜாபி*
*மிச்சே கேன காடே கால் கத கீ பாபி*
*ஸூர்ய பாடே ஜாபே நேமே*
*ஸுபாதாஸ் ஜாபே தேமே*
*கேயா பந்த ஹயே ஜாபே ஸந்த்யா ஆந்தாரே*

மூன்றும் அங்கம்

முதற் காட்சி

**செல்ல விரும்புவோர்**

*ஜேத தாஓ கேல ஜாரா*
*துமி ஜேயோ நா ஜேயோ நா*
*ஆமார் பாதலேர் கான் ஹய்நி ஸாரா*
*குடிரே குடிரே பந்த் த்வார்*
*நிப்ருத ரஜநீ அந்தகார்*
*பனேர் அஞ்சல் காம்பே சஞ்சல்*

**கருணை நிறைந்த**

ஓகோ தயாமயீ சோர்
ஏத தயா மனே தோர்
படோ தயா கரே கண்டே ஆமார்
ஜடாஓ மாயார் டோர்
படோ தயா கரே சூரி கரே லஓ
சூன்ய ஹ்ருதய் மோர்

**நாளமெங்கும் குருதியோடி**

சலேச்சே சூடியா பலாதகா ஹியா
பேகே பஹே சிரா தமநீ
ஹாய் ஹாய் ஹாய் தரிபாரே தாய்
பிச்சே பிச்சே தாய் ரமணீ
பாயு பேக பரே உடே சஞ்சல்
லட் பட் பேணீ துலே அஞ்சல்
ஏகீ ரே ரங்க ஆகுல் அங்க
சூடே குரங்ககமநீ

**அகமெனும் கோயிலில்**

மஞ்ஜு மந்திர ஸுந்தரீ
ஸ்கலதஞ்சலா சலசஞ்சலா
அயி மஞ்ஜுலா மஞ்ஜரீ
ரோஷாருண ராக ரஞ்ஜிதா
கோபன ஹாஸ்ய குடில ஆஸ்ய
கபட கலஹ கஞ்ஜிதா
ஸங்கோச நத அங்கிநீ
சகித சபல நவ குரங்க
ஜௌபன பன ரங்கிணீ
அயி சல சல குண்டிதா
லுப்த பபன க்ஷுத்த லோபன
மல்லிகா அபலுண்டிதா
சும்பன தன பஞ்சிநீ
ருத்த கோரக ஸஞ்சித மது
கடின கனக கஞ்ஜிநீ

**சிந்தையில் எழுந்திடு**

ஓ ஆமார் த்யாநேரி தன்
தொமாய் ஹ்ருதயே தோலாய் ஜே ஹாஸி ரோதன்
ஆவேஷ பஸந்த போடே பகுல்
குஞ்ஜே பூர்ணிமா சாந்த் ஹேஸே ஆகுல்

தாரா தோமார் கூஞ்ஜே நா பாய்
ப்ராணேர் மாஜே ஆச்செ கோபன் ஸ்வபன்

**கஞ்சமலர் விழியில்**

ஆங்கிரே பாங்கி தாஓ ஏ கீ தாரா
அச்ருஜலே தாரே கர ஸாரா
கந்த ஆஸே கேன தேகிநே மாலா
பாயேர் த்வனி சுனி பத் நிராலா
பேலா ஷே ஜாய் பூல் ஷே சுகாய்
அநாத் ஹயே ஆச்சே ஆமார் புபன்

**தண்டார் புனலால்**

குஞ்ஜ குடீரேர் ஸ்நிக்த அலிந்தேர் பர்
காலிந்தீ கமல கந்த சூடியே ஸுந்தர்
லீநா ரபே மதிராக்ஷி தப அங்கதலே
பஹிபே பாஸந்தீ பாஸ் ப்யாகுல் குந்தலே
தாஹாரே கரிப ஸேபா கபே ஹபே ஹாய்
கிஸலய பாகாகாநி தோலாயிப காய்?

**மங்கையர் பங்கயவதனம்**

குஞ்ஜ பதே பதே சாந்த் ஊகி தேய் ஆஸி
தேகே பிலாஸினீதேர் முகபாரா ஹாஸி
கர ப்ரஸாரண் கரி பிரே ஜோ ஜாகியா
பாதாயனே பாதாயனே லாபண்ய மாகியா

**சென்றது பகலே**

தின் கேல ரே டாக் தியே நே பாரேர் கேயா
சூகியே ஹிஸேப் மிடியே தே தோர் தேயா நேயா

**காரிருள் கீறி**

ஜ்வலேநி ஆலோ அந்தகாரே
தாஓ நா ஸாடா கி தாயி பாரே பாரே
தொமார் பாம்சி ஆமார் பாஜே பூகே
கடின் துக்கே கபீர் ஸுகே
ஜே ஜானே நா பத் காந்தா ஓ தாரே
சேயே ரயி ராதேர் ஆகாஷ் பானே
மன் ஜே கீ சாய் தா மன இ ஜானே
ஆசா ஜாகே கேன அகாரணே
ஆமார் மனே க்ஷணே க்ஷணே
ப்யதார் டானே தோமாய் ஆனபே த்வாரே

## இரண்டாம் காட்சி

**அன்பே உன்றன்**

நிசி நா போஹாதே ஜீபன் ப்ரதீப்
ஜாலாஇயா ஜாவோ ப்ரியா
தோமார் அனல் தியா
கபே ஜாபே துமி ஸமுகேர் பதே
தீப்தி சொடி பாஹி
ஆச்சி தாயி பத் சாஹி
பூடியே பலியா ரயேச்சே ஆசாய்
ஆமார் நீரப ஹியா
ஆபன் ஆந்தார் நியா
நிசி நா போஹாதே ஜீபன் ப்ரதீப்
ஜாலாஇயா ஜாவோ ப்ரியா

**செல்நெறி உன்னி**

ஒரே ஸாபதானீ பதிக் பாரேக்
பத் பூலே மர் பிரே
கோலா ஆங்கி துடோ அந்த கரே தே
ஆகூல் ஆங்கிர் நீரே
ஸே போலா பதேர் ப்ராந்தே ரயேச்சே
ஹாராரேனா ஹியார் குஞ்ஜ
ஜரே படே ஆச்சே காண்டா தரு தலே
ரக்த குஸூம புஞ்ச
ஸேகா துஇபேலா பாஙா கடா கேலா
அகூல் ஸிந்து தீரே
ஒரே ஸாபதானீ பதிக் பாரேக்
பத் பூலே மர் பிரே

**பகலே நன்றெனில்**

ஆஸே தோ ஆஸூக் ராதி ஆஸூக் பா திவா
ஜாய் ஜதி ஜாக் நிரவதி
தாஹாதேர் ஜாதாயாதே ஆஸே ஜாய் திவா
ப்ரிய மோர் நாஹி ஆஸே ஜதி

**மெல்லநடை கொண்டு வா**

தீரே தீரே சலோ தன்வி பரோ நீலாம்பர்
அஞ்சலே பாந்தியா ராகோ கங்கண் முகர்
கதாடி கயோ நா தப தந்த அம்சுருசி
பகேர் திமிர ராசி பாச்ரே பேலே மூச்சி

**கண்களை மான்**

*சக்கு பரே ம்ருகாக்ஷீர் சித்ரகானி பாஸே*
*ரஜநீ ஓ நாஹி ஜாய், நித்ரா ஓ நா ஆஸே*

**மெல்லிய பூவின் கொடி**

*ஆநதாங்கி பாலிகார் சோபா ஸௌபாக்யேர் ஸார்*
*நயந ஜுகல்*
*நா தேகியே பரஸ்பரே தாஇ கி பிரஹபரே*
*ஹயேச்சே சஞ்சல்*

**அல்லும் பகலும்**

*ப்ரிய சக்கு தேகாதேகி ஜே ஆனந்த தாஇ ஸே கி*
*கூஞ்சிச்சே சஞ்சல்*

**செங்கமலச் செவ்விழியாள்**

*பிந்தியா தியா ஆங்கிபானே*
*ஜாய் ஸே சலி க்ருஹபானே*
*ஜனமே அநுசோசநா*
*பாஞ்சில கி நா தேகிபாரே*
*சாய் ஸே பிரே பாரே பாரே*
*கமல வர லோசநா*

**மானைப் பழிக்கும்**

*ஹரிண கர்வ மோசன லோசனே*
*காஜல் தியோ நா ஸரலே*
*ஏமனி தோ பாண் நாஷ் கரே ப்ராண்*
*கீ காஜ் லேபியா கரலே*

**காணாத கடல்**

*தரீ ஆமார் ஹடாத் டுபே ஜாய்*
*கோன் பாதாரே கோன் பாஷாணேர் காய்*
*நபீன் தரீ நதூன் சலே*
*தேஇநி பாடி அகாத் ஜலே*
*பாஹி தாரே கேலார் சலே கிநார் கிநாராய்*
*தரீ ஆமார் ஹடாத் டுபே ஜாய்*
*பேஷேச்சில ச்ரோதேர் பரே*
*ஏகா சிலாம் கர்ண தரே*
*லேகேச்சில பாலேர் பரே மதுர் ம்ருது பாய்*
*ஸுகே சிலேம் ஆபன் மனே*
*மேக் சில நா ககன் கோணே*
*லாக்பே தரீ குஸும்பனே சிலேம் ஸே ஆஷாய்*
*தரீ ஆமார் ஹடாத் டுபே ஜாய்*

ஐந்தாம் அங்கம்

முதற் காட்சி

**ஆற்ருமையினுல் ஆருயிரை**

பிரஹே மரிபோ பலே சில மனே பண்
கே தோரா பாஹுதே பாந்தி கரிலி பாரண்
பேபேசினு அச்ருஜலே டுபிபோ ஆகூல் தலே
காஹார் ஸோனுர் தரீ கரில தாரண்

இரண்டாம் காட்சி

**வழிமீது விழிவைத்து**

தோமார் சேயே ஆச்சி பஸே பதேர் தாரே ஸுந்தர ஹே
ஜமல் தூலா ப்ராணேர் பீணுர் தாரே தாரே ஸுந்தர ஹே
நாயி ஜே குஸும் மாலா காந்தபோ கிஸே
காந்நாரி கான் பீணுய் ஏநேச்சி ஸே
தூர் ஹதே தாயி ஸுன்தே பாபே
அந்தகாரே ஸுந்தர ஹே
திநேர் பரே தின் கேடே ஜாய் ஸுந்தர ஹே
மரே ஹ்ருதய் கோன் பிபாஸாய் ஸுந்தர ஹே
சூன்ய காடே ஆமி கீ ஜே கரி
பங்கின் பாலே கபே ஆஷ்பே தரீ
பாடி தேபோ கபே ஸுதாரஸேர்
பாராபாரே ஸுந்தர ஹே

நான்காம் காட்சி

**மாமலர் சூடுதல்**

அலகே குஸும் நாதியோ
ஷுதூ சிதில கபரீ பாந்தியோ
காஜல பிஹீன் ஸஜல நயனே
ஹ்ருதய துயாரே கா தியோ
ஆகூல் ஆஞ்சலே பதிக சரணே
மரணேர் பாந்த் பாந்தியோ
நா கரியா பாத் மனே ஜாஹா ஸாத்
நிதயா நீரபே ஸாதியோ

**அலைபாய் கடலின்**

கேன ஸாரா தின் தீரே தீரே
பாலு நியே ஷுதூ கேலோ தீரே
சலே கேல பேலா மிச்சே ரேகே கேலா

*ஜாம்ப் தியே படோ காலோ நீரே*
*அகூல் சானியே ஜா பாஸ் தா நியே*
*ஹேஸே கேந்தே சலோ கரே பிரே*

**சிந்தையிற் கொண்டது**

*நாஹி ஜானி மனே கீ பாஸியா*
*பதே பஸே ஆச்சே கே ஆஸியா*
*ஜே பூலேர் பாஸே அலஸ் பாதாஸே*
*ஹ்ருதய் தியேச்சே உதாஸியா*
*ஜேதே ஹய் ஜதி சலோ நிரவதி*
*ஷேயி பூல்பன் தலாசியா*

**விதியில் பிரமன்**

*ஸகா கீ மோர் கரமே லேகி*
*தாபன் பலியா தபனே டரினு*
*சாந்தேர் கிரண் தேகி*

**பிழை பிழை இன்றே**

*பூலே பூலே ஆஜ் பூல்மய்*
*பூலேர் லதாய் பாதாஸேர் பூலே*
*பூலே பூலே ஹோக் பூல்மய்*
*ஆனந்த் டேஉ பூலேர் ஸாகரே*
*உச்சலியா ஹோக் கூலமய்*

**பூம்புனல் நதியும்**

*ஸே காம்பீர்ஜ கேல கொதா*
*நதீ நட் ஹேரோ ஹோகா*
*ஜாலிகேரா ஜாலே பேலே பிரே*
*ஸகே ஹம்ஸ உடோ உடோ*
*ஸமய் தாகிதே சோடோ*
*ஹேகா ஹதே மானஸேர் தீரே*